E-ISSN: 2581-7140





# தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்

# INTERNATIONAL JOURNAL OF TAMIL LANGUAGE AND LITERARY STUDIES (Ijtlls)

*A Bi-Yearly Peer-Reviewed International Journal*

மற்றும்

## உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்

## INTERNATIONAL INSTITUTE OF TAMIL STUDIES

இணைந்து நடத்தும்

ஒரு நாள் பன்னாட்டுக் கருத்தரங்கம்

# தொல்லியல் சான்றும் தமிழர் பண்பாடும்

# Archaeological Evidence and Tamil Culture

சிறப்பிதழ் : தொகுதி - 2, 27, ஏப்ரல் 2019

SPECIAL ISSUE : VOL – 2, 27, APRIL 2019

முனைவர் கோ. விசயராகவன்/
முனைவர் நா. சுலோசனா/ திருமதி. த.மகேஸ்வரி

## கருத்தரங்க ஒருங்கிணைப்புக்குழு

## CONFERENCE ORGANIZING COMMITTEE

### கருத்தரங்கத் தலைவர்

**முனைவர் கோ. விசயராகவன்,**
இயக்குநர் (மு.கூ.பொ),
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், தரமணி,
சென்னை - 600113. தமிழ்நாடு, இந்தியா.

**Dr. G. Vijayaragavan,**
The Director,
International Institute of Tamil Studies,
Chennai- 6000113, Tamil Nadu, India.

### கருத்தரங்க ஒருங்கிணைப்பாளர்கள்

**முனைவர் நா. சுலோசனா**
உதவிப்பேராசிரியர்,
தமிழ்மொழி (ம) மொழியியல் புலம்,
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், தரமணி,
சென்னை – 600113,
தமிழ்நாடு, இந்தியா.

**த.மகேஸ்வரி**
இயக்குநர் IJTLLS,
தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்,
விருதுநகர் - 626001,
தமிழ்நாடு, இந்தியா.

**Dr. N. Sulochana,**
Assistant Professor,
Department of Tamil Language and Linguistics,
International Institute of Tamil Studies,
Taramani, Chennai-600113,
Tamil Nadu, India.

**Ms. D. Maheswari,**
Director cum Editor-in Chief
International journal of Tamil Language and literary Studies,
IJTLLS, Online Journal
Virudhunagar- 626001,
Tamil Nadu, India.

### கருத்தரங்கக்குழு உறுப்பினர்கள்

**ஞா. அந்தோணி சுரேஷ்**
உதவிப்பேராசிரியர்,
சதக்கத்துல்லாஹ் அப்பா கல்லூரி,
ரஹ்மத் நகர்,
திருநெல்வேலி-11, தமிழ்நாடு, இந்தியா.

**Mr. G. Antony Suresh,**
Assistant Professor, Department of Tamil,
Sadakathullah Appa College,
Palayamkottai, Tirunelveli.
Tamil Nadu,
India

**வி.விமல்,**
உதவிப்பேராசிரியர், தமிழ்த்துறை,
மதுரைக் கல்லூரி,
மதுரை- 11, தமிழ்நாடு, இந்தியா.

**Ms. V.Vimal,**
Assistant Professor, Department of Tamil,
The Madura College, Madurai- 625011,
Tamil Nadu, India.

**சு. அய்யனார்,**
உதவிப் பேராசிரியர், தமிழ்த்துறை,
பிஷப் ஹீபர் கல்லூரி,
திருச்சி – 17, தமிழ்நாடு, இந்தியா.

**Mr. S. Ayyanar,**
Assistant Professor of Tamil,
Bishop Huber College, Trichy-17.
Tamil Nadu, India.

**முனைவர் தி.பரிமளா,**
உதவிப் பேராசிரியர், தமிழ்த்துறை,
மன்னர் திருமலை நாயக்கர் கல்லூரி,
மதுரை- 18, தமிழ்நாடு, இந்தியா.

**Dr. T. Parimala,**
Assistant Professor of Tamil,
Mannar Thirumalai Nayakkar College,
Madurai-18,
Tamil Nadu, India.

## Advisory Editorial Board



PUBLISHER: D. Maheswari,
3/350, Veterinary Hospital Back side,
Virudhunagar – 626001.
Mobile: 8526769556
Mail: maheswari@ijtlls.com
dmakesh88@gmail.com, ijtllsetamiljournal@gmail.com

# PUBLISHER'S MESSAGE

## Aim & Objectives

**International Journal for Tamil Language and Tamil Studies** is an online Peer-Reviewed International Journal published twice in a year on July and January, which is published by **Maheswari Publishers,** patronized by **Pandian Educational Trust, Virudhunagar, Tamil Nadu, India**. It also publishes **Literary Druid, for English Language and Literature (Online)** to foster research in the domain areas**.**

**International Journal for Tamil Language and Tamil Studies** aims to bring down Academic Research to promote research support for the academicians and scholars in the field of Tamil Language and Literature. Research through this medium is motivating in all aspects of main and inter-disciplines by consequent projects and e-publication. Making Internationalization of the research works in the globalized world aid the scholarly community to develop scholarly profile in research through the quality of publications. The audacity and vision of academic research on internet could foster green printing and open access nature in research. All of these motivate best distribution of research that produces positive outcomes for the betterment of the world.

## Disclaimer

**International Journal for Tamil Language and Tamil Studies** is committed to research Ethics and consider plagiarism as a crime. The authors are advised to adhere academic ethics with respect to acknowledgment of quotations from other works. The Publisher & Editors will not be held responsible for any lapse of the provider regarding plagiarism in their manuscripts. The submissions ought to be original, must accompany the declaration form stating your research paper as an original work, and has not been published elsewhere for any research purpose. The contributor will be the sole responsibility for such lapses on any legal issues and publication ethics.

**Contact** ijtllsetamiljournal@gmail.com for submission and other information. See www.ijtlls.com for guidelines.

**D. Maheswari**
**Publisher and Director**

## Message from the Editor-in-Chief

**International Journal for Tamil Language and Tamil Studies** is an online Peer-reviewed International Journal of Tamil Language and Literature which is committed to academic research, welcomes scholars and students all over the world who to advance their status of academic career and society by their scholarly ideas. The journal welcomes publications of quality papers on the domain area.

Research ought to be active to create a major frontier in the academic world. It must augment the neo-theoretical frame that facilitates re-evaluation and augmentation of existing practices and thoughts. In due course, this will effect in a prime discovery and lean to the knowledge acquired. Research is to establish, substantiate facts, restate previous works ant to resolve issues. An active venture to endow cogent approach to these types for educational reformations through academic research has become the central intent of the journal.

**D. Maheswari**

# அணிந்துரை



முனைவர் கோ.விசயராகவன், எம்.ஏ., எம்ஃபில்., பி.எட்., பிஎச்.டி.,
இயக்குநர் (மு.கூ.பொ.)
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
தரமணி, சென்னை – 113.

தமிழர்களின் தொன்மையான வரலாற்றையும் பண்பாட்டையும் அறிந்துகொள்ள பெரிதும் துணைநிற்பது தொல்லியல் சான்றுகளேயாகும். சங்கப் பாடல்களின் உறுதிப்பாட்டை வரலாற்று அடிப்படையில் அகழாய்வுகளின் மூலம் வெளிக்கொணர்வதே தொல்லியல் ஆய்வின் நோக்கமாகும். இந்த அடிப்படையில் வரலாற்று அறிஞர், தொல்லியல் அறிஞர், மானுடவியலாளர், மொழியியலாளர், பண்பாட்டு ஆய்வாளர், இலக்கிய ஆய்வறிஞர், கல்வெட்டியல் அறிஞர் எனப் பல்வேறு புலமை பெற்றோர்களின் ஒத்துழைப்பினாலும் துணையினாலும் தொல்லியல் ஆய்வுகள் தமிழகத்தில் நடைபெற்று வருகின்றன.

தொல்லியல் ஆய்வுகளில் கிடைத்த பொருள்களைக் கொண்டு தமிழர்களின் தொன்மை உறுதி செய்யப்படுகிறது. தொல்லியல் ஆய்வாளர்களின் ஈடுபாட்டின் காரணமாக வெளிவரும் பல்வேறு தனிக்கட்டுரைகளும், கட்டுரைத் தொகுப்புகளும், கள ஆய்வுகள் பற்றிய சிறப்பு நூல்களும், இதழ்களும் தொல்லியல் சார்ந்து புதிய கண்டுபிடிப்புகளை உடனுக்குடன் வெளியிட்டு பண்டைய மக்களின் பண்பாடுகளையும் வாழ்க்கை முறைகளையும், வாணிக முறைகளையும் நமக்குத் தெரிவிக்கும் தடயங்களாகத் திகழ்கின்றன. முப்பதுக்கும் மேற்பட்ட தொல்லியல் களங்கள் உள்ள தமிழகத்தில் ஒரு சில இடங்களில் மிகக்குறைந்த அளவே அகழாய்வுகள் நடந்தேறியுள்ளன. களங்கள் முழுவதும் அகழாய்வுகளுக்கு உட்படுத்தி அங்கு கிடைக்கும் பொருள்களைக் கால முறைப்படுத்தினால் தமிழரின் தொன்மை இன்னும் பழமையானது என்பது புலப்படும். தமிழ் மொழி (ம) மொழியியல் புலத்தின் இன்றைய காலகட்டத்திற்கு தேவைப்படும் வகையிலும் தமிழர்களின் தொன்மையையும் பண்பாட்டையும் உலகறியச் செய்யும் வகையில் உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத் தமிழ்மொழி (ம) மொழியியல் புலத்துடன் தமிழ் மொழி (ம) இலக்கிய பன்னாட்டு ஆய்வு இதழ் (IJTLLS) இணைந்து **‘தொல்லியல் சான்றும் தமிழர்**

**பண்பாடும்’** எனும் பொருண்மையில் பன்னாட்டுக் கருத்தரங்கம் நடத்துவது காலத்தின் தேவையாகும்.

தொல்லியல் அறிஞர்கள், தொல்லியல் கலைகள், கல்வெட்டியல், கடல் சார் ஆய்வுகள், ஓலைச்சுவடிகள், செப்பேடுகள், நாணயங்கள், அகழாய்வுகளில் கிடைத்த பொருள்கள் எனத் தமிழரின் தொன்மைக்குச் சான்றாகும் வகையில் பல்வேறு தலைப்புகளில் தொல்லியல் சார்ந்து ஆராய்ந்து கட்டுரைகள் வழங்கிய தமிழ்நாடு மற்றும் இலங்கையிலுள்ள பல்கலைக்கழகப் பேராசிரியர்கள், கல்லூரிப் பேராசிரியர்கள், தமிழாசிரியர்கள், தமிழறிஞர்கள், தமிழார்வலர்கள் எனக் கட்டுரைகள் வழங்கிய அனைவரையும் பாராட்டுகிறேன்.

கட்டுரைகளையெல்லாம் செப்பம் செய்து ஆய்வுக்கோவை பன்னாட்டுத் தரக்குறியீட்டு எண்ணுடன் (ISSN) கருத்தரங்க நாளன்றே வெளியிடுவது உள்ளபடியே சிறப்பு. இவ் அத்தனை முயற்சிகளையும் மேற்கொண்டு பன்னாட்டுக் கருத்தரங்கம் செவ்வனே நடைபெறவும் பல்லாற்றானும் உழைத்த கருத்தரங்க ஒருங்கிணைப்பாளர்கள் தமிழ்மொழி (ம) மொழியியல் புல உதவிப் பேராசிரியர் முனைவர் நா.சுலோசனா அவர்களுக்கும் பன்னாட்டு ஆய்விதழின் ஆசிரியர் முனைவர் திருமதி மகேசுவரி அவர்களுக்கும் தமிழ்ப்பணியைச் சிறப்பாகச் செய்திட வாழ்த்துகளும் பாராட்டுகளும் காலத்திற்கேற்றார்போன்ற பொருண்மைகளில் பல்வேறு நூல்கள் வெளிவரவேண்டும் என்றும் இவர்களின் பணி மேன்மேலும் தொடரவேண்டும் எனவும் வாழ்த்துகிறேன்.

இடம்: சென்னை
நாள்: 27.04.2019

இயக்குநர்
(முனைவர் கோ. விசயராகவன்)

# வாழ்த்துரை

**முனைவர் நா. சுலோசனா**
உதவிப் பேராசிரியர்
தமிழ்மொழி (ம) மொழியியல் புலம்
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
தரமணி, சென்னை – 113.



தமிழர்களின் தொன்மைக்குச் சான்றாகச் சங்கப் பாடல்களையேக் குறிப்பிட்டு வருகிறோம். அதற்கெல்லாம் வரலாற்றுத் தரவுகளின் அடிப்படையில் தொல்லியல் அகழாய்வுகளில் கிடைத்த பொருள்கள் சங்க காலத்தையும் முந்தைய தொன்மையையும் பண்பாட்டையும் உடையது என்பதை நிரூபித்து வருகின்றன. தமிழகத்திலுள்ள தொல்லியல் களங்களில் அகழாய்வுகள் மிகக் குறைந்த அளவே நடந்திருக்கின்றன. முழுவதுமான ஆய்வுகள் நடத்தப்பெற்றால் தமிழரின் தொன்மை இன்னும் பல நூற்றாண்டுகளுக்கு முற்பட்ட பழமையான நாகரிகம் தமிழர்களுடையது என்பது உறுதியாகும்.

கல்வெட்டியல், செப்பேடுகள், ஓலைச்சுவடிகள், நாணயங்கள், தொல்லியல் சார்ந்த ஆய்வு நூல்கள் என இதுபோன்ற களங்களில் ஆய்வுக்கட்டுரை வரப்பெற்று **'தொல்லியல் சான்றும் தமிழர் பண்பாடும்'** எனும் பொருண்மையில் பன்னாட்டுத்தரக் குறியீட்டு எண்ணுடன் (ISSN) ஆய்வுக்கோவை வெளிவருவது காலத்தின் தேவையாகும்.

தொடர்ந்து நாங்கள் நடத்தும் கருத்தரங்குகளுக்கு ஆய்வுக் கட்டுரை வழங்கி வரும் பல்கலைக்கழகப் பேராசிரியர்கள், கல்லூரிப் பேராசிரியர்கள், தமிழாசிரியர்கள், தமிழறிஞர்கள், தமிழார்வலர்கள் மற்றும் ஆய்வு மாணவர்கள் என அனைவரின் ஒத்துழைப்பாலும் ஒவ்வொரு கருத்தரங்கமும் சிறப்பாக நடைபெற்றது, நடைபெற்று வருகிறது என்பதை மகிழ்வோடும் நன்றியுணர்வோடும் நினைத்துப் பார்க்கிறேன். அந்த வகையில் உலகத் தமிழாராய்ச்சி நிறுவன தமிழ்மொழி (ம) மொழியியல் புலத்துடன் இணைந்து தமிழ்மொழி (ம) இலக்கிய பன்னாட்டு ஆய்வு இதழ் (IJTLLS) இக்கருத்தரங்கை நடத்துவது உள்ளபடியே மகிழ்ச்சி.

தமிழர்களின் பண்பாட்டை உலகிற்கு எடுத்துரைக்கும் உன்னத பணியைச் செய்துவரும் தொல்லியல் அறிஞர்களின் பணியையும் தமிழரின் தொன்மைக்கு

ஆவணமாகத் திகழும் தொல்லியல் ஆய்வுகளையும் எல்லோருக்கும் கொண்டுபோய்ச் சேர்க்கும் வகையிலும் அனைவரும் தொல்லியல் களங்களையும், ஆய்வுகளையும் அறிய வேண்டும் எனும் நோக்கத்தில் இத்தகைய கருத்தரங்கம் நடத்தப்பெற்று அதற்கு ஆவணமாக ஆய்வுக்கோவையும் வெளியிட்டு உன்னதமானத் தமிழ்ப்பணியைச் செய்துவரும் ஆய்வு இதழுக்கு வாழ்த்துகள். இன்னும் இது போன்ற நல்ல தமிழ்ப்பணிகளைச் செவ்வனே செய்ய பாராட்டுகளும் வாழ்த்துகளும்.

இடம்: சென்னை　　　　　　　　　　　　　　இப்படிக்கு

நாள்: 27.04.2019　　　　　　　　　　　　(முனைவர் நா. சுலோசனா)

# பதிப்புரை மற்றும் நன்றியுரை



**திருமதி. த.மகேஸ்வரி,**
இயக்குநர் மற்றும் பதிப்பாசிரியர் - IJTLLS,
தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்,
விருதுநகர் - 626 001.

தமிழ்மொழி மற்றும் இலக்கியத்திற்காக எமது **தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ் (Ijtlls)** தம் இலக்கிய மற்றும் ஆராய்ச்சி அரும்பணியை செய்து வருகின்றது.

**தொல்லியல் சான்றும் தமிழர் பண்பாடும்** என்ற பொருண்மையில் கருத்தரங்கம் நடத்த அனுமதி தந்த உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்தின் இயக்குனர் **முனைவர். கோ. விசயராகவன்** மற்றும் **முனைவர் நா. சுலோசனா** ஆகியோர்க்கு எனது நன்றியை உரித்தாக்குகிறேன்.

இவ்வொரு நாள் பன்னாட்டு கருத்தரங்கத்தின் ஓர் அங்கமாக **தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்** செம்மையாய் செயல்பட்டு ஆய்வுக் கட்டுரைகளை இணையத்தில் பதிப்பு செய்து உள்ளது. எதிர்காலத்தில் தமிழ் ஆராய்ச்சிகளை உலக அரங்கத்திற்கு எடுத்துச் செல்ல ஓர் ஆய்வுக்களமாக எமது இதழ் செயல்பட்டு வருகிறது. அதற்கு தமது உறுதுணை அளித்த அனைவருக்கும் நன்றி.

பன்னாட்டு கருத்தரங்கில் தமது ஆய்வை செம்மை நிறுத்தி தமிழ்மொழி, தமிழர் நாகரிகம், தமிழர் பண்பாடு மற்றும் கலாச்சாரம் போன்ற பொருண்மையில் நடந்த அகழ்வாராய்ச்சிகள் மூலமாக கிடைத்த தரவுகள் கட்டுரைகளை வழங்கி சிறப்பித்த தமிழ் பேராசிரியர்கள், ஏனைய அனைத்து துறைப் பேராசிரியர்கள், எழுத்தாளர்கள், தமிழ் ஆர்வலர்கள் மற்றும் ஆராய்ச்சி மாணவர்களை மனதார பாராட்டுகிறோம்.

நன்றி

**திருமதி. த.மகேஸ்வரி**
இயக்குநர் மற்றும் பதிப்பாசிரியர் - IJTLLS

## பொருளடக்கம்

E-ISSN: 2581-7140

Special Issue: Vol. 2, April-2019 Available at: www.ijtlls.com

# தமிழர்களின் வரலாறு கூறும் சதிக்கல்
# Stonehenge of Sati in Tamil People's Culture

**முனைவர் பா. நளினிப்ரியா,** உதவிப் பேராசிரியர், தமிழ்த்துறை,
அவினாசிலிங்கம் மனையியல் மற்றும் மகளிர் உயர்கல்வி நிறுவனம், கோயம்புத்தூர்-43.

## Abstract

*The paper purports the facts of the archaeological sites of the Sati Stonehenges in the areas of Tamil Nadu. It is customary to erect stones for the women who did Sati with her dead husband and the people believe that the women who commits Sati is of good cadre and a woman of morals. She is considered as a woman os chastity. Therefore, the study brings out the stonehenges erected for the women who had committed Sati.*

**Keywords:** Stonehenge of Sati, Tamil People, Tamil Culture

போரில் வீரமரணம் அடைந்த வீரனின் மனைவி உடன்கட்டை ஏறி இறந்தால் அப்பெண்ணின் நினைவாக நடப்படும் கல் சதிகல் ஆகும். கணவன் இறந்தவுடன் தானும் உயிர்விட்ட வீரமகளிர்க்கு அக்கால மக்கள் சதிக்கல் எடுத்து வழிபாடு செய்து வந்தனர். இதனை மஹாஸதி கல் என்றழைத்தனர். இக்கல் நடப்படுவதற்கு அடிப்படை வீரர்களின் மரணமாக இருந்தது. அவர்களின் நினைவாக நடுகற்கள் மற்றும் வீரக்கற்கள் நடப்பட்டன. மன்னனுக்காகவும் ஆநிரைகளை பாதுகாக்கவும், ஊரைப் பாதுகாப்பதற்காகவும் உயிர்நீத்த வீரர்களின் நினைவாக நடப்படும் கல்லாகும். இறந்து போன வீரனையும் அவனது இறப்பால் துயருற்று இறந்த மனைவியையும் வழிபட்டால் அவர்களின் சக்தி வழிபட்டவருக்கு கிடைப்பதாக முன்னோர்கள் நம்பினர். இப்படிப்பட்ட வழக்கத்தின் வாயிலாகவே நடுகற்களுக்கும் சதிக்கற்களுக்கும் உள்ள தொடர்பை நம்மால் அறியமுடிகின்றது.

சில சதிக்கற்களில் உருவமும், எழுத்துகளும் இடம்பெற்றிருக்கும். சில கற்களில் உருவம் மட்டுமே இடம்பெற்றிருக்கும். 5 ஆம் நூற்றாண்டு முதல் பதினாறாம் நூற்றாண்டு வரை சதிக்கற்கள் காணப்படுகின்றன. சதிக்கற்கள் இறந்தவர்களின் கல்லறை மட்டுமல்லாமல் இறந்து விழுந்த இடங்களிலும், இறந்தவர்களின் ஊர்களிலும் அவர்களின் உறவினர்கள் வாழ்ந்த பகுதிகளிலும் காணமுடிகின்றது. இறந்த பெண்ணின் உறவினர்களோ, ஊர் மக்களோ அல்லது இனக்குழு மக்களே சதிக்கல்லை நடுகிறார்கள்.

தீப்பாய்ந்து இறப்பவர்களுக்கு சில விதிமுறைகள் வகுக்கப்பட்டுள்ளன. தீப்பாயக்கூடியப் பெண் அவளாக விருப்பப்பட்டு உயிரிழக்க வேண்டும். வீரன் இறந்து போனவுடன் அவனது மனைவி தீப்பாய்ந்தால் அவர்களது இருவரின் உருவமும் கல்லில் பொறிக்கப்படும். அவ்வீரன் வணங்கும் தெய்வத்தின் உருவமும், வீரன் எதற்காக இறந்துபட்டான் என்ற செய்தியும் அக்கல்லில் செதுக்கப்பட்டிருக்கும். சதிபுரியும் பெண்ணானவள் நோய்வாய்ப்பட்டவளாக இருக்கக் கூடாது. கணவன் இறந்தபிறகு இப்படி இறந்துபோய் விட்டானே என்ற வருத்தம் தீப்பாயும் பெண்ணிற்கு இருக்கக் கூடாது.

அனைத்து சமூகத்திலும் தீப்பாயும் வழக்கம் இருந்து வந்துள்ளது. மேலும் அப்பெண்ணை மற்றவர்கள் யாரும் கட்டாயப்படுத்தியோ, துன்புறுத்தியோ தீப்பாய்ந்து இறக்க

E-ISSN: 2581-7140
Special Issue: Vol. 2, April-2019 Available at: www.ijtlls.com

வலியுறுத்தமாட்டார்கள். பதினாறு வயதிற்கு உட்பட்டவளாக சிறு பெண்ணாகத் தீப்பாயும் பெண் இருத்தல் கூடாது. அவளாக விரும்பித் தீப்பாய வேண்டும். கட்டாயப்படுத்தினால் அது கொலைக்கு சமமாகவும், அதர்மமாகவும் கருதப்பட்டது. கணவன் இறந்து பத்து நாட்கள் முதல் பதிமூன்று நாட்கள் வரை மனைவி தீப்பாயும் காலமாகும். அப்படி அந்நாட்களுக்குள் அப்பெண் தீப்பாய்ந்து இறந்துவிட்டால் அத்தகையப் பெண்களை மங்கலப் பெண்களாகவேக் கருதுவர். கணவன் இறந்து இருபதுநாட்கள் பின்னும் வாழக்கூடிய பெண்களை அமங்கலப் பெண் (விதவை) என்றும் அழைத்து வந்தனர்.

**இலக்கியங்களில் உடன்கட்டை ஏறும் நிகழ்வு**

சதி என்னும் சொல்லுக்கு கற்புடைய மனைவி என்றும் பொருள்படும். சதிக்கல்லை மஹாஸதி என்று அபிதான சிந்தாமணி (பக்.560) கூறுகின்றது. கணவன் இறந்தவுடன் மனைவி தீப்பாய்ந்து இறத்தலைக் குறித்த செய்திகள் இலக்கண நூலான தொல்காப்பயத்தில் இடம்பெற்றிருக்கின்றது.

"நல்லோள் கணவனொடு நனிஅழல் புகீஇச்
சொல்லிடை யிட்ட பாலை நிலையும்" (தொல்.புறத்.1025:30-31)

என்ற நூற்பாவடிகள் இதனை மெய்ப்பிக்கின்றன. இவ்வகையான செய்திகள் புறநானூற்றிலும் இடம்பெற்றிருக்கின்றன.

"உயவல் பெண்டிரேம் அல்லேம் மாதோ,
பெருங்காட்டுப் பண்ணிய கருங்கோட்டு ஈமம்
நுமக்குஅரி தாகுகதில்ல, எமக்குஎம்
பெருந்தோட் கணவன் மாய்ந்தென, அரும்புஅற
வள்இதழ் அவிழ்ந்த தாமரை
நள்இரும் பொய்கையும் தீயும்ஓ ரற்றே!" (புறம். 246:10-15)

என்னும் அடிகள் 'கைம்மை நோன்பு இருக்கும் பெண்களைப் போன்று அல்ல நான். ஈமப்படுக்கை உங்களுக்கு அரிதாகத் தோன்றலாம். எனது கணவன் இறந்துவிட்டான் எனவே எனக்கு தீயானது தாமரைக் குளத்தில் உள்ள நீர்போல இன்பம் தருவதாகும் எனக் கூறி' பூதப்பாண்டியனின் மனைவியான பெருங்கோப்பெண்டு தனது கணவன் இறந்த செய்தி அறிந்து தானும் தீப்பாய்ந்து உயிர்நீத்த செய்தியைக் குறிப்படுகின்றன.

"சோலை மயிலன்னாள் தன் கணவன் சொல்லியசொல்
மாலை நினையா மனங்கடைஇக் - காலை
புகையழல் வேலோன் புணர்ப்பாகி நின்றாள்
அகையழல் ஈமத் தகத்து" (புற.வெ.மா.-266)

என்று புறப்பொருள் வெண்பாமாலையும் குறிப்பிடுகின்றது.

"காதலன் வீயக் கடுந்துய ரெய்திப்
போதல் செய்யா வுயிரோடு புலந்து
நனியிரும் பொய்கை யாடுநர் போல
முளியெரிப் புகூ முதுகுடிப் பிறந்த
பத்தினிப் பெண்டி ரல்லேம்" (மணி.18:11-15)

என்று மணிமேகலையிலும் தீப்பாய்ந்து இறத்தலைப்பற்றியக் குறிப்பு காணப்படுகின்றது. மேலும் ஆதிரை என்பவள் தனது கணவனான சாதுவன் இறந்துவிட்டான் என்ற செய்தி கேட்டு தீயில் விழுந்தாள். தீ அவளைச் சுடவில்லை ஆதலால் 'தீயும் கொள்ளாப் பாவியானேன்'

E-ISSN: 2581-7140
Special Issue: Vol. 2, April-2019 Available at: www.ijtlls.com

என்று ஆதிரை வருந்திய செய்தியை மணிமேகலையில் ஆதிரை பிச்சையிட்டக்காதையின் வழி அறியமுடிகின்றது.

கம்பராமாயணத்தில் இராவணன் இறந்த பிறகு மண்டோதரி இறந்ததாகக் குறிப்பிடுகின்றார் கம்பர். இதனை

"நினைந்ததும் மறந்ததும் இலாத நெஞ்சினாள்
பொன்த ழைத்த பொருளரு மார்பினை
தனதழைக் கைக ளால்கழு வித்தனி
நின்ற ழைத்துயிர்த் தாள்உயிர் நீங்கினாள் (கம்ப.யுத்த.111)

என்ற அடிகள் எடுத்துரைக்கின்றன.

**கல்வெட்டில் சதிக்கல்**

ஆந்திரப்பிரதேசத்தில் வானவோலு என்ற ஊரில் கன்னட மொழியில் அமைந்த சதிக்கல் ஒன்று உள்ளது. அதில் கணவன் இறந்த பெனுகொண்டாவில் மனைவியான கங்கசாணி என்பவளும் உடன்கட்டை ஏறினாள் என்ற செய்தி இடம்பெற்றுள்ளது. மகாராஷ்டிர மாநிலம் கொல்லாப்பூர் மாவட்டம் சங்கசியில் கல்வெட்டுடன் உள்ள சதிக்கல் காணப்படுகிறது.

இரண்டாம் பராந்தகனாகிய சுந்தரசோழன் இறந்துவிட்ட பிறகு அவன் மனைவியான வானவன்மாதேவி தீயில் விழுந்து உயிர்நீத்த செய்தியை திருக்கோயிலூர் கல்வெட்டும், ஆண்டிமலை சாசனமும் குறிப்பிடுகின்றது. இறந்த அவ்விருவருக்கும் இராஜராஜன் தஞ்சை பெரிய கோயிலில் ஐம்பொன்னால் சிலைகள் நிறுவியுள்ளான்.

தவி என்று சொல்லப்படும் நோன்பு என்பது சதியுடன் தொடர்புடையதாகும். 'ஒருங்குடன் மாய்ந்த பெண்டிர்க்கு ஆயினும்' என்று மணிமேகலை குறிப்பிடுகின்றது. சதிக்கல்லை கர்நாடக மாநிலத்தில் மகாசதிக்கல் அல்லது மாஸ்திகல் என்று வழங்குகின்றனர். தமிழகத்திலும் இவ்வகையான சதிக்கல்லை காணலாம்.

மூன்றாம் குலோத்துங்கனுடைய ஆட்சியின்போது தாமரைப்பாக்கத்தில் உடன்கட்டை ஏறுதல் நிகழ்வை ஒருகல்வெட்டு உரைக்கின்றது. சோமன் பிரதிகங்கன் என்பவனின் தந்தையான கூத்தாடும் தேவர் இறந்துபட அவனுடைய தேவியான பாடினியும் உடன்கட்டை ஏறி இறந்துவிட்டாள். இதனை உடன்பள்ளி கொண்டாள் என்று கல்வெட்டு குறிப்பிடுகின்றது. இறந்த அப்பெண்ணின் குடும்பத்தார்க்கு ஒருவேலிநிலம் வழங்கப்பட்ட செய்தியும் இடம்பெற்றுள்ளது. மேலும் கி.பி.910இல் வீரசோழ இளங்கோவன் இறந்த பிறகு அவனது மனைவியும் உடன்கட்டை ஏறிய நிகழ்வை அல்லூரில் உள்ள கல்வெட்டு ஒன்று குறிப்பிடுகின்றது.

இவ்வாறு அக்கால மக்களின் வீரவுணர்வை வெளிக்காட்டும் விதத்தில் தீப்பாய்ந்து உயிர்நீத்த சதி என்னும் வழக்கம் இருந்துவந்துள்ளது. இதற்கு மறக்கற்பு என்ற பெயரும் உண்டு. சிலப்பதிகாரத்தில் பாண்டியன் நெடுஞ்செழியன் உயிர் விட்டதும் அவன் மனைவியான பாண்டிமாதேவி உயிர்நீத்தாள். இதனை அறக்கற்பு என்று வழங்கினர். ஆகவே இவ்வகையான செயல்கள் யாவும் அக்கால பெண்டிரின் கற்புக்கு புகழாரம் சூட்டும் செயல்களாகவே இருந்துவந்தமையை அறியமுடிகின்றது.

**நூற்பட்டியல்**

1. புறநானூறு மூலமும் பழைய உரையும்
2. குறுந்தொகை மூலமும் உரையும் - உ.வே.சாமிநாதய்யர்.

தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்
International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Special Issue: Vol. 2, April-2019 Available at: www.ijtlls.com


# அகழப்படாத ஆய்வுக்களம்
# Unresolved Archaeological Sites

**முனைவர்.கி.நாகேந்திரன்,** உதவிப்பேராசிரியர், தமிழ்த்துறை,
மதுரைக்கல்லூரி, மதுரை - 11.

## Abstract

*The paper purports the facts of the unresolved archaeological sites of Tamil Nadu. It is the present need to bring out the such measures to proclaim that the Tamils had a cultured life to the world. Therefore, the study brings out the messages regarding to the topic.*

**Keywords:** Unresolved, Archaeological Sites, Tamils, Tamil Civilization

பழந்தமிழர் பண்பாட்டையும்,கலை நுணுக்கத்தையும் கற்சிற்பங்கள், கோயில்கள் ,கட்டிடங்கள் வழி அறியமுடிகிறது. தொல்லியல் துறையினர் எத்தனையோ களங்களை ஆய்ந்து தரவுகளைத் திரட்டித் தந்த போதிலும், சில இடங்கள் ஆய்வுக்கு உட்படாமல் உள்ளது. அப்படி அகழப்படாத மதிப்பனூர் கிராமத்தில் உள்ள சிற்சில செய்திகளை கள ஆய்வு வாயிலாகத் தொகுத்துள்ளேன்.

**மதிப்பனூர்**

சோளத்தட்டை, கம்மந்தட்டையில் மதிப்புகள் நிறைந்த முத்துக்கள் வெடித்துச் சிதறிய ஊர் மதிப்பனூர் என்று கூறுகிறனர்.

இவ்வூரில் பெருமாள் கோயில் ஒன்று உள்ளது. இக்கோயில் எட்டுப்பட்டிக்கு சொந்தமான கோயில் என்று கூறுகின்றனர். இக்கோயிலுக்கு தெற்குப்புறம். சீமைக்கருவேல முற்புதர் அதன் நடுவில் ஒரு வேப்பமரம் வேப்பமரத்தின் கீழ் தூண்கற்களும், சிற்பங்கள் நிறைந்த கற்களும் காணப்படுகிறது. அதைப்பற்றி கள ஆய்வு செய்த போது எவ்விதமான தகவலும் அறியப்படவில்லை. இங்குள்ள சிற்பங்களைப் பார்க்கும் பொழுது நடுகற்கலாக இருக்கலாம் என்ற கருத்து வருகிறது. ஊசி வடிவில் நெடிய தூர்ணும் தூர்ணைச் சுற்றிலும் வட்ட எழுத்து கல்வெட்டுக்கள் காணப்படுகிறது. குறுக்கும் நெடுக்குமாக கல்வெட்டு கற்கள் சிற்பங்கள் செதுக்கிய கற்கள் காணப்படுகின்றன.

சிற்பங்களைக்காணும் போது ஒரே கல்லில் இரண்டு சிற்பங்கள் காணப்படுகிறது. அதில் ஒன்று பெண் சிற்பமும் மற்றொன்று ஆண் சிற்பமும் உள்ளது. போர் வாளுடன், கேடயம் வைத்து, வேல் கம்பும் வைத்து, ஆண் சிற்பமும், அதன் பக்கத்தில் கையை மடக்கிய நிலையில், ஒருபெண் சிற்பமும் காணப்படுகின்றது.

அதை அடுத்த சிற்பத்தில் போருக்கு செல்வது ஒரு வீரனின் சிற்பம் காணப்படுகின்றது. இவ்வூரில் வீடுகட்ட நிலத்தைத் தோண்டும்போதும், உழவு செய்கின்ற பொழுதும், தாழிப்பானைகள், மண்பானைகள், மண்பானை, ஓடுகள், பப்படப்பாசி கிடைப்பதாக கிராமமக்கள் தெரிவிக்கின்றனார். இவ்வூரில் முன்பு கவுண்டர் இன மக்கள் வாழ்ந்து வந்ததாகவும், பின்பு இம்மக்கள் இவ்வூரை விட்டு வெளியேறியதாகவும் கூறுகின்றனர். ஆனால் இவ்வூரில் நடைபெரும் கோயில் கொடை விழாவிற்கு கவுண்டர்களுக்கே முதல் மரியாதை என்ற செய்தியும் தெரியவருகிறது.

**E-ISSN: 2581-7140**
**Special Issue: Vol. 2, April-2019** **Available at: www.ijtlls.com**

முத்துநாகையாபுரம் இவ்வூர் மதிப்பனூர் கிராமத்தில் பக்கத்து ஊர் சாப்டூர் ஜமீன் எல்லைக்கு உட்பட்டது. இங்கு உள்ள பெத்தண்ண சுவாமி கோயில் குளத்தை தூர்வாரும் பொழுது ஏழுகன்னிமார் சிலை கண்டெடுக்கப்பட்டது.
இந்த ஊர் ஆதிகாலத்தில் ஆத்தூர், புலியூர் என்ற ஊர் இருந்ததாகவும் இப்பொழுது ஆற்றில் வெள்ளத்தில் அந்த ஊர் அழிந்துவிட்டதாகவும் என்று கூறுகின்றனர்.

மேற்கு சடையக்கவுண்டன் பட்டி, தெற்கு குழிப்பட்டி, வடமேற்கு மதிப்பனூர், வடகிழக்கு மேட்டுப்பட்டி, கிழக்கு நாகையாபுரம், நடுவில் பேரையூர் வட்டம் சாப்டூர் ஜமீன் உட்பட்ட எல்லையில் நாகையாபுரம் மக்களால் வணங்கப்படுகின்ற தெய்வம் பெத்தண்ணசுவாமி ஆகும். கோயில் அருகில் சிறுகுளம் உள்ளது. இந்தக் குளத்தைச் சுற்றி வேப்பமரம், நாவல் மரம், மருதமரம், இலுப்பமரம், அரசமரம், ஆலமரம் ஆகிய மரங்கள் அடர்ந்து இருக்கின்றன. குளத்திற்கு மேற்குக் கரையில் கிழக்கு நோக்கி ஆலமரத்தின் நிழலில் சங்கம் புதர் ஓரமாக இரண்டு மணிவாசலுடன், ஆசானக்கல்லு மட்டும் கிழக்கு பக்கம் திரும்பிக் காணப்படுகின்றது.

**வரலாறு**

திருமலை நாயக்கர் ஆட்சிக்காலத்தில் சாப்டூர் ஜமீன் புகழ்பெற்று இருந்துள்ளது. அந்தச் சமயம் சாப்டூர் ஜமீன் குதிரை போட்டு அவர் எல்லையைப் பார்க்க நாகையாபுரம் வரும் போது, வரும் வழியில் ஓர் ஊரணிக்கரை அடர்ந்த மரங்கள் நிறைந்து பூஞ்சோலையாக இருந்துள்ளது. ஊரணி வழியில் தான் நாகையாபுரத்திற்கு பாதை இருந்துள்ளது. ஊரணி மேட்டிற்குள் வரும் பொழுது குதிரை மண்டியிட்டு இறந்து விடுமாம். இப்படியே இரண்டு, மூன்று முறை நடந்து இருக்கின்றது. உடனே ஊர் மக்களைத் திரட்டி ஜமீன் கேட்டிருக்கின்றார். அது ஆத்தூர் சென்னம்ம ரெட்டி, புளியூத்து குப்பாரெட்டி ஆண்ட பூமி. சாமி அதுதான் எங்களுக்குத் தெரியும் என்று ஊர் மக்கள் கூறியிருக்கின்றனர்.

நாகையாபுரம் சாமியாடி சங்கரலிங்க ரெட்டியாருடைய மூதாதையர் மனைக்காட்டில் கடலைப்பயிரிட்டு, காவலுக்காக பெத்தண்ணசாமி போகும் பாதையில் இவர் படுத்து இருந்தாராம். அந்தச் சமயம் பெத்தண்ணசாமி குதிரையில் வந்து இருக்கிறார். எழுப்பி இருக்கின்றார். எழுந்து பார்த்தால் குதிரையில் ராசா வந்தது போல் இருந்ததாம். அவருக்கு அவரிடம் நான்தான் பெத்தண்ணசுவாமி என்று கூறி தன் கையை வைத்துத் தலையில் அடித்து இருக்கின்றார். இவருக்கு அருள் வந்து விட்டதாம். பின்பு ஜமீன் அதே போல் மறுமுறையும் குதிரை போட்டு வந்தராம். அந்த முறையும் குதிரை மண்டியிட்டு இறந்ததாம். இந்த தடவையும் கூட்டம் போட்டு விசாரணை செய்துள்ளார். விசாரிக்கும் பொழுது சாமியாடி சங்கரலிங்கம் ரெட்டியாரின் மூதாதையர் சாமி வந்து ஆடினாராம். அந்த சமயத்தில் நாந்தாப்பா பெத்தண்ணஉன் குதிரை மண்டியிட்டு இறந்த இடத்தில் தோண்டிப்பார். அங்கு என் சிலை இருக்கும் என்று கூறினாராம். உடனே ஜமீன்தார் பூமியைத் தோண்ட உத்தரவு இட்டாராம். பூமியைத் தோண்டியதில் ஒரு சிலை இருந்துள்ளது. அந்தச் சிலையை வைத்து வழிபாடு செய்துள்ளனர். பெத்தண்ணசாமி சல்லிக்கட்டு சாற்றி, சல்லிக்கட்டு விடச் சொன்னாராம். அவற்றிலிருந்து சல்லிக்கட்டு விட்டு வழிபட்டிருக்கின்றனர். பெத்தண்ணசாமி சிலை வைத்ததிற்குப் பின்பு செருப்பு போட்டு நடந்தாலோ, கைவீசி நடந்தாலோ பெத்தண்ணசாமி காசு கேக்குமாம். கள்வர்கள் களவாடச் சென்றால் அவர்களைத் திருட விடாமல் பயமுறுத்தி மிரட்டுமாம். இதை ஊர்மக்கள் ஜமீனிடம் எடுத்துக் கூறியுள்ளனர்.

ஜமீன் சாமியாடியிடம் உத்தரவு கேட்டு இருக்கின்றார். சாமியாடி, நல்லவர்களை எதுவும் செய்ய மாட்டேன். தீங்கு செய்பவர்களைத்தான் பயமுறுத்துவேன் என்று கூறினாராம்.

E-ISSN: 2581-7140
Special Issue: Vol. 2, April-2019 Available at: www.ijtlls.com

அதனால்தான் ஜமீன்தாரும் கண்டு கொள்வதும் இல்லையாம். உடல்நிலை சரியில்லாதவர்கள், ஊனமுற்றவர், வேலைக்குச் செல்ல முடியாதவர்கள் ஆகியோர் வந்து பெத்தண்ணசாமியிடம் சாமி என்னால் இன்றைக்கு வேலைக்குப் போக முடியவில்லை என்று மனம் உருகி நின்றால் அவர்களுக்கு, அன்றைக்குரிய குடும்பத்திற்கு அரிசி, பருப்பு வாங்க எவ்வளவு காசு பிடிக்குமோ அந்தக் காசு மட்டும் சங்கம் புதரில் இருக்குமாம். அதை எடுத்து குடும்பச் செலவு செய்வார்களாம். இப்படியும் இந்தச் சாமி மனிதர்களுக்கு உதவி செய்து உள்ளதாகக் கூறப்படுகிறது.

மேட்டுப்பட்டி பக்கத்தில் பெருமாள்பட்டிக்கும், பூசலப்புரத்திற்கும் நடுவில் கருசப்பட்டி என்ற ஊர் இருந்துள்ளது. இந்த ஊரில் கவுண்டர், கள்ளர் இனமக்கள் வாழ்ந்து வந்துள்ளனர். இந்தக் கள்ளரில் ஒருவன் தினமும் களவாட சின்னரெட்டியபட்டி, கல்லுப்பட்டி ஆகிய ஊர்களுக்குப் போவாராம். அந்த வழியாகப் போகும் போது பெத்தண்ணசாமி, கள்ளனைப் போக விடாமல் காலை வாரிப் போட்டு விடுமாம். இப்படியே சில தினங்கள் நடந்துள்ளது. இந்தக் கள்ளர் வேறு வழியில் போனால் மக்கள் பார்த்து விடுவார்களாம். இந்த வழியாகப் போனால் சாமி விடாது. என்ன செய்வது என்று யோசனை செய்துள்ளனர். மதுரையில் பட்டுநூல் செட்டியிடம் போய் கேட்டுள்ளார். பட்டுநூல் செட்டி, சந்திரகிரகணம் அன்று சாமியை குழிதோண்டிப் புதைத்து விடுவோம் என்று கூறினாராம். அதேபோல் சந்திரகிரகணத்து அன்று பட்டுநூல் செட்டியும், கள்ளரும் சேர்ந்து சாமியைக் குழி தோண்டிப் புதைத்து விட்டார்களாம். அன்றே மழை பொழிந்து கருசப்பட்டி என்ற ஊரே இல்லாமல் அழிந்து விட்டதாகவும் கள்ளர் குடும்பம், பட்டுநூல் செட்டிகுடும்பம் இரண்டும் அழிந்து விட்டதாகவும் பின்பு ஜமீன்தாரிடம் மக்கள் முறையிட ஜமீன்தார் சாமியாடியிடம் கேட்க சாமியாடி, புதைத்த சிலை புதைத்தது போல் இருக்கட்டும். எனக்கு ஆசானக்கல்லும் மணியும் அடித்துப் போடுங்கள் என்று கூறியதாம். அதேபோல் ஜமீன்தார் செய்துள்ளார்.

**காட்டுக்குழி அம்மன்**

மதிப்பனூர் பஞ்சாயத்திற்கு உட்பட்டு, காட்டுக்குழி அம்மன் மதிப்பனூருக்கு வடக்கும் பூசலப்புரத்திற்குத் தெற்கும், பெருமாள் பட்டிக்கு மேற்கும் அமைந்துள்ளது.

**அமைப்பு**

புளியமரம் வெட்டப்பட்ட நிலையிலும், வெட்டவெளியில் மேடையும் மேடையின்மேல் ஓர் உருண்டையான, நீளமான, இரண்டு அடி உயரத்திற்கு கல் உள்ளது. அந்தக் கல்லில் கல்வெட்டுக்கள் காணப்படுகின்றன. கல்லின் உச்சியில் குழி இருக்கின்றது. இந்தக் குழியை வைத்துத்தான் காட்டுக்குழியம்மன் என்று அழைக்கின்றனர்.

**வரலாறு**

ஆங்கிலேயர் ஆட்சிக்காலத்தில், பிறமலைக்கள்ளர் இனத்தவர்களை வெள்ளையர்கள் மதுரையில் குற்றப் பரம்பரைச் சட்டத்தில் கைது செய்தனர். இரவு முழுவதும் ஓர் அறையில் அடைத்து வைத்துள்ளனர். அதிலிருந்து தப்பித்துக் கவுண்டர் இனத்தவர்கள் வாழ்ந்த மதிப்பனூர் என்ற ஊருக்கு வந்துள்ளனர். அவர்கள் பின்னாலேயே வெள்ளைக்காரர் துரத்தி வந்துள்ளனர். அந்த இனத்தவர் வரும் வழியில் ஒரு புளியமரம் இருந்துள்ளது. அந்தப் புளியமரத்தில் தப்பித்து வந்த மக்கள் அனைவரும் ஏறிவிட்டனர். வெள்ளைக்காரன் பார்க்கும் பொழுது அவர்கள் கண்களுக்குத் தப்பித்து ஓடினவர் தெரியவில்லை. சிறிது தூரம் போன பின்பு, கள்ளர் இனமக்கள் இறங்கிப் போய்விட்டானா என்று பார்த்துள்ளனர். வெள்ளைக்காரன் போயிட்டான் போல என்று அனைவரும் மரத்தை விட்டு இறங்கி வந்துள்ளனர். இவர்கள் இறங்கி வருவதைப் பார்த்து வெள்ளையன் துரத்தியுள்ளான். மறுபடியும் வந்து மரத்தில்

தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்

International Journal of Tamil Language and Literary Studies

A Bi-Yearly Peer-Reviewed International Journal



E-ISSN: 2581-7140

Special Issue: Vol. 2, April-2019 Available at: www.ijtlls.com

ஏறியுள்ளனர். மரத்தில் ஏறியதைப் பார்த்த வெள்ளைக்காரன் அனைத்து வெள்ளைக்காரக் காவலர்களையும் கூப்பிட்டு மரத்தைப் பார்த்து இருக்கிறான். அவர்கள் கண்களுக்குப் பிறமலைக்கள்ளர் இனமக்கள் மரத்தில் இருப்பது தெரியவில்லை. வெள்ளைக்காரன் ஒன்றுமில்லை என்று திரும்பி வந்துவிட்டான். கள்ளர் மரத்தை விட்டு இறங்கும் போது ஒரு கல் இருந்துள்ளது. அந்த கல்லில் ஒரு குழி இருந்துள்ளது. அப்பொழுது இங்கு ஒரு தெய்வம் உள்ளது. அந்தத் தெய்வம் தான் நம் அனைவரையும் காப்பாற்றியுள்ளது என்று நம்பியுள்ளனர். அந்தக் கல்லைப் பார்த்து காட்டுக்குழியம்மன் என்று பெயர் வைத்து வணங்கி வந்துள்ளனர். இந்த இனமக்கள் மதிப்பனூர், பெருமாள்பட்டி, மேட்டுப்பட்டி ஆகிய ஊர்களில் வாழ்ந்து வருகின்றனர்.

**வழிபாடு**

காட்டுக்குழி அம்மனுக்கு குயவர் இனமக்கள் பூசாரியாக இருந்து வருகின்றனர். புரட்டாசி மாதம், வளர்பிறை செவ்வாய்க்கிழமை அன்று சாட்டி, மறு செவ்வாய் வழிபாடு நடைபெறும். வழிபாடு நடைபெறுவதற்கு மூன்று நாட்களுக்கு குழிப்பட்டி சக்கிலியர் இன மக்கள் தப்பு அடிக்க வேண்டும். பின்பு வழிபாடு நடைபெறும் நாள் அன்று தப்பை அடித்துப் பொங்கல் பானையை அழைத்து வர மேட்டுப்பட்டி, மதிப்பனூர் மக்கள் பொங்கல் வைப்பார்கள். பெருமாள்பட்டி மக்கள் பொங்கல் பானையுடன் சிலம்பாட்டம் ஆடி, புலிவேடம் அணிந்து ஆடிக்கொண்டு வருவார்கள். அனைத்து மக்களும் பொங்கல் வைத்து வழிபட்டு கிடாய் வெட்டிப் பலி கொடுக்கப்படுகின்றது. பின்பு வழிபாடு அன்று பெரியதேவர், சின்னத்தேவர், பெரியபூசாரி, சின்னப்பூசாரி ஆகியோருக்கு முதன்மை தரப்படுகின்றது.

**ஒப்பாரி வழிபாடு**

மழை பொழியவில்லை. காட்டில் விதைத்த விதைப்பு கருகுகின்றது என்றால் இந்த ஊர்ப் பெண்கள் அனைவரும் காட்டுக்குழியம்மனிடம் ஒப்பாரி வைத்து, அழுது மனதார வழிபட்டால் உடனே மழை பொழியும் என்று கூறுகின்றனர். காட்டுக்காளியம்மன், காட்டுக்கோவில் அம்மன் என்ற வேறு பெயர்களும் இதற்கு உண்டு.

**நிறைவுரை**

மதிப்பனூர் கிராமம் போன்ற அகழப்படாத ஆய்வுக்களங்களை ஆய்வு செய்வதன் மூலம் அளவிடற்கரிய பயன் பெருகும்.

**தகவலாளி பட்டியல்**

1. பெ.சீனிவாசன், வயது – 50, மதிப்பனூர்.
2. ம.மாயக்காள், வயது – 70, மதிப்பனூர்.
3. அ.தங்கமுத்து, வயது – 60, மதிப்பனூர்.
4. மு.ஆரள்மொழி, வயது – 48, மதிப்பனூர்.

*A Bi-Yearly Peer-Reviewed International Journal*
E-ISSN: 2581-7140
Special Issue: Vol. 2, April-2019 Available at: www.ijtlls.com

# தமிழர் தொல்லியல் அகழாய்வுகள்
## Tamilar Archaeological Excavations

**ஆ.நிஷாந்தி,** முனைவர் பட்ட ஆய்வாளர்
தமிழ்த் துறை, மாநிலக்கல்லூரி (தன்னாட்சி) சென்னை-600005.

## Abstract

*The paper gives the details of the orgins of archaeology and its development. It also traces the world archaeological sites and the foundsers of the method. Then it discusses the calculating methods of the system. Finally is focuses on the Tamil origin and the sites related to the past civilization of the Tamil people. The collected sources related to the the kinds and types of archaeology and exvacations are a good idea to know about the facts of the field. Hence, the paper traces to find the Archaeological Excavations of Tamilar region.*

**Keywords:** Venad, Culverts, Kerala, Kings of Venad

### முன்னுரை

ஒரு நாட்டின் பாரம்பரிய பண்பாட்டுப் பெருமையை அறிந்து கொள்வதில் முக்கியமானதோர் இடத்தை வகிக்கின்றது. இதனை கற்பதால் நம் பாரதத்தின் பண்பாட்டுப் பெருமையையும் தமிழகத்தின் தனிச்சிறப்பையும் நாம் அறியமுடிகிறது. தொல்பழங்கால மக்களின் வாழ்க்கைப் பயணம், அவர்களின் படிப்படியான முன்னேற்றம், தமிழகத்தில் மேற்கொள்ளப்பட்ட அகழாய்வுகள், அவற்றால் அறியப்படும் உண்மைகள், நாணயவியல், கல்வெட்டியல் ஆகியவை பற்றிய செய்திகள் கூறப்படுவன ஆகும். தொல்லியல் துறையின் அரும்பணிகள், இத்துரையின் வளர்ச்சிக்குப் பாடுபட்ட தொல்லியல் அறிஞர்களின் பணிகள், பண்டைய மனிதன் பயன்படுத்திய பண்டைய தொல்பொருள் பாரம்பரியத்தை அறிய முடிகிறது. மனிதகுலம், கடந்து வந்த பாதையை அறிந்துகொள்ளவும், தற்போதைய வளர்ச்சிக்கு முன்பு அவர்கள் நிலையை புரிந்து கொள்ளவும், உதவுபவை அவர்கள் அன்றாடம் பயன் படுத்திய பழம் பொருட்களே ஆகும். இத்தொல்லியல் கல்வியின் மூலம், முறையாக ஒரு வரையறைக்குள் மனித சமுதாயத்தின் முன்னேற்றத்தை அறிய முடிகிறது. குறிப்பாக, எழுத்துச் சான்றுகள் கிடைக்கப்பெறாத தொல்பழங்காலத்தில் வாழ்ந்த நம் முன்னோர்களின் வாழ்க்கை நிலையை ஊகிக்க உதவுபவை, அவர்கள் பயன் படுத்தி விட்டுச் சென்றப் பழம்பொருட்களே ஆகும்.

இப்பொருட்கள் தொல்பொருட்கள் என அழைக்கப்படுகின்றன. தொல்லியலை, தொல்பொருட்களே அல்லது தொல்பொருளாய்வு எனவும் அழைப்பர். இதுவே ஆர்க்கியாலஜி (archaeology) என ஆங்கிலத்தில் அழைக்கப்படுகிறது. இந்த ஆங்கிலச் சொல் கிரேக்க மொழியில் இருந்துதான் பிறந்தது. ‘ஆர்க்கயஸ்’ (archaios) எனும் கிரேக்கச் சொல்லிற்குப் பழமை என்பது பொருள். ‘ஆர்க்கே’ (archae) என்னும் சொல், தொக்கம் என்றும், ‘லோகாஸ்’ (logos) என்பது அறிவியல் அல்லது கோட்பாடு என்றும் பொருள்படும். இவ்விரு சொற்களும் இணைந்தே ஆர்க்கியாலஜி (archaeology) எனும் சொல் மலர்ந்தது. ஆர்க்கியாலஜி என்பது

E-ISSN: 2581-7140
Special Issue: Vol. 2, April-2019 Available at: www.ijtlls.com

பழமையான பொட்களைப் பற்றிய படிப்பு ஆகும். இது வரலாறு எனும் பாடத்துடன் மிகவும் நெருக்கமான தொடர்பு கொண்டது. வரலாற்றுடன் பின்னிப்பிணைந்தது. வரலாற்றுக்கு முற்பட்ட மனிதனின் வாழ்கையைக் கணிப்பதற்கு தொல்லியலே தோன்றாத் துணையாக விளங்குகிறது. தோல்லியல் படித்த தொல்லியலார் அரிதின் முயன்று பண்டைக்கால மக்களின் சமுதால் வாழ்க்கையை ஓரளவு உருவாக்கியுள்ளனர்.

**தொல்லியல் என்பது**

பண்டைய மனிதன் விட்டுச் சென்ற பலவிதமான பொருட்கள், கருவிகள் ஆகியவற்றைக் கொண்டு பழங்காலத்தைக் கணிப்பதே தொல்லியல் என்பதனை முன்பே கண்டோம். புண்டைய மனிதனின் வரலாற்றை, அவன் விட்டுச்சென்ற பொருள்களின் அடிப்படையில், அறிவியல் முறைப்படி உருவாக்குவதுதான் தொல்லியல் ஆகும். பண்டைக்காலச் சமுதாத்தினர் விட்டுச் சென்ற எச்சங்களிலிருந்து கடந்த காலத்தை உருவாக்கும் முறையே தொல்லியல் (“archaeology is essentially a method of reconstructing the surviving traces of former societies.”) என்று அறிஞர் கூறுவர். எனவே “தான் வரலாற்றுக்கு முற்பட்ட வரலாறு, தொல்லியலின் ஒரு பகுதியாகவே கருதப்படுகிறது’’ மனிதனால் உருவாக்கப்பட்ட எளிமையான ஆயுதங்களிலிருந்து, சிக்கல் மிகுந்த இயந்திரங்கள் வரை, தொடக்க காலக் கோயில்கள் மற்றும் கல்லறைகளிலிருந்து – அரண்மனைகள், மாதாகோயில்கள் மற்றும் பிரமிடுகள் வரை – அனைத்துப் பழம் பொருட்களையும் ஆய்வு செய்வதே தொல்லியல் ஆகும். தொல்லியல் என்பது கடந்த காலத்தைப் பற்றி ஆய்வது என்று பொருள்பட்டாலும், இன்று தொல்லியலின் பரப்பும், எல்லையும் மிகவும் பரந்து, விரிந்து செல்கிறது. எனவேதான், லியோனார்டு காட்ரெல் என்பார் தொல்லியல் எனும் தொடர்கதை “இப்பூவுலகில் முதன்முதலில் மனிதன் தோன்றியகாலத்தில் தொடங்கி மனிதகுலத்தின் இறுதி அழிவுக்காலத்தில் தான் முடிவுபெறும்’’ (lt is a continuing story which begins with the first appearance of man on earth and will only end with the final extinction of the species) எனத் தொல்லியலின் நீண்ட பரப்பைக்குப்பிடுவார். எனவே, தொல்லியலுக்கோர் எல்லையில்லை. இரண்டு மில்லியன் ஆண்டுகட்கு முன்பு தயாரிக்கப்பட்ட கற்கருவிகள், புதிய கற்காலமனிதன் கட்டிய பழங்குடிகள் அல்லது செப்புக்கால மனிதனின் செம்புக் கருவிகள், பெருங்கற்கால மனிதர்களின் ஈமச்சின்னங்கள், பானையோடுகள், குகை ஓவியங்கள், இடைக்கால நாணயங்கள், கி.பி.17, 18-ஆம் நூற்றாண்டுகளில் ஆண்ட மன்னர்களின் கோட்டை கொத்தளங்கள், அரண்மனைகள், திருக்கோயில்கள், கலைச்செல்வங்கள் போன்ற இன்னோரன்ன பலதுறை ஆய்வுகளும் தொல்லியலில் அடங்கும் என்றும் கிளின்டேனியல் (Glyn Daniel) முதலான அறிஞர்கள் கருதுகின்றனர். முன்பு தொல்லியல் ஆய்வுகள் என்பது தொல் பொருட்களின் பட்டியலாக மட்டுமே இருந்துள்ளது. ஆனால் தற்பொழுது தொல்லியல் ஆய்வாளர்கள், அத்தொல் பொருட்களைப் பற்றி, விரிவான ஆய்வுகள் மேற்கொண்டு, அவற்றை ஒத்த பொருட்கள், உலகின் பல்வேறு அடங்களில் கிடைப்பவற்றை ஒப்பாய்வு செய்து, அதன் மூலம் அவற்றைப்பயன்படுத்திய மக்களின் வாழ்க்கை மறையைக் கணிக்க முற்பட்டனர். இந்த ஆய்வின் மூலம் அவற்றைப் பயன்படுத்திய மக்களின் காலம் யாது? அவை உலகின் பல்வேறு பகுதிகளில் உள்ள மக்களால் எவ்வாறு பயன்படுத்தப்பட்டன என்பன போன்ற பல வழனாக்களுக்கு விடை பகர்வனவாக தொல்லியல் உள்ளது.

E-ISSN: 2581-7140
Special Issue: Vol. 2, April-2019 Available at: www.ijtlls.com

**தொல்லியலின் வகைகள் (Kinds of Archaeology)**

வரலாற்றுக் காலத்தைக் காட்டிலும் வரலாற்றுக்கு முற்பட்ட தொல்பழங்காலம், பல லட்சம் ஆண்டுகளைக் கொண்டுள்ளது. எனவே இதன் கால எல்லையும். புரப்பும், களமும் இக்காலத்தைச் சார்ந்த பல்வகையான தொல்பொருள்களும் (யசவநகயஉவள) கருவிகளும் பேரளவினதாகும். எனவே அந்த ஆய்வுகளை ஒரு தொல்லியலார் மட்டுமே மேற்கொள்ள இயலாது. எனவே புவியியல் அடிப்படையிலும், கால அடிப்படையிலும் மற்றும் வேறு சில அடிப்படையிலும் பகுக்கப்பட்டுள்ளது. புவியியல் மற்றும் மண்டல அடிப்படையில் இதனை மத்தியத்தரைக்கடல் தொல்லியல் (Mediterranean archaelogy) என்றும், சீர்மிகு இலக்கிய காலத்தொல்லியல் (Classical archaeology) என்றும் பகுக்கின்றனர். எனவே தான் கிரீஸ், உரோமாபுரி தொல்லியல், அமெரிக்கத் தொல்லியல். இந்தியத் தொல்லியல், பழங்கால எகிப்துத் தொல்லியல், ஆப்பிரிக்கத் தொல்லியல் முதலான பிரிவுகள் ஏற்பட்டன.

புவியியல் அடிப்படையைப் போன்ற, (pe-riod or chronology) முறையிலும் இதனை வரலாற்றுக்கு முற்பட்டத் தொல்லியல், தொடக்க வரலாற்றுக்கால தொல்லியல், வரலாறு சார்ச்த தொல்லியல் (pre-historic, proto historic & historical archaeology) எனும் பாகுபாடுகள் தோன்றின. இம்மூன்று பிரிவுகளுள் தொல்பழங்கால வரலாற்றை ஆய்வதற்குத் தொல்லியல் மட்டுமே தோன்றாத்துணையாக விளங்குகின்றது. ஏனெனில் வரலாற்றுக்கு முற்பபட்ட காலம் என்பது, எழுத்தப்பொறிப்புகள் (Inscriptions) அல்லது ஆவணங்கள் (records) தோன்றுவதற்கு முந்திய காலம் என்பதனை முன்பே கண்டோம். எனவே இந்நீண்ட நெடிய கால ஆய்வுகள், அக்கால மனிதர்கள் விட்டுச்சென்ற பொருள்கள் (artefacts), கருவிகள் போன்றவற்றையே ஆதாரமாகக் கொண்டவை. எனவே தொல்லியலார் மட்டுமே இவற்றை ஆய்வுசெய்யத் தகுதியுடையவராகிறார். வரலாற்றுத் தொல்லியலும் (medieval archaeology), நவீனத் தொல்லியல் போன்று கால அடிப்படையில் பல பிரிவுகளாகப் பகுக்கப்படுகின்றன. பொருள், பிரச்னை (subject problem of study) அடிப்படையிலும் இது, பொருளாதாரத் தொல்லியல், இன மரபுத் தொல்லியல் (economic archaeology, ethno archaeology) திருக்கோயில் தொல்லியல் (temple archaeology), புத்தசமயத் தொல்லியல், இந்து சமயத் தொல்லியல் என பல வகைகளாகப் பகுக்கப்படுகின்றன.

1. பொருளாதாரத் தொல்லியல் (Economic archaeology)
2. இனமரபுத் தொல்லியல் (Ethno archaeology)
3. நீரடி அகழாய்வு (Under- water archaeology)
4. ஆகாய நிழற்படத் தெபல்லியல் (Aerial archaeology)
5. அழிவு மீட்புத் தொல்லியல் (Disaster archaeology)

**வரலாற்றிற்கு ஆதாரமான தொல்லியல்**

வரலாற்றை உருவாக்கப் பயன்படும் பலவிதமான மூலங்களுள் தொல்லியல் முதன்மை வகிக்கின்றது. குறிப்பாக அதிலும் சிறப்பாக வரலாற்றுக்கு முற்பட்ட காலத்திய மனிதனின் வாழ்க்கை முறை பற்றிய விவரங்களை அறிவதில், தொல்லியலே தொன்றாத்துணையாக விளங்குகிறது. வரலாற்றின் கண்களுக்கு எட்டாத தொல்பழங்காலம் எனும் இருட்டிற்கு ஒளிவிளக்காய் திகழ்வது தொல்லியல். எழுத்துச் சான்றுகளே இல்லாத கற்கால மக்களின் வரலாற்றைக்கணிக்க, அவர்களது வாழ்விடங்களைத் தோண்டித் தோண்டி அவர்கள் பயன்படுத்தி பழங்கருவிகளைக் கண்டுபிடித்து, அவற்றின் மூலம் படிப்படியாக மனிதன் எவ்வாறு நாகரிகத்தை நோக்கி முன்னேறினான் என்பதனை அறிவிப்பது தொல்லியல்.

E-ISSN: 2581-7140
Special Issue: Vol. 2, April-2019 Available at: www.ijtlls.com

பண்டைய மனிதனின் 5,00,000 ஆண்டுக் கால நீண்ட நெடிய வாழ்க்கைப் பயணத்தில் ஒவ்வொரு காலக்கட்டதடதிலும் உலகின் ஒவ்வொரு பகுதியிலும், மனிதன் எவ்வாறு இயற்கைச்சவால்களைச் சந்தித்தான், வெற்றி பெற்றான்-என்பதனைத் தெளிவுபடுத்துவதே தொல்லியல். மனிதனின் வாழ்க்கை வரலாறு, அவன் தன புறச்சூழல்களுடன் நடத்திய போராட்டங்களின் கதையே என்பது இதனால் புலனாகிறது. இயற.கைச் சூழலுக்கேற்ப பண்டைய மனிதன் எவ்வாறு தன்னை மாற்றிக் கொண்டு, தொழில் நுட்பங்களைக் கண்டுபிடித்து முன்னேற்றம் கண்டான் என்பதை அறியத் துணைபுரிவது தொல்லியல் ஆய்வு.

பழைய கற்காலம், இடைக்கற்காலம், புதிய கற்காலம், செம்புக்காலம், இரும்புக் காலம், பெருங்கல் காலம் முதலான காலம்மட்டங்களில் மனிதனின் பல்வேறு சாதனைகளைப் பட்ம் பிடித்துக் காட்டுவது தொல்லியல். பண்டைய மனிதனின் வரலாற்றை வெளிப்படுத்துவதில் உலகெங்கிலும் அகழாய்வுகளே (excavation) முக்கிய பங்கு வகித்துள்ளன. எடுத்துக்காட்டாக மொஹஞ்சதாரோ, ஹரப்பா, பாடலிபுத்திரம் (பீஹார்), நாகார்ஜீனகொண்டா (ஆந்திரா), நாளந்தா (பீஹார்), அரிக்கமேடு, பையம்பள்ளி, காவிரிப் பூம்பட்டிணம், அழகன் குளம், கொற்கை, கரூர் மதலான வரலாற்றுப்புகழ்மிக்க இடங்களில் நடைபெற்ற அகழாய்வுகள் வரலாற்றில் புத்தொளிப் பாய்ச்சியுள்ளன. இவை வரலாற்றின் கரலத்தையே பின்னோக்கித் தள்ளிவிட்டன. மொஹஞ்சதாரோ - ஹரப்பா அகழாய்வுகள் இந்திய வரலாற்றன் தொடக்க காலத்தை பன்னூறு ஆண்டுகள் பின்னோக்கி எறிந்ததை நாமறிவோம். நூகார்ஜீனகொண்டா அகழாய்வுகள் இந்தியத் தொல்லியல் வரலாற்றில் ஒர மைல் கல் எனலாம்.

ஆரிக்கமேடு (1945), அழகன் குளம் அகழாய்வுகள் சங்க காலத் தமிழரின் சிறப்பை வெளிப்படுத்துவதுடன் தமிழக- உரோமானியத் தொடர்பையும் அறிவிக்கின்றன. இதனைப்போன்று ஆதிச்சநல்லூர் அகழாய்வுகளில் கிடைத்த இரும்பு, வெண்கலப் பொருட்கள் தமிழரின் பண்பாட்டுப் பெருமையை உலகிற்கு உணர்த்துகின்றன. சங்க இலக்கியங்களில் கூறப்பட்டுள்ள செய்திகள் அகழரய்வுகளால் உறுதி செய்யப்பட்டுள்ளன. பூம்புகார், கொற்கை, கரூர், உறையூர் அகழாய்வுகள், இக்கோநகரங்களின் தொன்மைச்சிறப்பையும் அவை அயல்நாடுகளுடன் கொண்டிருந்த வணிக உறவுகளையும் வெளிப்படுத்தியுள்ளன. சிந்து சமவெளி நாகரித்தின் இறுதிக்காலம் தொடங்கி வரலாற்றுக் காலத்தின் தொடக்கம் வரையிலான இந்திய மனிதனின் நாகரிகக் கூறுபாடுகள் பற்றி அறிந்த கொள்ளவும் தொல்லியலே துணை புரிந்துள்ளது. இந்த இருண்ட காலத்தில் செப்புக்காலப் பண்பாடு, கங்கை- யமுனை நதிப்பள்ளத்தாக்கில் நிலவிய, வண்ணம் தீட்டப்பட்ட சாம்பல் நிற மட்கலப் பண்பாடு (painted grey ware culture of the Ganga-Yamuna valley), மத்திய இந்தியா, வட தக்காணம், இராஜஸ்தான், தென்னிந்தியா முதலான மண்டலங்களில் நிலவிய பதிய கற்கால செப்புக்காலப் பண்பாடு ஆகியவை பற்றி அறிந்து கொள்வதிலும் தொல்லியல் வெற்றி கண்டுள்ளது.

இக்காலக்கட்டத்தில் மனிதன் எவ்வாறு மேய்ச்சல் தொழிலை விட்டு வேளாண்மைக்கு மாறினான்? எவ்வாறு நேர்த்தியான மட்பாண்டங்களை பெருமளவில் உற்பத்தி செய்தான்? செம்பு, இரும்பு போன்ற உலோகங்ளைக் கொண்டு எவ்வாறு வீட்டு உபயோகப் பொருட்கள், போர்க்கருவிகள் ஆகிளவற்றை உற்பத்தி செய்யக் கற்றுக்கொண்டான்? எவ்வாறு வீடுகளை அமைக்கக் கற்றுக்கொண்டான்? காட்டு விலங்குகளை வேட்டையாடிய மனிதன், எவ்வாறு அவறறை வீட்டு மிருகமாகவளர்க்கக் கற்றுக்கொண்டான்? இறந்தவர்களைத் திறந்த வெளியில் தூக்கியெறிந்த அவன் எவ்வாறு இறந்தோரை அடக்கம் செய்ய கற்றுக் கொண்டான்?

E-ISSN: 2581-7140
Special Issue: Vol. 2, April-2019 Available at: www.ijtlls.com

தானியங்களை எவ்வாறு சேமித்து வைக்கத் தெரிந்து கொண்டான்? தங்க அணிகலன்களை எவ்வாறு செய்யக் கற்றுக்கொண்டு அவற்றை அணிந்து மகிழ்ந்தான்? முதலான இன்னபிற சிக்கலான வினாக்களுக்கு விடை கண்டுபிடித்தவர் தான் தொல்லியலார்.

**அகழாய்வின் வகைகள் (Types of excavation)**

அகழாய்வு - (excavation)
ஆழத்தோண்டும் முறை
சுற்றகழாய்வு
நீள்குழி அகழாய்வு
குகை அகழாய்வு
சுவக்குழி அகழாய்வு
தண்ணீருக்கடியில் அகழாய்வு

**ஆகழாவின் நோக்கம் (The purpose of excavation)**

ஒரு நாட்டின் கலாசார- பண்பாட்டு வரவற்றைக் கணிப்பதற்குத் தொல்லியல் ஆய்வுகள் பயனள்ளதாக அமைந்துள்ளன. வரலாற்றுக்கு முற்பட்ட காலத்திய மக்கள் வாழ்க்கையை அறிய தொல்லியல் மடடுமே அடிப்படைச்சான்றாக விளங்குகிறது. எழுத்துச்சான்றுகள் கிடைக்கப்பெறாத காலத்திய வரலாற்றை அறிய உறுதுணையாக நிற்பவை அகழாய்வுகளில் கிடைக்கும் அறிய தொல்பொருட்களெ ஆகும். இத்தொல்பொருட்களுள் எலும்பு, கரிம கருவிகள் மற்றும் பழமையான பொருட்களை, அறிவியல் முறைகளான கார்பன் அல்லது ரேடியோ கார்பன் காலக் கணிப்புமுறை (சயனழை உயசடிழடெ னயவவைெ)இ காந்த சக்தி முறை (archaeo magnetism), தெர்மோலுமினிசென்ஸ் முறை (thermoluminesense method), பொட்டாசியம் ஆர்மான் காலக்கணிப்பு முறை (pottassiumargon dating) போன்ற அய்வுகள் மூலம் அவை பயன்படுத்தப்பட்ட காலத்தைத் துல்லியமாகக் கணிக்க முடிகின்றது.

மேலும் வரலாற்றுப் புகழ்மிக்க, ஒரு தொன்மை சான்ற நகரம் அல்லது வாழ்விடத்தின் பழமையையும், சிறப்பையும் அறிவதற்குத் தொல்லியல் ஆய்வுகளே துணை நிற்கின்றன. தொல்லியலார் பல நாடுகளில் அகழாய்வின் போது எடுக்கப்பட்ட பழம் பொருட்களை ஒப்பாய்வு செய்து, ஒரு நாகரிகத்திற்கும் மற்ற நரகரிகத்திற்கும் உள்ள தொடர்பை உத்தேச ஒப்பீட்டு முறையில் (relative chronology) காலக்கணிப்பு செளய்ய இயலும். இத்தகைய தொல்லியல் ஆய்வுகளால் எந்த நாகரிகம் காலத்தால் முற்பட்டது? எந்த நாகரிகம் பிற்பட்டது? எந்த நாகரித்திலிருந்து, எந்த நாகரிகம் வளர்ந்தது? அந்நாகரிக மக்கள் ஓரிடத்திலிருந்து பிரிந்து ஒவ்வாறு புதிய நாகரிகத்தைத் தோற்றுவிதனர்? அவர்களிடையே உள்ள ஒத்த கூறுபாடுகள் யாவை? போன்ற வினாக்களுக்கான விடைகளை அறிய முடிகின்றது. அடுத்த, ஒரு குறிப்பிட்ட அரசின் தலைநகர் யாத? அதன் பிற்காலத்திய தலைநகர் யாது? அந்த இடைக்காலத்தில் அவர்கள் எங்கிருந்து ஆண்டார்கள்- போன்ற பல சிக்கலான பிரச்சனைகளுக்கும் தீர்வு காண்பது தொல்லியலின் நோக்கமாகும். (சான்று) சேர நாட்டின் தலைநகர் வாஞ்சி என்து இலக்கியங்கள் வாயிலாக அறியப்படும் செய்தியாகும். இந்நகரம் எங்கிருந்தது? மேலைக் கடற்கரையிலா? (கேரளா) தமிழ்நாட்டின் கரூரிலா? எனும் சிக்கலை எத்துக்கொள்வோம். இரு கோட்பாடகளையும் வலியுறுத்துகின்ற இலக்கியச் சான்றுகளை இலக்கியவியலார் எடுத்துக்காட்டுகின்றனர். ஆனால், தொல்லியலார் கேரளாவில் உள்ள திருவஞ்சைக்களத்தலும் (கிராங்கனூர்), கரூரிலும் அகழாய்வு மேற்கொண்டனர். முடிவாக தமிழ்நாட்டின் கரூரே, சேரர் வஞ்சி என்பதற்கு, உரிய கல்வெட்டு, நாணயவியல், அகழாய்வுச் சான்றுகளைக் கண்டபிடித்தனர். எனவே, இறுதியாக கரூரே வஞ்சி என்றும்,

E-ISSN: 2581-7140
Special Issue: Vol. 2, April-2019 Available at: www.ijtlls.com

இதுவே சேரரின் கோநகர் என்றும் அறுதியிட்டு கூறியுள்ளனர். அடுத்து, மற்றொரு எடுத்துக்காட்டையும் காண்போம். ஈரோடு மாவட்டத்திலுள்ள கொடுமணல் என்ற ஊரில், தமிழ்நாடு தொல்லியல் துறையும், தஞ்சை தமிழ் தமிழ் பல்கலைக் கழகமும் இணைந்து, அகழ்வாய்வினை மேற்கொண்டன. இதன் விளைவாகஈ பெருங்கற்காலத்திய, அதாவது இரும்புக் காலத்திய மக்களின் வாழ்க்கை நிலையையும், ெக்காலக்கட்டத்தில் அறிய முடிந்தது. இவ்வகழ்வாய்வில் 6000 விலையுயர்ந்த மணிகள் கிடைத்துள்ளன. இவ்வகழ்வாய்வால் பத்ற்றுப்பத்தில் (பாடல் 74, வரி 5-6)

‘கொடுமணம் பட்ட வினைமாணருங்கலம்
பந்தர்பயந்த பலர்புகழ் முத்தம்’

என்று குறிப்பிடப்பட்டுள்ள ஊர் கொடுமணலே என்பது உறுதியாயிற்று. மனித சமுதாயம். நடந்து வந்த பாதையைத் ஆதாரங்களாகத் திகழும் எழுதப்பட்ட சான்றுகள், பெரும்பாலும் அக்கால வேந்தர்களின் அரசியல் நிலையையும், அவர்களுக்குத் துணை நின்ற சமதாய நிலையையும் அறிவிக்கின்றன ஆனால் அகழ்வாய்வில் கிடைக்கும் தொல்பொருட்கள் மட்டுமே சாதாரண நிலையில் வாழ்ந்த தனிமனிதனின் வாழ்க்கை நிலையைப் படம் பிடித்துக் காட்டுகின்றன. எனவே, அக்காலத்தில் வாழ்ந்த பொதுமக்களின் வரலாற்றை அறிய உதவுபவை தொல்லியல் சான்றுகளே என்பது புலனாகும். நமது பண்படைய பாரம்பரியப் பெருமையை அறிவதற்கும் இத்தொல்லியல் ஆய்வுகள் துணை புரிகின்றன. ஓர் இனத்தின், ஒரு நாட்டின் நாகரிக வளர்ச்சியை மட்டுமன்றி, உலகின் அனைத்து நாடுகளின் நாகரிக பண்பாட்டு வளர்ச்சியைப் படம் பிடித்துக் காட்டுவது தொல்லியல் ஆகும். ஒரு நாட்டிற்கும் அதன் அண்டை, அயல் நாடுகளுக்கும் நிலவிய பண்பாடடு, வணிகத் தொடர்பிகை அறியத் தொல்லியலையே நாடுகிறோம். ஜெர்மன் நாட்டைச் சோர்ந்தவரும், தந்தை எனவும் அழைக்கப்படுகின்றவருமான அறிஞர் ஹென்றிச் சிலிமென் (Henrich Schliemann 1822-1890) இலியட் காப்பியத்தில் குறிப்பிடப்பட்ட டிராய் (Troy) எனும் பழமையான நகரம் அகமெம்னான் (Agememnon) எனும் மன்னனின் தலைநகரான சைசேனே (Mycenae) நகரம் ஆகியவற்றை அகழ்தெடுத்ததும் சர் ஆர்தர் இவான்ஸ் (Sir. Arthur Evans), பெட்ரி (Petrie) போன்றோர் பழம் பண்பாட்டுப் பெருமையை உணர்த்தியதும், அகழாய்வினால் தான் என்பது குறிப்பிடத்தக்கது. எனவே நமது பண்டைய வரலாற்றை, நாகரிகத்தை அறிய உதவும் இயலாகத் தொல்லியல் விளங்குகிறதது. அதுகாறும் கூறியவற்றான் தொல்லியல் பல பிரச்சனைகளுக்கு விளக்கமும், முடிவும் கூறும் சக்தியாக உள்ளதகை அறிய முடிகின்றது. அடுத்து தொல்லியல், வரலாற்றை ஓர் அர்த்தமுள்ள படிப்பாக மாற்றியுள்ளது: பழமை நாகவில்லை என்பது தொல்லியலால் நிரூாணமாகியுள்ளது. 5 இலட்சம் ஆண்டுகளுக்கு முற்பட்ட வரலாற்றையும் உய்த்துணரத் தொல்லியல் துணை நிற்கிறது.

**முடியுரை**

மேலும், தமிழ்த் தொல்லியல் அகழாய்வுகளை அகழ்ந்தெடுக்கப்பட்ட அனைத்துத் தொல்பொருட்களையும், நிரந்தரப் பதிவேட்டில் பதிவு செய்துகொள்ள வேண்டும். தற்போது கணினி உதவியுடன், டிஜிட்டல் முறையில் நிழற்படத்துடன் அரும்பொட்களை பதிவு செய்யலாம்.

E-ISSN: 2581-7140
Special Issue: Vol. 2, April-2019 Available at: www.ijtlls.com

# தொல்லியல் போற்றும் திருமயிலைக் கல்வெட்டுகளில் தமிழகபண்பாடு
# Tamil Culture from the Culverts of Archaeology Famed Thirumayilai Culverts

**முனைவர்.தி.நெல்லையப்பன்,** உதவிப்பேராசிரியர்- தமிழியல்துறை,
அண்ணாமலைப் பல்கலைக்கழகம், அண்ணாமலைநகர்-608 002.

## Abstract

*The objective of the paper deals with the finding of the edicts from the culverts found at Thirumayilai. This is now called as Mylapore. The culverts found here are aged to the nineth century. These culverts are authentic evidences of the Tamil culture existed before many thousand years. From these edicts the taxes levied on the people and the taxes unlevied for some places are able to understand through the study. Hence, the paper gives a clear idea on Tamil culture by deciphering the culverts of Thirunayilai.*

**Keywords:** Tamil culture, Culverts, Thirumayilai, Chennai.

சென்னையில் உள்ள திருமயிலை வரலாற்றுப் புகழும் பெருமையும் கொண்ட நகர். மயிலாப்பூர் என்றதும் நினைவுக்கு வருவது கபாலீசுவரர் கோயில் தான். திருமயிலையில் கிடைக்கும் கல்வெட்டுகளில் பெரும்பாலானவை திருவான்மியூர், திருவிடைச்சுரம் ஆகிய ஊர்கள் பற்றியதாக உள்ளன. சில கல்வெட்டுகளில் 'மயிலை' என்ற வாசகமே இடம் பெற்றுள்ளமை கருதத்தக்கது. திருவொற்றியூர் ஆதிபுரீஸ்வரர்கேவில் திருவொற்றியூரில் உள்ளது. இக்கோயில் கருப்பக்கிருகத்திற்கு முன்னுள்ள மண்டபத்தில் கல்லில் காணப்படும் கல்வெட்டு கி.பி.ஒன்பதாம் நூற்றாண்டில் கம்பவர்மன் ஆட்சியில் மயிலை இருந்ததை உணர்த்துகிறது.

திருவொற்றியூர் மகாதேவர் கோவிலுக்கு கம்பவர்மனுடைய ஏழாம் ஆட்சியாண்டில் விளக்கெரிக்க மயிலார்ப்பில் இறையான் சேரிவெம்பன் குனுங்கனம்மன் பதினைந்து கழஞ்சுபொன் அளித்த செய்தி இடம் பெற்றுள்ளது. இதனால் கோவில்களில் விளக்கெரிக்க ஆளும் மன்னர்கள் பொன்னளித்துதவிய பண்பாடு இருந்ததை உணர்த்துகிறது. பெரும்பாலான மன்னர்கள் கோவில்களில் விளக்கெரிக்க பொன் அளித்த செய்திகள் தென்னிந்தியக் கல்வெட்டுகள் பகுதியில் காணக்கிடைக்கின்றன (S.I.I. Vol.XII AR.No.189 of 1912).

கடல் வாணிகர்கள் சந்திக்கும் பண்பு பல்லவர் ஆட்சியின் இறுதியில் தொண்டை மண்டலத்தை நிருபதுங்கவர்மன் அபராஜிதவர்மன் ஆகியோருடன் சேர்ந்து கம்பவர்மன் ஆட்சி புரிந்தான். அப்போது பொன்னேரிக்கு அருகில் உள்ள காட்டூரில் கிடைத்த கல்வெட்டில் மயிலார்ப்பில் எனும் ஊரில் நானாதேசிகன் எனும் கடல் வாணிகர்கள் ஒன்று கூடி முடிவெடுத்த செய்தி சொல்லப்படுகிறது. இதனால் வணிகர்கள் ஓரிடத்தில் கூடி வர்த்தகம் செய்ய திட்டமிட்டிருந்தனர். வாணிகர்கள் எப்போதும் ஒன்று கூடி வியாபாரம் செய்யும் மரபு வணிகப் பண்பாகும்.

முதலாம் இராசராசன் காலத்துக் கல்வெட்டு,சாந்தோம் பேராலயத்துத் தென்னந்தோப்பிலிருந்துகண்டெடுக்கப்பட்டஒரு தூணில் காணப்படுகிறது. இராசராசன் மெய்க்கீர்த்தியில் ஒருபகுதியேஉள்ளது. கி.பி.10-11ஆம் நூற்றாண்டைச் சார்ந்தது.

E-ISSN: 2581-7140
Special Issue: Vol. 2, April-2019 Available at: www.ijtlls.com

இவ்வாறேசெயிண்ட் தாமஸ் மலையிலுள்ள தூய அப்பாஸ்ல்ஸ் கன்னிமாடத்தின் உணவருந்தும் அறையின் பக்கத்தில் உள்ள கல்வெட்டு மயிலாப்பூரிலுள்ள திரும்பூம்பாவைக்குச் சில வரிகளிலிருந்து கிடைக்க பெறும் வருமானத்தைக் கொடையாக அளித்ததைக் குறிக்கிறது. இதனால் பத்து பதினைந்தாம் நூற்றாண்டுகளில் வரிச்சலுகை அளிக்கும் பண்பு மன்னர்களிடம் இருந்தமையை வெளிக்காட்டுகிறது. வுரியாக வாங்கிய பொருட்களை கொடையாகத் தந்துதவிய பெருநெறிப் பண்பும் எண்ணத்தக்கது.

சாந்தோம் பேராலயத்தில் உள்ளபக்கத் திருச்சுற்றில் உள்ள கல்வெட்டு இராசேந்திரசோழனின் மெய்க்கீர்த்திப் பகுதி. கி.பி.பன்னிரண்டாம் நூற்றாண்டு கல்வெட்டு வடமொழியிலும் காணப்படுகிறது. இதில் அமைந்துள்ள செய்தி கருப்பக்கிருகம் உட்பட எல்லாக் கட்டடங்களும் மயலாப்பூரில் உள்ள சிவனுக்கும் பார்வதிக்கும் உரியவையாகும். (சு.ராஜசேகரன் திருமயிலைத் திருத்தலம், ப.128)

மற்றொரு கல்வெட்டில் மயிலாப்பூர் ஈச்சரமுடையர் கோயிலில் கூத்தாடுந் தேவர்க்கு ஒரு சந்திவிளக்கு எரியவைப்பதற்கு இறையிலி நிலம் அளித்ததைக் குறிக்கிறது. திருவல்லிக்கேணி பார்த்தசாரதி கோவிலின் முன் உள்ள குளத்தின் படிக்கட்டுகளில் ஒரு கல்லில் திருப்பூம்பாவை என்று குறிக்கப்பட்டுள்ளது. வடக்குச் சுவரில் உள்ள குலசேகரபாண்டியன் கல்வெட்டில் திருமயிலாப்பூர் ஊரவர்க்கு நிலம் விற்றுக் கொடுத்தது குறிப்பிடப்பட்டுள்ளது.

திருமயிலைக் கபாலீசுவரர் கோயில் கற்பகாம்பாள் ஆலயத் திருச்சுற்றின் வடபுறச் சுவரில் உள்ள சுந்தரபாண்டியதேவர் காலத்துக் கல்வெட்டு கபாலீசுவரர் கோயிலுக்கு நிலக்கொடை அளித்த செய்தி பதிவாகியுள்ளது. கற்பகாம்பாள் ஆலயத்தின் மேற்குச் சுவரின் உட்புறத்தில் உள்ள கல்வெட்டு மயிலாப்பூசை் சேர்ந்த தண்டிபிடிக்கோன் என்பானிடமிருந்து இருபத்திரண்டு ஆடு பெற்றுத் திருவான்மியூர் உலகாளுடைய நாயனார்க்கு இரண்டு விளக்கு எரியவைத்ததைக் குறிக்கிறது. யாரிடத்தில் என்ன உள்ளது என்பதை அறிந்து அவர்களிடத்தில் அவற்றைப் பெற்றுவிளக்கு எரிக்க உதவியதையும் அறிய முடிகிறது.

**மயிலைக் குறித்தசெப்புப் பட்டயங்கள்**

திருநெல்வேலி மாவட்டம் கோவில்பட்டி வட்டத்தில் உள்ள தளவாய்புரம் கிராமத்தில் புறவெளியில் 1967களுக்கு முன்பு பூமிக்கடியிலிருந்து சாசனம் கிடைத்தது. இது ஏழு செப்பேடுகளுடன் தமிழ் வடமொழி ஆகிய இரண்டு பகுதிகளில் எழுதப்பட்டுள்ளன.

இந்தச் சாசனத்தில் வீரநாராயணனின் தாயார்தாய்வழிப் பாட்டன் ஆகியோரைப் பற்றிக் குறிப்பிடப்பட்டுள்ளது. தொண்டையர் தலைவனும் நடுக்கமில்லாதவனும் கூர்மையானஆயுதத்தை உடையனுமான மானாபரணனுடைய மருமகன் மயிலையை ஆண்டமன்னன் பொத்தப்பிக் குலச்சோழன் சீரிகண்டராசனுடைய அழகிய புதல்வி அக்களநிமடியினுடைய திருவயிற்றில் தோன்றியவன் ஸ்ரீபராந்தகமகாராசன் என்று பட்டயத்தில் உள்ளது. இவன் தந்தையின் பெயர் ஸ்ரீமாறவல்லபன். இந்தசாசனம் வீரநாராயணனின் 45ஆம் ஆண்டில் கரவந்திபுரம் (களக்குடி) தங்கி இருந்த போது வழங்கப்பட்டது. மதுரநல்லர்சோமாசிக்குறிச்சி என்னும் ஊர்களை இறையிலி ஊராகச் செய்தமை இந்தச் சாசனத்தில் கூறப்படுகிறது. தமிழ்ப் பண்பாட்டில் மூவேந்தர்கள் அவர்களுக்குப் பின் வந்த மன்னர்களும் ஊர்களை இறையிலி என்ற வரியில்லா ஊர்களாக வழங்கினர்.

மயிலாப்பூரில் வணிகச் சந்தைக் கூடிய நிகழ்வை கல்வெட்டுகளில் கண்டோம். இதற்கு அரணாக கி.பி.119-161 காலப் பகுதியில் வாழ்ந்த ரோம் நாட்டுப் புவியியல் அறிஞரும் எகிப்தின் ஒரு பகுதியை ஆண்ட அரசருமான தாலமி எழுதிய புவியில் நூலில் இந்தியாவைப்

E-ISSN: 2581-7140
Special Issue: Vol. 2, April-2019 Available at: www.ijtlls.com

பற்றிய குறிப்புகள் மட்டுமே கொண்டது. அதில் அருவாநாடு என்னும் தலைப்பில் மலியார்பா என்று குறிப்பிடும் ஊர் மயிலாப்பூர் ஆகும். மயிலையில் அக்காலத்தில் வாணிகச் சந்தை கூடிற்று. அதற்கு மலியார்பா எம்போரியம் என்று பெயர். (வி.எஸ்.வி.ராகவன்,தாலமி, ப.88)

வெனிசு நகர வணிகர் மார்க்கோபோலோ பதின்மூன்றாம் நூற்றாண்டில் வாழ்ந்தவர். அவர் எழுதியபயண நூலில் இந்திய அனுபவங்களைக் குறிப்பிடும்போது செயிண்ட் தாமஸ் மறைந்த வரலாற்றைக் கூறுகிறார். தாமஸ் இதை வழிபாட்டில் இருந்தபோது அவரைச் சூழ்ந்து மயில்கள் நின்றன. ஒருவேட்டைக்காரன் ஒரு மயிலை மாய்க்கும் எண்ணத்தோடு விட்ட அம்பு முனிவர் மீது பாய்ந்தது. இந்த நிகழ்ச்சி நடந்த இடம் மயிலையாயிருக்கும் என்று வி.எஸ்.ராகவன், மார்க்கோபோலோ நூலில் குறிப்பிட்டுள்ளார்.(ப.40-41).

அறப்பணிகளில் கி.பி.ஒன்பதாம் நூற்றாண்டில் திருமயிலையில் வாழ்ந்த மக்கள் அறப்பணி செய்யும் உள்ளம் கொண்டவர்களாக இருந்தனர் என்றும் திருமயிலாப்பூர் இறையான் சேரி வெம்பன் குணங்கனம்மன், திருவொற்றியூர் மகாதேவர் கோவிலுக்குத் திருவிளக்கு வைக்கப் பதினைந்து கழஞ்சு பொன் கொடுத்தார் என்னும் கல்வெட்டுச் செய்தி அறியத்தக்கது. கி.பி.பன்னிரண்டாம் நூற்றாண்டில் திருமயிலையில் சமண சமயம் இருந்ததைத் திருக்கலம்பகம் என்னும் சமண இலக்கியமும், நேமிநாதர் கோயில் கல்வெட்டு உணர்த்துகின்றன (சென்னைமாநகர்க் கல்வெட்டுகள், தொகுதி எண்.1967/245).

காரணிசுவரர் கோயில் திருமயிலையில் கடைத்தெரு சாலையில் அமைந்துள்ளது. இக்கோயில் முந்நூறு ஆண்டுகளுக்கு முன்னர் கட்டப்பட்டது. காரணம் என்ற சொல் கடவுளையும் சிவனையும் உணர்த்தும். இக்கோயிலில் பன்னிரெண்டு கல்வெட்டுகள் உள்ளன. திருவான்மியூர் கோயிலுக்குரியன ஆறும் இங்கு காணப்படுகின்றன. இதனால் அறியப்படும் செய்தி திருவான்மியூர் இறைவனுக்கு நந்தாவிளக்கு வைத்த செய்திகளைப் பதிவு செய்துள்ளது. பல்லாவரத்தை பல்லர்புரம் என்றும் கல்லெழுத்துச் செய்தி குறிப்பிடுகிறது (இரா.நாகசாமி, (பதி),சென்னைமாநகர்க் கல்வெட்டுகள் தொ.எண்.1967.∵159, 161, 16, 164, 165, 167, 168).

**வாலிசுவரர்கோயில் கல்வெட்டுச் செய்திகள்**

வாலி என்பவன் திருமயிலைக்கு வந்து பர்ணசாலை கட்டிக் கொண்டு கபாலீசுவரரைப் பூசித்து வந்தான். அதனால் அவன் பெயராலேயே இக்கோயில் வாலிசுவரர் கோயில் என்று அழைக்கப்பட்டது. இக்கோயிலில் இருபத்தொரு கல்வெட்டுகள் உள்ளன. இவற்றுள் திருவான்மியூர் கோயிலுக்கு உரியவை நான்கு. முதற்குலோத்துங்க சோழனுடைய மெய்க்கீர்த்திப் பகுதி அடங்கியவை இரண்டு உள்ளன. முதல் இராசாதிராசனின் மெய்க்கீர்த்திப் பகுதி ஒன்றும் தெலுங்குசோழர் விஜயகண்டகோபால தேவரைக் குறிக்கும் கல்வெட்டு ஒன்றும் குறிப்பிடத்தக்கவை. கல்வெட்டுச் செய்திகளில் தீபம் என்ற நிவந்தம் அளிக்கப்பட்ட நிகழ்வு பதிவு செய்யப் பெற்றுள்ளது (இரா.நாகசாமி, (பதிப்பு) சென்னைமாநகர்க் கல்வெட்டுகள் 1967/137, 138, 146, 148, 149, 153, 156).

இவ்வாறு திருமயிலை, அதைச் சுற்றிய ஊர்களில் காணப்பட்ட கல்வெட்டுச் செய்திகளில் நிலதானம், ஊர்தானம், இறையிலி நிலங்கள், நிவந்தங்கள் அளித்தமை, கோயிலில் விளக்கு எரிக்க வரியை வாங்கி அப்பத்தை அளித்தமை போன்ற தமிழர்களின் பண்பாட்டு மரபுகள் மொழியப்பட்டுள்ளன.

**பயன்மை நூல்கள்**

1. சு.ராஜசேகரன்,திருமயிலைத் திருத்தலம்

**E-ISSN: 2581-7140**

**Special Issue: Vol. 2, April-2019** **Available at: www.ijtlls.com**

2. இரா.நாகசாமி,சென்னைமாநகர்க் கல்வெட்டுகள்.
3. S.I.I. Vol.XII.
4. வி.எஸ்.வி.ராகவன்,தாலமி
5. வி.எஸ்.வி.ராகவன்,மார்க்கோபோலோ.
6. தளவாய்புரம் செப்பேடுகள்

E-ISSN: 2581-7140
Special Issue: Vol. 2, April-2019 Available at: www.ijtlls.com

# கல்வெட்டு அமைப்பும் தமிழக கல்வெட்டுகளும்
# Tamil Culverts and its Structure

**அ.பரத்குமார்,** உதவிப்ரோசிரியர்,
தமிழ்த்துறை, நாசரேத் கலை மற்றும் அறிவியல் கல்லூரி, ஆவடி, சென்னை-62.

## Abstract

*It is the historcal evidences that affirm the loyalty and relics of a civilization or an existing culture. In relation to that Tamil culture has it own innateness in its historical glory. The present study fosters to explain the Tamil Culverts and its structures to find out the genuineness in the culture's lofty state. It deals with the types and structures of culverts, the era in Tamil Culture and the ancient culverts in many regions of Tamil nadu. There are many culverts decreed by the Tamil Triumvirs. Hence, the paper evinces the need of understanding arcaeologicel sources to know the truths on it.*

**Keywords:** Tamil Society, Culvert Structures, Tamil Culverts

### முன்னுரை

தரணியாண்ட தமிழர்களின் பெருமைமிக்க வரலாற்றுச் சான்றாக திகழ்வது கல்வெட்டுகளே ஆகும். பண்டையக் காலத்தில் நீண்ட காலம் அழியாது இருக்கவும் வருங்காலத்தவர் அறியும் வண்ணமும் கருதப்பட்ட செய்திகளை கற்களில் வெட்டி வைத்தனர். இவ்வாறு கற்களில் பொறிக்கப்பட்ட செய்தியே கல்வெட்டு எனப்பட்டது. தமிழ் சமூகத்தின் அடையாளமாக இருக்கும் கல்வெட்டுகள் பெரும்பாலும் வட்டெழுத்து, பிராமி, பழங்காலத் தமிழ் எழுத்துகளாலானவை கல்வெட்டுகள் பெரும்பாலும் மன்னன், மக்கள், மொழி மற்றும் முக்கிய நிகழ்வுகள் குறித்த பெட்டகமாகும்.

தமிழகத்தின் பழைமையான கல்வெட்டுகள் யாவும் நடுகற்களில் வெட்டப்பட்டவை ஆகும். இதற்குச் சான்றாக *தொல்காப்பியம்* முதல் அனைத்து பழந்தமிழ் நூல்களும் அதில் கூறப்பட்ட செய்திகளும் கூறலாம். எடுத்துகாட்டாக தொல்காப்பியத்தில் போர்களத்தில் வீரமரணம் அடைந்தோர்க்கு கல்லெடுத்தலும், அக்கல்லில் அவர்குறித்த வீரச்செய்திகளும் பொறிக்கப்பட்டதை காணலாம். இவ்வாறு கல்வெட்டுப் பற்றியும் அதன் அமைப்பு, காலக்கணக்கீடு மற்றும் தமிழக கல்வெட்டுகள் குறித்து பின்வரும் கட்டுரையில் காண்போம்.

### கல்வெட்டு அமைப்பு

ஒரு கோவில் என்டு எடுத்துக் கொண்டால் கோபுரம், கருவறை முன் மண்டபம், மகா மண்டபம், அர்த்த மண்டபம், திருச்சுற்று மாளிகை என்று பொதுவான அமைப்பு இருப்பது போல கல்வெட்டுக்கென்று ஓர் அமைப்பு உண்டு. அதனை முகப்புரை, குறிப்புரை ஓம்படைக்கிளவி மூன்று வகைப்படுத்தலாம்.

### முகப்புரை

கல்வெட்டு அமைப்பில் முகப்புரை பெரும்பாலும் மங்கல துவக்கமாகவே அமையும். ஜிதம்பகவதாஇ நமோ நாராயணாய, ஓம் ஸ்வஸ்திஸ்ரீ, அருளிச் செயல், ஹரி நன்றாக குருவே துணை, ஹரிசுபமஸ்து, ஹரிஸ்ரீகணதியே நம சிவமயம், சித்தம், புத்தாய நாமே, பகவதே

E-ISSN: 2581-7140
Special Issue: Vol. 2, April-2019 Available at: www.ijtlls.com

வாசு தேவாய நமோ வர்த்த மானஸ்ய நமோ, இராமஜெயம் போன்ற பிற மங்கலச் சொற்களை சான்றாக கூறலாம். சில கல்வெட்டுகளில் இறுதியிலும் மங்கலச் சொல் இடம் பெறுவதுண்டு மங்கல வாசகத்தைத் தொடர்ந்து மன்னன் பெயர் சாசனம், சாசனம் வெளியிடப்பட்ட இடம், சாசனம் வெளியீட்டாளரின் பெயர் அவரது விருதுப்பெயர்களும் மரபும் வரும்.

**குறிப்புரை**

குறிப்புரையில் தானம் பற்றிய விவரங்கள் இடம்பெற்றிருக்கும். இதில் கொடைபற்றிய குறிப்பு, கொடையாளியின் பெயர், கொடை வழங்கப்பட்ட சூழல் கொடை வழங்கப்பட்ட காரணம் மற்றும் கொடையாக வழங்கப்பட்டது நிலமாக இருந்தால் அதன் நான்கு எல்லைகள் பற்றிய செய்திகள் கூறப்பட்டிருக்கும்.

எடுத்துக்காட்டாக நிலத்தைப் பெறும் கொடையாளிக்குரிய உரிமைகள், உரிமையற்ற பகுதிகள், வரி செலுத்துவதற்கு உரிமையுள்ள பகுதிகள் எவை, வரி நீக்கம் பெற்ற பகுதிகள் எவை என்பன போன்ற விவரங்களும் குறிக்கப்பட்டிருக்கும். இதனால் அப்பகுதியில் ‘‘இந்நூற்பாற் கெல்லைக்குட்பட்ட உண்ணிலம் ஒழிவின்றி’’, ‘‘உடும்பொடி ஆமை தவழும் இடம’’, ‘‘கீழ் நோக்கிய கிணறும் மேல், நோக்கிய மரமும், மீன்படுபள்ளமும், தேன்படு பொதும்பும், புற்றும் தெற்றியும் போன்ற வாசகங்கள் கல்வெட்டுக்களிலிருப்பதைக் காணலாம்.

**ஓம்படைக்கிளவி**

ஓம்படை என்பது பாதுகாப்பு என்றும் கிளவி என்பது சொல் என்றும் குறித்து ஓம்படைக் கிளவி என்பது பாதுகாப்பின் பொருட்டுச் சொல்லப்படும் சொல்லே ஆகும். கல்வெட்டு அமைப்பின் இறுதிப் பகுதியான இதனை ‘‘முடிவுச்சொல்’’ என்றும் கூறுவர். கல்வெட்டில் கூறப்படும் தானங்களின் பாதுகாப்புக்கு யார் பொறுப்பு. இத்தானத்தைப் பாதுகாப்பதானால் ஏற்படும் நன்மைகள் அவ்வாறு செய்யாமல் விடுவதனால் அல்லது அத்தானத்திற்கு இடையூறு செய்வதால் ஏற்படும் விளைவுகள் போன்ற விபரங்கள் இடம் பெறும் இவ்விளைவுகள் குந்தகம் செய்வோருக்கு அச்சத்தையோ, அவமானத்தையோ ஏற்படுத்தும் வகையில் அமையும். எடுத்துக்காட்டாக

“கல்லும் காவிரியும் உள்ளமட்டும்”
“புல்லும் பூமியும் உள்ளமட்டும்”
“ஆத்துமணலும் ஆவாரம்பூவும் உள்ளமட்டும்”

போன்ற கூற்றுக்களை ஓம்படைக்கிளவியில் அமைப்பது உண்டு.

**காலக்கணக்கீடு**

கல்வெட்டின் காலத்தை கணிக்க வேண்டுமென்றால் அதில் பொறிக்கப்பட்டிருக்கும் எழுத்துகளின் வரிவடிவத்தை வைத்தே கணிக்கலாம். ஆனால் சரியாக கணிக்க வேண்டுமென்றால் அது எம்மன்னனின் ஆட்சியில் பொறிக்கப்பட்டது என்று அறிய வேண்டும். அது கலியாண்டா, சக ஆண்டா, கொல்லம் ஆண்டா, ஹிஜிரி ஆண்டா, கங்க ஆண்டா, ஹிப்ருசக ஆண்டா, பாண்டவா ஆண்டா உதி‘டிரா் ஆண்டா, ஈசான ஆண்டா, குப்தா் ஆண்டா என்பதை அறிய வேண்டும். அவற்றுள் சிலவற்றை காண்போம்.

**கலியாண்டு**

கலியாண்டு என்பது சூரியன், சந்திரன் மற்றும் பிற கோள்கள் மேச ராசியில் கூடிய நாளான கி.மு. 18.02.3101 இருந்து தொடங்குகிறது. நாம் காணும் கல்வெட்டில் கலியாண்டு என்றிருந்தால் அதற்கு இணையான கிறித்தவ ஆண்டை கண்டறிய அதனோடு 3101ஐ கழிக்க வேண்டும் (சில சமயம் 3100) திருப்பரங்குன்றத்தில் முருகன் கோயிலாக வழிப்பட்டு வரும்

E-ISSN: 2581-7140
Special Issue: Vol. 2, April-2019 Available at: www.ijtlls.com

குடைவரைக் கோயிலுள்ள கல்வெட்டில் கலி ஆண்டு 3874 என்றுள்ளது. 3874 லிருந்து 3101 ஐ கழித்தால் வரும் 773 கிறித்தவ ஆண்டாகும்.

**சக ஆண்டு**

சக ஆண்டினை கல்வெட்டுகளில் சகாப்தம், சாலிவாகன சகாப்தம் சக வரு'ம், சககாலம் என்றும் குறிப்பிட்டிருக்கிறார்கள். ''லோகவிபாகம்'' என்னும் சமண நூலை சிம்மசூரி என்ற சமணமுனிவர் எழுதிய போது பல்லவ மன்னன் சிம்மவர்மனின் 22-ஆம் ஆண்டில் சக ஆண்டு 380 இல் முற்றுப் பெற்றதாக குறிப்பிட்டுள்ளார். இதுவே தமிழகத்தில் சக ஆண்டு குறிக்கப்பட்ட முதல் நூலாகும். சக ஆண்டுகள் குறிக்கப்பட்ட கல்வெட்டுகள் எண்ணிக்கையில் விஜய நகர கல்வெட்டுகளிலும் பாடல் வடிவில் தென்காசிக் கல்வெட்டுகளிலும் காணலாம்.

**கொல்லம் ஆண்டு**

கேரளாவில் உள்ள கொல்லம் நகரம் உருவான ஆண்டே கொல்லம் ஆண்டு என்று ஒரு சிலரும் குமரி ஆற்றின் தென்கரையில் முன்பிருந்த கொல்லம் நகர் கடலாலழிந்த பின்னர் மக்கள் புதிதாக கொல்லம் நகர் அமைத்து குடியேறிய ஆண்டு என்று ஒரு சிலரும் கூறுவர் கி.பி.822 இல் பழைய கொல்லமழிந்து கி.பி.825 இல் புதிய கொல்லம் உருவானதால் கொல்லம் ஆண்டு அன்றுதான் தொடங்கியதாக கூறுவர். கல்வெட்டில் கொல்லம் ஆண்டு என்றிருந்தால் அதனோடு 825 ஐ கூட்டினால் அதற்கு இணையான கிறித்தவ ஆண்டு வரும்.

**மாங்குளம் கல்வெட்டு**

மதுரைக்கு வடகிழக்கில் சுமார் 20 கீ.மீ தொலைவில் மாங்குளம் கிராமம் உள்ளது. இக்கிராமத்தில் கழுகுமலை என்ற மலைப்பகுதி உள்ளது. இதன் மேற்பகுதியில் ஐந்து குகைத்தளங்கள் உள்ளன. இதில் நான்கில் கல்வெட்டுகள் பொறிக்கப்பட்டுள்ளது. இதுவே சமணக் கல்வெட்டுகளில் காலத்தால் முந்தியவை என்ற ஓர் தனிச்சிறப்பு உண்டு. இதனை சிலர் மீனாட்சிபுரம் கல்வெட்டு என்றும் அரிட்டாபட்டி கல்வெட்டு என்றும் கூறுவர்.

கழுகுமலையில் தங்கியிருந்து சமய பணியாற்றிய சமணசமயப் பெரியோர்களுக்காகக் கற்படுக்கைகளுடன் கூடிய சமணப்பள்ளிகள் செதுக்கியமைத்துத் தானமாக வழங்கப்பட்டுள்ள செய்தியைக் குறிக்கும் ஆறு பண்டைய தமிழ் கல்வெட்டுக்கள் இக்குகைப்பகுதியில் கண்டறியப்பட்டுள்ளன இதில் முதல் கல்வெட்டில்

''கணிய்நந்த அஸிரிய் இகுவ்அன்கே
தமம் இத்தாஅ நெடுஞ்செழியன்
பண அன் கடலஅன் வழத்திய்
கொட்டுபித்தஅ பளிஇய்''

என்ற வாசகம் பொறிக்கப்பட்டுள்ளது இது "கணி நந்த் ஸ்ரிய்குவ் அன்" என்பவருக்குப் பணவன், கடலன், வழுத்தி போன்ற சிறப்புப் பெயர்களுக்கு சொந்தமான நெடுஞ்செழியன் முனிவராசிரமத்தை செதுக்கித் தானமாக வழங்கியுள்ளான் என்பது பொருள். இதில் வழுதி என்ற சொல் பாண்டியர்களின் குலப்பெயரைக் குறிக்கிறது.

**புகழூர் கல்வெட்டு**

கரூரிலிருந்து சேலத்திற்கச் செல்லும் பேருந்து வழித்தடத்தில் வடமேற்கில் சுமார் 14 கீ.மீ தொலைவில் உள்ளது புகழூர். இவ்வூருக்கருகில் புகழிமலை உள்ளது. இம்மலையில் தான் அருணகிரிநாதரால் பாடப்பட்ட புகழியூர் முருகன் கோயில் உள்ளது. இம்மலையில் மொத்தம் 12 தமிழிக் கல்வெட்டுக்கள் கிடைத்துள்ளன. இவை 1927-28 ஆம் ஆண்டிலேயே கண்டறியப்பட்டாலும் தெளிவாகப்படிக்கப் படாமல் இருந்தன திரு.ஐராவதம் மகாதேவன்

E-ISSN: 2581-7140
Special Issue: Vol. 2, April-2019 Available at: www.ijtlls.com

அவர்கள் 1965 ஆம் ஆண்டு கள ஆய்வு செய்து இவை சேரமன்னர் இரும்பொறை மரபினரின் கல்வெட்டு என்று கூறினார்.

முதல் இருகல்வெட்டில் குறிக்கப்பட்டுள்ள கோ ஆதன் செல்லிரும் பொறையே பதிற்றுப்பத்தின் ஏழாம் பத்தின் செல்வக்கடுங்கோ வாழியாதனாகப் பாடப்பட்டுள்ளான் என்பதும். இக்கல்வெட்டில் கோ ஆதன் செல்லிரும் பொறையின் மகனாகச் சுட்டப்பட்டுள்ள பெருங்கடுங்கோனே பதிற்றுப்பத்து சுட்டுகின்ற பெருஞ்சேரல் இரும்பொறை என்பதும் பெருங்கடுங்கோனின் மகனாகக் கல்வெட்டில் குறிக்கப்படும் “இளங்கடுங்கோ” வே பதிற்றுப்பத்தின் ஒன்பதாம் பத்தின் பாட்டுடைத் தலைவனான இளஞ்சேரல் இரும்பொறை என்பதும் தெளிவாகிறது. இக்கல்வெட்டில் குறிக்கப்பட்டுள்ள பெருங்கடுங்கோவே பாலை பாடிய பெருங்கடுங்கோ என்றும் இளங்கடுங்கோவே மருதம் பாடிய இளங்கடுங்கோ என்றும் கூறுகின்றவரும் உண்டு.

**அறச்சலூர் கல்வெட்டு**

ஈரோடு நகரத்திலிருந்து 20 கி.மீ தொலைவில் அவல்பூந்துருத்திக்குத் தெற்கே 7 கி.மீ. தொலைவில் அறச்சலூர் உள்ளது. இதற்கு மேற்கே அமைந்துள்ள நாகமலையிலுள்ள ஆண்டிப்பாறைப் பகுதியிலுள்ள பாண்டர்குழி என்றவிடத்தில் இயற்கையான குகைத்தளம் உள்ளது. இங்குதான் கற்படுக்கைகளும், கற்படுக்கைக்கு நடுவே இசைக் கல்வெட்டுக்களும் உள்ளன. குகையின் இடதுபுறம் கற்படுக்கையின் மீது இசைக் கல்வெட்டுக்கள் உள்ளது. 5 வரிகளில் பொறிக்கப்பட்டுள்ள இக்கல்வெட்டு ஆய்வாளர்களால் படித்து அறியப்பட்டுள்ளது.

த தை தா தை த
தை தா தே தா தை
தா தே தை தே தா
தை தா தே தா தை
த தை தா தை த

இசை ஒசை எழுத்துக்கள் சதுரக் கட்ட அமைப்பில் உள்ளது சிறப்பாகும். மேலிருந்து கீழாகப் பார்த்தாலும், இடமிருந்து வலமாகப் பார்த்தாலும் ஒரே மாதிரியாக அமைக்கப்பட்டுள்ளன. இவை இசைத்துறையிலும், கூத்துத்துறையிலும் பாடவல்ல எழுத்துக்களை நினைவுப் படுத்துக்கின்றன. அடியார்க்கு நல்லார், சிலப்பதிகார உரையில் இசைக்குறிப்புகளை வட்டப்பாலை, சதுரப்பாலை என்று வகுத்தார். அதை போன்று இக்கல்வெட்டில் உள்ளனவ சதுரப்பாலையாக இருக்கலாமென்று இசையறிஞர் எஸ்.இராமநாதன் கூறிகிறார்.

**நெகனூர்ப்பட்டி கல்வெட்டு**

திருவண்ணாமலை மாவட்டம் செஞ்சி வட்டத்திலிருந்து வடகிழக்காக 10 கி.மீ தொலைவில் தொண்டூர் கெல்லும் வழியில் உள்ளது நெகனூர்ப்பட்டி. இதற்கு மேற்கு பகுதியில் 3 பெருங்கற்களை அடுக்கி வைத்தது போன்று அடுக்கன்கல் என்ற சிறிய குன்று உள்ளது. இதற்கு கீழடுக்கில் தான் தமிழி கல்வெட்டு உள்ளதென்று முனைவர். இராசவேலு.சு. 1992 ஆம் ஆண்டு கண்டுபிடித்தார்.

பெரும் பொகழ்
சேக்கந்தி தாயியரு
சேக்கந் தண்ணி செ
யி வித்த பள்ளி

E-ISSN: 2581-7140
Special Issue: Vol. 2, April-2019 Available at: www.ijtlls.com

இதிலுள்ள 'பெரும்புகழ்' என்பது அருகிலுள்ள 'பெரும்புகை' என்ற ஊரினை குறிப்பதாக கருதப்படுகிறது. இவற்றில் பழைய கற்படுக்கைகள் காணப்படுவதால் இவ்வூர் மிகச் சிறந்த சமண மையமாக இருந்தது அறியப்படுகிறது. சேக்கந்தண்ணி என்பது சேக்கந்தி, அண்ணி எனப்பிரித்து அதில் சேகந்தி என தனியாக பிரிக்கலாம். சே என்பது சேக்கிழாரையும் தந்தி என்பது சிவகசிந்தாமணியில் பெண் துறவியையும் குறிக்கிறது. அண்ணி என்பது மூத்துவர் என்ற மரியாதையாக கருதப்பட்டுள்ளது மொத்தத்தில் பெரும்புகை சமண சமயம் நிலைத்திருந்தமையும் அதில் பெண் துறவிகள் இருந்தமையும் அறிய முடிகிறது.

**அம்மன் கோயில்பட்டி சுனைக் கல்வெட்டு**

சேலம் மாவட்டம், ஓமலூர் வட்டத்திற்குட்பட்ட சிற்றூர் அம்மன் கோயில்பட்டி ஆகும். இச்சிற்றூரின் உப்பாற்றின் வடகரையில் பெருமாள் கோயில்பாறை உள்ளது. இதில் "தேப்பாலி" என்ற சுனையுள்ளது. இதற்கருகில் தமிழ் எழுத்துக்களால் பொறிக்கப்பட்ட கல்வெட்டை 1979 ஆம் ஆண்டு புது போ.செங்கடராமன் அவர்கள் கண்டுபிடித்தார்.

"பரம்பன் கோகூர் கிழார் மகன் வியக்கன
கோபன் கணதேவன் தொட சுனை"

இது குறித்து பேராசிரியர் திரு.வீ மாணிக்கம் அவர்கள் அக்கல்வெட்டில் கோகூர் கிழான் வரம்பனின் மகன் வியக்கன் கோபன் கணதேவன் என்பவன் ஓர் நீருற்றைத் தோண்டினான் என்று கூறப்பட்டுள்ளது. என்றும் இந்நீருற்று சமணத் துறவிகளுக்கு கொடையாக வழங்கப்பட்டது என்றும் கொங்கில் சமணத்தின் செல்வாக்கை புலப்படுத்துகிறது என்றும் அவர் கூறுகிறார்.

**பூலாங்குறிச்சிக் கல்வெட்டுகள்**

பூலாங்குறிச்சி சிவகங்கை மாவட்டம், திருப்பத்தூர் வட்டம், பொன்னமராவதிக்குச் செல்லும் வழியில் அமைந்துள்ளது. 1979 ஆம் ஆண்டு தொல்லியல் துறை அலுவலர் து.துளசிராமன் அவர்கள் இவ்வூரிலுள்ள பாசனக் குளத்தின் அருகில் பாறையின் சரிவில் ஓர் கல்வெட்டைக் கண்டுபிடித்தார் முதன் முதலில் ஆண்டு குறிக்கப்பட்டதும் மன்னனின் பெயருடன் துவங்குகின்ற கல்வெட்டு என்ற தனிச்சிறப்பும் இதற்குண்டு. இரண்டு கல்வெட்டுக்களுள் ஒன்று சேந்தன் கூற்றன். என்ற அரசன் ஆட்சியில் 192 ஆம் ஆண்டில் பதிக்கப்பட்டது. வேல் முருகனும் மகனும் கடலகப் பெரும் படைத்தலைவன் என்ற பட்டத்தைப் பெற்றவனுமான எங்குமான் என்பவர் இரு தேவ குலங்களும், ஒரு கோட்டமும் எழுப்பிய செய்தியைக் கூறுகிறது. அந்த தேவகுலத்தைப் பாதுகாப்பதற்கும் அதில் வழிபாடுகள் செய்வதற்கும் ஒரு குறிபிட்ட மக்களுக்கு மட்டுமே உரிமை வழங்கப் பெற்றுள்ளது.

பூலாங்குறிச்சி மலைமேல் எழுப்பட்ட தேவகுலம் அல்லது கோயில் கொடைப் பொற்றுள்ளதைக் குறிப்பிடுகிறது. அக்கோயிலுக்கு மேற்குறிப்பிட்ட நில உரிமைகளோடு பாண்டிய நாட்டிலும் கொங்கு நாட்டிலும் காராண்கிழமை, களக்கிழமை. மேலாண்மை உரிமைகளும், காலாசமும், தோட்டங்களும் இருந்தன. அவையவாற்றையும் அவருடைய குடிகளையும் பிரம்மதாயமுடையார், நாடுகாப்பார், புறங்காப்பார், முப்புருக்காப்பார் முதலியோர் பேணிக்காக்க வேண்டும் என்பதும் தீங்கிழைத்தவர்களுக்கு 1600 காணம் தண்டம் விதிக்க வேண்டும் என்பதும் அக்கல்வெட்டில் பொறிக்கப்பட்டுள்ளது.

**வைகைக் கரைக் கல்வெட்டு**

வைகைக் கரையில் 1961 ல் ஓர் கல்வெட்டு கண்டெடுக்கப்பட்டு தற்போது மதுரை மீனாட்சி கோயில் ஆயிரங்கால் மண்டபத்தில் பாதுகாப்பாக வைக்கப்பட்டு வருகிறது கி.பி 690

E-ISSN: 2581-7140
Special Issue: Vol. 2, April-2019 Available at: www.ijtlls.com

இல் பாண்டிய மன்னன் அரிகேசரி காலத்தில் பொறிக்கப்பட்ட இக்கல்வெட்டில் உள்ள 9 முதல் 12 வரிகள் பெரிய பாசனத்திட்டம் செயல்படுத்தப்பட்டதை தெரிவிக்கின்றன.

வைகைக் கரையில் ஒரு மதகு கட்டி அதிலிருந்து அரிகேசரி என்ற பெயரில் ஒரு வாயக்கால் வெட்டி அதை ஒரு காட்டாற்றுடன் சேர்த்து நீர்த்தேக்கம் உருவாக்கி சாணாடு பருத்திக்குடி நாடு வரை கண்மாய்களுக்கு நீர் வழங்கியதைத் தெரிவிக்கிறது. கல்வெட்டில் குறிக்கப்பட்ட சாணாடு பருத்திக்குடி நாடு என்பவை திருப்புவனத்திற்கும் தெற்கில் கல்லு மடை புல்வாய்க்கரை, வீரசோழன், பருத்தியூர் என்ற கிராமங்களைக் கொண்டதாக கருதலாம். கல்வெட்டில் பாண்டிய மன்னன் உருவாக்கிய நகரம் மங்கலபுரம் என்று கூறப்பட்டுள்ளது இது குறித்து தொல்லியல் ஆய்வாளர்களிடையே பல கருத்துக்கள் உள்ளன.

**மானூர் மகாசபைக் கல்வெட்டு**

மானூர் என்ற சிற்றூர் திருநெல்வேலி மாவட்டம் திருநெல்வேலி வட்டத்தில் அமைந்துள்ளது. இங்கு அம்பலவாணநாத சுவாமி கோயிலில் ஓர் கல்வெட்டு உள்ளது. இக்கல்வெட்டு காலங் காலமாக செயல்பட்டு வந்த பிரமதேயத்து மகாசபையின் அங்கத்தினரின் தகுதி மற்றும் உரிமைகள் கொண்ட தீர்மானத்தை பற்றியதாகும். தமிழகத்தில் ஓர் ஊர்ச் சபைபற்றிய வரிவான செய்திகளைக் கொண்ட ஒரே கல்வெட்டு இதுவேயாகும், பராந்தக நெடுஞ்சடைய வரகுணன் என்ற மன்னனை பற்றி இக்கல்வெட்டு கூறுகின்றது. அவரது காலம் கி.பி.768-815 ஆகும்.

**உத்திரமேரூர் - குடவோலைத் தேர்தல் கல்வெட்டு**

காஞ்சிபுரத்திற்கு அருகிலுள்ள உத்திரமேரூரில் இரண்டு கல்வெட்டுகள் உள்ளன. இவை தமிழகத்தில் முதன் முதலில் ஊரக சபை நிர்வாகம் எவ்வாறு நடைபெற்றது என்பது குறித்த செய்திகளை அடங்கியதாகும். இவை சதுர்வேதி மங்கலத்தில் அமைந்த அந்தணர் சபையின் ஊர் நிர்வாகமும் வாரியங்கள் நிர்வாகமும் மேற்கொள்ள தேர்ந்தெடுக்கப்படும் உறுப்பினர்களின் தகுதிகள் பற்றிய செய்திகளைக் கூறுகின்றது.

'மறங்கெழ சோழர் உறந்தை யவயத்து
அறம்நின்று நிலையிற்றாகலின்' (புறம் 39)
'ஆரங்கண்ணி அடுபோர்ச் சோழர்
அறங்கெழ நல்லவை யுறந்தை' (அகம்-93)

போன்ற சங்கப்பாடல் வரிகள் சங்க காலத்தில் சோழர் தலைநகர் உறையூரில் செயல்பட்ட ஊரவை பற்றிய செய்திகளைத் தருகின்றன. ஊரவைக்கு வேண்டிய உறுப்பினர்களைக் குடவோலை மூலமாகவே தேர்வுசெய்தனர் என்பதையும் காட்டுகிறது.

'கயிறு பிணிக்குழிசி ஒலைகொண்மார்
பொறிகண்டு அழிக்கும் ஆவணமாக்களின்
உயிர் திறம் பெயர நல் அமர்க் கடந்த
தறுகணாளர் குடர் தரீஇ தெறுவர
செஞ்செவி எருவை' (அகம் 77)

போரில் இறந்த வீரர்களின் உடலிலிருந்து பருந்துகள் குடல்களை எடுத்துப் போடுவதைப் போல ஆவணமாக்கள் எனும் அரசு அதிகாரிகள் குடங்களிலிருந்து முத்திரையிடப்பட்ட ஒலைகளை எடுத்தனர் என்ற உவமையே இதற்கு தக்கச் சான்றாகும்.

**முடிவுரை**

கோயில்கள், மலைகள் என தமிழ் மன்னர்கள் எங்கு எங்கெல்லாம் கால் பாதித்தார்களோ அங்கெல்லாம் கல்வெட்டுகளை பொதித்து வைத்திருக்கிறார்கள், இதுவரை

E-ISSN: 2581-7140
Special Issue: Vol. 2, April-2019 Available at: www.ijtlls.com

பல ஆயிரம் கல்வெட்டுகள் கண்டுபிடிக்கப்பட்டன பெரும்பாலான கல்வெட்டுகள் படிக்கப்பட்டு அச்சாக்கம் செய்யப்பட்டுள்ளன, இன்னும் ஆயிரக்கணக்கான கல்வெட்டுகள் படிக்கப்படவில்லை பல கண்டேபிடிக்கப்படவில்லை இத்தகு சிறப்புகளையும் வரலாற்றுச் செய்திகளையும் தாங்கியிருக்கின்ற கல்வெட்டுகளைப் பாதுகாக்க வேண்டிய கடமை அனைவருக்கும் இருக்கிறது. வரலாற்று ஆர்வம் உள்ள அனைவரும் இதனை படித்து அறிந்துகொள்ள வேண்டும் கல்வெட்டு பற்றியும் அதன் அமைப்பு காலக்கணக்கீடு மற்றும் தமிழக கல்வெட்டுகள் பற்றி விரிவாகவும் தெளிவாகவும் இக்கட்டுரையில் கண்டோம்.

**பயன்மை நூல்கள்**

1. இரண்டாம் உலகத்தமிழ் எழுத்தாளர் மாநாட்டு மலர் - யாதும் ஊரே யாவரும் கேளிர்
2. The Thiruvalankadu plates of Rajendrachola 1. South India Inscription Vol.II.

E-ISSN: 2581-7140
Special Issue: Vol. 2, April-2019 Available at: www.ijtlls.com

# நடுகல் உணர்த்தும் தமிழரின் வாழ்வியல்
# Tamilar Social life Instructed by Erecting Stonehenges

**முனைவர்.கே.பரிமளம்,** உதவிப்பேராசிரியர், தமிழ்த்துறை
ஸ்ரீ இராமகிருண்ஷ்ணாபெண்கள் கலைமற்றும் அறிவியல் கல்லூரி, கோயமுத்தூர்.

## Abstract

*The paper plans to bring down the details regarding the life of the Ancient Tamil people by extracting the sources from it. The tradition of erecting stonehenges is an integral norm in the life of the tamil society. The people gave more attention to the dedicayed ones who martyred or sacrificed their lives for the sake of the society or community. Hence the study extract the culvert facts related to the study.*

**Keywords:** Tamilar, Social life, Instruction, Erecting Stonehenges

### முன்னுரை

தமிழ்மொழி மற்றும் தமிழ் இனத்தின் வரலாறு என்பது காலத்தால் அழிக்க முடியாத பொக்கிஷங்கள் ஆகும். மனிதனின் தோற்றம் முதல் பண்பாட்டின் படிநிலைகளின் வரலாற்றை அறியமுற்படும் போது சான்றுகள் மிகமுக்கியமாக கருதப்படுகிறது. அத்தகைய சான்றுகளைத் தேடும் முயற்சிகளின் வாயிலாக பழங்கால மக்களின் வாழ்வியல் முறைகளை அறியமுடிகின்றது. ஆதாரங்களோடு விளக்கப்படும் மனிதனின் வரலாறு காலத்தால் அழிக்க முடியாத சான்றுகளாக அமைகின்றது.

### தொல்லியல் ஆய்வு

தொல்லியலை Archaeolo பல எனக்கூறுவர். ஆதிகாலத்தைப் பற்றிய அறிவியல் என்பது இதன் பொருளாகும். பழமை இயல் ஸ்ரீ Archaic என்றால் பழமையானது என்று பொருள். பழைய காலத்தின் சுவடுகளைப் பற்றி ஆய்வது என்று பொருள்படும். தொல்லியல் அல்லது தொல் பொருளியல் என்பது கட்டிடக்கலை, தொல்பொருட்கள், தொல்லுயிர் எச்சம் மனித மிச்சங்கள் மற்றும் நிலத்தோற்றங்ள் என்பன உள்ளிட்ட எஞ்சிய பொருட்களை வெளிக்கொணர்ந்து ஆவணப்படுத்தி பகுப்பாய்வு செய்வதன் மூலம் செய்யப்படும் மனிதப் பண்பாடுபற்றியதாகும்.

### கல்வெட்டியல்

கல்வெட்டியல் என்பது கல்லின் மீது பொறிக்கப்பட்டிருக்கும் எழுத்துக்களை ஆராய்ந்து அவற்றின் மூலம் தரவுகளைத் தொகுக்கும் இயலாகும். எழுத்துக்கள், நாணயங்கள், சிலைகள், மண்பாண்டங்கள், ஓடுகள், பாறைகள், குகைகள், கற்கள், பானைஓடுகள் போன்றவற்றில் காணப்படுகின்றன. இவ்வாறு கண்டுபிடிக்கப்பட்ட எழுத்துக்களின் மூலம் மக்களின் சமுதாயப்பின்புலம் மற்றும் வாழ்க்கைமுறை ஆகியவற்றை கணித்துக்கூற முடியும்.

### நடுகற்கள்

நடுகற்கள் வீரத்தின் அடையாளமாகவும், இறப்பின் அடையாளமாகவும் எழுப்பப்படும் நினைவுக்கற்கள் ஆகும். நடுகற்கள் என்பது வீரன் நினைவாக அமைக்கப்பட்ட கல் என்றும் கூறலாம். நினைவுக்கற்கள் எழுப்பும் மரபு இந்தியாவின் எல்லாப் பாகங்களிலும்

E-ISSN: 2581-7140
Special Issue: Vol. 2, April-2019 Available at: www.ijtlls.com

காணப்படுகிறது. “இந்தியாவில் காணப்படும் நினைவுக்கற்கள் வீரக்கல், நடுகல், பாலியாகோவர்த்தன ஸ்தம்பம் இகீர்த்தி ஸ்தம்பம் என்றும் கத்ரி ஸ்தம்பம், திவாளி என்றும் அழைக்கப்படுகின்றன. சுமண மதத்தினருக்குரிய நிசீதிகைக்கற்கள் பெண்டிர் நினைவாக எழுப்பப்பட்ட மாசதிக்கற்கள் ஆகியனவும் காணப்படுகின்றன. கீர்த்தி ஸ்தம்பம் பாலியாகத்ரிதிவாளி ஸ்தம்பம் ஆகிய சொற்கள் ஹிமாசலப் பிரதேசத்திற்கும் விந்தியமலைக்கும் இடைப்பட்ட நாடுகளில் பரவலாகப் பயன்படுத்தப்படுகின்றன” நடுகற்கள் வீரத்தின் அடையாமாக நிறுவப்படும் நினைவுக்கற்களாகும்.

**தொல்காப்பியர் கூறும் நடுகற்கள்**

தமிழ் இலக்கண நூல்களுள் தொன்மை வாய்ந்த தொல்காப்பியம் இறந்தவர் நினைவாகக் கல் எடுத்துசிறப்புச் செய்தல் பற்றிய செய்தியைக் கூறுகின்றது.

காட்சி கால்கோள் நீர்ப்படை நடுதல்
சீர்த்தகு மரபில் பெரும்படை வாழ்த்தல் என்று
இருமூன்று மரபில் கல்லொடுபுணர...... (புறத்திணையியல்.5: 19-21).

தொல்காப்பியர் ஆறுநிலைகளை வீரக்கற்களுக்குரியதாகக் கூறியுள்ளார்.

1. சிற்பம் செதுக்கி நடுதற்குரிய பொருத்தமான கல்லைத்தேடிச் சென்று காணுதல் காட்சி எனப்படும்.
2. மலையிலிருந்து வீரக்கல் செய்வதற்குரிய கல்லை வெட்டிக் கொள்ளுதல் கால்கோள் எனப்படும்.
3. வீரனுக்கு எடுத்தகல்லை நீராட்டித் தூய்மைப்படுத்துதல் நீர்ப்படை எனப்படும்.
4. அக்கல்லை நடுவது நடுதல் எனப்படும்.
5. நடப்பட்ட கல்லிற்குப் பெருஞ்சிறப்புகளைப் படைத்தல் பெரும்படை எனப்படும்.
6. நடப்பட்ட நடுகல்லினைத் தொழுது வாழ்த்துதல் வாழ்த்தல் எனப்படும்.

வீரத்தின் அடையாளமாக நடப்படும் நடுகற்களை எழுப்புவது முதல் அதனை வாழ்த்தி வழிபடுவது வரையிலான நிகழ்ச்சிகளைத் தொல்காப்பியத்தின் மூலம் அறியமுடிகின்றது.

**பதுக்கைகள்**

பாலை நிலமக்களின் வாழ்வியல் வழிப்போவோரைக் கொன்று பொருள் பறிப்பது வழக்கமாக இருந்தது. பாலை நிலத்தின் வழியாக பயணிப்போரைக் கொன்று உடல்களைத் தழையிட்டு மூடி அதன்மேல் கற்களைக் குவித்து மேடுசெய்து வைக்கும் பழக்கம் இருந்துள்ளது. இதனை,

“.....வெண்ணுனையம்பின் விசையிடவீழ்நதோர்
ஏண்ணுவரம் பறியாஉவலிடுபதுக்கை” (அகநானூறு.109: 7-8)
“செத்தாடைபிழையாவன்கணாடவர்
அம்புபடவீழ்ந்தோர் வம்பப்பதுக்கை” (புறநானூறு.3: 20-21)

போன்ற சங்கப்பாடல்கள் மூலம் பதுக்கைகள் பற்றிய செய்திகளை அறியமுடிகின்றது.

**வாணிகச் சாத்துகள்**

சங்ககாலத்தில் வேளாண்மையைப் போன்றே வாணிகமும் முக்கியத் தொழிலாக இருந்தது. வணிகர்கள் குழுவாக இணைந்துதம் பண்டங்களைப் பல ஊர்களுக்கும் விற்பனைக்கு எடுத்துச் செல்வார்கள். இக்குழுக்களுக்கு வாணிகச்சாதுக்கள் என்றுபெயர்.

“விளர் ஊன் தின்றவீங்கு சிலைமறவர்
மைபடுதிண் தோள் மலிரவாட்டி
பொறைமலி கழுதை நெடுநிரை தழீஇய

E-ISSN: 2581-7140
Special Issue: Vol. 2, April-2019 Available at: www.ijtlls.com

திருந்துவாள் வயவர் அருந்தலை துமித்த" (அகநானூறு – 89)
"…………….. நெஞ்சேசாத்து எறிந்து
ஆதர் கூட்டுண்ணும் அணங்குடைப் பகழிக்
கொடுவில் ஆடவர் படுபகை வெரீஇ" (அகநானூறு – 167)

ஆகிய அகநானூற்றுப் பாடல்களின் வழி வாணிகச் சாதுக்கள் பற்றிய செய்திகளை அறியமுடிகின்றது. பாலைநில மறவர்களை எதிர்த்துப் போராடி வணிகர்களது செல்வங்களைப் பாதுகாக்கும் முயற்சியில் வீரர்கள் இறந்திருக்கக் கூடும். அத்தகைய வீரர்களின் நினைவாக வணிகக்குழுவினர் வீரக்கற்கள் எழுப்பியிருப்பர்.

**நடுகல் வழிபாடு**

வீரர்களுக்கு நட்டியகற்களை வணங்கும் வழக்கமும் சங்ககால மக்களிடையே இருந்தது. நடுகற்களுக்கு எண்ணெய் ஊற்றி தீபம் ஏற்றுதல் பலி கொடுத்தல் நடுகற்களை தூய்மைப்படுத்தி வணங்குதல் ஆகியமுறைகளில் வழிபட்டுள்ளனர்.

"ஒன்னாத் தெவ்வர் முன்னின்று விலங்கி
ஒளிறு ஏந்து மருப்பின் களிறு எறிந்து வீழ்ந்தெனக்
கல்லேபரவின் அல்லது
நெல் உகுத்துப் பரவும் கடவுளும் இலவே" (புறநானூறு – 335 9-12)

வீரர்களுக்கு நட்டிய கல்லைத் தெய்வமென்று வணங்குவோம். நெல்லைத் தூவிவழிபடும் வேறுகடவுள் எதுவும் எங்களுக்குக் கிடையாது என்ற கருத்து இப்பாடல் வழி அறியமுடிகின்றது.

"இல் அடுகள்ளின் சில்குடிச்சீறூர்ப்
புடை நடுகல்லின் நாள் பலியூட்டி
நன்னீர் ஆட்டிநெய்ந்துறைகொளீஇய
மங்குல் மாப்புகைமறுகுடன் கமழும்" (புறநானூறு – 329 1-4)

வீடுகளில் செய்யும் கள்ளை நடுகல்லிற்கு தினமும் படைத்து நல்ல நீரால் அதைக்கழுவி நறுமண எண்ணெய் கொண்டு விளக்கு ஏற்றுவார்கள். அதன் கருமையானபெரும் புகையானது நறுமணத்தோடு தெருக்களில் கமழும் என்ற கருத்தின் மூலம் நடுகற்களுக்குப் படையலிட்டு வணங்கும் வழக்கம் அக்கால மக்களிடையே இருந்தது புலனாகிறது.

"நடுகல் பீலி சூட்டித் துடிப்படுத்துத்
தோப்பிக் கள்ளொடுதுரூஉப்பிலிகொடுக்கும்
போக்கும் அரும் கவலையபுலவுநாறுஅரும் சுரம்" (அகநானூறு – 35)

நடுகற்கள் மயில் தோகையால் அலங்கரிக்கப்படும். கள்ளை அதன் மீது ஊற்றுவர். செம்மறி ஆடுகளைப் பலிகொடுப்பார்கள் என்ற இப்பாடலின் மூலம் வழிபாட்டு முறைகளில் மிருகங்களைப் பலியிடும் பழக்கம் சங்ககால மக்களிடம் இருந்துள்ளது புலனாகிறது. இவ்வாறாக நடுகல் வழிபாட்டு முறைகள் சங்கப்பாடல்களின் சான்றுகள் வழி அறியமுடிகின்றது.

**அண்மைக்கால நடுகல் கண்டுபிடிப்புகள்**

- பேரிகையில் 14 ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த பத்து நடுகற்கலை அறம் வரலாற்று ஆய்வுமையக்குழுவினர் கண்டுபிடித்துள்ளனர்.
- சிவகங்கை மாவட்டம் புழுதிப்பட்டி கே.புதுப்பட்டியிலும் மதுரை மாவட்டம் வெள்ளிமலையிலும் 12 ஆம் நூற்றாண்டைச் சேர்ந்தவீரன் வில்லியாரின்

E-ISSN: 2581-7140
Special Issue: Vol. 2, April-2019
Available at: www.ijtlls.com

நடுகற்களைத் திருச்சியைச் சேர்ந்த அறிவோம் அறிவிப்போம் மைய ஆய்வாளர்கள் கண்டுபிடித்துள்ளனர்.

- ஓசூர் அருகே 13 ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த 6 வகையான நடுகற்கள் கண்டுபிடிக்கப்பட்டுள்ளது. கிருஷ்ணகிரி மாவட்டம் நல்லூர் கிராமத்தில் வரலாற்று ஆய்வாளர்களால் கண்டுபிடிக்கப்பட்டது.
- திருப்பத்தூர் அடுத்தபெருமாப்பட்டுஅருகே கி.பி. 7 ஆம் நூற்றாண்டைச் சேர்ந்தநடுகற்கள் கண்டுபிடிக்கப்பட்டது.
- திருப்பூர் வீரராசேந்திரன் தொல்லியல் மற்றும் வரலாற்று ஆய்வுமையத்தினர் ஊத்துக்குளி கஸ்தூரிபாளையம் காங்கேயம் பாளையத்தில் 4 நடுகற்களைக் கண்டுபிடித்தனர்.
- தலைவாசல் அருகே தேவியாக்குறிச்சியில் வரலாற்று ஆய்வாளர்களால் 12 ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த 2 நடுகற்களைக் கண்டுபிடித்துள்ளனர்.
- கிருஷ்ணகிரிமாவட்டம் கனவாய்ப்பட்டி மலையின் வடகிழக்குப் பகுதியில் உள்ளஏழுர் குட்டை என்னுமிடத்தில் 700 ஆண்டுகளுக்கு முற்பட்ட நடுகற்கள் கண்டுபிடிக்கப்பட்டுள்ளது.
- திருவண்ணாமலை மாவட்டம் கலசபாக்கம் அருகே ஆதமங்கலம் புதூர் பகுதியில் உள்ள 17 ஆம் நூற்றாண்டு மஞ்சுவிரட்டு நடுகல் கண்டுபிடிக்கப்பட்டுள்ளது.
- ஏலகிரிமலையில் கற்திட்டை வடிவிலான நடுகற்கள் கண்டெடுக்கப்பட்டுள்ளன.


சேலம் அருகே
12ம் நூற்றாண்டை சேர்ந்த நடுகற்கள் கண்டுபிடிப்பு


700 ஆண்டு பழமையான நடுகற்கள் கண்டுபிடிப்பு




ஞாலம் போற்றி வீரம் பேசும் நடுகற்கள்
கால கண்ணாடியாக திகழும் அதிசயம்

**முடிவுரை**

வீரத்தைப் போற்றும் விதமாக நடுகற்கள் நடும் வழக்கம் பண்டுதொட்டே இருந்துவருகிறது. நடுகற்கள் கல்வெட்டு ஓவியம் சிற்பம் ஆகிய அனைத்துத் துறைகளுக்கும் முன்னோடியாக இருந்திருக்கின்றது. எழுத்துக்களின் வளர்ச்சி மொழிகளின் வளர்ச்சி ஆகியவற்றை அறிவதற்கு நடுகற்கள் பெரும் பயனை அளிக்கின்றது. நடுகற்களில்

**E-ISSN: 2581-7140**

**Special Issue: Vol. 2, April-2019** **Available at: www.ijtlls.com**

காணப்படும் ஓவியங்கள் சிற்பங்கள் அன்றைய போர்கள் படைகள் மக்களின் வாழ்வியல் சடங்குமுறைகள் ஆகியவற்றை தெளிவாகப் புலப்படுத்துகின்றது. மண்ணினுள் புதைந்துள்ள சங்ககாலமக்களின் வாழ்வியலைத் தோண்டி வெளிக்கொணர்வதன் மூலம் தமிழரின் வரலாறு பதிவுசெய்யப்படுகிறது.

**துணைநூல்பட்டியல்**

1. இராசமாணிக்கனார்.மா., தமிழ்மொழி இலக்கியவரலாறு, பாரிநிலையம், சென்னை, பதிப்பு-1963
2. இராமன்.கே.வி, தொல்லியல் ஆய்வுகள், சேகர் பதிப்பகம், சென்னை, பதிப்பு - 1977.
3. தொல்காப்பியர், தொல்காப்பியம் பொருளதிகாரம், நச்சினார்க்கினியர், சென்னை, பதிப்பு - 1980.
4. வேங்கடசாமிநாட்டார்.ந.மு., பத்துப்பாட்டு மூலமும் உரையும், உ.வேசாமிநாதையர்
5. நூலகம், சென்னை, பதிப்பு - 1974.
6. Settar.S, Memorial Stones, Cosmo Publications,Delhi 1982.
7. தினமலர்.
8. தினத்தந்தி.

தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்
International Journal of Tamil Language and Literary Studies 
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Special Issue: Vol. 2, April-2019 Available at: www.ijtlls.com

# அழகர்கோவில் கல்வெட்டுக்களால் அறியப்படும் அரசர்களும் கொடைகளும்
# The Kings and the Donations through the Culverts of Alagar Kovil

**முனைவர்.தி.பரிமளா,** உதவிப்பேராசிரியர், தமிழ்த்துறை,
மன்னர் திருமலைநாயக்கர் கல்லூரி, மதுரை.

**Abstract**

*The objective of the paper deals with the finding of the edicts from the culverts found at Alagar Kovil in Madurai. This the capital of the Sethupatis who got autonomy from the Nayak rulers. There are many culverts and authentic evidences of many kings and their donations done by them. Hence, the paper gives a clear idea on the domain theme.*

**Keywords:** Kings, Donations, Culverts, Alagar Kovil

தமிழகத்தின் தொன்மை வரலாற்றைத் தெரிந்துகொள்ள உதவிய தொல்லியல் சான்றுகளில் ஒன்று கல்வெட்டுகள். பாறைகளிலும் கல்தூண்களிலும் கோவில் சுவர்களிலும் பொறிக்கப்பட்ட எழுத்துக்கள் வெறும் நினைவுச் சின்னங்கள் அன்று. அவைசிறப்புடன் வாழ்ந்த ஒரு இனத்தைப் பற்றிய வரலாறாகும். கல்வெட்டுக்கள் வரலாற்று ஆராய்ச்சிக்கு முதன்நிலைச் சான்றுகளாகப் பயன்படுத்தப்படுகின்றன. கடந்த நூற்றாண்டில் தமிழ்நாடு முழுவதும் கிடைத்துள்ள கல்வெட்டுக்கள், அகழாய்வுகள் தமிழ்மொழியையும், தமிழ் மக்களின் சிறப்பையும் உலகிற்குப் பறைசாற்றிக் கொண்டிருக்கிறது. அந்தவகையில் மதுரை அழகர்கோயில் கல்வெட்டுகள் தமிழரின் நாகரீகத்தையும் மொழியையும் பறைசாற்றுகின்றன.

இக்கோயிலின் குகைத்தளத்தில் செதுக்கப்பட்டுள்ள கற்படுக்கை ஒன்றிலும் குகையின் நெற்றிப் பகுதியில் வெட்டப்பட்டுள்ள நீர்வடி விளிம்பின் மேலும் கீழுமாகத் தமிழ் - பிராமி கல்வெட்டுகள் உள்ளன.

**அழகர்கோயில்**

மதுரை மக்களின் வாழ்வோடும் பண்பாட்டோடும் பின்னிப் பிணைந்திருப்பது அழகர் கோவிலும் அது சார்ந்த விழாக்களுமாகும். அழகர்கோவில் மதுரை மாவட்டம் மேலூர் வட்டத்தில் மதுரைக்கு வடக்கே 24கி.மீ தொலைவில் அமைந்துள்ளது. இயற்கை எழில் கொஞ்சும் அழகர் மலையின் ஊரின் பெயரும் கோயிலின் பெயரும் ஒன்றேயாகும். இவ்வழகர் கோயில் அடர்ந்த காடுகளும் உயிரினப் பல்வகைமையும் பலவகை மூலிகைகளும் சுவையான நீரூற்றுகளையும் கொண்டது. தமிழர்களின் சிற்பக்கலைக்கு எடுத்துக்காட்டாகத் திகழும் கோயில்களில் இதுவும் ஒன்று. திருமாலிருஞ்சோலை என்று வைணவர்களால் அழைக்கப்படும் இக்கோயில் ஆழ்வார்களால் மங்களாசாசனம் செய்யப்பெற்ற 108 திவ்யதேசங்களில் 93வது திவ்யதேசமாகும். தமிழகத்தில் சமணர்கள் வாழ்ந்ததாகக் கூறப்படும் கருத்துக்கு ஏற்றவாறு இக்கோயிலில் காணப்படும் கி.பி.9ம் நூற்றாண்டைச் சேர்ந்த கல்வெட்டு ‘அச்சணந்தி’ என்னும் சமணத்துறவி இங்கு வாழ்ந்ததாகக் குறிப்பிடுகிறது. “சமணர்கள் இங்கு தங்குவதற்கு முன்பு இவ்விடம் பழங்குடிகளின் வாழ்விடமாக இருந்திருக்க வேண்டுமென்பதை இக்குகைத் தளவிமானத்தில் வரையப்பட்டுள்ள செங்காவியால் ஆன பறவை முகமனிதர் மற்றும் மான் போன்ற விலங்குகளின் ஓவியங்கள் காட்டுகின்றன. இங்குள்ள சமணத் தீர்த்தங்கரரின்

E-ISSN: 2581-7140
Special Issue: Vol. 2, April-2019 Available at: www.ijtlls.com

உருவமும் கி.பி. 9-10ஆம் நூற்றாண்டு வரை சமணர் வழிபாட்டுத் தளமாக விளங்கியமையை எடுத்துக்காட்டுகின்றன. குகைத் தளத்தினை ஒட்டியே ஒரு பெரிய நீர்நிலை சுனையாக அமைந்துள்ள. சற்று எட்டாத உயரத்தில் முகப்பு நெற்றிப் பகுதியில் பிராமி அமைந்துள்ள தமிழ் - பிராமி கல்வெட்டுக்கள் உள்ளன." சங்க காலத்தின் பிற்பகுதியில் தோன்றியதாகக் கருதப்படும் பரிபாடலில் 15ம் பாடல் அழகர்கோயில் மலையைப் பெருமைப் படுத்துகிறது. சிலப்பதிகாரத்தில் கோவலன் கண்ணகி ஆகியோருடன் திருவரங்கத்திலிருந்து மதுரை வரும் கௌந்திஅடிகள் அழகர் மலைவழியாக மதுரை வருவதாகவே குறிப்புள்ளது.

**அழகர்மலையைக் குறிக்கும் பெயர்கள்**

அழகர்மலை 'திருமாலிருஞ்சோலை', 'திருமாலிருங்குன்றம், 'இருங்குன்று', 'மாவிருங்குன்றம்', 'சோலைமலை', 'பெரும்பெயர் இருவரை', 'திருவரை', 'கேழ்இருங்குன்று', என்றும் குறிக்கப்படுகிறது. இம்மலையில் உள்ள முக்கியத் தலங்கள் அழகர்கோயில், பழமுதிர்ச்சோலை, பழமுதிர்ச்சோலை முருகன், ராக்காயி அம்மன் கோயில்.

பழமுதிர்சோலைமுருகன் நக்கீரரால்

"இழுமென இழிதரும் அருவி
பழமுதிர் சோலைமலைகிழவோனே"

திருமுருகாற்றுப்படையில் போற்றப்படுகிறார். பழமுதிர்சோலை முருகக் கடவுளின் அறுபடை வீடுகளில் ஒன்று.

**அழகர்மலையும் இலக்கியங்களும்**

அழகர்மலை, அம்மலையிலுள்ள பழமுதிர்சோலை, பழமுதிர்சோலை முருகன் கோயில் பற்றியும் பரிபாடல், சிலப்பதிகாரம், திருமுருகாற்றுப்படை ஆகிய நூல்கள் குறிப்பிடுகின்றன.

"அவ்வழிபடரீர் ஆயின்,இடத்து
செவ்வழிபண்ணிற் சிறைவண்டு
அரற்றும் தடந்தால் வயலொடு
தண்பூங் காவோடுகடம்பலகிடந்த
காடுடன் கழிந்துதிருமால்
குன்றத்துசெல்குவீர் ஆயின்
பெருமால் கெடுக்கும் பிலமுண்டு"

என்று சிலப்பதிகாரத்தில் அழகர்கோயில் பற்றி குறிப்பிடப்பட்டுள்ளது. மேலும்

"விண்ணோர் ஏத்தும் வியத்தகும் மரபில்
புண்ணியசரவணம்,பவகாரணியோடு
இட்டசித்திஎனும் பெயர் போகிவிட்டு
நீங்காவிளங்கியபொய்கை
முட்டாச் சிறப்பின் மூன்றுளஆங்கு"

என்று மூன்று பொய்கைகளைச் சிலப்பதிகாரம் குறிப்பிடுகிறது. இதன் மூலம் சிலப்பதிகாரத்திற்கு முன்பே அழகர்கோயில் இருந்துள்ளது என்பதை அறியமுடிகிறது. அழகர்மலை அடிவாரத்தில் உள்ள கோயில் கருவறையில் குடிகொண்டிருக்கும் பெருமாள் ஸ்ரீபரசுவாமி என்றழைக்கப்படுகிறார். உற்சவமூர்த்தி அழகர் அல்லது சுந்தரராசப் பெருமான் எனப்படுகிறார். இக்காலத்தில் இம்மலையடி திருமால் கள்ளழகர் என்கின்றனர்.

"கள்ளணிபசுந்துளவினவை,
கருங்குன்றுஅனையவை:
ஒள்ளொளியவை:

E-ISSN: 2581-7140
Special Issue: Vol. 2, April-2019 Available at: www.ijtlls.com

ஒருகுழையவை:
புள்ளணிபொலங்கொடியவை:
வள்ளணிவளைநாஞ்சிலவை:
சலம்புரிதண்டுஏந்தினவை:
வலம்புரி வய நேமியவை:
வரிசிலை வய அம்பினவை:
புகர் இணர் சூழ் வட்டத்தவை:
புகர் வாளவை" (பரிபாடல் 54-66

என்றுபரிபாடல் அழகர் பெருமானைக் குறிப்பிடுகிறது. முனைவர் தொ.பரமசிவம் அவர்கள் முனைவர் பட்ட ஆய்விற்காக சில ஆண்டு காலம் அழகர்கோயிலில் களப்பணியாற்றியுள்ளார். 'அழகர்கோயிலை விரிவாக ஆராய்ந்து ஒவ்வொரு காலகட்டத்திலும் அந்த ஆலயம் கைமாறிச் சென்ற விதம் மற்றும் அதன் வளர்ச்சி குறித்து நுட்பமாக விவரித்துள்ளார். அழகர்கோயிலைச் சுற்றி உருவான நிலமானிய அமைப்பு, சாதிக்கட்டுமானம், திருவிழாக்களில் அடுக்கதிகாரம் வெளிப்படும் முறைகள் குறித்து பல்வேறு விளக்கங்களையும் அளித்துள்ளார்.

**அழகர்கோவில் கல்வெட்டுக்களால் அறியலாகும் செய்திகள்**

அழகர்கோயிலின் பெருமையைச் சொல்லும் பல வரலாற்றுக் கல்வெட்டுக்கள் இக்கோயிலின் சுற்றுச் சுவர்களில் பதிக்கப்பட்டுள்ளது. சிறியதும் பெரியதுமாக சுமார் 200க்கும் மேற்பட்ட கல்வெட்டுக்கள் காணப்படுகிறது. இக்கல்வெட்டுக்களில் சிறப்பாகக் காணப்படுவது சோழமன்னன் முதலாம் இராசராசனின் 26ம் ஆட்சியாண்டில் இக்கோயிலுக்குத் தரப்பட்டதானம் பற்றிய கல்வெட்டு பழமையானதாகும். அழகர் கோயிலுக்கு தானம் வழங்கிய அரச பெருமக்களையும் அவர்கள் வழங்கிய தானங்களையும் இக்கல்வெட்டுக்கள் விளக்குகின்றன. அவர்கள் பிற்காலப் பாண்டிய மன்னர்களின் மரபில் வந்த முதலாம் மாறவர்ம சுந்தரபாண்டியன், முதலாம் ஜடாவர்ம சுந்தரபாண்டியன், ஜடாவர்மன் முதலாம் குலசேகரன் போசாளமன்னன் வீரசோமேஸ்வரன், திருமாலிருஞ்சோலை நின்றான், மாவலிவாணாதிராயர்கள் என்றழைக்கப்பட்ட குறுநில மன்னர்களாகிய வானாதிராயர்கள், நாயக்கமன்னராகிய திருமலைநாயக்கர், மொன்னைப்பிரான் விரத முடித்த பெருமான் ஆனமுனையதரையன், மாறவர்ம சுந்தரபாண்டியன், சுந்தரபாண்டியன் மனைவி திருவுடையாள், (அ.கோ.க,ப-iv) ஆகியோராவர்.

அவர்தம் திருப்பணிகள்

- சோழமன்னர்கள்
- பிற்காலப்பாண்டியமன்னர்கள்
- போசாளமன்னன் வீரசோமேஸ்வரன் தன் பெயரால் ஏற்படுத்தியிருந்த சந்திவழிபாடு.
- வாணாதிராயர்கள் உபனாதி ஸ்தூபிநிறுவியது.
- திருமலைநாயக்கர் காலத்தில் கோயிலின் மூன்றாம் திருச்சுற்று கட்டப்பட்டது.
- மொன்னைப்பிரான் விரதமுடித்த பெருமாக் ஆனமுனையதரையன் பெயரால் திருமண்டபம், அலங்கார மண்டபம்,தாங்கு தூண்கள் அமைக்கப்பட்டது
- சுந்தரபாண்டியன் பெயரால் அமைக்கப்பட்ட குறடு மண்டபம்
- முதலாம் மாறவர்ம சுந்தரபாண்டியன் கல்வெட்டு
- சுந்தரபாண்டியன் மனைவி திருவுடையாள் இக்கோயில் இறைவிக்கு கொடுத்த நொந்தாவிளக்குகள்

E-ISSN: 2581-7140
Special Issue: Vol. 2, April-2019 Available at: www.ijtlls.com

- இக்கோயிலுக்கு வரும் சந்நியாசிகள், ஏகாந்திகள், ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு சிற்றுண்டி கொடுக்கப்பட்டது
- தொண்டர்கள் கட்டுவித்த மேட்டு கிருஷ்ண மண்டபம், தொண்டைமான் கோபுரம் அவர்கள் பெயர் தாங்கி நிலைத்து நிற்பது
- திருமலைநாயக்கர் காலத்தில் கட்டப்பட்ட திருமலை நாயக்கர் மண்டபம்

**கோயில் கல்வெட்டுகளில்குறிப்பிடப்டுள்ள பிறசெய்திகள்**

- மதுரையைச் சேர்ந்த பொற்கொல்லன் அதன் அதன் என்பவனது பெயர் குறிப்பிடப் பட்டுள்ளது. ---- காலம் கி.மு. 1ம் நூற்றாண்டு
- னாகன் (நாகன்) எனும் பெயர் குறிப்பிடப்பட்டுள்ளது. காலம் கி.மு. 1ம் நூற்றாண்டு
- மத்திரையைச் (மதுரை) சேர்ந்த உப்புவணிகன் வியக்கன் கணதிகன் என்பவரது பெயர் குறிக்கப்படுகிறது ---- காலம் கி.மு. 1ம் நூற்றாண்டு
- கணகஅதன் மகன் அதன் அதன் என்பவன் பெயர் குறிக்கப்பட்டுள்ளது. --- காலம் கி.மு. 1ம் நூற்றாண்டு
- சபமித்தா என்ற சமணப்பெண் துறவி குகைத்தளம் அல்லது சுனை அமைத்திடக் கொடை நல்கியுள்ளார். -- காலம் கி.மு. 1ம் நூற்றாண்டு
- சர்க்கரைப்பாகு அல்லது பச்சைக்கற்பூரம் விற்கும் வணிகன் நெடுமல்லன் குகைத்தளம் அல்லது சுனை அமைத்திடக் கொடை கொடுத்துள்ளான். -- காலம் கி.மு. 1ம் நூற்றாண்டு
- கலப்பையின் கூர் பகுதியான 'கொழுவணிகம் செய்யும் எளசந்தன் என்ற வணிகன் கொடுத்த கொடை குறிக்கப்பட்டுள்ளது --காலம் கி.மு. 1ம் நூற்றாண்டு
- கழுமாறன் நீர்வடிவிளிம்பு செய்து கொடுத்ததாக குறிப்பிடப்பட்டுள்ளது (கழுமாறன் என்பவன் பாண்டிய இளவரசன் அல்லது சிற்றரரசனாக இருக்கலாம்) காலம் கி.மு. 1ம் நூற்றாண்டு
- தன்மண், கஸ்பன் என்ற இருவர் குகைத்தளம், முகப்பு நீர்வடிவிளிம்பு, சுனை ஆகியவற்றில் பணிகள் மேற்கொள்ள கொடைகள் கொடுத்ததாக குறிக்கப்பட்டுள்ளது. காலம் கி.மு. 1ம் நூற்றாண்டு
- வெண்பள்ளி என்ற ஊரைச் சேர்ந்த துணி (அறுவை) வணிகன் கோவிலுக்குத் தந்த பணத்தின் அளவைக் குறிக்கிறது. காலம் கி.மு. 1ம் நூற்றாண்டு
- தியான் சந்தன் வழங்கிய காசின் அளவைக் குறிக்கிறது. கி.மு. 1ம் நூற்றாண்டு
- கணிநாகன், கணிநதன் என்ற இருவர் அமைத்த கற்படுக்கையைக் குறிக்கப்பட்டுள்ளது
- இதனைத் தவிர அழகர்கோவில் கல்வெட்டுகளில் நண்டு போன்ற குறியீகள் குறிக்கப் பெற்றுள்ளன. இவை. குலக்குறிகளாகவோ கொடையாகக் கொடுக்கப்பட்ட பணத்தின் அளவாகவோ இருக்கலாம் என்று குறிப்பிடப்படுகிறது.

இக்கோயில் இப்பகுதிமக்களின் வாழ்வோடும்,பண்பாட்டோடும் பின்னிப் பிணைந்துள்ளது.அரசினரும்,மக்களும் இக்கோயிலின் வளர்ச்சியிலும்,வாழ்விலும் பெரிதும் அக்கறைகொண்டுள்ளனர். மக்களின் ஈடுபாடும்,பங்களிப்பும் இக்கோயில் சுவர்களில் ஆவணங்களாகிநிலைத்துள்ளன.



International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Special Issue: Vol. 2, April-2019
Available at: www.ijtlls.com



**துணைநூற்பட்டியல்**


1. பொ.இராசேந்திரன் அழகர் கோயில் கல்வெட்டுகள், முனைவர் சொ.சாந்தலிங்கம் தமிழ்நாடு அரசு தொல்லியல்துறை, சொ.சந்திரவாணன், சென்னை – 600008, பதிப்பு - 2006.
2. தி.ஸ்ரீ.ஸ்ரீதர் இ.ஆ.ப (ப.ஆ)தமிழ் - பிராமிகல்வெட்டுகள், தமிழ்நாடு அரசு தொல்லியல் துறை, சென்னை – 600008, பதிப்பு -2010.
3. தி.ஸ்ரீ.ஸ்ரீதர் இ.ஆ.ப (ப.ஆ), இந்தியக் கல்வெட்டுகளும் எழுத்துக்களும், தமிழ்நாடு அரசு தொல்லியல் துறை, சென்னை – 600008, பதிப்பு -2010.
4. ஜே.தா்மராஜ், கல்வெட்டியல், டென்சிபப்ளிகேஸன்ஸ், சிவகாசி. 626 123, பதிப்பு– 2008.

தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்
International Journal of Tamil Language and Literary Studies

*A Bi-Yearly Peer-Reviewed International Journal*
E-ISSN: 2581-7140
Special Issue: Vol. 2, April-2019
Available at: www.ijtlls.com

# எட்டுத்தொகை நூல்களில் நடுகற்கள்
# Stonehenges in *Ettutthokai*

**முனைவர் க.ச.பவானி,** உதவிப்பேராசிரியர், தமிழ்த்துறை,
அவினாசிலிங்கம் மனையியல் மற்றும் மகளிர் உயர்கல்வி நிறுவனம், கோயம்புத்தூர் - 43.

## Abstract

*The study of the paper finds out the facts related to messages as revealed in the book 'Ettutthokai'. Martyrdom is considered as a noble virtue in Tamil society. The classic tamil people gave much importance to the adventurous deeds of the warriors. So, they have given due respect to them by erecting stonehenges. These evidences are seen in the literary sources in detail. 'Ettuttokai' is one of the Sangam classics. It gives more information on the tradition followed by the people on erecting stones to the martyrs. Therefore, the study helps to know the cultural ethics and informations of Tamil Culture.*

**Keywords:** Stonehenges, *Ettutthokai, warriors, Tamil Culture, Reverence*

சங்க கால மக்களின் வாழ்க்கையில் காதல், வீரம் இரண்டும் இரண்டறக் கலந்திருந்தது. ஆண்கள் தங்களின் வீரத்தை பலப் போர்க்களங்களில் நிலை நாட்டினர். இத்தகைய வீரம் மிகுந்த வீரர்கள் போர்க்களத்தில் வீர மரணம் எய்தினால் அவர்களின் நினைவாக சங்க கால மக்கள் நடுகல் என்னும் கல்லை அமைத்தனர். தொல்காப்பியர் காலத்திற்கும் பல நூற்றாண்டுகளுக்கு முன் தோன்றிய இந்நடுகல் வழிபாடு தமிழகத்தில் பண்பாட்டுத் தொடர்ச்சியையும், வீரச் செயல்களையும், அச்செயல்பாடுகளாக இறந்துப்பட்ட மறவர்களின் புகழையும் வெளிப்படுத்தும் சாதனமாக விளங்குகின்றன. இத்தகைய நடுகல் குறித்து எட்டுத்தொகை நூல்கள் வெளிப்படுத்தும் செய்திகளை இக்கட்டுரையில் காண்போம்.

**நடுகல் அமைவிடம்**

பெரும்பாலும் நடுகற்கள் ஊர்களின் புறத்தே காணப்படுகின்றன. ஊர்களின் நடுவில் நடுகற்கள் காணப்படவில்லை. ஒன்று இரண்டு இடங்களில் மட்டும் ஊர்களின் உட்புறத்தில் காணப்படுவது உண்டு. ஓரேப் போரில் இறந்த பலப்போர் வீரர்களுக்கும் நடுகற்கள் ஒரே இடத்தில் காணப்படுவதும் உண்டு.

**நடுகல் அமைப்பு முறை**

நமது வீரத்தை, கலாச்சாரத்தை எடுத்துக்கூறும் காலத்தின் கண்ணாடி. நடுகல் இறந்தவர்களின் நினைவாக எடுக்கப்படும் கல்லாகும். இதனை வீரக்கற்கள் என்றும் நினைவுத்தூண், வீரன் கல், சுமைதாங்கிக் கல் எனபல வடிவங்களில் பலவகைகளாக இறந்து போனவர்களுக்கு நினைவுக்கல் அமைத்தனர். கருங்கற்களே பெரும்பாலும் பயன்படுத்தப்பட்டுள்ளன. சுமார் 3 அடிஉயரம் கொண்ட பலகைக் கல்லின் மேற்புறத்தில் அல்லது பக்கவாட்டில் கல்வெட்டும், மையப்பகுதியில் வீரனின் உருவமும் புடைப்புச் சிற்பமாக அமைக்கப்பட்டிருக்கும். சில நடுகற்களில் இவ்வமைப்பு மாறியும் காட்டப்பட்டுள்ளது. அதில் ஆட்சியாண்டு, மன்னனின் பெயர், ஊர், வீரனின் பெயர், பூசலின் விவரம் முதலியன இடம் பெறும். நடுகல் கல்வெட்டின் எழுத்துக்கள் வட்டெழுத்திலோ அல்லது தமிழிலோ இருக்கும்.

E-ISSN: 2581-7140
Special Issue: Vol. 2, April-2019 Available at: www.ijtlls.com

நடுகற்களில் வீரனுடைய உருவம் சமர்புரியும் நிலையில் காண்பிக்கப்பட்டிருக்கும். கைகளில் வில்லும், அம்பும் ஏந்தியோ அல்லது வாளும், கேடயமும் ஏந்தியோ, சில நடுகற்களில் வீரனின் ஒருகையில் வில்லும், மற்றொரு கை இடையில் உள்ள வாளை உருகும் வகையில் காட்டப்பட்டிருக்கும். புலிகளிடமிருந்து ஊரைகாத்த போது உயிர் நீத்தவீரனுக்கு புலியோடு சண்டையிடுவது போல உருவம் பொறித்த கற்கள் அமைந்துள்ளன.

பெரும்பாலான நடுகற்களில் உருவங்கள் மட்டுமே காணப்படுகின்றன. ஆயினும் சிலநடுகற்கள் எழுத்துக்களுடனும் உருவாக்கப்பட்டுள்ளன. நடுகல் எவ்வாறு அமைக்கப்படவேண்டும் என்ற இலக்கணத்தை தொல்காப்பியம் வரையறை செய்திருக்கின்றது. தொல்காப்பியர் கல் எடுக்கும் முறைக்கு,

"காட்சி கால்கோள் நீர்ப்படை நடுதல்
சீர்த்தகு மரபின் பெரும்படை வாழ்த்தல் என்று
இரு மூன்று மரபில் கல்" (தொல்.நூற்.)

என்ற நூற்பா வழி இலக்கணம் வகுக்கிறார். இத்தகைய சிறப்புமிக்க வீரக்கல் அல்லது நடுகல் என்று சங்க இலக்கியங்கள் பேசுகின்றன.

**புறநானூற்றில் நடுகல்**

எட்டுத்தொகை நூல்களில் ஒன்றான புறநானூறு புறம் சார்ந்த நூலாகும். இந்நூலில் பன்னிரண்டு இடங்களில் நடுகல் தொடர்பான செய்திகள் வருகின்றன. இதன் மூலம் வீரர்களுக்கு மட்டுமன்றி நாடாண்ட மன்னர்களுக்கும் எடுக்கப்பட்ட நடுகற்கள் குறித்து செய்திகள் காணப்படுகின்றன. அதியமான் நெடுமானஞ்சிக்கு நடுகல் நடப்பட்டதை ஔவையார் கண்ணீர்மல்கப் பாடியுள்ளார். இதனை,

"நடுகற் பீலி சூட்டிநாரரி
சிறுகலத் துரப்பவும் கொள்வன் கொல்லோ" (புறம் - 232)

என்ற அடிகள் எடுத்துரைக்கின்றன. ஆவூர் மூலங்கிழார் என்ற புலவர் மல்லி நாட்டுக் காரியாதி என்பவனுக்கு நடுகல் ஏற்படுத்தப்பட்டதைக் குறிப்பிடுகின்றார். அப்பாடல்,

"பல்லா தழீஇய கல்லா வல்வில்
உழைக்குரற் கூகை அழைப்ப ஆட்டி
நாகுமுலை அன்னநறும் பூங் கரந்தை
விரகறியாளர் மரபிற் சூட்ட
நிரையிவன் தந்து நடுகல் ஆகிய
வெள்வேல் விடலை"(புறம் - 261)

கரந்தைப் பூவைச் சூடி நிரையினை மீட்டுவந்த வெள்வேல் விடலை நடுகல் ஆனான் என்பதை இப்பாடலின் மூலம் அறியலாம். சங்க கால மக்கள் முன்னோர்களை வணங்கினர் என்பதற்கு இந்நடுகல் வழிபாடு சான்றாகும். இதனை,

"ஒலிமென் கூந்தல் ஒண்ணுதல் அரிவை
நடுகல் கைதொழுது பரவும்"(புறம் - 306)

என்ற புறநானூற்றுப் பாடல் நடுகல்லை மக்கள் நீராட்டி நெய்விளக்கேற்றி பலியூட்டியதைச் சுட்டுகின்றது. மேலும்,

"ஓங்குநிலை வேங்கை யொள்ளிணர் நறுவீப்
போந்தையந் தோட்டிற் புனைந்தனர் தொடுத்துப்
பல்லான் கோவலர் படலை சூட்டக்
கல்லாயினையே கடுமான் தோன்றல்"(புறம் - 265)

E-ISSN: 2581-7140
Special Issue: Vol. 2, April-2019 Available at: www.ijtlls.com

நாடு காவல் செய்து நல்லறம் பேணி நானிலம் போற்ற வாழ்ந்த நல்லரசன் கோப்பெருஞ்சோழன் வடக்கிருந்து உயிர்துறந்து வீரக்கல்லாய் விளங்கியதை பொத்தியார் என்ற புலவர் பாடுகின்றார்.

**அகநானூற்றில் நடுகல்**

எட்டுத்தொகை நூல்களில் ஒன்றான அகநானூற்றில் நடுகல் தொடர்பான செய்திகள் 11 பாடல்களில் இடம் பெற்றுள்ளன. அம்மூவனார் பாலைநிலத்து வழியினைக் கூறும்போது 'வில்லோர் வாழ்க்கை விழுத்தொடை மறவர், கடவுளை வழி படற்கு நடுகல்லின் மேல் பீலி சூட்டி, கள்ளோடு செம்மறியைப் பலிகொடுக்கப் போவதற்கரிய வழி' என்று குறிப்பிடுகிறார்.

"முனையாத் தந்துமுரம்பின் வீழ்த்த
வில்லோர் வாழ்க்கைவிழுத் தொடை மறவர்
வல்லாண் பதுக்கைக் கடவுட் பேண்மார்
நடுகற் பீலி சூட்டிதுடிப்படுத்தத்
தோப்பிக் கள்ளொடு துரூஉடப்பிலி கொடுக்கும்"(அகம் - 35)

குடவாயிற் கீரத்தனார் இவ்வாறு நடுகல் பதுக்கையைக் குறிப்பிடுகிறார். இந்நடுகல் தனிக்கல்லாக ஓவியத்தில் வரையப்பட்டு குத்துக்கல் போல் இருந்துள்ளது. அகநானூற்றில் நடுகல் குறித்த செய்தி இவ்வாறு கூறப்பட்டுள்ளது. ஊரில் இல்லாமல் காட்டில் இக்கல் இருந்துள்ளதாகவும் தண்ணீரே இல்லாத கொடியக் காட்டில் செந்நாய் பசியுடன் கூடிய பிணவுடன் இக்கல்லின் நிழலில் வதிந்தது. நடுகல் அருகே மக்கள் நடமாட்டம் குறைவாக இருந்தது. இவ்வரிய பாடல்,

"நீரற வறண்ட நிரம்பா நீளிடை
வள்ளெயிற்றுச் செந்நாய் வருந்துபசிப்பிணவொடு
விழுத்தொடை மறவர் வில்லிட வீழ்ந்தோர்
எழுத்துடை நடுகல் இன்னிழல் வதியும்"(அகம் - 53)

என்று சீத்தலைச் சாத்தனார் அழகாகப் பாடியுள்ளார். பாலை வழியில் நடுகல்லிற்கு நாட்பலி–காலைப்பலி கூட்டப்பெறுகின்ற செய்தியை எயினந்தை மகன் இளங்கீரனார் குறிப்பிடுகின்றார்.

"சிலையே நட்டகணைவீழ் வம்பலர்
உயர்பதுக்கு இவர்ந்த அதர்தொடி அதிகல்
நெடுநிலை நடுகல் நாட்பலிக் கூட்டும்
சுரன்டை விலங்கிய மரனோங்கு இயவு"(அகம் - 289)

நெடுநிலை நடுகல், நெங்கல் என்ற நிலையில் நடுகற்கள் இருந்துள்ளன என்பதற்கு இப்பாடலே சான்று.

**ஐங்குறுநூற்றில் நடுகல்**

ஐங்குறுநூறு என்றசங்க நூலில் ஓதலாந்தையார் எழுத்துடை நடுகல்லைப் பெரிய யானையில் துதிக்கைக்கு உவமைப்படுத்தி உரைக்கிறார்.

"விழுத்தொடை மறவர் வில்லிடத் தொலைந் தோர்
எழுத்துடை நடுகல் அன்ன விழுப்பிணர்ப்
பெருங்கை யானை"(ஐங் - 352)

**தொகுப்புரை**

வீரர்களை இன்றையச் சமூகம் போற்றுவதை விடச் சங்ககாலத்தைய மக்கள் அவர்களுக்குப் பெரும் மதிப்புகொடுத்தனர். எனவே தான் போரில் வீரமரணம் அடைந்த

**E-ISSN: 2581-7140**

**Special Issue: Vol. 2, April-2019** **Available at: www.ijtlls.com**

வீரர்களுக்கு நடுகல் வழிபாடு நடத்தினர். அத்தகைய செய்திகளை சங்ககாலப் புலவர்கள் தங்கள் பாடலின் வழி வெளிப்படுத்தியுள்ளனர். அவற்றுள் எட்டுத்தொகை நூல்களான புறநானூறு, அகநானூறு, ஐங்குறுநூறு ஆகிய நூற்களில் கொடுக்கப்பட்டுள்ள நடுகல் செய்திகளைத் தொகுத்துக் கூறுவதாக இக்கட்டுரை அமைந்துள்ளது.

**துணை நூற்பட்டியல்**

1. பண்டைய தமிழகம் - சித்ரா மாதவன்.
2. சங்ககால ஆட்சிமுறையும் சமூக வாழ்வும் - பேராசிரியர் மு.நீலகண்ட சாஸ்திரி.
3. தொலைபேசி வழி தகவல் சேகரிப்பு Dr.ஜிந்தா M.A., Ph.D., திருநெல்வேலி.
4. இணையதள உதவியின் மூலம் பெற்ற குறிப்புகள்.

தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்
International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Special Issue: Vol. 2, April-2019 Available at: www.ijtlls.com


# திருச்செங்கோடு கல்வெட்டுகளால் அறியலாகும் தமிழர் பண்பாடு
# Tamil Culture comprehended through the Culverts of Thiruchencode

**முனைவர். அரங்க. பாரி,** பேராசிரியர் மற்றும் தலைவர்,
அண்ணாமலைப் பல்கலைக்கழகம்,அண்ணாமலைநகர் -608002.

## Abstract

*In Tamil Nadu temples are the main sources of archaeological evidences. They rely as the epitome of Tamil Culture. Through the facts edicted in the culverts inside the premises or the in around areas near to the Arthanareeswara temple of Thiruchencode, lots of evidences are calculable to identify the titles of the Pandian and Chola kings. Their title names, donations, philanthrophy given by them and other evidences related to the society and social culture followed by them are evidently seen through the culverts in the Thiruchencode Arthanareeswara temple. Hence, the article plans to decode the true facts found out from the culverts.*

**Keywords:** Tamil Culture, Culverts, Thiruchencode, Arthanareeswara Temple.

### முன்னுரை

தென்னிந்தியாவில் குறிப்பாகத் தமிழகத்தில் கோயில்கள் மிகப்பெறும் வரலாற்றுப் பணியினை செய்துள்ளன. மன்னர்களின் காலத்தில் கட்டப்பெற்ற கோயில்கள் தமிழனின் நாகரிகம் பண்பாடு போன்றவற்றின் உயர்ச்சியைக் காட்டி நிற்கின்றன. இவை வெறும் வழிபாட்டுத் தலங்களாக மட்டும் அமையாமல் தமிழர்களின் வரலாற்றையும் பண்பாட்டையும் வெளிப்படுத்தும் இடங்களாகவும் திகழ்கின்றன. திருவிழாக் காலங்களில் மக்களை ஒருங்கிணைத்து ஒற்றுமை ஏற்படுத்தும் நிறுவனங்களாகவும் கோயில்கள் இருந்துள்ளன. அந்த வகையில் அமைந்துள்ள கோயில்களில் குறிப்பிடத்தக்க ஓர் ஆலயந்தான் நாமக்கல் மாவட்டத்தில் உள்ள திருச்செங்கோடு ஆலயம். இந்த ஆலயத்தின் பெயர் அர்த்தநாரிஸ்வரர் கோயில் என்பதாகும். இக்கோயிலின் வெளிச்சுவரில் காங்கேயன் கல்வெட்டு உள்ளது. வேலவன் கோயிலும் அருகே அமைந்துள்ளது.

### இறைவன் திருமேனியே ஒரு பண்பாட்டை மொழிகிறது.

உலகில் ஆணும் பெண்ணும் சமம் என்பதைக் காட்டும் உருவமே அர்த்தநாரிஸ்வரர் உருவம். இது குறித்த பண்பாட்டுப் பதிவை மொழியும் ஆய்வறிஞர் பெ.அர்த்தநாரிஸ்வரன் கூறும் கருத்து எண்ணத்தக்கது. தென்னகத்திலே திருச்செங்கோட்டில் தான் அர்த்தநாரிஸ்வர்க்கென்று தனி ஆலயம் அமைக்கப்பட்டுள்ளது. உலக வாழ்க்கை சிறப்புற அமையவேண்டுமானால் ஆணும் பெண்ணும் இணைந்து செயல்பட வேண்டும். இந்தத் தத்துவத்தை உலக மக்களுக்கு சிவன் மேற்கொண்ட வடிவமே அர்த்தநாரிஸ்வரர் வடிவம் ஆகும் என்று குறிப்பிட்டுள்ளனர்.

கடவுள் சமயம் கடந்த நிலையை இந்த இறை தத்துவம் எடுத்துக்காட்டுகிறது. இது தமிழனின் அடையாளம். ஆணும் பெண்ணும் சமம் எண்ணும் பண்பாட்டை உலகுக்கு உரைத்துள்ள சிற்பம் என்று எடுத்துக்கொள்ளலாம். தமிழ் இலக்கியங்களிலும் இந்த வடிவம்

E-ISSN: 2581-7140
Special Issue: Vol. 2, April-2019 Available at: www.ijtlls.com

குறித்த செய்திகள் இடம்பெற்றுள்ளன. பெரியபுராணத்தில் "மாதொருபாகனார்" (சேக்கிழார் பெரியபுராணம், தடுத்தாட்கொண்ட புராணம் - 3 என்றும் சிலப்பதிகாரத்தில் "உமையொருபாகத்தை ஒருவனை வணங்கி' (சிலப்பதிகாரம் 22 வது காதை 103 வது வரி) என்று இடம்பெற்றுள்ளமையை அறிய முடிகிறது. மேலும், திருஞானசம்பந்தர், கபிலர், அருணகிரிநாதர் பாடல்களிலும் திருச்செங்கோடு பற்றிய செய்திகள் இடம்பெற்றுள்ளன.

திருச்செங்கோட்டைப் பொறுத்தவரை இதுவரை முப்பத்திரண்டு கல்வெட்டுக்கள் படியெடுக்கப்பட்டுள்ளன என்றும் தென்னிந்திய சாசனங்கள் தொகுதி பதின்மூன்றில் இராசசேகரவர்மன் என்ற தலைப்பில் மட்டும் ஐந்து கல்வெட்டுக்களில் வாசகங்கள் இடம்பெற்றுள்ளன. இவ்வாறே தென்னிந்திய சாசனங்கள் தொகுதி பத்தொன்பதில் பரகேசரிவர்மன் என்ற தலைப்பில் கல்வெட்டுக்களின் செய்திகள் இடம்பெற்றுள்ளன. அவற்றின் செய்திக்குறிப்பில் ARE 622 முதல் 654 வரையில் இடம்பெற்றுள்ளன. மேலும், 1915 களில் கல்வெட்டு குறிப்புகளின் ஆண்டறிக்கையில் 294 முதல் 297 வரையில் உள்ள எண்குறிப்புகளில் காணலாம். திருச்செங்கோட்டில் உள்ள கல்வெட்டுகளில் சோழ மன்னர்களின் செய்திகள் பாண்டியர்களின் கருத்துகள், மதுரை நாயக்கர், மோரூர் காங்கேயர் ஆகியோரைப் பற்றியச் செய்திகள் காணக்கிடைக்கின்றன.

**அடைமொழியால் அழைத்துக்கொள்ளும் பண்பாடு**

தமிழக மன்னர்கள் தங்களை அடைகொடுத்து அழைத்துக் கொள்ளும் பண்பு மிக்கவர்களாக இருந்துள்ளனர். திருச்செங்கோட்டில் உள்ள கல்வெட்டுகளில் சோழர் குறித்த கல்வெட்டுகளில் சோழமன்னர்கள் தங்களைப் பரகேசரி என்றும் இராசகேசரி என்றும் அடைகொடுத்து அழைக்கும் தன்மையினர். எட்டுக்கல்வெட்டுகளில் 'கோப்பரகேசரி' என்று தொடங்குவதைக் காணலாம். மதுரையும் ஈழமும் கொண்ட கோப்பர கேசரி வர்மன் என்று அடைகொடுத்து அழைத்துக் கொண்டுள்ள பண்பாடு எண்ணத்தக்கது.

இவ்வாறே கோ இராசகேசரிவர்மன் என்று அடைகொடுத்து தொடங்கும் கல்வெட்டுக்கள் ஐந்து இடம் பெற்றுள்ளன. இப்பட்டத்தை அடையைப் பயன்படுத்திய சோழ மன்னர்கள் ஆதித்ய சோழன், கண்டராதித்த சோழன் ஆகியோர் ஆவர். இவர்களுள் ஆதித்தசோழன் தொண்டைநாடு வரையில் தனது ஆட்சியை விரிவுபடுத்தியவன். அதனால் இவனை தொண்டைநாடு பரவிய ராசகேசரி என்று அழைத்துக்கொண்டான் என்று திருச்செங்கோடு கல்வெட்டு மொழிந்துள்ளது.

**பாண்டியர்களும் கோச்சடையன் பண்பாடும்**

பாண்டியர்களில் திருச்செங்கோடுக் கல்வெட்டுகளில் தங்களை சடையவர்மன் என்றும் மாறவர்மன் என்றும் அடைகொடுத்து அழைத்துக் கொள்ளும் பண்புமிக்கவர்களாக இருந்துள்ளனர். திருச்செங்கோட்டில் ஸ்ரீ சுந்தர பாண்டியதேவர் எனத் தொடங்கும் கல்வெட்டும் கோச்சடைய பன்மரான திரிபுவனம் சக்ரவர்த்திகள் சுந்தர பாண்டியதேவர் எனத் தொடங்கும் கல்வெட்டுக்கள் என ஆறு கல்வெட்டுக்கள் கிடைக்கின்றன.

**கோயில் கட்டடக்கலையைக் கட்டி காட்டியப்பண்பாடு**

பாண்டிய மன்னர்கள் போலவே இடைக்காலத்து மன்னர்கள் கோயில் கட்டும் பண்பில் திளைத்திருந்தனர். கோயில்கள் கட்டுவது மட்டுமல்லாமல் கோவிலுக்கு மதிற்சுவர் எழுப்புவதும், நிருத்த மண்டபம், சிற்பங்கள் உருவாக்குவது என்பன போன்ற பணிகளை மேற்கொண்டனர். யாரோ எந்த மன்னனோ கட்டிய கோவிலுக்கு நாம் ஏன் அதை புதுப்பிக்க வேண்டும் அல்லது திருப்பணிகள் செய்ய வேண்டும் என்று எந்தவொரு மன்னனும் நினைக்கவில்லை. கோயில் பொதுவழிப்பாட்டுத் தலமாக இருந்ததால் அதற்கு ஏற்படும்

E-ISSN: 2581-7140
Special Issue: Vol. 2, April-2019 Available at: www.ijtlls.com

சேதங்களை வழிவழியாக வந்த மன்னர்கள் புணரமைப்பு செய்த பண்பாடு போற்றத்தக்கது. அந்த வகையில் எண்ணத்தக்கவர்கள் செங்கோட்டுப் பகுதியில் இருந்த காங்கேயர்கள். இவர்கள் கங்க பகுதியில் இருந்து வந்தவர்கள். திருச்செங்கோட்டுக்கு அருகில் மோரூரில் வாழ்ந்தனர். இவர்கள் வேளாளர் மரபினர் என்றும் அறிய முடிகிறது.

ஒரு மன்னர் பரம்பரை தொடர்ந்து வரும் மன்னர் பரம்பரையினர் கோயிலைச் செப்பனிடுதல், குளம் வெட்டுதல், மதில்சுவர் கட்டல், சிலையமைத்தல், சிற்பங்கள் உருவாக்கல் என்பன போன்ற பணிகளை நிறைவாகச் செய்துள்ளமையால் அவர்களின் கலைப்பண்பு வெளிப்படுகிறது.

**கல்வெட்டுக்களில் இறைவன் பெயர் பதிக்கும் பண்பு**

கோயில் கல்வெட்டுக்களில் மன்னர் பெயரும் இறைவன் பெயரும் இணைத்துப்பார்க்கும் முறை இடம்பெற்றுள்ளமையைத் தமிழர் பண்பாடு எனலாம்.

கோப் பரகேசரிவர்மனின் கல்வெட்டுக்களில் திருச்செங்கோடு மகாதேவர் என்றும் திருச்செங்கோட்டு பெருமானடிகள் என்றும் இறைவன் பெயர் குறிப்பிடப்படுகின்றது. கோ ராசகேசரி வர்மன் கல்வெட்டில் திருச்செங்கோட்டு ஆள்வார் என்று இறைவன் பெயர் இடம்பெற்றுள்மை அறியத்தக்கது.

முதலாம் இராசேந்திரனுடைய கல்வெட்டில் திருமலையில் எழுந்தருளியுள்ள உடையார் என்று இறைவன் பெயர் சுட்டப்பெற்றுள்ளமை அறியத்தக்கது. கிருஷ்ணதேவராயருடைய கல்வெட்டுக்களில் இறைவனது குமாரர் பெயர் ஸ்ரீ அர்த்தநாரிச்சுரமுடைய தம்பிரான் குமாரர் என்று குறிக்கப்பட்டுள்ளமையும் கருதத்தக்கது. இவ்வாறு பெரும்பாலான கல்வெட்டுக்களின் இறைவன் பெயர் இடம்பெற்றுள்மை எண்ணத்தக்கது.

**நிலக்கொடை வழங்கும் பண்பாடு**

கி.பி 9, 10 ஆம் நூற்றாண்டில் ஆண்ட சோழ மன்னர்கள் பெரும்பாலும் பொற்கொடை அளித்து வந்தனர். கி.பி 11 ஆம் நூற்றாண்டில் ஆட்சி செய்த மன்னர்கள் அவர்களுக்குப் பிறகு வந்த மன்னர்களுக்கு நிலக்கொடை அளித்து வந்தனர்.

சுந்தர பாண்டியனின் ஏழாவது ஆட்சி ஆண்டுக் கல்வெட்டும் பத்தாம் ஆட்சியாண்டுக் கல்வெட்டும் நிலக்கொடை அளித்ததை வெளிப்படுத்துகிறது. நரசிங்கஉடையாரின் கல்வெட்டு திருமலையில் எழுந்தருளியுள்ள அர்த்தநாரிஸ்வரருக்கும் சுப்பிரமணியருக்கும் கொங்கின் வீரசோழ மண்டலத்துக் கீழ்க்கரைப் பூந்துறை நாட்டு சூரப்பண்ணியான் அகரமும் நத்தமும் உள்ளதாக நான்கு எல்லைக்கும் உட்பட்ட மேனோக்கிய மரமும் கீழ்நோக்கிய கிணரும் நஞ்சையும் புஞ்சையுமாகவும் தர்மமாகக் கொடுத்ததைக் கூறுகின்றது.

கிராமக்கொடை, தாரைவார்த்துக் கொடுத்தல் போன்ற பண்புகளும் பண்டைய மன்னர்கள், வாழ்வியல் பண்புமிக்கவர்களாக இருந்துள்ளனர். பொன் அளக்கும் கருவி, இன மக்களின் பெயர்கள் குறிப்பாக உவச்சர்கள் எனும் பிரிவினர் பற்றிய செய்திக்குறிப்பு காணப்படுகிறது. இவர்கள் கோயில்களில் மேளம் வாசிப்பவர்கள் என்ற பொருண்மையில் வாழ்ந்தனர். ஆனால் தற்போது திருச்செங்கோட்டில் வசிக்கவில்லை என்பதும் கல்வெட்டுக் காலத்தில் இச்செய்தி எண்ணத்தக்கது.

திருச்செங்கோட்டுக் கல்வெட்டுக்களில் மன்னர்களின் பெயர்களுடன் பட்டப் பெயர்களை அல்லது பட்டங்களை அடைகளாகப் பயன்படுத்தும் பண்பு வெளிப்படுகிறது. மன்னர்களின் கல்வெட்டுகளில் இறைவன் பெயரும் செதுக்கப்படுவது மரபார்ந்த பண்பாக உள்ளது. மன்னர்களின் பொற்கொடைக்குப் பிறகு நிலக்கொடையாளர்களாகத் திகழ்ந்துள்ளனர். பல்வேறு

**E-ISSN: 2581-7140**

**Special Issue: Vol. 2, April-2019** **Available at: www.ijtlls.com**

கருவிகள், இனப்பெயர்கள், தொழில்கள் பெயர்கள் உள்ளிட்டவற்றைப் பதிவு செய்யும் பண்பாடும் இருந்துள்ளமையை தொல்லியல் சார் பதிவுகளாக எண்ணவியலும்.

**பயன்மை நூல்கள்**

1. இளங்கோவடிகள், சிலப்பதிகாரம்
2. சேக்கிழார், பெரியபுராணம்
3. கே.கே.பிள்ளை, தமிழக வரலாறும் பண்பாடும்
4. பெ.அர்த்நாரிஸ்வரன், திருச்செங்கோடு
5. T.A Gopinatharao Hindu I conogtaphy voll II Pat, P – 321
6. S II VaX1X, 219 , 426,441
7. ARE – 633 TO 905

தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்
International Journal of Tamil Language and Literary Studies 
*A Bi-Yearly Peer-Reviewed International Journal*
E-ISSN: 2581-7140
Special Issue: Vol. 2, April-2019 Available at: www.ijtlls.com

# கல்வெட்டுகளும் செப்பேடுகளும்
# Culverts and Copper Plates

**அம்பை Rtn.ஆ.பாலசரசுவதி**, எம்.ஏ., எம்.எட்.
தமிழ்ச்செம்மல் விருதாளர், அம்பை.

**Abstract**

*The antiqueness of Tamil Language and Culture is as old as the earth. That is proclaimed as the Tamil Class is the ancient. All over the world, there is voluminous evidence that Tamil Culture is the oldest in the world having lots of archaelocal proofs. Most of the evidences are from the Culverts and Bronze Plates. Many Tamil kings had edicted culverts and inscribed bronzelets and copper plates to show down their feats, actions, ethics, etc related to the Tamil society. The Chola and Pandiya Kings had inscribed their titleverses to proclaim their valour and achievement. The sources at Ilankai and in Tamil Nadu purport that Tamil Civilization in the unawared places inside the state and putside and at Ilankai. The inscriptions and edicts prove that Tamil society has arich culture. Modern archaeological research will help to retrieve the hidden truths about Tamil culture through the ancient evidences. The purpose of the paper is to discuss the antiqueness of Tamil Culture through the Culverts and Bronzelets.*

**Keywords:** Culverts, Bronze Plates, Tamil Society, Evidences

உலகின் மூத்த மொழி நம் தமிழ் மொழி அதனை மென்மேலும் மெருகு கூட்டுவதோடு வருங்காலச் சமுதாயத்திற்குத் தமிழரது வாழ்வியலை அவர்கள் ஏற்றுக் கொள்ளும் நிலைக்குக் கொண்டு செல்ல வேண்டிய பொறுப்பில் உள்ளோம். உலகத்தமிழ் ஆராய்ச்சி நிறுவனம் இப்பணியை சீரிய முறையில் செயல்படுத்தி வருவது பாராட்டுதற்குரியது வரவேற்கத் தக்கதாகும்.

அன்னைத் தமிழை முன்னிறுத்தி எழுந்த உலக மானுடத்தின் உன்னத கூறு தமிழகம் என்பதை தொல்லியல் ஆய்வுகள் பறைசாற்றுகின்றன. வடவேங்கடம் தென்குமரி ஆயிடைத் தமிழ்கூறும் நல்லுலகம் என்று தொல்காப்பியம் கூறுகிறது. உலகளாவிய நிலையில் கணினி வழி தமிழ் பரவியுள்ளதை எல்லோரும் அறிவர். ‘‘யாதுமாகி நின்றாய், தேவி எங்கும் நீ நிறைந்தாய்’’ என்கிறார் பாரதியார் “யாதும் ஊரே யாவரும் கேளிர்” என்பது கணியன் பூங்குன்றனாரின் வாக்கு உலகமயமாக்கல் உண்மையாகி உலகத் தமிழர்களை இந்நிகழ்வு இணைக்கிறது. இது மகிழ்வான, நிறைவான செய்தியாகும். எவ்வுயிரும் தன்னுயிர் போல் எண்ணிக் காக்கும் தமிழரின் செவ்வியல் நெறிக்கு தொல்லியல் உறுதுணை புரிகிறது என்பதை ஆய்வது இக்கட்டுரையின் குறிக்கோளாகும்.

கல்வெட்டிலும் செப்பேடுகளும் தமிழரின் உயர்ந்த வாழ்வியல் நெறியை வெள்ளிடை மலையாக விளக்குகின்றன. கல்வெட்டும் செப்பேடும் ஒட்டிப் பிறந்த இரட்டை வாழைகள். கல்வெட்டுச் செய்திகளின் நகலாக செப்பேடுகள் பாதுகாக்கப்பட்டு வந்தன. ஆயிரம் வாள்

E-ISSN: 2581-7140
Special Issue: Vol. 2, April-2019 Available at: www.ijtlls.com

முனையை விட வலிமை வாய்ந்தது பேனாமுனை என்பர். இக்கல்வெட்டுகளும் செப்பேடுகளும் கல் தோன்றி மண் தோன்றாத ------- மூத்தகுடி'' என்ற குடிச் சிறப்பை உலக வெளிச்சத்திற்கு கொண்டு வரும் முயற்சி சிறப்பானது. ஆய்வுகளில் கிடைத்த 7000 பொருட்களின் மதத்தின் சாயல் இல்லை என்பதே போற்றுதற்குரியதாகும்.

கல்வெட்டுக்கள் தோன்றற்குரிய காரணங்கள்

''நல்லார் ஒருவருக்குச் செய்த உபகாரம்
கல்மேல் எழுத்துப்போல் காணுமே – அல்லாத
ஈரமில்லா நெஞ்சத்தார்க்கு ஈந்த உபகாரம்
நீர் மேல் எழுத்திற்கு நேர்''

என்ற ஔவை வாக்கிற்கிணங்க பிறருக்கு செய்த உதவியும், அதனால் வரும் புகழும் உலகில் பன்நெடுங்காலம் நிலவ வேண்டும் என்ற நல்ல எண்ணத்தில் வருந்தித் தேடிய பொருளை உலகத்தாருக்கு உதவுமாறு அறச்செயல்கள் செய்தார்கள். அறச்செயல்கள் தொடர வேண்டுமென்ற எண்ணத்தில் அரசரும் பெருமக்களும் அறிய பொது இடங்களில் பலரும் காணுமாறு அறச்செயல்களை கல்லில் பொறித்து வைப்பது வழக்கமாய் இருந்தது. ''யாம் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம்'' என்பதற் கேற்ப பல்லாயிரக்கணக்கான கல்வெட்டுகள் தமிழ்நாட்டில் காணக் கிடக்கின்றன. பல்லவராட்சிக்கு முன் கல்லில் எழுதும் வழக்கம் இருந்தது. என்பதை தொல்காப்பியத்தில் காணும்:

"காட்சி கால்கோள் நீர்ப்படை நடுகல்
சீர்த்தகு சிறப்பின் பெரும்படை வாழ்த்தல்''

என்னும் அடிகளால் அறியலாம். கல் நடுதலைப் பற்றிப் பாடிய பாடல்கள் *புறநானூறு, அகநானூறு, திருக்குறள், புறப்பொருள் வெண்பாமலை* முதலிய பல நூற்களிலும் காணப்பெறுகின்றன. நடுகல்லில் வீரனது பெயரும், பெருமையும் எழுதுதல் உண்டு என்பதை *தொல்புறத்திணை* இயல் - 5

''அணிமயிற் பீலிசூட்டிப் பெயர் பொறித்து
இனி நாட்டனரே கல்லும்'' என்று புறநானூறும்
''ஆடவர் பீடும், பெயரும் எழுதி அதர்தொறும்
பீலி சூட்டிய பிறங்கு நிலை கல்'' என்று அகநானூறும்
அவன் பெயர் கல்மிசைப் பொறித்துக்
கவின் பெறக் கல் நாட்டின்று''

என்று புறப்பொருள் வெண்பாமாலையாலும் அறியலாம்

கல்வெட்டுக்களால் அரசர்களின் கொடைச் சிறப்பு, ஆட்சித் திறன், போர்ச் செயல்கள், அறச் செயல்கள், ஆகியவற்றையும் மக்களின் பழக்க வழக்கங்களையும் அறிய உதவுகின்றன.

**கல்வெட்டுகள், செப்பேடுகள்**

அரசனது ஆணையோ, அல்லது இரு திறத்தாருள் ஏற்படும் உடன்பாடுகளையோ, பழங்கால மக்கள் செப்பேடுகளில் எழுதும் பழக்கம் இந்தியாவில் கி.மு.2ம் நூற்றாண்டு முதலே இருந்து வந்திருக்கிறது. ஒரு செப்பேடு எப்படி எழுதப்பட வேண்டும் என்ற விதியை *விஜு புராணம்* குறிப்பிடுகிறது. அரசன் நிலத்தை கொடையாக அளிக்க வேண்டும். செப்பேட்டில் அரசனது முத்திரை அரசனின் முன்னோர் பற்றியும் பதிப்பிக்க வேண்டும். நிலத்தின் எல்லை, பரப்பு முதலியன குறிப்பிட வேண்டும் என்கிறது. இந்தியாவில் கிடைத்த செப்பேடுகளில் பழமையானது குப்த மன்னர் முதலாம் ''குமாரகுப்தனின் ''தனைதகா''

E-ISSN: 2581-7140
Special Issue: Vol. 2, April-2019 Available at: www.ijtlls.com

செப்பேடாகும். (கி.பி.433) தமிழ் கல்வெட்டுகளில் செப்பிலும், சிலையிலும் எழுத வேண்டும் என்ற குறிப்பும் உள்ளது. ஒவ்வொரு கல்வெட்டிற்கும் ஒரு செப்பேடு நகல் இருக்க வேண்டும் வீரராசேந்திரனின் கன்னியாகுமரி கல்வெட்டு செப்பேட்டின் நகலாக இருந்திருக்கலாம் என்று நம்பப்படுகிறது.

முருதூருடையார் அருணிதி கலியன் என்பவன் முதலாம் பராந்தகச் சோழனின் அதிகாரிகளில் ஒருவன். இவன் குளம் வெட்டி கரையை உயர்த்தி நீர்தேக்கினான். நிலத்தால் பெற்ற வருமானத்தைக் கொண்டு நரசிங்கப் பெருமானுக்கு மூன்று வேளை திருவமுது செய்வது என்றும், மீதி நெல்கொண்டு நாள்தோறும் வேதம் வல்ல பிராமணர் ஐவருக்கு சிறப்பான அமுது செய்விடக்க ஏற்பாடு செய்தான் என்று ஆனைமலை நரசிங்கப் பெருமான் கோவில் கல்வெட்டு கூறுகிறது.

கல்வெட்டுக்கள் நாட்டு வரலாற்றை அறிய பெருந் துணையாக உள்ளது. தமிழ்நாட்டு வெற்றி வேந்தர்களின் பெருமைகளும் அக்காலத்து நாகரீக மேம்பாடுகளும், புரவலர், புலவர், அரசியல் தலைவர் முதலானோர் வரலாறுகள் புலனாகின்றன. அந்நாட்டு அரசனின் வெற்றிகள், சிறப்புகள், கோயில் மேற்பார்வை அரசியல் அதிகாரிகள், கிராம ஆட்சி, திருப்பணிகள் அறவோர் வரலாறு ஆகியவற்றை விளக்குகின்றன. மாயூரம் வட்ட சிவன் கோயில் கல்வெட்டால் “அமிதசாகரா” என்பவர் யாப்பருங் கலகாரிகை ஆசிரியர் என்பது தெளிவாகிறது. முதலாம் ராசராச சோழன் கால கல்வெட்டுகள் அரசனின் வெற்றி, ஆற்றிய திருப்பணிகள் அரசியல் அதிகாரிகள் செய்த திருப்பணிகள், கோயில் நிர்வாகம் தெய்வபக்தி ஆகியவற்றை தெளிவாக விளக்குகிறது. மேலும் பெருவழி, பணிமகள், புதுக்கு என்ற தூய தமிழ் சொற்களும் காணப்படுகின்றன.

முதலாம் இராசேந்திர சோழன் கல்வெட்டு: அரசின் வடநாட்டு படைஎடுப்பையும், கடல் கடந்த வெற்றிகளையும், ஆழ்வரபராந்தகர், குந்தவையார் செய்த திருப்பணிகள், கல்வெட்டால் அறியலாம். சர்வசிவ பண்டிதர், அவர் சி'யர்களுக்கு ஆண்டொன்றுக்கு 2000 கலம் நெல் கொடுக்க ஏற்பாடு செய்தான். இராசேந்திர சோழன் கல்வெட்டு சோழர்-மேலைச் சாளுக்கியர் போர்களை விவரிக்கின்றன. விக்கிரம சோழன் கல்வெட்டு தில்லைத் திருப்பணிகளை விவரிக்கிறது. கல்வெட்டுக்கள் வெற்றி வேந்தர்களுடைய வரலாறுகளை அறிய மிகவும் உதவுகிறது.

பத்துப்பாட்டில் *குறிஞ்சிப் பாட்டு* பாடிய கபிலர் திருக்கோவலூரில் தீப்பாய்ந்து உயிர் நீக்க அவர் நினைவாக ஒரு நடுகல் (கபிலக்கல்) நிறுவப்பட்டதை முதல் இராசராசன் ஆட்சிக்காலத்தில் (கி.பி.1012) திருக்கோவலூர் வீரட்டானேசுவரர் கோயிலில் வரையப்பட்ட கல்வெட்டு கூறும் செய்தியாகும்.

கடியலூர் உருத்திரங்கண்ணனார் பாடிய *பட்டினப்பாலை* பற்றி மாறவர்மன் சுந்தர பாண்டியனின் (கி.பி.1216-1268) கல்வெட்டு குறிப்பிடுகிறது. இதில் சோழ நாட்டை வென்ற பாண்டியன் உருத்திரங்கண்ணனார்க்குக் கரிகாலன் அளித்த “பதினாறு கால் மண்டபம்” தவிர ஏனையவற்றை அழித்தான் என்ற செய்தி இடம் பெறுகிறது. கி.பி.13ம் நூற்றாண்டு கல்வெட்டு திருவண்ணாமலையில் வரையப்பட்டது “நல்லிசைக் கடாம்புனைந ன்னன்”, அதாவது இனிய ஓசை அமைந்த மலைபடுகடாம் என்னும் நூல் கொண்டு புகழ் எய்திய நன்னன் எனக் குறிக்கின்றது. மலைபடுகடாம் ஆசிரியர் பெருங்கௌசிகனார் இரணிய முட்ட நாட்டுப் பெருங் குன்றூராகும். இந்நாடு பாண்டி மண்டலத்திலுள்ளது என்று கல்வெட்டு கூறுகிறது. மேலும் இப்புலவர் பாண்டி நாட்டினர் என்றும் அறிய உதவுகிறது. மலேயா நாட்டின் வடகோடியில் உள்ளது பினாங்கு. அதற்கும் வடக்கே உள்ளது சயாம். இந்நாட்டின் மேற்குக் கரையில்

E-ISSN: 2581-7140
Special Issue: Vol. 2, April-2019 Available at: www.ijtlls.com

உள்ள துறைமுகம் ''தகூபா'' இதன் உண்மைப் பெயர் ''தக்கோலம்'' இது தமிழ் பெயர். முதலாம் ராசேந்திர சோழன் இத் தக்கோலத்தைக் கைப்பற்றினான் என்று கல்வெட்டு கூறுகிறது.

சைவ சமய குரவர்களுள் ஒருவரான திருஞானசம்பந்த அடிகள் குறித்த கல்வெட்டு. இரேசேந்திர சிங்கவள நாட்டு திருவாலி நாட்டு உடையார் ஸ்ரீ ராசராஜீஸ்வரம் உடையார் தேவதானம் குறுவாணிக் குடியாகிய பரகேசரிபுரத்து நகரத்தார் யாண்டு இருபத்தொன்பாவ துவரை குடுத்த ரத்தினங்கள் தட்சிண மேரு விடங்கன் என்றும் கல்லால் நிறை எடுத்தும் பொன் ஆடவல்லான் என்னும் கல்லால் நிறை எடுத்தும் கல்லில் வெட்டினான்.

பாண்டிய மன்னர்களின் கல்வெட்டுக்கள் மூலம் அறியலாகும். செய்திகளாவன மாறஞ்சடையன் என்பவனின் கல்வெட்டு ''வல்ல நாட்டுக் கவிப்பால் கல் குறிச்சி வரகுணவதி அரையன் ஆ னநக்கஞ்செட்டி திருவெட்பூர் கோதர்ணத்து மகா தேவர்க்கு ஒரு நந்தா விளக்கு எரிப்பதற்கு பலரிடமிருந்து 15 கழஞ்சு பொன் பெற்று பாதுகாவலில் வைத்துள்ளான் என்ற செய்தியைக் கூறுகிறது. மக்கள் தெய்வ பக்தியில் சிறந்து விளங்கினர் கோயில் காரியங்கள் தடையின்றி நடந்தன. ''பிச்சை புகினும் கற்கை நன்றே என்றாற்போல பலரிடமிருந்து பொருள் பெற்றாயினும்'' கோயில் வழிபாடுகள் குறைவின்றி நடக்க ஏற்பாடுகள் செய்தனர். பாண்டிய மன்னர்கள் சைவ கோயில்கள் கட்டுவித்த பொழுதிலும் அறுவகை சமயத்தாரும் சமய காழ்ப்புணர்வின்றி வாழ்ந்தனர் என்பதை கல்வெட்டுகள் கூறுகின்றன.

**கல்வெட்டுக்கள் கூறும் வாழ்வில் செய்திகள்**

சுந்தரபாண்டியனின் கல்வெட்டு நாட்டில் மூவகைத் தமிழும், நால்வகை வேதமும், ஐவகை வேள்வியும் சிறப்புடன் திகழ்ந்தன. இயல், இசை, நாடகம் என்னும் முத்தமிழும் மன்னராலும், மக்களாலும் பேணப்பட்டன. அனைவரும் தாய்த் தமிழில் சிறந்து விளங்கினர். நாட்டில் வேள்விகள் நடைபெற்றன. வேதங்கள் பாதுகாக்கப்பட்டன. மறு உலக வாழ்வில் நம்பிக்கை உடையவர்களாய் இருந்தார்கள். அரசன் பகைவரை வெல்லும் வீரமும், பணிந்து திறை செலுத்த அருளும் பண்பும் உடையவனாய் விளங்கினான். இதனை ''உலக முழுதுடையானொடும் வீற்றிருந்தருளிய'' என்ற கல்வெட்டுத் தொடர் தெளிவாக்குகிறது. மன்னரும், மக்களும் ''மனைவியரிடத்தில்'' மிக்க பரிவுடனும் அன்புடனும் நடந்து கொண்டனர். கல்வெட்டில் எழுவகைப் பாடல் குறிக்கப்பட்டுள்ளது. தமிழர் இசையில் சிறந்து விளங்கினர் என்பதை உணர்த்துகிறது. அரசன் அல்லது மக்கள் பிறப்பிக்கும் ஆணைகளை உறுதி செய்ய நீர்வார்த்துக் கொடுத்து (தாரைவார்த்தல்-உறுதி) உறுதி கூறுவர் என்ற செய்திகளை இக்கல்வெட்டுக்கள் பகர்கின்றன.

அரிகேசரி பராக்கிரம பாண்டியனின் கல்வெட்டால் அவன் கோயில் கட்டக் காரணம், கட்டிய வரலாறு, கோயிலைப் பேணி பாதுகாப்பவர்களுக்கு அரசன் செலுத்தும் நன்றி முதலியவற்றை விளக்குகிறது. அந்தணர்கள் வாழ அகரங்கள் அமைத்துக் கொடுத்த செய்தி கூறப்பட்டுள்ளது.

உலக மக்களைக் காக்கச் சிவபெருமானடைய பாதங்களாகிய தாமரை மலர்களை தன்னுடைய முடியில் சூடி செங்கோல் ஓச்சினான் என்றும் அறநெறி தவறாது தானதருமம் செய்து சிறப்புடன் ஆட்சி செய்தான் என்பதை

''இலகு கருணை இரண்டுருவென்ன அம்மையும் அப்பனுமாய் அனைத்துயிர்க்கும் இம்மை பயனும், மறுமைக்கு உறுதியும் மேம்பட நல்கினான்'' என்றும் பராக்கிரம பாண்டியன் கல்வெட்டில் கூறப்பட்டுள்ளன. நாட்டின் பண்பாட்டு நிலையை அறிய கல்வெட்டுகள் துணைபுரிகின்றன என்பதை அறியலாம்.

E-ISSN: 2581-7140
Special Issue: Vol. 2, April-2019 Available at: www.ijtlls.com

**கல்வெட்டு:**

செங்கடல் வழிகாட்டி 54 பத்தியில் கூறிய செய்தியைப் புறநானூறு 48:16-ல் “கோதை மார்பிற் கோதையானும் கோதையைப் புணர்ந்தோர் கோதையானும் மார்கழி மலர்ந்த நெங்த லானும் கள் நா.்.றும்மே கானல் அம் தொண்டி அ.்.துளம் ஊரே அவன் எம் இறைவன் அன்னோற் படர்தி யாயின் நீயும” என்று கூறியதிலிருந்து அறியத்தகும் செய்தியாகும்.

அகஸ்தஸ் சீசர், முதல் நூற்றாண்டின் ரோம நாட்டு அரசன். இவன் காலத்தில் பருவக்காற்றின் உதவியுடன் இந்தியாவுடன் கடல் வழி வணிகம் சீராய் நடந்தது என்றும் இவ்வரசன் உருவமுடைய நாணயஙகள் துறை முகப் பரப்பிலும் உள் நாட்டிலும் கிடைத்ததன் மூலம் தெளிவாகின்றது.

கோயம்புத்தூர் அருகில் 1842 இல் கிடைத்த வெள்ளியிலான 522 நாணயங்களுள் 135 அகஸ்டஸ் நாணயங்கள் 378 டைபீரியஸ் என்ற ரோம் அரசர்கள் காலத்தவையாகும். இதிலிருந்து இவ்விரு நாடுகளுக்கிடையே கடல்வழி வணிகம் சிறந்திருந்தது என்றும் நல்ல துறைமுகங்களும் அவற்றின் மேலாண்மையும் சிறந்திருக்க வேண்டும் என்பதும் தெளிவாகிறது.

தாமிரபரணி நதி கடலில் கலக்குமிடத்தில் இருந்த கொற்கை முத்து வியாபாரத்தில் முக்கியத்துவம் பெற்றிருந்தது. சங்க காலம் முதலே சிறந்த துறைமுகப் பட்டினமாகவும் இருந்தது. இங்கு மேற்கொண்ட அகழ்வாய்வின் போது தமிழ் பிராமி எழுத்துக்கள் பொறித்த பானை ஓடுகள் கிடைத்தன. அவை நவீன மேம்பாட்டு சோதனை மூலம் மிகத் தொன்மையான காலத்தைச் சேர்ந்தவை என்று கண்டறியப்பட்டது.

**மெய்க்கீர்த்தி**

கல்வெட்டின் முக்கியப் பகுதியாகத் திகழ்வது மெய்க்கீர்த்தி. மெய்க்கீர்த்தி என்பது ஒரு வேந்தனுடைய உண்மைப் புகழையும் அவன் வரலாற்றையும் எடுத்துக்கூறி பின் அவன் தேவியாருடன் வாழ்க என வாழ்த்தி, அவனது இயற்பெயரோடு சிறப்புப் பெயரையும் ஆட்சி ஆண்டையும் சிறப்பாகக் கூறுவதாகும். இதன் இலக்கணத்தை

“சீர் நான் காகி யிரண்டடித் தொடையாய் வேந்தன் மெய்ப் புகழெல்லாம் சொல்லியம் அந்தத்தவன் வரலாறு சொல்லியும் அவளுடன் வாழ்க எனச் சொல்லியும் மற்றவன் இயற்பெயர் பின்னர் சிறக்க யாண்டெனத் திறம்பட வுரைப்பது சீர் மெய்க்கீர்த்தி” என்றும் பன்னிரு படலச் சூத்திரத்தால் அறியலாம்.

**முதல் இராச ராச சோழனின் மெய்க்கீர்த்தி**

“திருமகள் போலப் பெருநிலச் செல்வியும்” என்று தொடங்குகிறது. முதலாம் இராசேந்திரச் சோழனின் மெய்க்கீர்த்தி “திருமன்னி வளரவிருநில மடந்தையும்” என்று தொடங்குகிறது. இராசாதிராசனின் மெய்கீர்த்தி “திங்களோ தருதன் றொங்கல் வெண்குடைக்கீழ்” என்றும் வீரராசேந்திரனின் மெய்கீர்த்தி “திருவளர் திரள்புயத்து இரு நிலவலவம்” என்றும் அரிகேசரி பராக் கிரம பாண்டியனின் மெய்க்கீர்த்தி “பூமிமிசை வனிதை மார்பினிற் பொலிய” என்றும்.

முதல் இராசேந்திரன் வங்காள தேசம் வரை வெற்றி கண்டான் என்பதை “தங்காத சாரல் வங்காள தேசமும்” என வரும் அவனது மெய்க்கீர்த்தியால் அறியலாம்.

விசய தந்தி விக்கிரமவர்ம பல்லவனின் ஐம்பத் தொன்றாம் ஆட்சி ஆண்டாகிய கி.பி.828-ல் திருவேங்கடத்துப் பெருமாள் அடிகளுக்குச் சோழ நாட்டு சோழனார் உலகப் பெருமானார் திருவிளக்கின் பொருட்டு முப்பது கழஞ்சு பொன்னை மூலதனமாக வைத்துள்ளார். அதைக் கொண்டு கருக்கிப்பட்டியை வாங்கி திருவிளக்கு வைக்கப்பட்டு வந்தது என்ற செய்தி

E-ISSN: 2581-7140
Special Issue: Vol. 2, April-2019 Available at: www.ijtlls.com

சித்தூர் மாவட்டம் திருச்சானூர் கோயில் வாசல்தரையில் காணப்படும் கல்வெட்டால் தெரியவருகிறது.

**மணிமங்கலம் கல்வெட்டு: மெய்க்கீர்த்தி**

இராசாதிராசன் இரண்டாவது முறையாக ஆகவ மல்லன் மீது படை எடுத்தான். ஆகவமல்லனுடைய படையில் இருந்த கண்டர், தினகரன், நாரணன், கணபதி, மதுசூதனன் என்பவர்கள் புறமுதுகாட்டி ஓடினர். பிறகு கம்பிலி நகரில் இருந்த சாளுக்கியருடைய மாளிகையை இடித்துத் தள்ளி "வெற்றித் தூணும்" நாட்டினான். இதனை மண்மங்கலம் கல்வெட்டு "ஆகவமல்லனம் அஞ்சற் கேவு தன் தாங்கரும் படையால் ஆங்கவன் சேனையுட் கண்டப் பயனும் கங்காதரனும் வண்டமர் களிற்றொடு மடியத் திண்திறல் விருதர் விக்கியும் விசயா தித்தனும் கருமுரட் சாங்க மய்யனு முதலினர்சமர பீரு ஒத்துடைய விரிசுடர்ப் பொன்னோடை யங்கிரிப் புரவியோடும் பிடித்துத் தன்னாடையிற் சயங்கொண் டொன்னார் கொள்ளிப் பாக்கை யுள்ளெரி மடுப்பித்து" என்றும் "கண்டர் தினகரன் நாரணன் கணவதி வண்டலர் தெரியன் மதுதன னென் றெனைப் பலவரை சாரை முனைவயிற் றூரத்தி வம்பலர் தருபொழிற் கம்பிலி நகருட் சாளுக்கியர் மாளிகை கைத் தகர்ப்பித்து" என்று கூறுகிறது.

அரிகேசரி பராக்கிரம பாண்டியன் - கி.பி.1422-1463 வரை ஆட்சிபுரிந்தான். "பூமிசை வனிதை மார்பினிற் பொலிய" என்று தொடங்கும் மெய்கீர்த்தி இவன் போர்ச் செயல்கள், குணச் சிறப்புகளை விளக்குகிறது.

இராசேந்திர சோழன் கி.பி.1017-ல் ஈழ நாட்டின் மீது படை எடுத்துச் சென்றான். சிங்க வேந்தனை வென்று அரசன் மற்றும் தேவியர் முடியினைக் கைப்பற்றினான். இலங்கை வேந்தனிடம் பாண்டிய மன்னன் அடைக்கலமாக வைத்து சென்றவைகளைக் கைப்பற்றி நாடு திரும்பினான். என்ற மெய்கீர்த்திப் பகுதி உணர்த்துகிறது. மலயா சுமத்திரா, சாவா ஆகிய தீவுகளை வென்றதனால் கடாரங் கொண்டான் என்று அழைக்கப்பட்டான். இவனது மெய்க்கீர்த்தி "அயலை கடல் நடுவுள் பலகலஞ் செலுத்தி -------- சோழ தேவர்" என்று உணர்த்துகிறது.

வீரமரணம் எய்தியோருக்கு நட்டக்கல் அண்மையில் தமிழ்நாடு அரசு தொல்பொருள் ஆய்வுத்துறை கண்டுபிடித்த கல்வெட்டுகள் பலபல அவற்றுள்,

"பாசாற்றூர் ஒருமை தொறு எயினாப், டார் கொள்ள பாசாற்றூர் பூசல்லிட பூசல் சென்று, கோவூர் நாட்டுச் சிற்றிடையாற்று முதுகொன்றை மூக்கின் மீமலை அயங்கயக் கரையில் சென்று முட்டி, மலைய நூறுடைய செம்பர் மகனான காரிப்பொருள் உரையில் அம்பு மாள எவ்வி பத்திரம் உருவி, எதிரே சென்று பட்டான்." மாற்றார் படையை எதிர்த்து நின்று களத்தில் இறந்துபட்ட காரிப் பெருமாள் என்பவரின் நடுகல்லில் உள்ள செய்தி இது. தொல்காப்பியத்துள் வரும் பூசல் மாற்று என்ற மரபு இதில் வந்துள்ளது.

தமிழ் செப்பேடுகள் பல்வேறு தென் இந்திய அரச மரபினரால் வழங்கப்பட்ட ஊர்கள், வேளாண் நிலங்கள், கொடைகள் குறித்த பதிவுகள் ஆகும். அரசனது ஆணையாகப் பாதுகாக்கப்பட்டு வந்தது. தமிழ்நாட்டின் வரலாற்றை, தமிழ் மக்களின் திட்டமிட்ட வாழ்வியலை அறிய உதவுகிறது.

காஞ்சி காமகோடி பீடத்தில் 125 செப்பேடுகள் இருந்ததாகக் கூறப்படுகிறது. இதற்கு "த்ரீபலீ" சாசனம் என்ற பெயரும் உண்டு. சோழர் கால செப்பேடு 4.75 அங்குல நீளமும் 1.5 அங்குல அகலமும் உடையனவயாகக் காணப்பட்டது. இந்த செப்பேடு கர்நாடக மாநிலம் குளத்தூரில் கண்டெடுக்கப்பட்டது. தஞ்சாவூருக்கு அருகிலுள்ள கருந்தாட்டான் குடி என்ற

E-ISSN: 2581-7140
Special Issue: Vol. 2, April-2019 Available at: www.ijtlls.com

இடத்திலிருந்து செப்பேடுகள் கிடைக்கப் பெற்றன. கி.மு. முதலாம் நூற்றாண்டைச் சார்ந்த செப்பேடுகள் அயோத்தியில் கிடைத்தன.

மூலப்பட்டுடை பஞ்சா சாரியார் இவர்களை Panchacharya who wears a silk garment (in honour of) the feet of the Lord of the temple"என்று கூறுவர். இவை கோயில் அருச்சகரைக் குறிக்கும் - இவர்கள் கோயில் காரியம் செய்கின்றவர்கள். அருச்சகர் திருமுகப்படியே (ஓலைப்படியே) விக்கிர சோழனின் தஞ்சாவூர் கல்வெட்டு வெட்டப்பட்டது.

இச்செப்பேடுகள் பல்லவர்களிடமிருந்து தஞ்சாவூரை சோழர்கள் கைப்பற்றியதாக ஆதாரங்கள் கூறுகின்றன என்று ஆய்வாளர்கள் தெரிவிக்கிறார்கள். இவைகள் இதுவரையில்லாத அளவுக்கு மிகப் பெரிய அளவிலான செப்பேட்டுத் தொகுதிகள் என்று தொல்லியல் துறையின் முன்னாள் இயக்குனருமான திரு.ரா.நாகசாமி தமிழோசையிடம் தெரிவித்தார். இவை தமிழிலும் சமஸ்கிருதத்திலும் எழுதப்பட்டுள்ளது. 1053ம் ஆண்டில் எழுதப்பட்டிருக்கலாம். இவை 2ம் ராசேந்திர சோழன் இச்செப்பேடுகளை வெளியிட்டுள்ளார். இந்த செப்பேடுகள் செய்யுள் வடிவில் எழுதப்பட்டுள்ளதாகவும் போரை நேரில் பார்த்த ஒருவர் அதை வருணிப்பது போல தகவல்கள் உள்ளதாகவும் இயக்குநர் அவர்கள் கூறியுள்ளார்கள். எழுத்துக்கள் அழிந்து போகாதவாறு அதன் அமைப்பு இருக்கும் சிலவற்றில் இருபுறமும், சிலவற்றில் ஒருபுறமும் பக்க எண் குறிக்கப்பட்டு செய்யுள் வடிவிலோ அல்லது உரைநடையாகவோ எழுதப்பட்டிருக்கும். இவனது திருமன்னி வளர எனத் தொடங்கும் மெய்கீர்த்திப் பகுதியில் 12 ஆட்சியாண்டில் "வெறிமலர்த் தீர்த்தத்து எறிபுல் கங்கையின் நீரை கொண்டு வந்த செய்தி கூறப்பட்டுள்ளது.

**முடிவுரை**

தமிழகத்தின் கிழக்குக் கடற்கரையில் பலதுறைமுகங்கள் மிகச் சிறப்பாக இயங்கின என்று சங்கப் பாடல்கள் குறிப்பிடுகின்றன. இன்று அறிவியல் அடிப்படையில் நிகழ்த்தப்பட்ட அகழாய்வுகள் பல உறுதி செய்து வருகின்றன. தமிழர் கடல் கடந்து வாணிகம் மேற்கொண்டனர். யவனர்கள் தமிழகத்துடன் பெரிதும் வணிகத் தொடர்பு கொண்டிருந்தனர் தமிழர் திட்டமிட்ட வரையறுக்கப்பட்ட பண்பாடுடன் கூடிய வாழ்க்கையை வாழ்ந்தனர் என கல்வெட்டுகளும் செப்பேடுகளும் தமிழர் நாகரிகத்தின் தடயங்களாகத் திகழ்கின்றன.

"தமிழ் வளர்ச்சித்துறை கொடி அசைத்தது
தொல்லியல் துறை தேர்நகர்ந்தது"
நிலைக்கு வரு மென்பதும் உறுதி.

**புகைப்படச் சான்று**

.



1

1. **இலங்கையில் உள்ள நிலாவரை – கிணறு இதுவரை ஆழம் காண முடியாதது. அடியில் சுரங்கப்பாதையும் இருக்கிறது**

தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்

International Journal of Tamil Language and Literary Studies 
*A Bi-Yearly Peer-Reviewed International Journal*

E-ISSN: 2581-7140

Special Issue: Vol. 2, April-2019 Available at: www.ijtlls.com



2

**2. இராவணன் தன் தாயின் ஈமச் சடங்கிற்காக தோண்டிய ஐந்து கிணறுகள் குளிப்பதற்கேற்ற வெப்ப நிலையில் எப்பொழுதும் உள்ளது.**



3



4

**3. இலங்கையில் நுவோர்இலியா என்ற இடத்தில் சிறை இருந்த சீதையிடம் அனுமன் கணையாழி வழங்கிய பாறையில் அனுமனின் கால்தடம். (பால சரசுவதி அவரது கணவருடன்)**

**4. செப்புத் திருமேனி**

**உரை நெறிக்கும் மொழி நெறிக்கும் உதவிய நூற்கள்**

1) மதுரைக் காஞ்சி - புலவர் மருதனில நாகனார்
2) பட்டினப்பாலை - உருத்திரங்கண்ணனார்
3) உலகத்தமிழர் பண்பாட்டுக் களஞ்சியம் க.கலியபெருமாள்
4) The Indian Heritage Humayun Kabir
5) இரண்டாம் உலகத்தமிழ் எழுத்தாளர் மாநாட்டு மலர் - யாதும் ஊரே யாவரும் கேளிர்
6) The Thiruvalankadu plates of Rajendrachola 1. South India Inscription Vol.II மற் றும் பல நூல்கள் ∴ குறிப்பேடுகள் மேற்கோள்கள்.
7) Excavation is Destruetion Digitization Advance in Archalogical practice.
8) Some techniques for Mechanical Excavation in Saivge Archaeological Stravigraphy.
9) தமிழக தொல்லியல் ஆய்வுகள் கீழடி. இளங்கோ அலைகள் வெளியீட்டகம்.

E-ISSN: 2581-7140
Special Issue: Vol. 2, April-2019 Available at: www.ijtlls.com

# தாளி(ழி)யூர்-பெருங்கற்காலத் தொல்லெச்சங்கள் களஆய்வும் மேற்பரப்பாய்வும்
# Site Study of Archaeological Remnants of the Stone Age of Thaliyur

**முனைவர் க. பாலாஜி**, தமிழ்-உதவிப்பேராசிரியர்
பூ.சா.கோ.கலை அறிவியல் கல்லூரி, கோயம்புத்தூர்- 641 014.

## Abstract

*The paper tells about the remnants of the stone age evidences at Thaliyur. It is a field study conducted directly on the site by professors Noorullah and Balaji of reputed colleges in Tamil Nadu. The study is an eye opener of site study in the archaeological sites of Tamil Region. Hence, the article gives out the minute details of the remnants of Thaliyur.*

**Keywords:** Site Study, Archaeological Remnants, Stone Age, Thaliyur,

கோயம்புத்தூர் மாவட்டம் பேரூர் ஊராட்சி ஒன்றியத்திற்கு உட்பட்ட தாளி(ழி)யூர் கிராமத்தில் அமைந்துள்ள கோல்ராம்பட்டிக் கண்மாய்ப் பகுதியில் பெருங்கற்காலக் கல்திட்டைகள், முதுமக்கள் தாழிகள் இருப்பது களஆய்வில் கண்டறியப் பெற்றது. அரசுத்திட்டத்தின் கீழ் இக்கண்மாயினைத் தூர்வாரும் பணி சில மாதங்களுக்கு முன்பு நடைபெற்றது. அப்பொழுது கனரக வாகனங்களின் உதவியுடன் மண் அள்ளப்பெற்றபொழுது பெருங்கல்திட்டைகள் வெளிப்பட்டன. உடைந்த நிலையில் முதுமக்கள் தாழிகளும் பானை ஓடுகளும் இப்பகுதியில் காணப்பெறுகின்றன.

இவை பெருங்கற்காலத்தைச் சேர்ந்தவை என்பதனை மேற்பரப்பாய்வில் சேகரிக்கப்பெற்ற பளபளப்பான கருப்பு-சிவப்பு மண்பானை ஓடுகளும் கனமான வாய்ப்பகுதியினை உடைய முதுமக்கள் தாழிகளும் உறுதிப்படுத்துகின்றன. பளபளப்பு மிக்கச் சிவப்புப் பானை ஓடுகள் மீது வெண்ணிறக் கோடுகள் பூவேலைபாடு போல் வரையப் பெற்றுள்ளது. பெருங்கற்காலப்பண்பாடு நிலவியிருந்த இத்தொல்லியல் களத்தினையும் அங்குக் கிடைக்கப்பெற்ற தரவுகளையும் அறிமுகப்படுத்துவதாக இவ்வாய்வுரை அமைகின்றது.

**தாளி(ழி)யூர்: பெயர்க்காரணமும் பெருங்கற்கால அமைவிடமும்**

பெருங்கற்கால எச்சங்கள் கோல்ராம்பட்டிக் கண்மாயின் உட்புறம் முழுவதும் பரவிக்காணப்பெறுகின்றன. இவ்வமைவிடம் சரியாகப் பேரூரிலிருந்து வேடப்பட்டி செல்லும் வழியில் அமைந்துள்ள தாளி(ழி)யூர்ப் பிரிவில் அமைந்துள்ளது. இப்பகுதி இந்நாளில் நாகராஜபுரம் என வழங்கப்பெறுகின்றது. அருகில் ஏழுகன்னிமார் கோவில் ஒன்று அமைந்துள்ளது. தாளி(ழி)யூரில் காணப்படும் பெருங்கற்காலஎச்சங்களை முன்வைத்துஇப்பகுதியில் பெருங்கற்காலப்பண்பாடு நிலவியிருந்தது என அறிய முடிகின்றது.
தாளி(ழி)யூர் என்ற இவ்வூர்ப் பெயரில் அமைந்த தாழி என்ற ஒலி வடிவம் தற்பொழுது பேச்சுவழக்கில் மருவி தாளி என வழங்கப் பெற்றிருக்கலாம். இன்று வரை அவ்வூருக்கான எழுத்தாவணங்களில் 'தாளியூர்' என்றே குறிக்கப் பெற்று வருகின்றது. தாழி என்ற சொல் பெரிய மண் குதிர்களைக் குறிக்கும் சொல்லாகும். தமிழ்ச் செவ்வியல் பனுவல்களில் தாழி என்ற சொல் இறந்தவர்களை அடக்கம் செய்யும் முதுமக்கள் தாழிகளைக் குறித்தமைகின்றது. இம் முதுமக்கள் தாழிகள் பற்றிய பதிவுகள் பனுவல்களில் மட்டுமின்றிப் பழைய

E-ISSN: 2581-7140
Special Issue: Vol. 2, April-2019 Available at: www.ijtlls.com

உரையாசிரியர்களின் உரைக் குறிப்பிலும் காணப்பெறுகின்றன. தொல்காப்பியத்திற்கு உரையெழுதிய நச்சினார்க்கினியர்' தாழிகவிப்பத்தவம் செய்வார் மண்ணகவழி நோற்றன மால்வரையே' (கா.ராஜன்:2010) என ஆசிவகர்களின் ஈமஅடக்க முறையினைக் குறிப்பிடுகின்றார்.

'சுடுவோர்இடுவோர்தொடுகுழிப்படுப்போர்
தாழ்வயின்அடைப்போர்தாழியில்கவிப்போர்' (மணி.6 : 66-67)

மணிமேகலையில் பழந்தமிழர்களின் மரபு வழிப்பட்ட ஈமச்சடங்கு முறைமைகள் பல நிலைகளில் இருந்தமை சுட்டப் பெறுகின்றது. பிணத்தைத் தாழியில் வைத்துக் கவிழ்த்த நிலையினை நற்றிணைப் பதிவின் வழி அறிய முடிகின்றது. புதுக்கோட்டைக்கு அருகில் அமைந்துள்ள திருக்கட்டளை சிவன்கோவிலின் தென்சுவரில் அமைந்துள்ள சோழர் கல் வெட்டில் எல்லைகளை வரையறுக்கும் பொழுது முதுமக்கள் தாழிகள் விரவிக்கிடக்கும் காட்டைக் கலசக்காடு என்று குறிப்பிடுவதாக பேரா.கா.ராஜன் (தொல்லியல் நோக்கில் சங்ககாலம் : 2010)தமது நூலில் குறிக்கின்றார். பாண்டிய நாட்டுப் பகுதியில் கிடைக்கப் பெறும் பெருங்கற்கால நினைவுச் சின்னங்களில் முதுமக்கள் தாழிகளே பெரும்பான்மையாகக் கிடைத்துவருகின்றன.

'மாஇருந்தாழிகவிப்ப'(நற்.271)
'தாழியபெருங்காடுஎய்தியஞான்றே' (புறம்.364)
'அன்னோற்கவிக்கும்கண்ணகன்தாழி' (புறம்.256)
'வியன்மலர்அகன்பொழில்ஈமத்தாழி' (புறம்.256)
'கவிச்செந்தாழிக்குவிப்புறத்துஇருந்த' (புறம்.238)
'தாழிமுதல்கவித்தகோழிலைப்பருத்தி' (அகம்.129)
'தாழிக்குவளைவாடுமலர்சூட்டி' (அகம்.161)
'ஓங்குநிலைத்தாழிமல்கச்சார்த்தி' (அகம்.275)
'தாழியும்மலர்பலஅணியாகேழ்கொள' (அகம்.369)
'மன்னர்மறைத்ததாழி' (பதிற்.44)
'இடுகஒன்றோசுடுகஒன்றோபடுவழிப்படுக' (புறம்.239:20-21).

தமிழ்ச் செவ்வியல் நூல்களில் மேற்கண்ட எட்டு இடங்களில் முதுமக்கள் தாழிகள் பற்றிய பதிவுகள் காணப்பெறுகின்றன. தாழி என்ற சொல்லில் அமைந்த ஊர்ப்பெயர்கள் சில அறியப்படுகின்றன. சிவகங்கை மாவட்டத்தில் மாந்தாழி (க.பாலாஜி, பெருங்கற்காலப் பண்பாடு: 2013) என்ற ஊர் அமைந்துள்ளது குறிப்பிடத்தக்கது.

**தாளி(ழி)யூர் : பெருங்கற்காலத்தரவுகள்**

இத்தொல்லியல் களத்தில் பெருங்கல் திட்டைகள், முதுமக்கள் தாழிகள், கருப்பு-சிவப்பு வண்ணப் பளபளப்பான பானையோடுகள், முதுமக்கள் தாழியின் அடிப்புறத்தாங்கி ஆகியன மேற்பரப்பாய்வில் கண்டறியப்பெற்றன. இப்பகுதியான தூர்வாரும் பொருட்டு மண் அள்ளப் பெற்றகாரணத்தினாலும் நீர்நிலையாக அமைந்த காரணத்தினாலும் இவ்வீமச்சின்னங்கள் உடைந்த நிலையில் சிதிலமடைந்து காணப் பெறுகின்றன. இதன் காரணமாக மேற்பரப்பாய்வு செய்து சேகரிக்கப் பெற்ற பொருட்களில் எழுத்துகளோ குறியீடுகளோ இருப்பதை அறிய முடியவில்லை.

E-ISSN: 2581-7140
Special Issue: Vol. 2, April-2019 Available at: www.ijtlls.com

**1.பெருங்கல்திட்டைகள்**

இக்கல் திட்டைக்குக் கீழ் முதுமக்கள் தாழி ஒன்று சிதைந்த நிலையில காணப் பெறுகின்றது. மேற்புறம் அமைந்த கல்லைத் தொப்பிக்கல்என்பர். இதன் பக்கவாட்டில் நான்கு புறமும் பட்டியக் கற்கள் சிறிய அறை போன்று செங்குத்தாக நிறுத்தப் பெற்றிருக்கும். இந்நிலையில் இருந்தே பிற்காலத்தில் கல்லறை எழுப்பும் வழக்கம் தோன்றியிருக்க முடியும். இங்கு அமைந்திருக்கும் கல்திட்டையில் இருபுறம்மட்டும் முழுமையாகக் காணப்பெறுகின்றன. ஏனைய பகுதிகள் சிதிலமடைந்து விட்டன.

**2.முதுமக்கள்தாழிகள்**

இவையனைத்தும் இத்தொல்லியல் களத்தின் மேற்பரப்பாய்வில் சேகரிக்கப் பெற்ற பொருட்களாகும். முதுமக்கள் தாழியின் உடைந்த பாகங்கள் இப்பகுதியில் மிகுதியாகக் காணப்பெறுகின்றன.

தமிழகத்தில் பெருங்கற்காலத் தொல்லெச்சங்கள் காணப் பெறும் பெரும்பான்மையான இடங்களில் பூவேலைப்பாடு அமைந்த இவ்வோடு காணப் பெறுவது குறிப்பிடத்தக்கது. பெருங்கற்காலத்தில் வாழ்ந்திருந்த பானை வனையும் குயவர்கள் இதை எவ்வாறு செய்தனர் என்பதை அறிய இயலவில்லை. பானை வனையும் குயவர்களைப் (கோவன்) பற்றிய குறிப்புகள் புறநானூற்றில் இடம்பெறுகின்றன.

'கலம்செய்கோவேகலம்செய்கோவே
இருள்திணிந்தன்னகுரூஉத்திறள்பரூஉப்புகை'(புறம்.228)
'கலம்செய்கோவேகலம்செய்கோவே
அச்சுடைசாகாட்டுஆரம்பொருந்திய'( புறம்.256)

பானைவனையும் குயவர்களுடனான உரையாடல்கள் சில செவ்வியல் பனுவல்களில் பதிவாகியுள்ளன. பழந்தமிழ்ப் புலவர் ஒருவரும் கணவனை இழந்த பெண்ணொருத்தியும் குயவன் ஒருவனிடம் சில கோரிக்கைகளை முன்வைப்பதாக மேற்குறித்த சான்றுகள் அமைகின்றன. *புறநானூறு* 228-ஆம் பாடலைப் பாடிய ஐயூர் முடவனார் குயவனைப் பார்த்து எனது மன்னனின் புகழுக்கு ஏற்ற அளவில் மிகப் பெரிய தாழியினை உன்னால் செய்ய முடியுமா? எனக் கேட்பதாக அமைகின்றது. *புறநானூறு* 256-ஆம் பாடலில் பெண் ஒருத்தி போரில் இறந்து போன தனது கணவனோடு சேர்த்துத் தன்னையும் அடக்கம் செய்வதற் கேற்ற பெரிய தாழியினைச் செய்யப் பணிக்கின்றாள். இதன் மூலம் பெருங்கற்காலத்தில் பானை செய்யும் குயவர்கள் எத்தகையத் தாழியினையும் புழங்கு பொருட்களையும் செய்யும் தொழில்நுட்பம் அறிந்தவர்களாக இருந்திருக்கின்றனர் என அறிய முடிகின்றது. தாழியூரில் கிடைக்கும் முதுமக்கள் தாழிகள், பழம் பானையோடுகள் உள்ளிட்ட ஈமப் பொருட்கள் பல தரப்பட்ட நிலைகளில் கிடைத்திருப்பது இவ்விலக்கியச் சான்றுகளை மெய்ப்பிப்பதாக உள்ளது. பெருங்கற்காலத்தைச் சார்ந்த தாழிகள் இப்பகுதியில் காணப பெறுவதன் காரணமாகப் பிற்காலத்தில் இவ்வூர் தாழியூர் என அழைக்கப் பெற்றிருக்கலாம். தாழிகளைச் செய்யும் குயவர்கள் வாழ்ந்திருந்த பகுதியாகவும் அமைந்திருக்க இடமுண்டு.

**நிறைவுரை**

1. தாளி(ழி)யூர் என்ற இவ்வூரில் பெருங்கற்காலத் தொல்லெச்சங்கள் கள ஆய்வின் வழியாகக் கண்டறியப் பெற்றுள்ளதன் மூலமாக இப்பகுதியில் பெருங்கற்காலப்பண்பாடு நிலவியிருந்தமையினை அறிய முடிகின்றது.
2. பெருங்கற்கால முதுமக்கள் தாழிகள் இப்பகுதியில காணப் பெறுவதால் இவ்வூருக்குத்

E-ISSN: 2581-7140
Special Issue: Vol. 2, April-2019 Available at: www.ijtlls.com

தாழியூர் என்ற பெயர் இடப் பெற்றிருக்கலாம். அப்பெயர் பேச்சுவழக்கில் தாளி என மருவி வழங்கப் பெற்றிருக்கலாம்.

3. பெருங்கற்காலத்தைச் சார்ந்தகல் திட்டைகள், முதுமக்கள் தாழிகள், பளபளப்பான கருப்பு-சிவப்பு மண்பாண்டங்கள், முதுமக்கள் தாழியின் வாய்ப்பகுதி, தாங்கி ஆகியபொருட்கள் மேற்பரப்பாய்வில் சேகரிக்கப்பெற்றன.
4. பெருங்கற்காலத்திலிருந்து மண்பாண்டங்கள் செய்யும் குயவர்கள் சிறந்த தொழில் நுட்பத்தை அறிந்தவர்களாக இருந்திருக்கின்றனர். பழந்தமிழ் இலக்கியக் குறிப்புகளும் இக்கள ஆய்வுத்தரவுகளும் அவற்றை மெய்ப்பிக்கின்றன.
5. சிதிலமடைந்து கிடக்கும் இத்தரவுகளைத் தமிழகத் தொல்லியல் துறை கவனத்தில் கொண்டு அகழாய்வுகளை முறைப்படி நிகழ்த்தினால் புதிய வரலாற்றுச் செய்திகளை வெளிக்கொணர முடியும்.

**குறிப்பு:**

**கள ஆய்வில் கலந்து கொண்டவர்கள்:**

1. அ.நூருல்லா, இளங்கலை தகவல் ஒழுங்கு முறை மேலாண்மை, கிருஷ்ணா கலை அறிவியல் கல்லூரி, கோவை.)
2. முனைவர் க. பாலாஜி, தமிழ்-உதவிப்பேராசிரியர், பூ.சா.கோ. கலை அறிவியல் கல்லூரி, கோவை.

**கள ஆய்வு செய்த நாட்கள்:**

23.02.2019 24.02.2019 23.03.2019 24.03.2019 31.03.2019 06.04.19 7.04.19.

**துணைநின்றவை**

1. இளங்கோ.சி.,"பெருங்கற்காலத் தமிழ்ச் சமூகம் தொல்லியல் தரவுகளை முன்வைத்து", புதியபனுவல், தொகுதி 3, சென்னை, 2011.
2. குருமூர்த்தி.செ., "பழம்பானைக் குறியீடுகளும் தமிழர் பண்பாடும், உலகத் தமிழ்ச் செம்மொழி மாநாடு", ஆய்வுமலர், கோவை,2010.
3. சதாசிவப்பண்டாரத்தார், பாண்டியர் வரலாறு, செண்பகா பதிப்பகம், சென்னை, 2009.
4. சீனிவாசன்.இரா., "சிந்து வெளிக் குறியீடுகளை ஒத்த குறியீடுகள் வேலூர் மாவட்டத்தில் கண்டுபிடிப்பு", புதியபனுவல், தொகுதி 3, இதழ் 4, 2011.
5. சேதுப்பிள்ளை.ரா.பி., தமிழகம் ஊரும் பேரும், தமிழ் நிலையம், சென்னை, 2009.
6. தாமோதரன்.கு., தொல்லியல் நோக்கில் தமிழகம், தொல்பொருள் ஆய்வுத்துறை, தமிழ்நாடு அரசு,1999.
7. திருநாவுக்கரசுக.த., சிந்துவெளித் தமிழ் வடிவங்கள், மணியகம், சென்னை, 1982.
8. நடனகாசினாதன், "தமிழக நில அகழாய்வுகள்", உலகத் தமிழ்ச் செம்மொழி மாநாடு, ஆய்வுமலர், கோவை, 2010.
9. பவுந்துரை. இராசு, பண்டைய தமிழக வரைவுகளும் குறியீடுகளும், உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், தரமணி, சென்னை,2009.
10. பாலாஜி. க., பெருங்கற்காலப் பண்பாடு, காவ்யா பதிப்பகம், சென்னை, 2013.

..............., பெருங்கற்காலத் தமிழ்ச் சமூகம்: கீழிருந்து மேலெழும் வரலாறு, இனம் பதிப்பகம், கோயம்புத்தூர், 2019.

**E-ISSN: 2581-7140**

**Special Issue: Vol. 2, April-2019** **Available at: www.ijtlls.com**

11. பாலாஜி. க.,“பெருங்கற்காலத் தமிழ்ச் சமூகமும் தமிழி எழுத்துப் பொறிப்புகளும்”, இனம் தமிழ் இணைய ஆய்விதழ், மலர்1, இதழ் 2, கோயம்புத்தூர், 2015.
12. ராஜ்கௌதமன், ஆகோள் பூசலும் பெருங்கற்கால நாகரிகமும், தமிழினி பதிப்பகம், சென்னை, 2009.
13. Rajank., Early Writing System (A Journey from Graffitti to Brahmi), Pandyanadu Centre for Historical Research, Madurai, 2015.

E-ISSN: 2581-7140
Special Issue: Vol. 2, April-2019 Available at: www.ijtlls.com

# ஆற்றங்கரை நாகரீக வரலாற்றில் பொன்னேரி வட்டம்
# Ponneri Taluk in the History of River Civilization

**மு.பிரபு,** முனைவர் பட்ட ஆய்வாளர்,
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை – 113.

## Abstract

*The paper tells about the* Ponneri Taluk in the History of River Civilization *The study is an eye opener of site study in the archaeological sites. Hence, the article gives out the minute details of the remnants of Ponneri.*

**Keywords:** Ponneri Taluk, History, River Civilization

**முன்னுரை**

ஆற்றங்கரை நாகரீகம் தோன்றியதை வரலாற்று ஆய்வாலர்கள் ஆராய முற்பட்ட பின்புதான் மானுட வரலாறுகள் மிக வேகமாக ஆராயப்பட்டு பதிவுசெய்து வருவதை வரலாற்று வரைவாளர்களான கே.கே பிள்ளை க.வெங்கடசாமி ஆகியோர்கள் சுட்டிக்காட்டுகின்றனர். காலத்தின் தொன்மையால் மானுட சமூகத்தின் பிறப்பிடமாக நிலை கொண்டுள்ள ஆரணியறும் கொற்றலையாறும் தமது பயணத்தில் மனிதகுல நாகரீகத்தை தோற்றுவித்து வளர்த்தெடுத்துள்ளது என்பதை பொன்னேரி வட்டாரத்தில் உள்ள தொல்லியல் சான்றுகளை ஆதாரமாகக் கொண்டு ஆராய்வதாக இக்கட்டுரை அமைகிறது. ஆய்வுக்களமாக விளங்கும் தொண்டை நாடட்டின் திருவள்ளூர் மாவட்டமானது எட்டு வட்டங்களைக் கொண்டது. இம்மாவட்டத்தின் மொத்தப் பரப்பளவு 3424 சதுர கிலோ மீட்டர்களாகும். இதில் பொன்னேரி வட்டத்தின் அமைவிடம் 13.32° 80.2° ஆகும். கடல் மட்டத்தில் இருந்து இவ்வூர் சராசரியாக 10 மீட்டர் (32 அடி) உயரத்தில் இருக்கின்றது. மீஞ்சூர் சோழவரம் ஆகிய ஊராட்சி ஒன்றியங்கள் உள்ளன.

**தொண்டை நாடும் சங்க நூல்களும்**

வடபெண்ணை முதல் தென்பெண்ணை வரை இருந்த நிலப்பரப்பே அக்காலத் தொண்டைமண்டலம் எனப்பட்டது. அ∴து அருவாநாடு, அருவா வடதலைநாடு என இரண்டு பிரிவுகளாக இருந்தது. வடக்கே இருந்த அருவா வடதலை நாட்டில் திருப்பதியைத்தான் “கரிகாற்சோழன் காடு கெடுத்து நாடாக்கினான் விளைநிலங்களாக ஆக்கினான். ஏரி குளங்களை வெட்டுவித்தான் தொண்டை மண்டலத்தை நாடாக்கினான் நாகரிகத்தைத் தோற்றுவித்தான்“ என்று பட்டினப்பாலை முதலிய தமிழ் நூல்கள் கூறுகின்றன.“திரையன்“ அருவாவடதலை நாட்டை ஆண்டபோது “இளந்திரையன்“ அருவா நாட்டை ஆண்டனன் என்பதும் அறியக்கிடக்கிறது. தொண்டைமான் இளந்திரையன் என்பவன் காஞ்சியை ஆண்ட தமிழ் அரசனாக இருப்பது பெரும்பாணாற்றுப்படையில் சிறப்பிக்கப்படுகிறான். தொண்டைமான் இளந்திரையன் காலத்தில் காளத்தி முதலிய மலைநாடுகளைச் சேர்ந்த காடுகளில் களவர் என்னும் வகுப்பினர் வாழ்ந்திருந்தனர். அவர்கட்குத் தலைவனாக இருந்தவன் புல்லி என்பவன். இவன் திரையனுக்கு அடங்கி இருந்தானா அல்லது மாறுபட்டவனா என்பதை

E-ISSN: 2581-7140
Special Issue: Vol. 2, April-2019 Available at: www.ijtlls.com

அறியக்கூடவில்லை. இந்த அளவே அகநானூறு முதலிய சங்க நூல்களால் நாம் அறியக்கிடக்கும் உண்மை ஆகும். மா.இராசமாணிக்கனார் பல்லவர் வரலாறு ப-63-63

**வட்டார வரலாறு**

இந்தபகுதி 7 ஆம் நூற்றாண்டில் பல்லவர்களின் ஆளுமையில் இருந்தது அதன்பின் ஆற்காடு நவாப்பின் ஆளுமைக்கு வந்து 19 ஆம்நூற்றாண்டின் ஆரம்ப காலத்தில் பிரிட்டிஷாரின் ஆட்சியின் கீழ் வந்தது. 1687 ஆம் ஆண்டில் முகலாயர்களால் கோல்கொண்ட ஆட்சியாளர்கள் தோற்கடிக்கப்பட்டபின் இந்த பிராந்தியம் டெல்லியின் முகலாய பேரரசர்களின் கீழ் வந்தது. இந்த பிராந்தியத்தில் உள்ள நகரங்கள் மற்றும் கிராமங்களில் கர்நாடகப் போர்கள் நடந்த காட்சிகளைக் காணமுடிகிறது. இந்த பிராந்தியத்தில் ஆங்கிலேயர் மற்றும் பிரஞ்சுகாரர்களுக்கும் இடையே அடிக்கடிபோர் நடந்ததாகக் கூறப்படுகிறது. 1609 ஆம் ஆண்டில் உருவாக்கப்பட்ட பழவேற்காடு நகரம் டச்சுக்காரர்களின் ஆட்சியின் கீழ் இருந்தது. அதன்பின் 1825 ஆம் ஆண்டில் பிரிட்ஷார் இந்தநகரத்தை தங்கள் வசமாக்கிக் கொண்டனர்.

**கொற்றலை ஆறு**

கொசஸ்தலை ஆறு பொன்னேரிப் பகுதிகளில் ஓடும் ஆறாகும். ஆற்காடு மாவட்டப் பகுதிகளே இதன் நீர்பிடிப்புப் பகுதிகளாகும். இதன் மொத்த நீளம் 136 கீ.மீ ஆகும். சென்னை நகருக்குள் 16 கி.மீ ஓடுகிற இந்த ஆறு ஆந்திரத்தின் கிருஷ்ணாபுரம் தொடங்கி வேலூர் மாவட்டம் காவேரிப்பாக்கம் வழியாக பூண்டி நீர்த் தேக்கத்தை அடைகிறது. அங்கிருந்து திருவள்ளுர் சென்னை வழியாக ஓடி எண்ணூரில் வங்கக்கடலில் கலக்கிறது. பூண்டி நீர்த்தேக்கத்திற்கு மேலே தாமரைப்பாக்கம் அணைக்கட்டு மீஞ்சூர் அருகே வள்ளுர் அணைக்கட்டு ஆகியவை மூலம் பாசனத்திற்கு பயன்படுகிறது. கொற்றலையாற்றுப் படுகைகளில் காரனோடை அருகில் உள்ள எருமை வெட்டிப் பாளையம் ஆகிய இடங்களில் பழைய கற்காலத்தில் (5000000 – 250000 ஆண்டுகளுக்கு முன்) வாழ்ந்த மக்கள் பயன்படுத்திய தொழில் நுட்பத்தில் மேம்பட்ட கைக்கோடாரிகளும் முனைக்கருவிகள் சுரண்டிகள் கத்திகள் போன்ற கருவிகள் கிடைக்கப் பெற்றுள்ளன. இவை பயன்படுத்திய காலம் Hand Hxe culture என்றும் இவை பயன்படுத்திய மக்களை படிகக்கல் மனிதர்கள் என்றும் அழைக்கப்படுகின்றனர்.

மனித இனங்கள் மூன்று தான் 1) நீக்ராய்டுகள் (Negroid) 2) மங்கோலாய்டுகள் (Mongoloid) 3) காகேசியன்கள் (Caucasian). ஆதாவது முதல் மனித இனமான நீக்ராய்டுகள் அதிலிருந்து இடம்பெயர்ந்த சீன மங்கோலிய முகவமைப்பைக் கொண்ட மங்கோலாய்டு அவர்களிலிருந்து பிரிந்த காகேசியன் அல்லது வெள்ளை இனத்தவர். இந்த மூன்றில் மட்டும் தான் உலகில் உள்ள அனைத்து இனங்களும் இதில் அடக்கம். இதில் முதல் மனிதன் அல்லது நீக்ராய்டுகள் என்பவர்களே நாகர்கள் அல்லது நகுஷா அல்ல நெகோஸ்டா எனப்படுகின்றனர். இந்தியாவின் அனைத்து குடிகளும் இவர்கள் தான்.நாகர் என்பவர் பற்றி மஹாபாரத காலம் முதல் கேட்டு வருகிறோம். நாகர்களில் சிலர் மஹாபாரத சண்டைக்குப் பின்னர் தென் அமெரிக்காவில் குடியேறி காண்டவ வனத் தலைவன் மயதானவன் என்பவனின் தலைமையில் புதிய மாயா நாகரீகம் உருவாக்கியதாக கட்டுரை மன்னன் லண்டன் சுவாமிநாதன் ஆராய்ச்சிக் கட்டுரையில் (கட்டுரை எண்:1293 தேதி: 17 செப்டம்பர் 2014) குறிப்பிட்டுள்ளார். நாகர்கள் தங்கள் உடம்பில் பச்சைக் குத்திக் கொண்டதாகத் தெரிகிறது. சங்க இலக்கியத்தில் இவர்கள் ஓவியர்கள் அருவாளர்கள் என்றும் வடமொழியில் இவர்களுடைய பெயர்கள் சித்திர என்ற சொல்லுடனும் உள்ளது. இதில் அருவாளர்களே

E-ISSN: 2581-7140
Special Issue: Vol. 2, April-2019 Available at: www.ijtlls.com

தமிழைத் தாய்மொழியாகக் கொண்ட தொண்டை மண்டலதின் மக்கள் என சோமலெ (செங்கற்பட்டு மாவட்டம்ப-19 ) குறிப்பிடுகிறார்.

இந்த கொற்றலையற்றுப் பகுதிகளான பழைய எருமைவெட்டிப்பாளையம்"புதிய எருமை வெட்டிப் பாளையம்" காரனோடை" ஞாயிறு " சீமாவரம்" மீஞ்சூர்" பழைய நாப்பாளையம்" புதிய நாப்பாளையம்" என இந்த ஆறு கடலில் கலக்கும் எண்ணூர் வரை வழிநெடுக்க நாகத்தின் சிலைகளும் நாகத்தைத் தாங்கிய தெய்வச் சிலைளும் காணப்படுவதும் இங்குள்ள மக்கள் நாக தெய்வ வழிபாடு செய்வதும் வீட்டில் சமைத்த கறி மீன் முட்டை என அனைத்து வகை உணவுகளையும் கோயில் கருவறையிலேயே வைத்து உண்பது இன்றளவும் (காரனோடை காட்டு கைகாத்த நாகாத்தம்மாள் கோயில்) காண முடிகிறது. இத்தகு சிலைகளையும் அவற்றை வழிபடும் மனித மரபுகளையும் ஆராயும் பொழுது ஆரிய பண்பாட்டிற்கு எதிர்மறையான பண்பாடுகள் இம்மக்களிடம் வெளிப்படுகிறது. எனவே இவர்கள் நாகரினத்தைச் சார்ந்தவர்கள் எனவும் அக்குலமரபுகளை வழிவழியாக பின்பற்றுகிறார்கள் என அறிய முடிகிறது.

**ஆரணி ஆறு**

ஆரணியாறு ஆந்திர மாநிலம் நகரி மலைப் பகுதிகளில் கார்காலத்தின் மழைநீர் பாய்ந்தோடி உருவாகிய ஆறாகும். ஊத்துக்கோட்டையின் வழியாக தமிழ்நாட்டினுள் நுழைந்து கொடுதலை ஆறு மற்றும் ஆரணி ஆறு என்று இரண்டாகப் பிரிகிறது. கொடுதலை ஆற்றுநீர் சோழவரம் ஏரியில் சேமிக்கப்பட்டு கோடைகாலத்தில் சென்னையின் குடிநீராக பயன்படுத்தப்பட்டு மீதமுள்ள தண்ணீர் காரனோடை பாலம், நாப்பாளையம் பாலம், எண்ணூர் கடற்கழி வழியாக சிறிதளவே வங்கக் கடலில் சென்று கலக்கிறது. மீதமுள்ள பெருவாரியான நீர் அத்திப்பட்டு, காளாஞ்சி, ஊரணம்பேடு,காட்டூர்,காட்டுப்பள்ளி வழியாக பழவேற்காட்டுக்கு மிக அருகில் சென்று வங்கக்கடலில் கலக்கிறது. ஆரணியாறு பெரியபாளையம், பொன்னேரி, பெரும்பேடு, பிரளையம்பாக்கம் வழியாகச் சென்று பழவேற்காட்டில் வங்கக் கடலில் கலக்கிறது.

**ஆரணி ஆற்றுப்படுகையில் முதுகுடி மக்கள்**

இவ்வாற்றின் கிழக்குக் கரையில் அமைந்தள்ள வடமதுரை என்ற ஊரில் 100 அடி உயர படிவுப் படுகையில் 1966-67 இல் அகழாய்வு செய்யப்பட்டது. இங்கு அபிவில்லியன் வகைக் கைக்கோடாரிளும் கிழிப்பான்களும் சில்லுக் கருவிகளும் அதிக அளவில் கிடைத்தன. மேலும் இவ்வாறு பாய்ந்தோடும் வழித்தடத்தின் போக்கில் உள்ள அல்லிக்குழி மலைத்தொடரில் பழைய கற்கால மனிதர்கள் வாழ்ந்த 16 குகைகள் காணப்படுகின்றன. இவற்றில் மிகப்பெரியது மனச்சம்மன் குகை. இதில் சுமார் 100 பேர் தங்கக்கூடிய அளவு உள்ளது. இப்போதும் இங்குள்ள கிராம மக்கள் பௌர்ணமி நாளில் வழிபாட்டிற்கு இங்கு வருகின்றனர்.

**ஆரணி ஆற்றோரம் அமைந்த திருக்கோயில்கள்**

தொலவேடு, வடமதுரை, பெரியபாளையம், கொசவன்பேட்டை, மூங்கில்பட்டு, அரியத்துறை, புதுவயல், பெருவயல், ஆரணி, கும்மமுனிமங்கலம், சின்னக்காவனம், தத்தமஞ்சி, பிரளயம்பாக்கம், பழவேற்காடு, காட்டுப்பள்ளி என ஆரணி ஆற்றின் வழிநெடுக்க ஆற்றங்கரையின் இருபுறங்களில் முறையே மாறிமாறி பழமைவாய்ந்த சிவ வழிபாட்டுத்தலங்கள் உள்ளன.

**சுருட்டப்பள்ளி சிவபெருமான்**

சென்னை - திருப்பதி நெடுஞ்சாலையில் ஊத்துக்கோட்டைக்கு அடுத்த ஒரு கிலோமீட்டர் தொலைவில் நாகலாபுரம் சாலையின் தமிழ்நாட்டு எல்லையில் சுருட்டப்பள்ளி

E-ISSN: 2581-7140
Special Issue: Vol. 2, April-2019 Available at: www.ijtlls.com

என்னும் கிராமத்தில் இக்கோயில் அமைந்துள்ளது. இது ஆந்திர மாநிலத்தில் இருந்தாலும் தமிழ் மக்கள் தலமாக உள்ளது. உலகிலேயே சிவபெருமான் உருவத்துடன் காட்சியளிப்பது இந்த ஒரே ஒரு ஸ்தலத்தில் மட்டும்தான். மற்ற இடங்களில் லிங்கவடிவம்தான். ஆகையால்தான் இது ஸ்ரீபள்ளிகொண்டேஸ்வரர் ஆலயம் என்று பெயர்பெற்றது. இத்திருக்கோயில் 1344 - ஆம் ஆண்டு விஜயநகர சாம்ராஜ்ஜியத்தை நிறுவிய ஹரிஹரபுக்கராயர் என்பவரால் கட்டப்பட்டதாகச் சொல்லப்படுகிறது.

**அரியத்துறை**

கும்மிடிப்பூண்டி தாலுகாவில் கவரைப்பேட்டை என்ற இடத்திற்கு மேற்கு பகுதியில் 3 கிலோமீட்டர் தொலைவில் அரியத்துறையில் வரமூர்த்தீஸ்வரர் கோயில் உள்ளது. அரிய என்பதற்கு 'அரிதான' என்பதும் துறை என்பதற்கு 'ஆற்றில் குளிக்கும் இடம்' என்பதும் பொருளாகும் கங்கைக்கு இணையான மகத்துவம் கொண்ட ஆரணி ஆற்றில் குளித்தால் போதும். உனக்கு காசிக்கு இணையான புண்ணியம் கிட்டும்' என்கின்ற நம்பிக்கை இன்றும் மக்கள் வழக்கில் உள்ளது. அதற்குக் காரணம் ஆரணியாற்றில் நீர் இல்லாத நிலையிலும் ஆற்றின் கரை மீதுள்ள இக்கோயிலில் உள்ள புனித நீரூற்று தொடர்ந்து நீரை சுரந்து கொண்டே இருப்பது அதிசயமான நிகழ்வு என்பது குறிப்பிடத்தக்கது. இந்தப் பகுதியை ஆட்சி செய்து வந்த சித்திரசேனன் என்ற மன்னன். கருவறையின் கிழக்கே கொடிமரம் பலிபீடம் அமைந்துள்ளது.

**ஆரணி**

சம்பங்கி பிட்சாண்டேஸ்வரர் கோயில் ஆரணியில் அமைந்துள்ளது. இக்கோயிலின் மண்டபதின் தூண்கள் திருக்கற்களைக் கொண்டு செதுக்கப்பட்டுள்ளன. அவை சென்னிறப் பாறைகள். அவை செதுக்கப்பட்ட நேர்த்தியானது காண்போரை பிரமிக்க வைக்கிறது.

**கும்மமுனி மங்கலம்**

அகத்தீஸ்வரர் கோயில் பொன்னேரி இக்கோயிலின் கருவரையின் பின்புறம் தமிழர்களின் விவசாயக் கருவியான பொன்ஏர் கலப்பை சிற்பமாகச் செதுக்கப்பட்டுள்ளது. அதன் அருகில் பன்றியின் சிலை வடிக்கப்பட்டு வழிபாடும் செய்யப்படுகிறது.இன்று பன்றியின்மீதான கருத்தாக்கம் இழிவுக்குறியதாக கற்பிக்கப்பட்டாலும் ஐங்குறுநூறு பொன்ற சங்க இலக்கியங்களிலும் சோழர்கள் காலத்திலும் உயர்வாகவே பேசப்பட்டுள்ளது கவனிக்கத்தக்கது. சோழர்களின் அரச முத்திரையிலும் ஏர்கலப்பையும் பன்றியும் இடம் பெற்றுள்ளதால் இக்கோயில் சோழர்காலக் கோயில் எனக் கருதப்படுகிறது. பங்குனி நன்னாளில் செந்தமிழன் இராவனனுக்கு இக்கோயிலில் விழா எடுக்கப்படுகிறது. சித்திரை விழாவில் சிவனும் பெருமாளும் சந்திக்கும் தமிழகத்தில் எங்கும் எடுத்திடாத விழாவாக இங்கு நடத்தப்படுகிறது. இந்நிகழ்வு இம்மக்களின் மதப் பற்று அற்ற இயல்பான குற்றமற்ற அறவழிப் பண்பாட்டை உணர்த்துகிறது.

**சின்னகாவனம்**

நூற்றெட்டீஸ்வரர் திருக்கோயில் நந்திவர்மன் ஆட்சிக்காலத்தில் புதுப்பிக்கப்பட்ட கோயில். அக்காலத்தில் இப்பகுதி முழுவதும் மிகவும் புனிதமான ஏறு அழிஞ்சல் மரங்கள் நிறைந்து காணப்பட்டது. இத்தலத்தில் 2500 ஆண்டு பழமையான மருத்துவ குணங்களைக் கொண்ட ஏறு அழிஞ்சல் மரம் உள்ளது. (சமஸ்கிருதத்தில் அங்கோல என்று அழைக்கப்படுகிறது). இந்த அபூர்வமான ஏறழிஞ்சல் மரத்திலிருந்து விழுந்த விதைகள் மீண்டும் மரத்தில் ஒட்டிக்கொள்ளும் தன்மையுடையது என நம்படுகிறது. அருகிலுள்ள ஆரணி ஆற்றின் மணலில் ஒவ்வொரு நாளுக்கும் ஒரு லிங்கம் என்ற கணக்கில் 108 நாட்களுக்கு 108

லிங்கங்களை செய்து வழிபாடு செய்யப்பட்டதாகவும் 108 லிங்கங்களும் ஒன்றாக இணைந்துள்ள உருவை வழிபடுவதாகவும் இங்குள்ள மக்களின் கருத்து நிலவுகிறது. சின்னக்காவனம் என்ற இச்சிற்றூரில் இராமலிங்க வள்ளலார் சிறுவயது குழந்தையாக இருந்தபோது அவருடைய தாயார் இந்த ஊரில் வாழ்ந்த இடத்தில் வடலூரில் உள்ளது போன்ற நினைவு மண்டபம் உள்ளது. இதன் சங்கம் நாள்தோறும் பல மனிதர்களின் பசித்தீயை அனைத்து அருந்தொண்டாற்றி வருகிறது என்பது இம்மண்ணில் பிறந்துள்ள மக்களின் அறப்பண்பை காட்டுகின்றது.

**திருப்பாலைவனம்**

திருப்பாலீஸ்வரன் கோயிலில் 79 கல்வெட்டுகள் காணக்கிடக்கின்றன. அவற்றில் சோழ மன்னர்களான முதல் குலோத்துங்கன், விக்கிரமச்சோழன், இரண்டாம் குலோத்தங்கன், இரண்டாம் இராஜராஜன், இரண்டாம் இராஜாதிராஜன், மூன்றாம் குலோத்துங்கன், மூன்றாம் இராஜராஜன், தெலுங்குச் சோழர்களான தம்முசித்தி திருக்காளத்தி தேவகண்ட கோபாலன், இராசராச கண்டகோபால தேவன், விஜயகண்ட கோபாலன், பாண்டிய மன்னனான முதல் சடையவர்மன் சுந்தரபாண்டியன், சம்புவராய மன்னனான மஹாமண்டலேஸ்வர பிரதாபருத்ர தேவர், விசயநகர காலத்தைச் சேர்ந்த புக்கர், குமார வீரசாயன உடையார் போன்ற மன்னர்கள் காலக் கல்வெட்டுகளும், நாயக்கர் காலத்தைச் சார்ந்ததாகக் காணப்படும் பெயர் குறிப்பிடாத சில கல்வெட்டுகளும் இக்கோயிலில் காணப்படுகின்றன. மேலும் இம் மன்னர்கள் காலத்தைச் சார்ந்த பல்வேறு மக்களின் பெயர்களும் இக்கல்வெட்டுகளில் இடம்பெற்றுள்ளன.

**காட்டுப்பள்ளி**

சிந்தாமணீஸ்வரர் திருக்கோயில் கல்வெட்டுகளில் கி.பி 1933-34 ஆம் ஆண்டு இவ்வாலையத்தில் தொல்லியல் ஆய்வு செய்தன் மூலம் நான்கு கல்வெட்டுகள் கண்டறியப்பட்டுள்ளன. இராஸ்டிரகூட கன்னார தேவன் (கி.பி.965), இரண்டாம் சுந்தர சோழன் (கி.பி.973) மற்றும் பத்தாம் நூற்றாண்டைச் சேர்ந்த இரண்டு கல்வெட்டுகளும் இத்தலத்தின் சிறப்புகளைக் கூறுகின்றன.பாண்டிய நாட்டு கோட்டாறு பகுதியைச் (நாகர்கோயில்) சேர்ந்த பட்டாலகன் என்பவர் திருப்பகவன்துறை இறைவனை மீண்டும் புதுப்பித்துள்ளான். இப்பகவன் துறையானது "மேற்கடல் கோகர்ண சமானமாகிய கீழ்க்கடல் தீர்த்தமான திருப்பகவன்துறை" எனக் கல்வெட்டில் குறிப்பிடப்பட்டுள்ளது. இச்செய்தின் மூலம் மேல்கடல், கீழ்கடல் என்று குறிப்பிடும் அளவிற்கு புவியியல் அறிவில்கி.பி பத்தாம்நூற்றாண்டு மக்கள் புலமை பெற்றிருந்ததை அறிய முடிகிறது. இந்தப் பட்டாலகன் ஆரணி ஆற்றங்கரையில் வழிபாட்டிற்கென நிலங்கள் வாங்கித் தந்துள்ளார். இதேபோல இளநிரவி (வணிகர் குழு) சதுர்வேதி மங்கலத்துச் சபையாரிடமும் நிலங்கள் வாங்கப்பட்டுள்ளன.சிந்தாமணீஸ்வரர் திருக்கோயிலுக்கு சித்திரைப் பௌர்ணமி முன்னாளில் வந்து சேரும் தமிழகம், புதுச்சேரி, ஆந்திரம் மற்றும் கர்நாடகப் பகுதிகளில் உள்ள பழங்குடிகள் பௌர்ணமி முடிந்துமறுநாள்(3நாட்கள்)வரை இக்கடற்கரையிலும் ஆற்றங்கரையிலும் உள்ள மரங்களை அரணாகக்கொண்டு தங்கியிருக்கின்றனர். இந்நாட்களில் கடலிலும் ஆற்றிலும் இங்குள்ள காட்டிலும் வேட்டையாடி கிடைக்கும் உணவை மட்டுமே கொண்டு இயற்கையான வாழ்க்கை மேற்கொள்கின்றனர். அவர்கள் கொயிலின் உருவ வழிபாட்டிற்கு முக்கியத்துவம் தருவதில்லை. மாறாக அவர்கள் திரும்பச் செல்லவிருக்கும் நாளன்று அதிகாலையில் பச்சரிசி, வெல்லம், பாசிபயிர், தாழம்பு, தேங்காய் ஆகியவை கலந்த கலயை வாழையிலை அல்லது இக்காட்டில் கிடைக்கும் இலைகளில் இட்டு அதை கடல் அலை வந்து இழுத்துச்செல்லும் தூரத்தை விட சற்றே தள்ளி கடலன்னைக்கு படைக்கின்றனர். இப்படி படைக்கப்பட்டதை

E-ISSN: 2581-7140
Special Issue: Vol. 2, April-2019 Available at: www.ijtlls.com

கடலலை வந்து இழுத்துச் செல்லும்வரை எவ்வளவு நேரமானாலும் காத்திருக்கின்றனர். அலைவந்து இழுத்துச் சென்ற பின்பே அவர்களின் இருப்பிடங்களுக்குத் திரும்பச் செல்கிறது என தொன்றுதொட்டு வழக்கமாகக் கொண்டுள்ளனர். இவர்கள் படைக்கும் உணவுப் பொருட்களை கடலில் உள்ள மீன் இனங்கள் உண்டு மீன் வளம் பெருகும் அதனால் அவர்களின் வாழ்வாதாரம் உயரும் என்ற உயிரின சுழற்சி,உற்பத்தி மறு உற்பத்தி என்ற அறிவியல் சார்ந்த நுட்பங்களை தமது வழிபாட்டு முறையியே வைத்திருப்பது ஆச்சரியப்படுத்துகிறது.இச் செயல்படுகள் இம்மக்களின் தொன்மையான நாகரீகத்தை அறியமுடிகிறது. பத்தாம் நூற்றாண்டிலேயே சோழர் ஆட்சிக் காலத்தில் வாணிபம் நடைபெற்றது. விஜயநகர மன்னர் காலத்தில் அனந்தராயன் பட்டிணமான பழவேற்காடு என பழவேற்காடு அழைக்கப்படுகிறது. இப் பழவேற்காட்டில் சீனக் கப்பல்கள் மூலம் துணி மற்றும் சரக்குகள் ஏற்றுமதியாயின. டச்சுக்காரர்களும் வணிகம் செய்துள்ளனர். இதேபோல், பழவேற்காடு ஆதி நாராயணசாமி ஆலயத்தில் காணப்படும் கி.பி.16 ஆம் நூற்றாண்டு தெலுங்குக் கல்வெட்டில்பிரளையகாவேரி என்றும் மல்லப்பட்டிணம் என்றும் பழவேற்காட்டை குறிப்பிடப்பட்டுள்ளது.

முடிவுரை

கொற்றலையாறும் ஆரணியாறும் புவியின் திசையில் பாய்ந்தோடுகிறது (மேற்கிலிருந்து கிழக்காக) இவ்வாறு இயற்கையின் திசையிலேயே பயணிப்பதால் இவ்வாற்றுப் படுகைகளில் பௌதீக மாற்றம் ஏற்பட்டு அதன் விளைவாக மனிதகுலம் தோன்றியுள்ளது முதல் தற்காலம்வரை மேம்பட்டநாகரீகங்கொண்டு நீண்டநெடிய வரலாற்றைப் பெற்றுள்ளது அறிய முடிகிறது. இத்தகு வரலாற்று ஆய்வுகளை எதிர்காலத் தமிழ்ச்சமூகம் முன்னெடுக்கப்பட வேண்டும். தமிழரின் தொன்மையான வரலாற்றை உலகறிய வெண்டும். ஆறுகளின் பயணத்தோடு எனது ஆராய்ச்சிப் பயணமும் தொடரும். நன்றி!

**ஆதார நூற்கள்**

1. சோமலெ, செங்கற்பட்டு மாவட்டம், பக்கம் – 17, பாரி நிலையம்.
2. மா. இராசமாணிக்கனார் சோழர் வரலாறு.
3. தொ.பரமசிவம் பண்பாட்டு அசைவுகள்.
4. கே.கே.பிள்ளை, தமிழக வரலாறும் பண்பாடும், பக்-190.
5. டாக்டர் உ.வே.சா-ஐங்குறுநூறு பக்கம்.48. 127.
6. முனைவர் ம.இராசேந்திரன் பழவேற்காடு-கி பி 1816.
7. திருவள்ளுவர் மாவட்ட தொல்லியல் கையேடு, பக்கம்-8, ப.11 அரசுதொல்லியல்துறை-2011.
8. முனைவர் சு.சௌந்தரபாண்டியன், தொண்டை மண்டல வரலாறுகள், பக்.2,அரசினர் கீழ்திசை சுவடி நூலகம், சென்னை-1997.
9. எம்.எஸ் ஆயிஷா பேகம் திருப்பாலைவனம் தமிழ்நாடு அரசு தொல்லியல் துறை-2011.

E-ISSN: 2581-7140
Special Issue: Vol. 2, April-2019 Available at: www.ijtlls.com

# கல்வெட்டுகளின் தோற்றமும் வளர்ச்சியும்
# The Origins and Developments of Culverts

**து.பிரியங்கா,** முனைவர் பட்ட ஆய்வாளர்,
நவரசம் மகளிர் கலை மற்றும் அறிவியல் கல்லூரி, அறச்சலூர்.

## Abstract

*The brief study on the origin and the developments of the culverts in Tamil Nadu deals with the beginings of culvert edicts from the Brahmi culverts of the great Ashoka, the various types of culverts, culvert Sites, culverts in South India, old Indian culverts, Tamil culverts of tha Tamil Kings, literary evidences and etc to reclaim the nobility of Tamil culture. The paper discloses the facts in the archaeological facts.*

**Keywords:** Origin, Development, Culverts, Tamil Culture

ஒரு கட்டிடத்திற்கு மண், செங்கல், சுண்ணாம்பு, கருங்கல் முதலியன தேவைப்படுகின்றன. இவ்வாறே ஒரு நாட்டு வரலாற்றிற்கு அந்நாட்டு இலக்கியம், புதைபொருள், கல்வெட்டுக்கள், பழங்காலக் கட்டிடங்கள் முதலியன மூலப்பொருள்களாக அமைகின்றன. இம்மூலப்பொருள்களுள் ஒரு பகுதியினவாகிய கல்வெட்டுக்கள் நம் தமிழகத்துக்கு அரசியல் வரலாற்றையும் சமய வரலாற்றையும் சமுதாய வரலாற்றையும் அறிய உதவுகின்றன.

### கல்வெட்டு

பண்டைக் காலத்தில் நீண்ட காலம் அழியாதிருக்க வேண்டும் எனக் கருதப்பட்ட செய்திகள் கற்களில் வெட்டப்பட்டன. இவ்வாறு கல்லில் பொறிக்கப்பட்ட செய்தியே கல்வெட்டு எனப்படுகின்றது. பெரும்பாலும் கல்வெட்டுகளாகப் பொறிக்கப்பட்டன. இவை தவிர வீரர்கள், பிரபுக்கள், அதிகாரிகள் போன்றோர் தொடர்பிலும் முக்கிய நிகழ்வுகள் தொடர்பிலும் கல்வெட்டுக்கள் உள்ளன. கி.மு 3-ம் நூற்றாண்டிலிருந்து பாறைகளிலும், குகைகளிலும் குறியீடுகளையும், எழுத்துக்களையும் பொறிக்க நம் முன்னோர்கள் தங்கள் எண்ணங்களை வெளிப்படுத்த குறியீடுகளையும், எழுத்துக்களையும் பயன்படுத்தினர். கல்லில் எழுத்துக்களைப் பொறிக்கும் பழக்கம் மிகப் பழங்காலம் தொட்டே தமிழத்தில் நிலவி வந்துள்ளது. கல்லில் செதுக்கி வரையப்பட்ட எழுத்துக்கள் கல்லெழுத்துக்கள் எனப்பட்டன.கல்லில் வெட்டி பொறிக்கப்பட்டதால் கல்வெட்டு என்று அழைக்கப்பட்டது. கல்வெட்டு என்ற சொல்லுக்கு அழியாத சொல், ஓர் பிரபந்தம், சிலாசாசனம், புகழ்ச்சிச் செய்யுள், கல்லெழுத்து முன்னோர் இறந்த நாள் முதலியவற்றைக் குறிக்கும்.

கல்வெட்டுக்களில் கற்பனைக்கோ, புனைந்துரைக்கோ, கட்டுக்கதைக்கோ, உணர்ச்சி நடைக்கோ, உன்னதமான வடிவமைப்புக்கோ இடமில்லை. உள்ளதை உள்ளவாறு உணர்த்துகின்ற உண்மைக்கு மட்டுமே இடமுண்டு.

### கல்வெட்டுப் பணியகம்

கல்வெட்டுக்கள் பல எழுத்து வடிவங்களில் அமைந்துள்ளன. அவை பிராமி, வெங்கி-பல்லவா, தெலுங்கு-கன்னடம், கிரந்தத் தமிழ், வட்டெழுத்து, மலையாளம், கோலெழுத்து, நந்திநாகிரி முதலியன. இப்பலவகை எழுத்து வடிவங்களுடைய கல்வெட்டுக்கள்

E-ISSN: 2581-7140
Special Issue: Vol. 2, April-2019 Available at: www.ijtlls.com

பல்லாயிரக்கணக்கில் நம் தமிழகத்தில் இருக்கின்றன. சென்னை கல்வெட்டுப் பணியகம் இதுகாறும் ஏறத்தாழ 30,000 கல்வெட்டுக்களைக் கண்டுபிடித்துள்ளது. கன்னட நாட்டுப் பணியகம் ஏறக்குறைய 11,000 கல்வெட்டுக்களைக் கண்டறிந்துள்ளது. திருவாங்கூரிலும் புதுக்கோட்டையிலும் கிடைத்துள்ள கல்வெட்டுக்கள் பல.

**இந்திய எழுத்துக்கள்**

வரலாற்று உண்மைக்குப் பொருந்தியனவாக இருக்கும் இந்திய எழுத்துக்கள் நான்கு வகைப்படும். அவை, பிராமி, கரோஷ்டி, திராவிட, யவனாணியா என்பன. இவற்றுள் யவனாணியா என்பது கிரேக்கரும் அவரைச் சார்ந்தவரும் பயன்படுத்தி வந்த எழுத்து முறை ஆகும். கரோஷ்டி என்பது வடமேற்கு இந்தியாவின் ஒருபகுதியில் ஏறத்தாழக் கி.பி 4ம் நூற்றாண்டில் வழக்கில் எழுத்து முறை ஆகும்.

பிராமி என்பது கி.மு முதல் மூன்று நூற்றாண்டுகளில் அசோகனுடைய கல்வெட்டுக்களிலும் தென் இந்தியக் குகைகளிலும் காணப்படும் எழுத்து முறையாகும். பிராமி எழுத்து முறை மேற்சொன்ன இரண்டு எழுத்து முறைக்கும் மாறுபட்டது. பிராமி எழுத்துக்களை நன்கு ஆராய்ந்த அறிஞர்கள் அது தமிழுக்கென அமைக்கப்பட்ட குறியாகலாம் எனக் கருதுகின்றனர். திராவிட என்பது வட்டெழுத்து உருவெழுத்து முதலிய நிலைகளைத் தாண்டி அகரவரிசை எழுத்துக்களைப் பெற்ற பிராமி லிபி, ஏறத்தாழக் கி.பி 3ம் நூற்றாண்டில் தமிழகத்தில் புகுந்து, நாட்டு நிலைக்கேற்பச் சிறிது சிறிதாக வளர்ச்சியடைந்து, வட்டெழுத்தாக மாறியிருத்தல் வேண்டும் என்று கருதுகின்றனர். வட்டெழுத்து ஒரு காலத்தில் தமிழகம் முழுவதும் இருந்திருத்தல் வேண்டும். தொண்டை நாட்டிலும், காவிரி வரையுள்ள தமிழகத்திலும் பல்லவராட்சி ஏற்பட்ட பிறகு, பல்லவரால் போற்றி வளர்க்கப்பட்ட பிராமி லிபியின் வழி வந்த கிரந்தமும், அதனை ஒட்டி வளர்ந்த கிரந்தத் தமிழும் வழக்காறு பெறத் தொடங்கின. அக்காலத்தில் பல்லவராட்சி ஏற்படாத பாண்டிய நாடு, சேர நாடு, கொங்கு நாடுகளில் வட்டெழுத்து வழங்கி வந்தது.

பல்லவர்க்குப்பின் தென்னிந்தியா முழுவதையும் ஒரு குடைக்கீழ் வைத்தாண்ட சோழர் காலத்தில் கிரந்தத் தமிழே பெருவழக்குப் பெற்றது. சோழர்க்குப் பின் தமிழகத்தை ஆண்ட விஜயநகர அரசர் காலத்திலும் மகாராஷ்டிர மன்னர்கள் காலத்திலும் நாகர எழுத்துக்கள் தமிழகத்தில் இடம் பெற்றன.

**கல்வெட்டுக்களின் தோற்றம்**

இந்தியக் கல்வெட்டு எழுத்துக்களில் முதலில் தோன்றியவை பிராமி எழுத்துக்களைக் கொண்ட அசோகன் காலத்துக் கல்வெட்டுக்கள் பௌத்த சமயக் கொள்கைகளை மக்களிடம் பரப்புவதற்காக உண்டானவையாகும்.பின்வந்த பட்டயங்களும் கல்வெட்டுக்களும் கல்வியிற் பெரியவர்க்கும் வீரர்கட்கும் கோவில்கட்கும் அவ்வப்போது நிலதானம் முதலிய தானங்கள் செய்யப்பட்ட போது எழுதப் பெற்றவையாகும். ஒரு பொருளைக் குறித்துக் கல்லில் வெட்டி, அக்கல்லைப் பலரும் சேர்ந்து பார்க்கத்தக்க கோவில் போன்ற இடங்களில் பதித்து, மக்களைக் காணச்செய்வது நம் நாட்டில் இன்றளவும் இருந்து வரும் வழக்கமாகும்.

போரில் இறந்த வீரனுக்குக் கல்நாட்டி அதன் அடியில் அவனுடைய பெயரையும் சிறப்புக்களையும் வெட்டுவிக்கும் செயல் தொல்காப்பியத்தில் கூறப்பட்டுள்ளது.

**கல்வெட்டுக்கள் காணப்படும் இடம்**

கல்வெட்டுகள், பெரும்பாலும் பொதுமக்கள் பார்ப்பதற்காக வெட்டப்படுவதால் இவை பொது இடங்களிலேயே அதிகம் காணப்படுகின்றன. கோயில்கள், குகைகள், பொது மண்டபங்கள், வெற்றித் தூண்கள், நடுகற்கள் எனப்படும். இறந்தோர் நினைவுக் கற்கள்

E-ISSN: 2581-7140
Special Issue: Vol. 2, April-2019 Available at: www.ijtlls.com

என்பவழ்ற்றில் கல்வெட்டுக்களைக் காணலாம்.கல்வெட்டுப் பொறிக்கும் வழக்கம் உலகின் பல பகுதிகளிலும் காணப்படுகின்றன. தொல்லியல் ஆய்வுகள் இறந்துபட்ட அல்லது இன்றும் வாழ்ந்து கொண்டிருக்கின்ற பல்வேறு மொழிகளிலுமான கல்வெட்டுக்களை வெளிச்சத்துக்கும் கொண்டுவந்துள்ளன.

கல்வெட்டுக்கள் பல ஆயிரம் நிலைத்திருக்கக் கூடியவை. ஆதலால், மிகப் பழங்கால வரலாற்றுச் செய்திகள், நிகழ்வுகளுக்கான நம்பகமான சான்றுகளாக இவை திகழ்கின்றன. பல கல்வெட்டுக்கள் ஒரு மொழியில் மட்டுமின்றி, ஒன்றுக்கு மேற்பட்ட மொழிகளிலும் ஒரே செய்தியைக் குறிக்கும்படி அமைந்துள்ளன. இத்தகைய கல்வெட்டுக்கள் வழக்கொழிந்து மறக்கப்பட்டுவிட்ட மொழிகள் பலவற்றை வாசித்து அறியவும் அவற்றை மீட்டுறுவாக்கம் செய்யப்பட்டதே. பல்வேறு காலகட்டங்களைச் சேர்ந்த கல்வெட்டுக்களை ஆய்வு செய்வதன் மூலம் எழுத்துக்களின் படிமுறை வளர்ச்சிகளையும் அறிந்துகொள்ள முடிகிறது.

**தென்னிந்தியக் கல்வெட்டுக்கள்**

பெரும்பாலான தமிழ்நாட்டுக் கல்வெட்டுக்கள் தமிழிலேயே வெட்டபபட்டுள்ளன. ஆனால் ஆறாம் நூற்றாண்டு தொடக்கக் கல்லில் வெட்டப்பட்ட கல்வெட்டுக்கள் சமஸ்கிருத மொழியிலும் உள்ளன. சில இருமொழியிலும் உள்ளன. கடந்த 120 ஆண்டுகளில் பல நூற்றுக்கணக்கான கல்வெட்டுக்கள் தென்னிந்தியாவில் கண்டுபிடிக்கப்பட்டுள்ளன. பேராசிரியர் ஈஹல்ட்ஸ்சீ, மதராஸ் அரசின் கல்வெட்டியலாளராக பணியேற்றபின், 1886-ம் ஆண்டின் பிற்பகுதியில் இருந்து தென்னிந்தியக் கல்வெட்டுக்களை முறையாகச் சேகரிக்கத் தொடங்கினார். மிகப்பழைய செப்பேடு கி.பி 10-ம் நூற்றாண்டைச் சேர்ந்தது. லேடன் செப்பேடுகள், முதலாம் இராஜேந்திர சோழனின் திருவாலங்காட்டுச் செப்பேடு, சுந்தர சோழனின் அன்பில் செப்பேடு, வீரராஜேந்திர சோழனின் கன்னியாகுமரிச் செப்பேடு என்பவை கண்டுபிடித்து வெளியிடப்பட்டவற்றுள் அடங்குவனவாகும்.

**பண்டைய இந்தியக் கல்வெட்டுக்கள்**

இந்தியத் துணைக்கண்டத்தில் முதன்முறையாகக் கிடைத்த கல்வெட்டுக்கள், கி.மு மூவாயிரம் ஆண்டுகளுக்கு முந்தைய சிந்து வெளியில் கிடைத்த கல்வெட்டுக் குறிப்புகள் ஆகும். ஆனால், இக்கல்வெட்டுக் குறிப்புகள் இதுவரை யாராலும் முழுமையாக படித்து அறியப்படவில்லை. வடஇந்தியாவில், கி.மு மூன்றாம் நூற்றாண்டில் பிராமி எழுத்தில் பிராகிருத மொழியில் எழுதப்பட்ட அசோகரின் கல்வெட்டுக்களும், தமிழ்நாட்டில் தமிழ் எழுத்தில், தமிழ் மொழியில் எழுதப்பட்ட மாங்குளம் கல்வெட்டுகள் முதலில் அறியப்பட்டதாகும். தென்னிந்தியாவில் சமணர்களின் தமிழ்பிராமி, பட்டிபிரோலு எழுத்து முறை மற்றும் கடம்ப எழுத்துக்களில் பொறித்த கல்வெட்டுக்கள் கண்டறியப்பட்டுள்ளது. மேலும் பழனி, கொடுமணல் மற்றும் ஆதிச்சநல்லூரில் கி.மு 500 ஆண்டுகளுக்கு முந்தைய பண்டைய தமிழ் பிராமி கல்வெட்டுக்கள் கண்டறியப்பட்டுள்ளது. அசோகர் காலத்திற்கு முந்தைய கல்வெட்டுக்கள் இலங்கையின் அனுராதபுரத்தில் கண்டெடுக்கப்பட்டுள்ளது.

**தமிழ்நாட்டில் கல்வெட்டுக்கள்**

தமிழநாட்டின் மிகப்பழைய கல்வெட்டுக்கள் நடுகற்களில் வெட்டப்பட்டவை ஆகும். தொல்காப்பியம் முதலான பழந்தமிழ் நூல்களிலுள்ள செய்திகளாகும் இதற்குச் சான்றாக அமைகின்றன.தொல்காப்பியத்தில், போர்க்களத்திலே வீரச்சாவு அடைந்தோருக்குக் கல்லெடுத்தலும், அக்கல்லில் அவர்தம் வீரச்செயல்களைப் பொறித்தாலும் பற்றிய குறிப்புக்கள் காணப்படுகின்றன. இவ்வாறாக நடுகற்களில் தோன்றிய கல்வெட்டுக்கள் பல்லவர் காலத்தில் வேறு தேவைகளுக்கும் பயன்படத்தக்கதாக வளர்ச்சியடைந்தன. பல்லவர்களின்

E-ISSN: 2581-7140
Special Issue: Vol. 2, April-2019 Available at: www.ijtlls.com

தொடக்ககாலக் கல்வெட்டுக்கள் பிராகிருத மொழியிலும், இடைக்காலத்தில் சமஸ்கிருதத்திலும் கி.பி ஆறாம் நூற்றாண்டு முதல், பிற்காலப் பல்லவர் காலத்தில் தமிழிலும் பொறிக்கப்பட்டன. இவர்களுக்குப் பின்னர் சோழ மன்னரும், பாண்டியரும் கல்வெட்டுக்கள் பெரிதும் வளர்ச்சியுற்றன. இவ்வாறு பொறிக்கப்பட்ட ஆயிரக்கணக்கான கல்வெட்டுக்களின் மூலமே தமிழ் நாட்டின் இடைக்கால வரலாற்றின் பெரும்பகுதியை அறிந்துகொள்ள முடிந்தது.

**இலக்கியக் கல்வெட்டுக்கள்**

இலக்கியச் சுவையுடன் இலக்கண விதிகளுக்குப் பொருந்த அமைந்துள்ள பாடல் கல்வெட்டுக்களாகும். பாண்டியரின் தளவாய்புரச் செப்பேடுகள் சிவகாசிச் செப்பேடுகள், சோழரின் லெய்டன் செப்பேடுகள், அறச்சலூர் இசைக் கல்வெட்டு, பழமங்கலம் நடுகல், நந்திவர்மனின் திருவெள்ளறைப் பாடல் கல்வெட்டு, பதினாறு தூண் கொண்ட பட்டினப்பாலை மண்டபக் கல்வெட்டு, அபராசித வர்மனின் திருத்தனிப்பாடல் கல்வெட்டு, பொன் பரப்பிய மகதைப் பெருமாளின் இராச கண்ட கோபாலன் திருவண்ணாமலைக் கல்வெட்டு, திருப்பதி இராச கண்ட கோபாலன் கல்வெட்டு போன்ற இலக்கியச்சுவை பொருந்திய கல்வெட்டுக்கள் உள்ளன.

**வரலாற்றுக் கல்வெட்டுக்கள்**

கல்வெட்டுக்கள் பொதுவாக அரசர் பற்றிய வரலாறும், சமயம் பற்றிய வரலாறும் அறிய உதவுகின்றன. கி.பி நான்காம் நூற்றாண்டு தொடங்கி பதினேழாம் நூற்றாண்டு முடிய உள்ள காலத்துத் தமிழ்நாட்டு வரலாறு பெரும்பாலும் கல்வெட்டுக்களை அடிப்படையாக வைத்தே பெரும்பாலும் கல்வெட்டுக்களை அடிப்படையாக வைத்தே எழுத வேண்டியுள்ளது. வரலாற்றைப் பற்றிக் குறிப்பிடும் கல்வெட்டுகளில் வயலூர்க் கல்வெட்டு முதன்மை இடத்தைப் பெறுகிறது. இதில் பல்லவ மன்னர்தம் வழிமுறை தெளிவுபடுத்தப் பெற்றுள்ளது. நெடுஞ்சடையன் பராந்தகனின் செப்பேடு "தென் மதுரா புரஞ்செய்தும் அங்கதனில் அருந்தமிழ் நற்சங்கம் இரிஇத் தமிழ் வளர்த்தும்" எனக் குறிப்பிடுகிறது.

இவ்வாறாக கல்வெட்டுக்களின் தோற்றம் மற்றும் வரலாற்றின் பெரும்பகுதியை அறிய முடிகிறது. நாகரீக மேம்பாடு, பண்பாடு, அரசியல் அலுவல்கள் போன்றவற்றை அறிய முடிகிறது.

**துணைநூல்கள்**

1. பேராசிரியர் ஜே. தர்மராஜ், டாக்டர் த. எபிஜேம்ஸ், கல்வெட்டியல், டென்சி பப்ளிகேஷன்ஸ், சிவகாசி, ஐந்தாம் பதிப்பு – 2014.
2. முனைவர். சுப்புராயலு, தமிழ்க் கல்வெட்டியலும் அதன் வரலாறும், தமிழ்ப் பல்கலைக் கழகம், தஞ்சாவூர், முதற்பதிப்பு - 2001.

E-ISSN: 2581-7140
Special Issue: Vol. 2, April-2019 Available at: www.ijtlls.com

# உத்திரகோசமங்கை - தொன்மக் கட்டமைப்பும் வரலாறும்
# Archaic History and Infrastructure of Uttrakosamangai

**முனைவர் ஸ்ரீ. பிரேம்குமார்,** தமிழ்த்துறை, உதவிப்பேராசிரியர்,
தூயதாமஸ் கல்லூரி, சென்னை – 107

## Abstract

*The brief study on the origin and the developments of the Archaic History and Infrastructure of Uttrakosamangai. It is a very famous temple in the Sivagangai District. Lord shiva is the presiding God. It is famous for the Maragatha Lingam and the Culvert edicts. The paper discloses the facts in the archaeological facts.*

**Keywords:** Archaic History, , Infrastructure, Uttrakosamangai,

தில்லையில் கனசபையிலும், திருவாலங்காட்டில் இரத்தின சபையிலும், மதுரையில் வெள்ளிச்சபையிலும், நெல்லையில் தாமிரச் சபையிலும், குற்றாலத்தில் சித்திரச்சபையிலும் ஆடிக்கொண்டிருக்கும் ஈசன் மண்ணாகக் காஞ்சியிலும், நீராகத் திருவானைக்காவிலும் தீயாகத் திருவண்ணாமலையிலும் காற்றாகக் காளஹஸ்தியிலும் வானாகச் சிதம்பரத்திலும் காட்சித் தந்தாலும் உலகத்திலேயே முதலில் தோன்றிய கோயில் எனும் பெருமையும் சிறப்பும் வாய்ந்ததாகக் கருதப்படுவது உத்திரகோச மங்கை ஆகும். ‘தென்னாடுடைய சிவனே போற்றி எந்நாட்டவர்க்கும் இறைவா போற்றி’ என்று போற்றும் அக் கோயிலின் தொன்மக் கருத்துகளைத் தொல்லியல் சான்றுகள் வழியாகவும் இலக்கியத் தரவுகள் வழியாகவும் எடுத்துக்காட்டும் நோக்கில் இக்கட்டுரை அமைகின்றது.

**உத்திரகோசமங்கை - தொன்மம்**

உத்திரம் - வேதம் (விடை) , கோசம் - இரகசியம், மங்கை - பார்வதி, எனும் மூன்று சொற்களின் சேர்க்கையின் வழி உருபெற்றது இவ்வூராகும். வேதத்தின் பொருளைப் பார்வதிதேவிக்கு சிவபெருமான் இரகசியமாக ஓதியதால் இப்பெயர் பெற்றது. இன்றளவும் இக்கோயிலின் பழம்பெருமையைக் குறிக்கும் வகையில் ‘மண் முந்தியோ இல்லை மங்கை முந்தியோ’ எனும் வழக்கும் ‘மண் தோன்றிய போதே மங்கை தோன்றியது’ எனும் சொலவடைகள் கூறப்படுவது உண்டு.

‘கல்தோன்றி மண்தோன்றா காலத்தே வாளொடு முன்தோன்றிய மூத்தகுடி தமிழ்க்குடி’ எனும் புறப்பொருள் வெண்பாமாலை வரிகளுக்கிணங்க ‘மண் முந்தியோ இல்லை மங்கை முந்தியோ ’ எனும் சொலவடையை வைத்தும் உத்திரகோசமங்கை குறித்த தொன்மத்தை ஒப்பு நோக்கலாம். உத்திரகோசமங்கை குறித்த இந்தச் சொல்லாடல் வெற்றுப் பேச்சல்ல. ஏனெனில் இராவணன் அரசாளும் காலத்திலேயே இந்தக் கோயில் இருந்திருக்கிறது. மேலும் பிரம்மஹஸ்திதோஷம் நீக்கும் இராமேஸ்வரம் எல்லாம் உருவாவதற்கு முன்பேயும் இக்கோயில் இருந்திருக்கின்றது என்பதற்குப் பல்வேறு கல்வெட்டு, கதைச் சான்றுகள் கூறப்படுகின்றது. இராவணனின் மனைவி மண்டோதரி திருமணத்துக்கு முன்பு சிறந்த சிவபக்தனையே மணம் கொள்வேன் என்று வைராக்கியத்தோடு இருந்ததால் அவளுக்கு சிவன் காட்சியளித்தார் என்றும் இராவணன் - மண்டோதரி குழந்தை பாக்கியம் வேண்டி வழிப்பட்ட இடமாகவும்

E-ISSN: 2581-7140
Special Issue: Vol. 2, April-2019 Available at: www.ijtlls.com

இராவணனுக்கு மங்களநாண் அணிவிக்கும் பாக்கியத்தை இறைவன் அளித்தமையால் மங்கள நாதர் என்றழைக்கப்படுகின்றார் என்றும் கல்வெட்டு, கதைச் சான்றுகள் குறிப்பிடுகின்றது.

இராமன் வழிப்பட்ட இராமேஸ்வரம் ராவணனைக் கொன்ற தோஷம் நீங்க என்கிறது தலபுராணம். ஆனால் மங்கையில் உள்ள கல்வெட்டில் மண்டோதரி பெயர் இடம்பெற்றுள்ளது. இதன்வழி இந்தத்தலக் கல்வெட்டு இராமாயணக் காலத்தைய கல்வெட்டு ஆகும். மேலும் வேத வியாசர், பராசரர், காகபுஜண்டர், மிருகண்டு முனிவர், காரைக்கால் அம்மையார், பதஞ்சலி, வாணாசுரன், (பாணாசுரன்), மயன், வியாக்கிரமர்கள், அருணகிரிநாதர் இன்னும் பல முனிவர்கள் எனப் பலரும் வழிப்பட்ட இடமாகும். பாணாசுரன் வழிப்பட்ட பாணலிங்கம் மங்களநாதர் கருவறையில் இருந்ததாகச் சொல்வர். உலகில் உள்ள 1087 சிவாலயங்களையும் தன்னுள் கொண்ட சகஸ்ரலிங்கம் இம்மங்கையில் உள்ளது. ஆகம நூல்களை மாணிக்கவாசகர் காத்ததால் அவருக்கும் லிங்கவடிவம் கொடுத்து அருளினார் சிவன். நூல்களைக் காக்கமுடியாத முனிவர்கள் சிவ அக்னியான தீர்த்தத்தில் விழுந்து இறந்ததால் அக்னி தீர்த்தம் என்று அழைக்கப்படுகின்றது. சொக்கநாத ஈசன் உமையை மீனவப் பெண்ணாகச் சபித்துப்பின் சாப விமோசனம் செய்து உமையை மணந்துகொண்டு இம்மங்கையிலேயே வேதப்பொருளை உபதேசம் செய்து பின்னர் மதுரைக்கு வந்ததாக மதுரைப்புராணம் தெரிவிக்கின்றது. இதனால் இத்தலத்தில் உமை அம்மை ஈசனுக்குத் தினமும் பூஜை செய்வதாக நம்பப்படுகின்றது.

உத்திரகோசமங்கையில் இறைவன் சுயம்புவாக ஒரு இலந்தை மரத்தடியில் தோன்றியதாகக் கூறப்படுகின்றது. பிரம்மா, தாழம்பூ இங்கு வந்து ஈசனை வழிப்பட்டு சாபவிமோசனம் பெற்றதாகவும் குறிப்பிடப்படுகின்றது. சிவனுடைய அடி முடியைக் காண திருமால், பிரமன் செல்ல, பிரமனும் சிவன் தலையிலிருந்த தாழம்பூவும் சிவன் முடியைக் கண்டதாகப் பொய் கூற சிவன் பிரமனின் ஐந்துதலையில் ஒரு தலையைக் கிள்ளி எறிந்தும், தாழம்பூ இனி தன் வழிபாட்டில் இடம் பெறக்கூடாது என்று கூறியும் சபித்தார். அதனால் சிவ வழிபாட்டில் தாழம்பூ சூடப்படவில்லை; இடம்பெறவில்லை. இதனை 'மட்டோலைப் பூவனையார்'(கண்ணி - 8) என்று தமிழ் விடுதூது குறிப்பிடும். இந்த நிலையில் பிரமனும், தாழம்பூவும் இத்தலத்து ஈசனை வழிப்பட்டு சாப விமோசனம் பெற்றதாகவும், சிவக்கோயில்களில் இங்கு மட்டும் ஈசனுக்குத் தாழம்பூ சாத்தி வழிபடலாம். காகபுஜண்ட முனிவருக்குக் கவுதம முனிவரால் ஏற்பட்ட சாபமும் இங்குதான் நீங்கியது. மேலும் சிவனடியார்கள் 60 ஆயிரம் பேர் இங்கு ஞான உபதேசம் பெற்றதாகவும் கூறப்படும்.

**உத்திரகோசமங்கை - சிதம்பரம்**

பூலோகக் கைலாயம் என்றும் பூலோக சொர்க்கம் என்றெல்லாம் அழைக்கக் கூடிய சிதம்பரத்திற்கும் உத்திரகோச மங்கைக்கும் பல்வேறு தொடர்புகள் இருப்பதை அறிய முடிகின்றது.

சிதம்பரத்திற்கு முன்பே உத்திரகோசமங்கை கோயில் தோன்றியதால் ஆதி சிதம்பரம் எனும் பெயரைப் பெற்றுள்ளது. மேலும் நடன மூலமான நடத்தரையர் இங்கு அறையில் ஆடிய பின்னர்தான் சிதம்பரத்தில் ஆலயத்தில் ஆடினார். மேலும் உத்தரகோச மங்கையில் நடத்தரையர் திருமேனி அமைக்கப்பட்ட அடுத்த நாள் அல்லது அதே நாளில்தான் சிதம்பரத்திலும் நடராஜர் திருமேனி அமைக்கப்பட்டது என்பர். இவ்விரு வடிவங்களையும் உருவாக்கியவர் சண்முக வடிவேலர். பின்பு இந்த இரு சிலைகளின் வடிவமைப்பைப் பார்த்துத்தான் பிற நடராஜர் சிலைகள் வடிவமைக்கப்பட்டது என்பர் (சான்று: தலவரலாறு). மேலும் மங்கை, சிதம்பரம் ஆகிய கோயில்களில் உள்ள நடராஜர் வடிவங்களில் கழுத்தில்

E-ISSN: 2581-7140
Special Issue: Vol. 2, April-2019 Available at: www.ijtlls.com

இடுப்பில் பாம்பு கிடையாது; தலையில் கங்கை கிடையாது; இரண்டும் இராஜகோல வடிவங்களில் சிரித்துக்கொண்டு இருப்பதைக் காணலாம். ஆனால் உத்திரகோச மங்கையில் உள்ள சிலை மரகதக்கல்; சிதம்பரத்தில் உள்ளது ஐம்பொன் சிலையாகும்.

இரண்டு கோயில்களிலும் நடராசர் சன்னதிக்கு எதிரில் வலப்புறத்தே பெருமாள் சன்னிதி உள்ளது. சிதம்பரத்தில் இன்றும் ஒருசேர ஒரே இடத்திலிருந்து நடராஜரையும் திருச்சித்ரக் கூடத்தில் உள்ள பெருமாளையும் வழிபடும் முறை இருக்கின்றதைக் காணலாம். ஆனால் மங்கையில் ஏதோ சமய காழ்ப்புணர்ச்சியின் காரணமாகப் பெருமாள் சிலை இருக்கும் இடம் மூடப்பட்டு, அவ்விடத்தில் உமாமகேச்சுவரர் சிலையும் மணிமாடமும் அமைக்கப்பட்டுள்ளது. இதற்குக் காரணம் உத்திரகோச மங்கைக் கோயில் குறிப்பிட்ட காலம் வரை ஆதி சைவர்களின் கட்டுப்பாட்டின் கீழ் இருந்தது." அரியும் சிவனும் ஒண்ணுஅறியாதார் வாயிலே மண்ணு" என்னும் வழக்கை மெய்ப்பிக்கும் வகையில் இக்கோயில்கள் சைவ, வைணவத் தொடர்பை எடுத்துக்காட்ட உருவாகி இருக்கலாம். அது பிடிக்காத ஒரு சிலர் இச்செயலைச் செய்திருக்கலாம்.பின்பு இக்கோயில் பாதுகாவல் இராமநாதபுரம் அரசரிடம் ஒப்படைத்து இன்றுவரை அந்த சமஸ்தான ஆளுகைக்குட்பட்டதாக இருந்து வருகின்றது. உலகத்தின் இதய ஸ்தானமாகக் கருதப்படும் சிதம்பரத்திற்கும் உத்திரகோச மங்கைக்கும் மையத் தொடர்பு சுரங்க வழியாய் உள்ளது. அதனால்தான் இவ்விரு கோயில்களுக்கான பல்வேறு அமைப்புமுறை, நடராஜர் சிலை அமைப்புமுறை ஆகியன ஒப்புமை உடையதாக உள்ளமையை அறியமுடிகின்றது.

**உத்திரகோசமங்கை - மாணிக்கவாசகர்**

மாணிக்கவாசகரால் சிதம்பரமும் உத்திரகோசமங்கையும் சிறப்பும் பெற்றுள்ளது பாடவும் பெற்றுள்ளது. மாணிக்கவாசகரின் இறுதிக்காலம் சிதம்பரம் என்றால் இடைப்பட்ட காலம் உத்திரகோசமங்கையாகும். தொடக்ககாலம் திருவாதவூரும் மதுரையும் ஆகும்.

மாணிக்கவாசகர் மிகுந்த நாட்கள் இருந்த தலம் இந்த உத்திரகோசமங்கை ஆகும். இத்தலம் குறித்துப் பல பாடல்கள் பாடி இருக்கிறார். அவற்றுள் நீத்தல் விண்ணப்பம், திருத்தசாங்கம், கீர்த்தித் திருவகவல், பொன்னூஞ்சல் ஆகியன சிறப்புடையதாகும். இக்கோயிலில் உள்ள இலந்த மரத்தடியில் மாணிக்கவாசகர் இருந்ததாகவும் அந்த மரம் 3000 ஆண்டு பழமை உடையது என்றும் கூறப்படுகின்றது. அம் மரம் இன்றும் இருக்கின்றது. மேலும் மாணிக்கவாசகர் ஒளி உருவில் அமர்ந்துள்ள இடமாகவும் லிங்க வடிவில் காட்சித்தரக் கூடிய இடமாகவும் கருதப்படுகின்றது. இவற்றிற்குப் பல காரணங்கள், கதைகள் கூறப்படுகின்றன. மாணிக்கவாசகர் மற்ற சன்னிதியில் துறவு நிலையில் மழித்த தலையோடு இருக்க இங்குத் தவழும் ஜடாமுடியோடு காட்சியளிக்கின்றார்.

மாணிக்கவாசகர் நடத்தரையனுக்கு 1087 தலங்களிருந்தாலும் பாண்டிய நாடே அவன் பதி உத்திரகோச மங்கையே அவன் சொந்த ஊர் என்கிறார்.

"பாண்டி நாடே பழம்பதி ஆகவும்
பத்திசெய் அடியரைப் பரம்பரத்து
உய்ப்பவன் உத்திரகோச மங்கை ஊர் ஆகவும்"

(கீர்த்தித் திரு அகவல், 118-120, தில்லையில் அருளியது)

மேலும் திருத்தசாங்கத்தில்,

"தாதாடு பூஞ்சோலைத் தத்தாய் நமை ஆளும்
மாதாடும் பாகத்தன் வாழ்பதி என் - கோதாட்டிப் பத்தர்
எலாம் பார்மேல் சிவபுரம் போற்

E-ISSN: 2581-7140
Special Issue: Vol. 2, April-2019 Available at: www.ijtlls.com

கொண்டாடும் உத்திர கோச மங்கை ஊர்" (திருத்தசாங்கம் - 2)

என்று மாணிக்கவாசகர் உத்திரகோச மங்கையினை நிலவுலகச் சிவலோகம் என்று பெருமையாகப் பேசுகின்றார். மேலும் இப்பகுதியில் மாணிக்கவாசகர் கிளிகளிடம் கேட்பது போல் அமைத்துப் பாடியிருப்பார். இன்றைக்கும் இக்கோயில் கோபுரங்களில் கிளிக்கூட்டம் இருப்பதைக் கண்டு வியப்படையலாம்.

நீத்தல் விண்ணப்பத்தில் ஏறக்குறைய 50 பாடல்களில் பிரபஞ்ச வைராக்கியத்திற்காக உத்திரகோசமங்கையில் இருக்கும் ஈசனைத் தனக்கு இரண்டாவது முறையாகக் காட்சித்தரவேண்டிப் பாடுகின்றார். சிற்றின்பத் தொல்லையிலிருந்து நீங்கி பேரின்பமாகிய ஈசனைச் சரணடைய வேண்டிப் பாடுகின்றார். இந்த 50 பாடல்களும் மாணிக்கவாசகருக்கும் இறைவனுக்குமான பாசப்போராட்டத்தை எடுத்துரைக்கும் உவமைத்தொடர்கள் நிறைந்த அந்தாதிப் பாடல்களாகும்.

அரிமர்த்தனப் பாண்டியன் அவையில் அமைச்சராய் இருந்து குதிரை வாங்கச் செல்லும்போது இறைவனால் அடிகளாக ஆட்கொள்ளப்பட்டு திருப்பெருந்துறையில் கோயில்கட்டி, ஈசன் மாணிக்கவாசகருக்காகப் பிரம்படிப்பட்டு காட்சிக் கொடுத்தது முதல் முறையாகும்.

"ஆரடியான் என்னின் உத்திரகோச மங்கைக்கரசின்
சீரடியார் அடியானென்று நின்னைச் சிரிப்பிப்பனே"
(நீத்தல் விண்ணப்பம், பாடல் -48)

என்று இந்த உத்திரகோசமங்கையில் இரண்டாவது முறை அவர் காட்சிக் கொடுக்க வேண்டிப் பாடிய பாடல்தான் நீத்தல் விண்ணப்பம். மேலும்

"உன்னற்கரிய திரு வுத்தர கோச மங்கை
மன்னிப் பொலிந்திருந்த மாமறையோன் தன்புகழே
பன்னிப் பணிந்திறைஞ்சப் பாவங்கள் பற்றறுப்பான்"
(திருப்பொன்னூஞ்சல் பா-6)

என்று மங்கையில் பாடுகின்றார்.

"ஆரா அமுதாய் அலைகடல்வாய் மீன் விசிறும்
பேராசை வாரியனைப் பாடுதும் காண், அம்மானாய்" (திருவம்மானாய். பா-2)

என்று மாணிக்கவாசகர் திரு அண்ணாமலையிலிருந்து பாடியது உத்திரகோச மங்கையைத் தான்.

"உத்திர கோச மங்கையுள் ளிருந்து,
வித்தக வேடங் காட்டிய இயல்பும்" (கீர்த்தித் திருவகவல், வரி - 48-49)

என்று மங்கையில் ஞானவடிவம் கொண்டவர் சிவன் என்று தில்லையிலிருந்து பாடுகின்றார். அதே போல் திருவிளையாடற் புராணத்தில் குறிக்கப்படும் வலைவீசி விளையாண்ட படலம் நடந்த இடமும் இவ்விடம்தான்.

மேற்கண்ட குறிப்புகளின் வழி இன்றைக்கும் இக்கோயிலின் உட்பிரகாரத் தூண்கள், சிலைகள், நந்தி ஆகியன கடல் நீரால் அரித்தற்கான காட்சிகளைக் காணலாம். மேலும் கோயிலின் உள்ளே கடல்மண்களும், இங்குள்ள குளத்தில் உள்ள நீர் உப்பு நீராகவும், மீன்கள் அந் நீரிலேயே வாழ்வதன் நிலையை வைத்தும் உத்திரகோச மங்கை கடற்கரையை ஒட்டியிருந்ததை மெய்ப்பிக்கின்றது. காலச்சூழல் இயற்கை மாற்றங்களினால் மாற்றமடைந்திருக்கலாம் என்பதை இலக்கியப் பாடல்வழி உணர முடிகின்றது.

E-ISSN: 2581-7140
Special Issue: Vol. 2, April-2019 Available at: www.ijtlls.com

**உத்திரகோசமங்கை - வரலாற்றுச் சான்றுகள்**

உத்திரகோசமங்கை கோயில் திருப்பணிகளைப் பாண்டிய மன்னர்களே செய்தனர். பாண்டியர்கள் காலகட்டத்தில் உத்திரகோசமங்கை சிலகாலம் தலைநகரமாகவும் இருந்திருக்க வாய்ப்புண்டு. மேலும் இராமேஸ்வரம் - உத்திரகோசமங்கை இரண்டும் இலங்கையிலிருந்த கண்டி மகாராஜாவால் கட்டப்பட்டது என்பர். சிவபுரம், தட்சிண கயிலாயம், சதுர்வேதி மங்கலம், இல(வ)ந்திகைப்பள்ளி, (இலந்தை மரம் அதிகம் நிறைந்தபகுதி; கோயிலின் தல விருட்சம் 3000 ஆண்டு பழமையான இலந்தை மரம் இன்றும் உள்ளது), பத்ரிகாசேத்திரம், பிரம்மபுரம், வியாக்ரபுரம், மங்களபுரி, பத்ரிசயன சத்திரம், ஆதி சிதம்பரம் எனப் பல பெயர்களில் இவ்வூர் பற்றிய குறிப்புக் காணப்படுகின்றது (கல்வெட்டு, இலக்கியத் தகவல்கள்)

சங்க இலக்கியத்தில் குறிக்கப்படும் இலவந்திகைப் பள்ளி என்பது உத்திரகோச மங்கையைக் குறிக்கும். இம்மங்கையில் உள்ள கல்வெட்டில் இலவந்திகைப்பள்ளித் துஞ்சிய நன்மாறன் பெயரும் செதுக்கப்பட்டுள்ளமையைக் காணலாம். புறநானூறு 55, 56, 57, 196, 198 ஆகிய பாடல்களில் பல ஆசிரியர்கள் இவனது சிறப்பு, பரிசு கொடுக்காத நிலையைப் பாடியுள்ளனர். இலவந்திகைப்பள்ளி துஞ்சிய நலங்கிள்ளி சேட்சென்னி எனும் சோழன் குறித்தும் புறம் - 61 ஆவது பாடலில் மாடலன் மதுரைக்குமரனார் பாடியுள்ளார்.

திருவாச்சிக் கல்வெட்டு (ஆவணம் - 7), பரஞ்சோதியாரின் திருவிளையாடற் புராண வலைவீசுபடலம், பெரும்பற்றப்புலியூர் நம்பியின் திருவிளையாடற்புராண வலைவீசு காண்டம். திரு உத்திரகோசமங்கையின் தலபுராண வலைவீசு அத்யாயம், வலைவீசு புராணம் - மலையாள மொழி வடிவம் (இம்மொழியில் பாண்டிய நாட்டில் மங்கைப் பதியில் நடப்பதாகவே கூறுகின்றது.), பார்பதியம்மன் கதை முதலிய நாட்டுப்புற வடிவம் தொடங்கி அனைத்திலும் உத்திரகோச மங்கையின் பழமை குறித்த பதிவு காணப்படுகின்றது.

**உத்திரகோச மங்கை - வலைவீசு காவியம்**

திருவண்ணாமலையிலிருந்து மாணிக்கவாசகர் பாடிய

'ஆரா அமுதாய் அலைகடல்வாய் மீன் விசிறும்
பேராசை வாரியனைப் பாடுதும்காண் அம்மானாய்" (திருஅம்மானாய், பாடல்-2)

எனும் ஈசனின் விளையாடல் பல்வேறு வடிவங்களில் பக்தி இலக்கியங்களில் விரிவுபடுத்தப்பட்டுள்ளன. அவ்வகையில் நாட்டுப்புற வடிவங்களிலும் இக்கதை இடம்பெற்றுள்ளது. குறிப்பாகக் கன்னியாகுமரி வட்டங்களில் இன்றும் வலைவீசு காவியம் எனும் கதை நிகழ்த்தப்பெறுவதைக் காணலாம். இதனைச் சிவ. விவேகானந்தன் என்பவர் பதிப்பித்துள்ளார். வலைவீசி கதை, வலைவீசியகதை, வலைவீசின கதை, வலைவீசியம்மன் கதை, பார்பதியம்மன் கதை எனப் பலவடிவங்களில் வழங்கப்பட்டு வருகின்றது.

வலைவீசு காவியத்தில் பரதவக் குழந்தையாகச் சபிக்கப்பட்ட பார்வதியை ஈசன் திருமணம் செய்வது கதைக்கருவாகும். இக்கதையின் ஊடே அதியரசன், அருணவல்லி, நந்தி, சாபம், சாபவிமோசனம் குறித்த கதைக்களன்கள் ஏட்டு இலக்கியத்திலும் நாட்டுப்புற இலக்கியத்திலும் முரண்படுவதைக் காணமுடிகின்றது.

'கதித்தெழு மங்கையம் பதிவளர் காசிகப் பற்கதி பதிதன்'
(வலைவீசு காவியம் - 11)

என்று பல இடங்களில் இக்காவியம் உத்திரகோசமங்கையைக் குறித்துள்ளதன் வழியாகவும் நாட்டுப்புற வடிவம் தொடங்கி இலக்கிய வடிவங்கள், கோயில் தொல்லியல் தரவுகள் - படிமங்கள் வரை கடற்கரையை ஒட்டியிருந்தது இவ்வூர் என்பதை மெய்ப்பிக்கின்றது.

E-ISSN: 2581-7140
Special Issue: Vol. 2, April-2019 Available at: www.ijtlls.com

**கோயில் கட்டமைப்பு**

உத்திரகோசமங்கைக் கோயில் கட்டிடக்கலை மரபு திராவிடக் கட்டிடக்கலை மரபாகும். சிவனுக்கும், உமைக்கும் தனித்தனியே இராஜகோபுர நுழைவுவாயில் இருக்கின்றது. இருப்பினும் ஈசனுக்கான நுழைவுவாயில் மட்டும் தற்பொழுது பயன்படுத்தப்படுகின்றது. கோயிலின் உட்பிரகார நுழைவில் யாளியின் வாயில் கல்லால் ஆன பந்துள்ளது. இப்பந்தை அதன் வாயிலிருந்து உருட்டலாம். ஆனால் வெளியில் எடுக்க முடியாது. இது தமிழ்ச் சிற்பக்கலை வரலாற்றுக்கு ஒரு சிறந்த சான்றாகும். உலகில் உள்ள 1087 சிவாலயங்களையும் தன்னுள் அடக்கிய சகஸ்ரலிங்கம், பாணாசுரன் வழிப்பட்ட பாணலிங்கம், ஸ்படிகலிங்கம், 11 விநாயகர் சிலை, ராஜகோபுரத்தில் சரபேஸ்வரர் சிலை, பச்சை மரகத லிங்கம், மாணிக்கவாசகர் லிங்கம், சிலை, அக்னிதீர்த்தம், இலந்தை மரம் யாவும் சிறப்புடையன.

உத்திரகோசமங்கையில் உள்ள பஞ்சலோக நடராஜர் சிலையைப் பார்த்தால் வலதுபுறம் ஆண்கள் ஆடும் தாண்டவமும் இடதுபுறம் பெண்கள் ஆடும் நளினமான கலைப்படைப்பாகவும் உள்ளது. விக்கிரகத் திருமேனி, கல்வெட்டுக் குறிப்புகளையும் பார்க்கும்போது இந்நடராஜர் சிலையும் தொன்மையானதாகக் கருதலாம். கோயில் வாசலில் விநாயகர், முருகர் வைப்பு முறையும் மாறியுள்ளது. முருகனுக்கு வாகனமாக யானை உள்ளது. இதற்கான காரணமாக முருகனுக்கு இந்திரன் தனது ஐராவதத்தை இத்தலத்தில் அளித்தான் என்று ஆதி சிதம்பர மகாத்மியம் குறிப்பிடுகின்றது.

மேலும் இக்கோயிலின் கருவறையிலிருந்து சிதம்பரம், இராமேஸ்வரம், மெக்கா இன்னும் பல இடங்களுக்குச் சுரங்க வழி இருப்பதாகத் தொன்மச் சான்றுகள் குறிப்பிடுகின்றது. இவ்வழி மனவழி என்றும் கூறப்படுகின்றது. கோவிலில் உள்ள ஓவியங்களும் சிற்பங்களும் பழமையும் அழகும் வாய்ந்தனவாகும்.

**உத்திரகோசமங்கை - மரகதக்கல் நடராஜர்**

உலகத்திலேயே மிகப்பெரிய மரகதக் கல்லால் ஆன சிலை இக்கோயிலில் உள்ளது தனிச்சிறப்பாகும். சாதாரணஒலி அலைகள் கூட மரகதத்தை உதிரவைக்கும். அதனால்தான் ‘மத்தளம் கொட்ட மரகதம் உதிரும்’, ‘மந்திர ஒலிக்குக் கூட மரகதம் உதிரும்’ என்று இலக்கிய வழக்குகளில் பதிவு செய்யப்பட்டுள்ளது. இந்தக் காரணம் பற்றியே இச்சிலை வடிவமைத்த சண்முக வடிவேலர் சந்தனக் காப்பிட்டு மரகதச் சிலையை மறைத்தார். இச்சிலையே ஆதி நடராஜர். மரகதம் ஒலிக்கே உதிரும் என்றால் உளியால் செதுக்கப்பட்டால் எப்படித் தாங்கும். அதனால் இது மனத்தால் உருவாக்கப்பட்டது என்றும் தானாக சுயம்பு வடிவில் வந்ததாகவும் கருதுவர்.

டெல்லியைத் தலைநகராகக் கொண்டு 1300 களில் ஆட்சிசெய்த அலாவுதின் கில்ஜி, இக்கோயில் மரகதக்கல் சிலையைக் கொள்ளையடிக்க முயற்சிசெய்து தோற்றான். இதேபோல் பலர் எடுக்க முயற்சி செய்துள்ளனர். சமீபத்தில் கூட மரகதச் சிலையைக் கொள்ளையடிக்க திருட்டுக் கும்பல் இக்கோவிலினுள் நுழைந்ததாக ஊடகச் செய்திகள் வாயிலாகவும் அறிய முடிந்தது. ஆங்கிலேயர் ஆட்சிக் காலத்திலும் இன்னும் பிறராலும் இச் சிலை களவாடப் படாமைக்கு சண்முக வடிவேலர் செய்த சந்தனக்காப்பு பாதுகாப்பே ஆகும். இக்கோயில் குறித்து மாணிக்கவாசகர் முதலிய பல பெரியோர்கள் பாடியுள்ளனர். அருணகிரிநாதர் இங்குள்ள முருகன் மீது திருப்புகழ் பாடியுள்ளார். மங்கள ஈஸ்வரியைப் போற்றும் வகையில் வ.த. சுப்ரமணியம் பிள்ளை பிள்ளைத்தமிழ் பாடியுள்ளார் (1901, 1956 இல் மறுபதிப்பு வந்துள்ளது), மதுரைப்புராணம், திருவிளையாடற் புராணம், வீரசிங்காதனபுராணம், ஆதி

E-ISSN: 2581-7140
Special Issue: Vol. 2, April-2019 Available at: www.ijtlls.com

சிதம்பர மகாத்மியம், சங்க இலக்கியப் பாடல்கள், ஓலைச்சுவடித் தகவல்கள், திருவாச்சிக் கல்வெட்டு முதலிய கல்வெட்டுக் குறிப்புகள் யாவும் உத்திரகோச மங்கைக் குறித்த பழந்தொன்மங்களைக் கூறியுள்ளது.

**நம்பிக்கைகள்**

இத்தகு சிறப்பு வாய்ந்த உத்திரகோச மங்கை குறித்த நம்பிக்கைகள் மக்களிடம் இன்றளவும், பின்பற்றப்பட்டு வருவதைக் காண முடிகின்றது. அவற்றுள் மரகதச் சிலை மீது சாத்தப்பட்ட சந்தனம் ஆருத்ரா தரிசனம், மார்கழி மாதத்தில் ஒரு நாள் மட்டும் முழுவதும் நீக்கப்பட்டு அச்சிலைக்கு வழிபாடு செய்யப்படும். இதைக் காண பக்தர்கள் கூட்டம் ஒருபுறம் என்றால் மரகதத்தில் இருந்து நீக்கப்பட்ட சந்தனத்தைப் பெறுவதற்குப் பல கூட்டம் இருக்கும். ஏனெனில் மரகதக் கல்மீது சார்த்தப்பட்ட சந்தனத்தை வெந்நீரில் கரைத்துக் குடித்தால் தீராத நோயும் தீரும் என்பது மக்களின் நம்பிக்கை.

திருமண பாக்கியம், குழந்தை பாக்கியம் பெறவேண்டுவோரும் இங்கு வந்து நேர்த்திக்கடன் செய்வர். இந்த நம்பிக்கைக்குக் காரணம் மாணிக்கவாசகர் வரலாறும் அவருடைய பொன்னூஞ்சல் பதிகமும், இராவணன் - மண்டோதரி திருமண பாக்கியம், குழந்தை பாக்கியம் பெறவேண்டிய இடம் என்பதால் மக்களிடம் இந்த நம்பிக்கை இன்றும் உள்ளது. பிரம்மா, தாழம்பூ, காகபுஜண்டர் எனப் பல தெய்வம், முனிவர், அ∴றிணை நிலை என அனைத்தும் சாபவிமோசனம் பெற்ற இடம். பூலோகக் கைலாயம், சொர்க்கம் என்றெல்லாம் அழைக்கப்படும் சிதம்பரத்துக்கு முன்தோன்றியது இந்த ஆதி சிதம்பரம். இக்கோயிலுக்குள் செல்வதே சிறப்புடையது என்று மக்கள் நம்புகின்றனர்.

**துணை நூல்கள்**

1. திருவாசகம் மூலமும் உரையும், கா. சுப்பிரமணியபிள்ளை, பூம்புகார் பதிப்பகம், சென்னை, 2009

2. சங்க இலக்கியம் ஆய்வுகளும் அட்டவணைகளும், ந. சஞ்சீவி, காவ்யா வெளியீடு, சென்னை, 2010

3. புறநானூறு, தொகுதி -1, என். சி.பி.எச்., சென்னை, 2007.

4. வலைவீசு காவியம், சிவ. விவேகானந்தன், காவ்யா வெளியீடு, 2006

5. திருஉத்திரகோசமங்கை - கோயில் தலவரலாறு

6. திருவாச்சிக் கல்வெட்டு, உத்திரகோசமங்கைக் கோயில் கல்வெட்டுத் தகவல்கள், ஆவணம், திரு. முத்துராணி.

தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்
International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Special Issue: Vol. 2, April-2019 Available at: www.ijtlls.com


# தமிழரின் தொல்லியல் கூறுகள்
## Tamilar Archaeological Evidences

**ச.பிரேமகுமாரி,** விரிவுரையாளர், தமிழ்த்துறை,
அறிஞர் அண்ணா அரசு மகளிர் கலைக்கல்லூரி, வேலூர் மாவட்டம்.

### Abstract

*The paper deals on the facts related to the relics of Tamil civilization in the Tamil region. It speaks of the origins of Tamil people, their lands demolished in the deluge, their language, culture and customs through archaeological evidences. Therefore, the study traces the antiqueness of Tamil culture with reference to the archaeological sources..*

**Keywords:** Tamilar, Archaeological Evidences, Tamil Language, Culture, Customs

தமிழரின் தொல்லியல் கூறுகளை ஆராய்வதற்கு அவர்களின் மொழி, இலக்கியம், வரலாறு முதலியன துணைநிற்கின்றன. எனவே தமிழ் மொழியும் மொழி சார்ந்த வரலாறும் தமிழர் தம் தொல்லியல் கூறுகளை எடுத்துரைப்பதுடன் தமிழரின் தோற்ற இலக்கியமான சங்க இலக்கியம் இக்கட்டுரையில் பிரதானமாகிறது. அவ்வகையில் சங்க இலக்கியத்தின் தொன்மை பெரிதும் கொள்ளப்படுகிறது. தமிழ்மொழி எக்காலத்தில் தோன்றி வளர்ந்தது என்று கூற முடியாத அளவுக்குத் தொன்மையானது, பண்பட்டது. வரலாற்றுச் சிறப்புடையது. பிற நாட்டினர் நாகரிக நிலைக்கு எட்டாத காலத்திலேயே தனக்கேயுரிய பிற மொழி கலப்பற்ற தூய இலக்கியப் போக்கினைக் கொண்டு விளங்கியது.

தொன்மை என்பதற்குக் கழகத் தமிழகராதி ‘பழமை’ என்று பொருளுரைக்கின்றது. தொல்காப்பியம் தொன்மைக்கு,

“தொன்மை தானே சொல்லுங்காலை
உரையொடு புணர்ந்த பழமை மேற்றே.” (தொல்.பொருள்.செய்.538)

என்று விளக்கமளிக்கிறது.

தமிழின் தொன்மையினைப் பிரித்தானிய கலைக்களஞ்சியம், ‘Apart from literature written in classical (Indo-Aryan) Sanskrit, Tamil is the oldest literature in India’.[1] (வடமொழி இலக்கியம் ஒரு புறம்; மீதமுள்ள இந்திய மொழிகள் அனைத்திலும் பழமையானது தமிழ் இலக்கியம்) என்று குறிப்பிடுகின்றது.

இந்தியக் கலைக்களஞ்சியம், ‘Tamil highly Cultivated and developed of Dravidian languages, Perhaps the oldest spoken language of the world going back to pre-historic times, has rich vocabulary.....dating of Tamil literature is difficult.’[2] (திராவிட மொழிகளில் மிகவும் பண்படுத்தப்பட்டதும் மேம்பாடுடையதுமான மொழி தமிழ். வழக்கிலிருக்கும் உலக மொழிகள் அனைத்திலும் மிகவும் தொன்மை வாய்ந்ததாகவும் வரலாற்றுக் காலத்திற்கு முற்பட்டதாகவும் கருதப்படுவது, சொல் வளம் மிக்கது…. தமிழ் இலக்கியத்தின் காலத்தை நிர்ணயிப்பது கடினம்) என்று குறிப்பிடுகிறது. தமிழரின் தோற்ற வரலாற்றினைப் புறப்பொருள் வெண்பாமாலை,

E-ISSN: 2581-7140
Special Issue: Vol. 2, April-2019 Available at: www.ijtlls.com

"கல்தோன்றி மண்தோன்றாக் காலத்தே வாளொடு
முன்தோன்றிய மூத்தகுடி தமிழ்க்குடி" (புற.வெண்.மா.கரந்.14)

என்று வழங்குகிறது. கல்லும், மண்ணும் தோன்றாத காலத்தில் உயிர்கள் தோன்ற வாய்ப்பில்லை. இருப்பினும் தமிழரின் பழமையினைக் குறிப்பிட இக்கூற்றினை ஏற்றுக் கொண்டாலும் ஆய்வு நோக்கில் இதனை அணுக முடியவில்லை.

தமிழரின் தொல்லியல் கூறுபாடுகளில் தொன்மையினைக் குறிப்பிடும்பொழுது, மொழியின் தொன்மை மட்டும் போதுவதன்று. 1. இலக்கியச் சான்றுகள், 2. வரலாற்றுச் சான்றுகள், 3. இலக்கணச் சான்றுகள் ஆகியன துணைபுரிகின்றன.

**இலெமூரியா (குமரிக் கண்டம்)**

இலெமூரியா கண்டம் தொல்லியல் சான்றாக அமைகின்றது. ஏனெனில், தமிழ் இலக்கியத்தின் தொன்மை இலெமூரியா என்னும் குமரிக்கண்டத்திலிருந்து தொடங்குகிறது. 'குமரிக்கண்டத்தில் முதல் தமிழ்ச் சங்கம் இருந்தது என்றும் அதன் காலம் கி.மு.8000 என்றும் சில அறிஞர்கள் கூறுகின்றனர்.'[3] குமரிக் கண்டத்தின் மறைவு பற்றிக் கலித்தொகை குறிப்பிடுகிறது.

"மலிதிரை ஊர்ந்து தன்மண்கடல் வௌவலின்
மெலிவின்றி மேற்சென்று மேவார்நாடு இடம்படப்
புலியொடு வில்நீக்கிப் புகழ்பொறித்த கிளர் கெண்டை
வலியினான் வணக்கிய வாடாச்சீர் தென்னவன்" (கலித்.104:1-4)

என்பதனால் குமரிக் கண்டம் இருந்துள்ளதை அறிய முடிகிறது. சிலப்பதிகாரம், குமரிக்கண்டத்தின் மறைவு குறித்துப் பேசுகிறது.

"பஃறுளி யாற்றுடன் பன்மலை அடுக்கத்துக்
குமரிக் கோடும் கொடுங்கடல் கொள்ள
வடதிசைக் கங்கையும் இமயமும் கொண்டு
தென்திசை ஆண்ட தென்னவன்" (சிலம்பு.11:19-22)

என்பதனால் குமரிக் கண்டம் இருந்து, பின் அழிந்துள்ளதை அறிய முடிகிறது.

வரலாற்று ஆசிரியர்கள் பலரும் குமரிக் கண்டத்தின் அழிவு குறித்துப் பேசியுள்ளனர். 'இந்துமாக் கடலில் ஒரு கண்டம் இருந்து மறைந்தது என்று 'ஹெகல்' குறிப்பிட்டுள்ளார். கடல் கோளால் அந்தப் பெருநிலப்பரப்பு மறைந்தது என்று 'ஸ்காட்' கூறியுள்ளார். கடல்கோள், தமிழ்மண்ணை விழுங்கியதைப் பற்றி ஆபிரகாம் பண்டிதரும், பாவாணரும் தெரிவித்துள்ளனர். அந்தக் குமரிக் கண்டத்தில் தமிழ் நூல்கள் இருந்திருக்கும். அவை கடலுள் மறைந்திருக்கும்.'[4] எனவே கலித்தொகை, சிலப்பதிகாரம் முதலிய இலக்கியங்களின் வழியும், வரலாற்று ஆசிரியர்களின் ஆராய்ச்சிகளின் வழியும் இலெமூரியா என்னும் பெருநிலப்பரப்பு தமிழகத்தில் இருந்து மறைந்துள்ளது என்பதனை தெரிந்து கொள்ள முடிகிறது. அவ்வகையில், தமிழர் தம் தொன்மைக்கு இலெமூரியா கண்டம் சான்றாக அமைந்துள்ளது.

**தமிழர் பிறப்பிடம்**

தொல்லியல் கூறுகளில் தமிழரின் பிறப்பிடம் முக்கியமான சான்றாகும். கடல் வெள்ளத்தினால் மூழ்கடிக்கப் பெற்ற குமரி நாடானது தமிழர்தம் தொன்மைக்குத் தாயகமாகும். தமிழ்க் குடிகள் இடம் விட்டு இடம் பெயராமல் நிலைத்த குடிகளாக இருந்துள்ளதைச் சங்க இலக்கியம் குறிப்பிடுகிறது.

E-ISSN: 2581-7140
Special Issue: Vol. 2, April-2019 Available at: www.ijtlls.com

"பதியெழு அறியாப் பழங்குடி கெழீஇய
வியலிடம் பெறாஅ விழுப்பெரு நியமத்து" (மலைபடு.479-480)

என்று கூறுவதாலும்,

"யாறெனக் கிடந்த தெருவின் சாறென
இகழுநர் வெரூஉம், கவலை மறுகின
..நனிசேய்த்து அன்றுஅவன் பழவிறல் மூதூர்" (மலை.481-487)
'மலர்தலை உலகத்துள்ளும் பலர் தொழ
விழவு மேம்பட்ட பழவிறல் மூதூர்' (பெரும்.410-411)

என்பதாலும் தமிழர்கள் தொல்குடிகளாகப் பல ஆண்டுகள் ஒரே இடத்தில் நிலையாகத் தங்கி வாழ்ந்துள்ளமை புலனாகிறது. இதனைச் சிலப்பதிகாரம்,

பொதியி லாயினும் இமய மாயினும்
பதியெழு வறியாப் பழங்குடி கெழீஇய,
பொதுவறு சிறப்பிற் புகாரே யாயினும்" (சிலம்பு.1:14-6)

என்று குறிப்பிட்டுள்ளது. இதனை, பி.டி.சீனிவாச ஐயங்கார், 'தென்னிந்தியாவில் கிடைக்கும் கலைப்பொருட்கள், இறந்தோரின் எச்சமிச்சக் கூறுகள் ஓர் இடையீடு இல்லாத நாகரிகத் தொடர்ச்சியினைக் காட்டுகின்றன. எந்தப் பேரழிவாலும் இந்நாகரிகம் நிலை குலையாமல் பழங்கற் காலத்திலிருந்து உலோகக் காலம் வரை இருந்திருக்கிறது. இந்த நாகரிக வளர்ச்சிக் காலத்தில் தென்னிந்தியாவில் தமிழ் வழங்கியுள்ளது. நாகரிகத்தின் ஒவ்வொரு படிநிலையையும் வெளிப்படுத்தும் விதமாகத் தமிழ்மொழி விளங்கியுள்ளது. பழந்தமிழில் இதற்குரிய அடையாளங்கள் காணப்படுகின்றன. இந்தத் தொன்மைக் காலப் பழக்க வழக்கங்கள் மிகப் பழமையான தமிழ் இலக்கியங்களிலும் போற்றப்பட்டுள்ளன. எனவே தமிழர்கள் இந்நிலத்தில் தோன்றிய மக்களே என முடிவு செய்வது அறமாகும்.'[5] இக்கருத்தின் அடிப்படையில் தமிழ், உலக முதன் மொழி என்பதும், செவ்வியல் காலத்தை முதலில் கண்ட மொழி என்பதும் தமிழ் நாட்டின் தென்பகுதியிலிருந்த குமரிக்கண்டம் மனிதன் முதலில் தோன்றிய இடமென்பதும் புலனாகிறது.

**பண்டைத் தமிழர் நில அமைப்பு**

தொல்லியல் கூறுகளில் பண்டைத் தமிழரின் நில அமைப்பானது துணை நிற்கின்றது. தமிழகம் மலை (குறிஞ்சி), காடு (முல்லை), வயல் (மருதம்), கடல் (நெய்தல்) என்னும் நானில அமைப்பினைக் கொண்டிருந்தது. அத்துடன் வடக்கில் வேங்கட மலையும் தெற்கில் குமரிக்கடலும் கிழக்கிலும், மேற்கிலும் முறையே குணக், குடக் கடல்களும் தமிழ் நாட்டிற்கு எல்லைகளாகத் திகழ்கின்றன என்பதை,

"வடதிசை யதுவே வான்தோய் இமயம்
தென்திசை ஆஅய் குடிஇன் றாயின்
பிறழ்வது மண்ணோ, இம்மலர்தலை உலகே" (புறம்.132:7-9)
"பல் ஒளியர் பணிவு ஒடுங்க
தொல் அருவாளர் தொழில் கேட்ப
வடவர் வாட குடவர் கூம்பத்
தென்னவன் திறல்கெட" (பட்டினப். 274-277)

என வரும் சான்றுகளால் அறியலாம். இவ்வாறு மூவேந்தர்களின் குளிர்ந்த புனலையுடைய நல்ல நாடானது தமிழ் நாட்டிற்கு எல்லைகளாக விளங்கியுள்ளன. இத்தகைய பெருநிலப்

E-ISSN: 2581-7140
Special Issue: Vol. 2, April-2019 Available at: www.ijtlls.com

பரப்பானது கடல் வெள்ளத்தினால் அழிந்துள்ளமை குறித்து அடியார்க்கு நல்லார் குறிப்பிடுகையில்,

'.அக்காலத்து அவர் நாட்டு தென்பாலி முகத்திற்கு வடவெல்லை யாகிய ப.்றுளி என்னுமாற்றிற்கும், இவற்றின் நீர் மலிவானென மலிந்த ஏழ்தெங்க நாடும், ஏழ் மதுரை நாடும், ஏழ் முன்பாலை நாடும், ஏழ்பின்பாலை நாடும், ஏழ்குன்ற நாடும், ஏழ் குணகாரை நாடும், ஏழ் குறும்பனை நாடுமென்றும் இந்த நாற்பத்தொன்பது நாடும், குமரி கொல்ல முதலிய பன்மலை நாடும் காடும் நதியும் பதியும் தடநீர்க் குமரி வட பெருங்கோட்டின்காறும் கடல் கொண்டொழிதலாற் குமரியாகிய பௌவமென்றா ரென்றுணுர்க.'[6] என்று கூறுகின்றார். இவ்வாறு ஒரு பெரு நிலபரப்பு வடவேங்கடம் தென்குமரி ஆயிடைத் தமிழ் கூறு நல்லுலகமாகச் சுருங்கிப் பின் வேங்கடமும் நீங்கிற்று. கி.மு.2000 அளவில் நிலப் பகுதியாகவே இடையில் கடலின்றி இருந்தது, என்பதனை அறிய முடிகிறது. அவ்வகையில் சங்க இலக்கியத்தின் தொன்மையினை அறிவதற்குப் பண்டைத் தமிழரின் நில அமைப்பானது துணை நிற்கின்றது.

**நந்தர், மோரியர்**

நந்தர், மோரியர் (மௌரியர்) இவர்களைப் பற்றிய செய்திகள் சங்க இலக்கியங்களில் இடம்பெற்றிருக்கின்றன. நந்தர் ஆட்சி செய்த காலம் கி.மு.413 - 322 எனப்படுகிறது. மன்னன் மகாபத்ப நந்தன் பெருஞ்செல்வன். அவனுடைய செல்வத்தினை அடையப் பெற்றாலும் பொருள் தேடப் பிரிந்து சென்ற தலைவர் அங்கே தங்க மாட்டார் என்று தோழியானவள் தலைவியிடம் கூறி அவளைத் தேற்றுகின்றாள். இதனை,

"நாமபடர் கூரும் அருந்துயர் கேட்பின்
நந்தன் வெறுக்கை எய்தினம் மற்றுஅவண்
தங்கலர் வாழி தோழி" (அகம்.251:4-6)

என்று அகநானூறு கூறுகிறது. நந்தர்கள் தம் பெருஞ்செல்வத்தினைப் பாடலிபுரத்தில் கங்கையாற்றின் படுகையில் மறைத்து வைத்தனர் என்னும் செய்தியினை அகநானூறு பதிவு செய்கிறது. இதனை,

"பல்புகழ் நிறைந்த வெல்போர் நந்தர்
சீர்மிகு பாடலிக் குழீஇக் கங்கை
நீர்முதல் கரந்த நிதியம் கொல்லோ" (அகம்.265:4-6)

என்று கூறுவதால் அறிய முடிகிறது.

மோரியர் (மௌரியர்) பற்றிய குறிப்புகள் புறநானூறு, அகநானூறு (69, 251, 265, 281) ஆகியவற்றுள் இடம் பெறுகின்றன. 'வெற்றி வேலினையுடைய மோரியர் வட பகுதி முழுதும் ஆண்டனர். அம்மோரியரது ஆரக்கால் சூழ்ந்த சக்கரம் செல்லுதற்காக வெட்டி வழி செய்யப்பட்ட வெள்ளி மலைக்கு அப்பால், நிலைபெற்று விளங்கும் பரந்த இடத்தை உடைய ஆதித்த மண்டிலத்தை ஒப்பவன் நீ (ஆதனுங்கன்)' என்று புறநானூறு குறிப்பிடுகிறது. இதனை,

"விண்பொரு நெடுங்குடைக் கொடித்தேர் மோரியர்
திண்கதிர்த் திகிரி திரிதரக் குறைத்த
உலக இடைகழி அறைவாய் நிலைஇய
மலர்வாய் மண்டிலத் தன்ன, நாளும்
பலர்புர வெதிர்ந்த அறத்துறை நின்னே" (புறம்.175:6-10)

என்பதனால் அறிய முடிகிறது. எனவே நந்தர், மோரியர் முதலான மன்னர்கள் ஆட்சி புரிந்துள்ள காலத்தின் அடிப்படையிலும் தமிழரின் தொன்மையினை எடுத்துரைக்க முடிகிறது.

E-ISSN: 2581-7140
Special Issue: Vol. 2, April-2019 Available at: www.ijtlls.com

**பாரதப் போர்**

பாரதப் போரினைப் பற்றிய குறிப்புகள் சங்க இலக்கியத்துள் இடம் பெறுகின்றன. பாண்டவர் ஐந்து பேருடன் கௌரவர் நூறுபேரும் போரிட்ட போது அவ்விரு படைகளுக்கும் உதியன் சேரலாதன் உணவு கொடுத்துள்ளதைப் *புறநானூறு* குறிப்பிடுகிறது.

"அலங்குளைப் புரவி ஐவரொடு சினைஇ
நிலம்தலைக் கொண்ட பொலம்பூந் தும்பை
ஈரைம் பதின்மரும் பொருது களத்தொழியப்
பெருஞ்சோற்று மிகுபதம் வரையாது கொடுத்தோய்" (புறம்.2:13-16)

இதனைப் பெரும்பாணாற்றுப் படையும் பதிவு செய்கிறது.

"ஈரைம் பதின்மரும் பொருதுகளத்து அவியப்
பேரமர்க் கடந்த கொடுஞ்சி நெடுந்தேர்
ஆராச் செருவின் ஐவர் போல" (பெரும்.415-417)

இருபெரும் படைகளுக்குப் பெருஞ்சோறு கொடுத்த காரணத்தால் இந்தச் சேரன் பெருஞ்சோற்றுதியன் சேரலாதன் என்று கூறப்பட்டான். பாரதப் போர் நடைபெற்ற காலம் கி.மு.1500 எனப்படுகிறது. அப்படியானால் இந்தச் சேரனின் காலம் கி.மு.1500ஆக இருந்திருக்க வேண்டும் என்பது புலப்படுகிறது.

தொல்லியல் கூறுகளில் இலெமூரியா என்னும் குமரிக் கண்டம், தமிழரின் பிறப்பிடம், பண்டைத் தமிழரின் நில அமைப்பு, நந்தர், மோரியர் ஆகியோரின் குறிப்புகள், பாரதப் போர் நிகழ்வு ஆகியன இலக்கியச் சான்றுகளாக அமைந்து தமிழரின் தொன்மையினை அறிவதற்குத் துணைபுரிகின்றன.

**முதுமக்கள் தாழி**

தொல்லியல் அகழ்வில் முதுமக்கள் தாழிகள் குறிப்பிடத்தக்க இடம் பெற்றனவாகும். ஆதிச்சநல்லூரிலும், புதுவை அரிக்கமேட்டிலும் காணக்கிடைக்கும் முதுமக்கள் தாழிகள் தமிழர்களின் நாகரிகச் சின்னங்கள் எனப்போற்றத்தக்கன. சங்க காலத்தில் இறந்தோரைத் தாழியில் புதைப்பது பற்றிய குறிப்புகள் உள்ளன.

"கலம்செய் கோவே கலம்செய்கோவே
இருள் திணிந்தன்ன குரூஉத்திரன் பரூஉப்புகை
அகலிரு விசும்பின் ஊன்றும் சூளை
நனந்தலை மூதூர்க் கலஞ்செய் கோவே" (புறம்.228:1-4)

என்று மட்கலம் செய்பவனைப் பார்த்துப் புலவர் ஒருவர், 'சோழன் கிள்ளி வளவன் இறந்துபட்டனன். அவனை அடக்கம் செய்ய வேண்டும். அவன் புகழுக்குத் தக்கவாறு தாழி செய்ய வேண்டுமே நீ எங்ஙனம் செய்யப் போகிறாய் என்று கேட்கிறார். இதன்வழி புதைக் குழிகள், கல்லறைகள், தாழிகள் ஆகியன இறந்தோரைப் அடக்கம் செய்ய சங்க காலத்தில் பயன்பட்டுள்ளன என்பது புலப்படுகிறது. போரில் இறந்த வீரர்களைப் புதைப்பது மட்டுமின்றி அவன் நினைவாகக் கல்நட்டு வழிபாடு செய்தலும் உண்டு. இவற்றை நடுகல், வீரக்கல், மாசதிக்கல் என வழங்கினர். ஒரு நாகரிகத்தின் இடையறாத தொடர்ச்சியாக விளங்கும் இந்நிகழ்வினைச் சங்க இலக்கியம் குறிப்பிடுகிறது.

"பரலுடை மருங்கிற் பதுக்கை சேர்த்தி
மரல்வகுத்து தொகுத்த செம்பூங் கண்ணியாடு
அணிமயிற் பீலி சூட்டிப் பெயர் பொறித்து
இனிது நட்டனரே கல்லும்" (புறம்.264:1-4)

E-ISSN: 2581-7140
Special Issue: Vol. 2, April-2019 Available at: www.ijtlls.com

பல ஆயிரம் ஆண்டுகள் அயல் நாகரிகத்தினாலும் வழக்கத்தினாலும் பாதிக்கப்படாத ஒரு முதுகுடியின் மரபுவழிச் செயல்களைச் சங்க இலக்கியம் எடுத்துரைப்பதன் வாயிலாக அதன் தொன்மையினை அறிந்திட முடிகிறது.

'தமிழரின் தொன்மைக்கு நாள்தொறும் வளர்ந்து வரும் சான்றாக உருவெடுத்து வருவது மண்பாண்டச் சில்லுகள். இவை கி.மு.3ஆம் நூற்றாண்டைச் சேர்ந்தனவாகக் கணிக்கப்படுகின்றன. அவை நகரிலிருந்து மிகுந்த தொலைவிலுள்ள கிராமங்கள் வரை பரவலாகக் கிடைக்கின்றன. அவை பெயர் பொறிக்கப்பட்டவை. அரிக்கமேடு அகழ்வு ஆய்வுகள் குறிப்பிடத்தக்கவை.' இவற்றை ஆய்ந்த ஐராவதம் மகாதேவன் 'சங்க காலத் தமிழகம் பற்றிய புரிதலுக்கு இவை களஞ்சியம் எனக் கருதுகிறார்.'[7] வ.செ. குழந்தை சாமி அவர்களின் கருத்தும் இங்கு நோக்கத்தக்கன.

**கல்வெட்டுகள்**

தமிழரின் தொன்மையினை அறிவதற்குக் கல்வெட்டுகள் பெரிதும் துணைபுரிகின்றன. இதனை, ஐராவதம் மகாதேவன் தமது நாற்பது ஆண்டு காலக் கல்வெட்டு ஆய்வுகளின் அடிப்படையில் தந்துள்ள தகவல்களை, வா.செ. குழந்தை சாமி தொகுத்துள்ளார். அவை,

'கி.மு. இரண்டாவது நூற்றாண்டைச் சார்ந்த மாங்குளம் கல்வெட்டுகள் வழுதி, நெடுஞ்செழியன் என்ற அரசர்கள், சிற்றரசர்கள் பற்றிப் பேசுவதாகக் கூறுகிறா். வழுதி, செழியன் என்பன பாண்டிய மன்னர்களின் பெயர்கள். சங்க நூல்கள் ஆரியப்படை கடந்த நெடுஞ்செழியன் (புறம்.183) பற்றியும், தலையாலங்கானத்துச் செரு வென்ற நெடுஞ்செழியன் (புறம்.18, 19) பற்றியும், பேசுகின்றன.

புகளூர் கல்வெட்டுகள் கி.பி.இரண்டாம் நூற்றாண்டைச் சேர்ந்தவை. அவை கோ ஆதன்சேரல் இரும்பொறை பற்றிக் குறிப்பிடுகின்றன. பதிற்றுப்பத்து செல்வக்கடுங்கோ வாழிய ஆதன் பற்றிக் குறிப்பிடுகிறது.

புகளூர் கல்வெட்டு பெருங்கடுங்கோ பற்றிப் பேசுகிறது. பதிற்றுப்பத்து பெரும் சேரல் இரும்பொறை பற்றிக் குறிப்பிடுகிறது. புகளூர் கல்வெட்டு இளங்கடுங்கோ பற்றிப் பேசுகிறது. பதிற்றுப்பத்து இளஞ்சேரல் இரும்பொறை பற்றிப் பாடுகிறது. இரும்பொறை என்பது பட்டப் பெயர். பெருங்கடுங்கோ, பட்டம் சூடிய பொழுது பெருஞ்சேரல் இரும்பொறை என்றும், இளங்கடுங்கோ, பட்டம் சூடிய பொழுது இளஞ்சேரல் இரும்பொறை என்றும், அழைக்கப்பட்டனர். சங்கப் புலவர்களான பாலைபாடிய பெருங்கடுங்கோவும், மருதம் பாடிய இளங்கடுங்கோவும் இவர்கள் என எண்ணப்படுகிறது'[8] சங்க நூல்களில் பாடப்படும் அரசர்கள், குறுநில மன்னர்கள், வள்ளல்கள் என்போர், நாம் அறிந்த அளவில் வாழ்ந்திருந்தாலும் இலக்கியத்தை வரலாறு என வரலாற்று அறிஞர்கள், ஆய்வாளர்கள் எளிதில் ஏற்க மாட்டார்கள். அவ்வகையில் கல்வெட்டுகள் துணைநின்று, தமிழரின் தொன்மையினை எடுத்துரைத்துள்ளன.

**செப்புக்காசுகள்**

செப்புக் காசுகள் சங்க காலத்தின் தொன்மையினை எடுத்துரைக்கின்றன. செப்புக் காசுகள் பற்றி டாக்டர் இரா. கிருஷ்ணமூர்த்தி ஆராய்ந்து தந்துள்ள ஆதாரங்களை வ.செ.குழந்தைசாமி தொகுத்துள்ளார். (R. Krishnamurty, Sangam Age Tamil Crins, Arret Publications, Madras, 1997)

'பெருவழுதி எனப்பெயர் பொறிக்கப்பட்ட நாணயத்தைக் கண்டு பிடித்திருக்கிறார் (பக்.20) இது கி.மு. இரண்டாவது நூற்றாண்டைச் சேர்ந்ததாகக் கருதப்படுகிறது. வழுதி என்பது பாண்டியர்களைக் குறிக்கும்.

E-ISSN: 2581-7140
Special Issue: Vol. 2, April-2019 Available at: www.ijtlls.com

டாக்டர் இரா.கிருஷ்ணமூர்த்தி, மலையமான் பெயர் பொறித்த செப்பு நாணயங்களையும் காரி என்ற பெயர் பொறித்த செப்பு நாணயங்களையும் கண்டு பிடித்திருக்கிறார். இவை கி.மு. முதல் நூற்றாண்டு முதல் கி.பி. முதல் நூற்றாண்டு காலப்பகுதியினவாக இருக்கக்கூடும். இவர்கள் கடையெழு வள்ளல்கள் பரம்பரையைச் சார்ந்தவர்களாக எண்ணப்படுகிறது. காரி பெயர் பொறித்த நாணயம் மலையமான் திருமுடிக் காரியைக் குறிப்பதாகும்.

டாக்டர் இரா.கிருஷ்ணமூர்த்தி அண்மைக் காலத்தில் கரூர் அமராவதிக் கரையிலிருந்து குட்டுவன் கோதை என்று பெயர் பொறித்த வெள்ளி நாணயத்தைக் கண்டெடுத்திருக்கிறார். (பக்.103). இது கி.பி முதல் நூற்றாண்டைச் சேர்ந்ததாக இருக்கலாம் என்பது அவர் கணிப்பு சேரமான் குட்டுவன் கோதை என்ற சேர மன்னன் பற்றிச் சங்கப் பாடலில் (புறம்.54) பேசப்படுகிறது.

மேலும் டாக்டர் இரா. கிருஷ்ணமூர்த்தி, மாக்கோதை நாணயம் பற்றி எழுதுகிறார் (பக்.100). சேரமான் கோட்டம்பலத்துச் துஞ்சிய மாக்கோதை பற்றிப் புறநானூறு பேசுகிறது.’[9] இன்ன ஆதாரங்களினாலும் செப்புக்காசுகள் சங்க காலத்தில் தொன்மையினை எடுத்துரைக்கின்றன. அவ்வகையில் தமிழினத்தின் தொன்மையினை அறிவதற்கு, முதுமக்கள் தாழிகள், கல்வெட்டுகள், செப்புக்காசுகள் என்பன வரலாற்றுச் சான்றுகளாக அமைந்து துணைபுரிந்துள்ளன.

**இலக்கணச் சான்றுகள் - தொல்காப்பியம்**

தொல்காப்பியம் நமக்குக் கிடைத்துள்ள முதல் இலக்கண நூலாகும். இருப்பினும், தொல்காப்பியர் தமக்கு முன்பிருந்துள்ள இலக்கணப் புலவர் பலரினைப் பற்றி 256 இடங்களில் குறிப்பிட்டுள்ளார். ‘என்மனார் புலவர், என்ப, மொழிப’, முதலான தொடர்கள் தொல்காப்பியத்திற்கு முன்பு பல இலக்கண நூல்கள் இருந்துள்ளன என்பதும், அவற்றுக்கும் முன்பே மிகப் பல இலக்கியங்கள் இருந்துள்ளன என்பதும் தோன்றுகிறது.

தொல்காப்பியரின் காலம் பற்றி இலக்கிய மற்றும் வரலாற்று அறிஞர்கள் வரையறை செய்துள்ளனர்.

‘தொல்காப்பியர் நிலம் தரு திருவின் பாண்டியனின் காலத்தவர். இந்தப் பாண்டியனின் காலம் கி.மு.350 என்றார். எம் சீனிவாச ஐயங்கார் (Tamil Studies). பி.சா. சுப்பிரமணிய சாஸ்திரியார் தொல்காப்பியர் காலத்தினை கி.மு.200-கி.மு.100 என்று குறிப்பிடுகிறார். ரா.இராகவையங்கார் கி.மு-3ஆம் நூற்றாண்டு என்கிறார் ‘கிறித்து பிறப்பதற்குச் சில நூற்றாண்டுகளுக்கு முன்பே இத்தலை நூல் (தொல்காப்பியம்) எழுதப்பட்டு விட்டது என்பது ஒருதலை’ என்றார் க.ப.அறவாணன்’.[10] மேலும் சில பேராசிரியர்கள் தொல்காப்பியரின் காலத்தினை வரையறை செய்துள்ளனர்.

1. மு. ஆரோக்கிய சாமி - கி.மு.400 - கி.மு.300 (Classical age of Tamils, p.8)
2. மு. வரதராசனார் - கி.மு.500 - கி.மு.200
3. மா. இராசமாணிக்கனார் - கி.மு.500
4. பொற்கோ. - கி.மு.500
5. கே.ஏ. நீலகண்ட சாஸ்திரியார் - கி.மு.600 (History of South India, p.66)
6. சி. இலக்குவனார் - கி.மு.1000 (Tolkppiyam, p.8 )
7. மறைமலையடிகளார் - கி.மு.5000
8. வெள்ளைவாரணனார் - கி.மு.5320 (தமிழிலக்கிய வரலாறு, பக்.12)
9. நா. மகாலிங்கம் - கி.மு.10,676

E-ISSN: 2581-7140
Special Issue: Vol. 2, April-2019 Available at: www.ijtlls.com

இவற்றின் அடிப்படையில் தொல்காப்பியரின் காலம் கி.மு.ஆறாம் நூற்றாண்டுக்கு முந்தையது என்று பெரும்பாலான ஆய்வாளர்கள் கருதுகின்றனர். இதன்படிச் சங்க இலக்கியத்தின் காலத்தினை அறிவது பொருத்தமுடையதாகிறது. இன்று நமக்குக் கிடைத்துள்ள சங்க இலக்கியங்கள் மூன்றாம் சங்க காலத்தில் தோன்றியுள்ள நூல்களாகும். இந்நூல்கள் முழுமையாகவும், கால அடிப்படையிலும் தொகுக்கப்படவில்லை. இதற்கு முன்பு இரண்டு சங்கங்கள் இருந்துள்ளன என்பதும் அக்காலக் கட்டத்தில் இசைத் தமிழ் நூல்களான பெருநாரை, பெருகுருகு, முறுவல், சயந்தம், செயிற்றியம், குணநூல் முதலானவை இருந்து அழிந்துள்ளன என்பதும் இறையனார் களவியல் மூலம் அறியமுடிகிறது. இது குறித்து மயிலை சீனி வேங்கடசாமி ‘மறைந்து போன தமிழ்நூல்கள்’என்று ஒரு நூல் எழுதியுள்ளமை குறிப்பிடத்தக்கதாகும்.

தொல்காப்பியர் எழுத்து, சொல், பொருள், யாப்பு, அணி பற்றி நூல் எழுதியுள்ளார். அகத்தியம் இயல், இசை, நாடகம் என்னும் மூன்றனுக்கும் உரிய இலக்கணம் கொண்டதாகக் கூறப்படுகிறது. இதனடிப்படையில் அகத்தியரின் காலத்திற்கு முன்பே இந்த மூன்று துறைகளிலும் அளவற்ற நூல்கள் பெருகி வளர்ந்து செழித்திருக்க வேண்டும் என்று தோன்றுகிறது. அவை இயற்கையின் பேரழிவினால் கடல் நீருக்குள்ளும் அறியாமை காரணமாகக் கரையானினாலும் பல சுவடிகள் அழிந்துள்ளன. கிறித்துக்கு முன்பு ஆயிரத்துக்கும் மேற்பட்ட ஆண்டுக் காலத்திற்குரிய அரிய நூல்கள் அழிந்து விட்டுள்ளன. அந்த வகையில் தற்போதுள்ள சங்க நூல்கள் கி.மு.500 ஆம் காலக் கட்டத்திலிருந்து தொடக்கம் பெற்றவை என்று கூற முடிகிறது.

‘தொல்காப்பியம், புறநானூறு, அகநானூறு, நற்றிணை, குறுந்தொகை, ஐங்குறுநூறு, பதிற்றுப்பத்து. பரிபாடல், கலித்தொகை, பத்துப்பாட்டு, திருக்குறள், சிலப்பதிகாரம், மணிமேகலை என்பன சங்க நூல்கள் எனப்படும்.’[11] என்னும் கருத்தின் மூலம் சங்க இலக்கியத்துடன் தொல்காப்பியத்தினை ஒருங்கு வைத்துள்ளமை சங்க காலத்தின் தொன்மைக்குச் சான்றாக அமைந்துள்ளன.

சங்க இலக்கியத்தின் காலத்தினை, தொல்காப்பியர் காலத்தின் அடிப்படையில் இலக்கிய அறிஞர்களும். வரலாற்ற ஆய்வாளர்களும் வரையறை செய்துள்ளனர். அவை,

1. க. வெள்ளைவாரணர் - கி.மு.5320
2. மறைமலையடிகள் - கி.மு.3500
3. கா.சு. பிள்ளை - கி.மு.2000
4. க. நெடுஞ்செழியன் - கி.மு.1400
5. மா. கந்தசாமி - கி.மு.1400
6. ச.சோ. பாரதியார் -கி.மு.1000
7. தேவநேயப் பாவாணர் - கி.மு.700
8. சி. இலக்குவனார் - கி.மு.700
9. இரா. இளங்குமரன் - கி.மு.700
10. கே.ஏ. நீலகண்ட சாஸ்திரி - கி.மு 600
11. மு. வரதராசனார் - கி.மு.500
12. மா. இராசமாணிக்கனார் - கி.மு.500
13. ச. கைலாசபதி - கி.மு.500
14. கே.கே. பிள்ளை - கி.மு.400
15. எம். சீனிவாச ஐயங்கார் - கி.மு.350



International Journal of Tamil Language and Literary Studies
*A Bi-Yearly Peer-Reviewed International Journal*
E-ISSN: 2581-7140
Special Issue: Vol. 2, April-2019 Available at: www.ijtlls.com



சங்க காலத்தின் தொடக்கம் கி.மு. மூன்றாம் நூற்றாண்டிலிருந்து கி.மு. ஐந்தாம் நூற்றாண்டினதாகக் கருத்தில் கொண்டாலும் சங்க காலம் என்பது கி.பி. மூன்றாம் நூற்றாண்டில் முடிவடைந்து விடுகிறது. இவற்றின் அடிப்படையில் தமிழினமான சங்க காலத்தின் தொன்மையினை அறிவதற்குத் தொல்காப்பியம் ஆதார நூலாக விளங்கி துணைபுரிகின்றது.

**தொகுப்புரை**

தமிழரின் தொல்லியல் கூறுகளை அறிவதற்கு இலக்கியச் சான்றுகளான, இலெமூரியா என்னும் குமரிக்கண்டம், தமிழரின் பிறப்பிடம், பண்டைத் தமிழரின் நில அமைப்பு, நந்தர், மோரியர் ஆகியோரின் குறிப்புகள் பாரதப் போர் ஆகியனவும் வரலாற்றுச் சான்றுகளான, முதுமக்கள் தாழிகள், கல்வெட்டுகள், செப்புக் காசுகள் ஆகியனவும் இலக்கணச் சான்றாகத் தொல்காப்பியமும் தமிழரின் தொன்மையினைப் பொருத்தமுற விளங்கச் செய்கின்றன.

**சான்றெண் விளக்கம்**

1. Encyclopaedia Britanica Vol.11, p.530.
2. Encyclopaedia of India (Agan Prakashan, N. Delhi)
3. செவ்வியல் மொழி தமிழ், முனைவர் மலையமான், ப.108
4. மேலது, ப.108
5. History of the Tamils P.T.Srinivasa Iyengar p.3
6. சிலம்பு.8:1-2
7. உலகச் செவ்வியல் மொழிகளின் வரிசையில் தமிழ், வ.செ. குழந்தை சாமி, ப.34
8. மேலது. ப.33
9. மேலது. ப.3
10. தொல்காப்பியக் களஞ்சியம்
11. கால ஆராய்ச்சி, மா.இராசமாணிக்கனார். ப.14.

E-ISSN: 2581-7140
Special Issue: Vol. 2, April-2019 Available at: www.ijtlls.com

# தொல்லியலும் கல்வெட்டியலும்
# Archaeology and the Study of Culverts

**முனைவர் மோ.ஜ.மகேஸ்வரி,** இணைப்பேராசிரியர், தமிழ்த்துறை,
ஸ்ரீ சாரதா மகளிர் கல்லூரி, சேலம்-16.

## Abstract

*The paper traces the origins of archaeology and the study of culverts in the Tamil region. It gives a very clear detail on the proponent scholars of archaeology. The study scrutinizes the types of archaeological excavations done all over the world. It quotes down the roles of the archaeologist and the rules for them to follow. Hence, the paper attempts all sorts of Tamil linguistic and archaeological explanations are detailedin the paper.*

**Keywords:** Archaeology, Study of Culverts, Tamil Culture

ஒரு நாட்டின் தொன்மையான வரலாற்றை அறிந்து கொள்வதற்குப் பெரிதும் துணை நிற்பது தொல்லியல் சான்றுகளே. கால வெள்ளத்தில் அழிவுபட்ட பண்பாட்டுக் கூறுகளைப் பயனுறும் வகையில் வெளிக்கொணர்வதே தொல்லியல் ஆய்வின் நோக்கமாகும். தொல்லியல் அகழ்வாய்வின் மூலம் கிடைக்கப்பெற்ற பண்டைய பண்பாட்டுச் சின்னங்கள் யாவும் நிலமகள் மகிழ்ந்தளித்த வரலாற்றுக் கொடையாகும். தொல்லியல் துறையில் முக்கிய அங்கம் வகிக்கும் ஒரு பிரிவு கல்வெட்டியல் ஆகும். கி.மு.3ஆம் நூற்றாண்டிலிருந்து பாறைகளிலும் குகைகளிலும் குறியீடுகளையும் எழுத்துக்களையும் பொறிக்க நம் முன்னோர்கள் ஆர்வம் காட்டினர். எழுத்துக்கள் மனிதன் எண்ணங்களைப் பிரதிபலிக்கும் ஓர் அற்புதப்படைப்பாகும். அந்த வகையில் தொல்லியல், கல்வெட்டியல் குறித்து கூறுவதாக இக்கட்டுரை அமைகின்றது.

**தொல்லியல் - விளக்கம்**

தொல்பொருளியல் என்பது பழமையான பொருட்கள் என்று பொருள்படும். ஆர்க்கியாலஜி என்ற ஆங்கிலச் சொல்லின் தமிழாக்கம் ஆகும். இந்த ஆங்கிலச் சொல்லும் கிரேக்க மொழியிலிருந்து வந்தது. ஆர்கயாஸ் (Archaios) என்ற கிரேக்கச் சொல் பழமை ஆரம்பம் என்றும், லேகோஸ் (Logos) என்பது இயல் அல்லது அறிவியல் பூர்வமாக என்றும் பொருள் தருகிறது. இந்த இரண்டு சொற்களையும் இணைத்து ஆர்க்கியாலாஜி என்ற சொல் பிறந்தது. தமிழில் பழம் பொருட்கள் பற்றிய கல்வி என்ற பொருளில் தொல்பொருளியல் அழைக்கப்படுகிறது.

**தொல்லியல் குறித்து அறிஞர்கள் தரும் விளக்கங்கள்**

**லியோனார்டு காட்ரல் (Leonard Cottrell)**

‘மனிதன் மண்ணில் தோன்றிய காலம் முதல் கடைசி உயிரினம் இப்புவியில் வாழும் காலம் வரை உள்ள நிகழ்வுகளை விளக்குவது தொல்லியல் என்கிறார்’.

**கிளெயின் டேனியல் (Glyn Daniel)**

‘தகுந்த ஆதாரங்களுடன் வரலாற்றைக் குறிப்பாகக் கலை, கட்டிடக்கலை போன்றவற்றை விவரிப்பதில் தொல்லியல் முக்கிய பங்கு வகிக்கிறது என்று கூறுகின்றார்’.

E-ISSN: 2581-7140
Special Issue: Vol. 2, April-2019 Available at: www.ijtlls.com

**தொல்லியலின் வகைகள்**

தொல்லியல் என்பது பழமையான பொருட்கள் அறிவியல் பூர்வமாக வெளிப்படுத்தும் துறை ஆகும். ஆனால் கால கட்டங்களுக்கு ஏற்பவும் பொருட்கள் கிடைக்கும் பகுதிகளை வைத்தும், பொருட்களின் பிரிவை வைத்தும், அவை சேகரிக்கப்படும் முறையை வைத்தும் தொல்லியல்துறை வல்லுநர்கள் தொல்லியலை வகைப்படுத்துகின்றனர்.

**மத்தியதரைப் பகுதி தொல்லியல்**

கிரேக்க ரோமானியத் தொல்லியல் பிரிவை மத்திய தரைக்கடல் தொல்லியல் என்று அழைக்கின்றனர். இந்தப் பகுதியில் தொல்லியல் சான்றுகள் அதிக அளவில் கிடைக்கின்ற காரணத்தினால் தொல்லியல் சுரங்கம் என்றும் மத்திய தரைக்கடல் நீரடி அருங்காட்சியம் என்றும் அழைக்கின்றனர்.

**எகிப்தியத் தொல்லியல்**

எகிப்து நாட்டின் பாரம்பரியமிக்க பிரமிடுகளும், அங்கே கிடைக்கும் அரிய கலைச் செல்வங்களுமே எகிப்தியத் தொல்லியல் என்னும் தனிப்பிரிவு தோன்றுவதற்குக் காரணமாயிற்று பழங்கால மனிதனின் நாகரிகம், எழுத்துமுறை போன்றவற்றைத் தெளிவாக எகிப்திய தொல்பொருளியல் விளக்குகின்றது.

**வரலாற்றுக் காலத்திற்கு முற்பட்ட தொல்லியல்**

பல இலட்சம் ஆண்டுகளுக்கு முன்னர் தோன்றிய மனிதனைப் பற்றிய எந்தவித எழுத்து ஆவணங்களும் நமக்குக் கிடைக்கவில்லை. எனவே மனிதனின் தோற்றத்தையும், மனித நாகரிக வளர்ச்சியையும் அறிந்து கொள்வதற்குமக் தொல்லியல் சான்றுகளே முதன்மைச் சான்றுகளாகத் திகழ்கின்றன.

**உலோகக் காலத்தொல்லியல்**

பெருங்கற்காலத்தின் இறுதியில் இரும்புக் காலம் தொடங்குகின்றது. இதனைத் தொடர்ந்து வெண்கலக் காலம், செம்புக்காலம் தொடங்குகின்றது. இக்கால கட்டங்களில் மனிதன் தனக்குத் தேவையான ஆயுதங்களையும் ஆடை அணிகலன்களையும் உற்பத்தி செய்யத் தொடங்கினான். இவை உலோகக் கால தொல்லியல் எனப்படுகின்றது.

**வரலாற்றுக் காலம்**

வரலாற்றுக் கால நாகரிகங்களைப் பற்றி அறிந்துகொள்வதற்குத் தொல்லியல் சான்றுகளோடு இலக்கியச் சான்றுகளும் துணைநிற்கின்றன. வரலாற்றுக் காலத் தொல்லியல் என்பது பண்டைக்காலத் தொல்லியல், மத்திய காலத்தொல்லியல், தொழிற்தொல்லியல், பொருளியல் தொல்லியல், இதைத் தொல்லியல் கோயில் மற்றும் பௌத்தத் தொல்லியல் என்று பலி பிரிவுகளாகப் பிரிந்து வளர்ச்சியடைந்துள்ளது.

**தொல்பொருளியல் பொருளாதாரம்**

தொல்லியல் ஆய்வின் மூலம் கிடைக்கும் பொருட்களைக் கொண்டு அக்கால மக்களின் பொருளாதார வாழ்க்கையை அறியலாம். நமது தொன்மையான பயிரியல் கூறுகள் மனிதனின் பொருளாதாரக் காலகட்டநிலை அவன் உணவு, உறைவிட முறைகள், இயற்கையின் மாறுபாடுகளுக்கேற்ப மனிதனின் இயங்கிவந்த நிலை போன்றவற்றைத் தெரிந்து கொள்ள அவசியமான ஒன்றாகப் பொருளாதாரத் தொல்லியல் விளங்குகின்றது.

**இனவியல் தொல்பொருளியல்**

இம்முறை சமூக-மானுடவியல் நோக்கில் தொல்பொருளியலை ஆராயும் முறையாகும். சில இன மக்கள் பிற மக்களோடு கலந்து வாழாமல் தனித்தே குறிப்பிட்ட பகுதிகளில் வசித்து வருகின்றார்கள். அவர்களின் சமூகக் கலாச்சாரப் பழக்கவழக்கங்களைக்

E-ISSN: 2581-7140
Special Issue: Vol. 2, April-2019 Available at: www.ijtlls.com

காணும்போது அகழ்வாய்வில் கண்டெடுக்கப்பட்ட பல பொருட்களுக்கு விடைகிடைக்கின்றது. அவர்கள் பயன்படுத்திய பொருட்கள், வீட்டு அமைப்புமுறை, இறந்தவர்களைப் புதைக்கும் முறை போன்ற அம்மக்கள் கடைபிடிக்கும் பழக்கவழக்கங்களைக் கொண்டு பண்டைக் காலத்தில் மக்கள் விட்டுச் சென்ற தடயங்களோடு ஒப்பிட்டு ஆராய்வதற்கு இனவியல் தொல்பொருளியல் உதவுகின்றது.

**தொல்லியல் வல்லுநர்களின் கடமைகள்**

1. தொல்பொருள் பணி உடலை வறுத்தும் பணி மட்டுமல்ல. நேரம் காலம் பாராமல் பணிபுரிந்தால் தான் எண்ணிய செயல்களைச் செய்ய முடியும்.
2. திட்டமிட்டு எந்த ஒரு ஆய்விலும் அவர்கள் ஈடுபட வேண்டும்.
3. பணி நுட்பம் தெரிந்து செயல்பட வேண்டும்.
4. வரலாற்றுச் செய்திகளைத் தரும் பொருட்கள் நிறைந்த பகுதிகளைக் கண்டறிவதில் ஆர்வம் கொண்டவர்களாக இருக்க வேண்டும்.
5. அகழ்வாய்வுக்கான பகுதியைத் தேர்ந்தெடுக்கும் போது மத்திய மாநில அரசுகளுக்கும் அவ்வாய்வு மேற்கொள்வதால் ஏற்படும் வரலாற்றுப் பலனை எடுத்துக் கூறி நிதியுதவி பெரும் திறன் படைத்தவராக இருத்தல் வேண்டும்.
6. வரலாற்றுச் சின்னங்களின் பெருமையை மக்கள் அறியும் வண்ணம் நயமாக எடுத்துரைத்து அப்பொருட்களைச் சேகரித்து அருங்காட்சியகங்களுக்குக் கொண்டு வந்து சேர்க்கும் பேச்சு வல்லுநர்களாகவும் செயல்பட வேண்டும்.
7. தாம் கண்டுபிடித்தவற்றைத் தொல்லியல் ஆய்வில் ஆர்வம் கொண்டவர்களுக்கு எடுத்து கூறவேண்டும். அரசின் உதவியுடன் அப்பகுதியின் வரலாற்றின் சிறப்பை எழுதி பலகையில் வைத்தும், வேலிகள் அமைத்தும் பாதுகாக்க ஏற்பாடு செய்ய வேண்டும்.
8. தொல்லியல் வல்லுநர்கள் சிற்பங்கள் அணிந்துள்ள ஆடை, ஆபரணங்களின் வகைகள், சிகை அலங்காரம், ஆசனங்கள் ஆகியவற்றை தெளிவாக் கூறும் திறன் கொண்டவர்களாக இருக்க வேண்டும்.
9. கலைப் பொருட்களை தொல்லியல் வல்லுநர்களால் மட்டும் பாதுகாக்க முடியாது. அதனால் உழவாரப்பணி, ஆன்மீக அமைப்புகள், மடாலயங்கள், ஊர்பெரியவர்கள், கல்வி நிறுவனங்கள், சங்கங்கள் இவர்களின் உதவியும் நட்பும் பெறும் எண்ணங்கள் உடையவராக இருக்க வேண்டும்.

**தொல்பொருளியலின் பயன்பாடுகள்**

தொல்லியல் சான்றுகளை உபயோகித்து வரலாறு எழுதுவது என்பது தனிக்கலை, தொல்லியலாளர்களின் முயற்சியால்தான் 500 ஆயிரம் ஆண்டுகளுக்கு முற்பட்ட மனித சமூக வரலாற்றை நாம் அறியமுடிகின்றது. நம்பகமான வரலாறு எழுதுவதற்குச் சான்றுகளை அறிவியல் பூர்வமாகத் தேடி ஆராய்ந்து கலைநுட்பத்துடன் படைக்கும் ஆற்றல் அவசியம் ஆதாரம் இல்லாத வரலாறு உயிரற்ற உடலைப் போன்றது. வரலாற்றுக்கு முற்பட்ட காலத்தில் வாழ்ந்த மக்களைப் பற்றிக்கூட நாம் தொல்லியல் கண்டுபிடிப்புகளின் மூலம் உணரலாம்.

**தொல்பொருளியலின் துவக்கம்**

தொல்பொருளியலின் ஆர்வம் கிரேக்கர்களிடம் மிகவும் அதிகமாகக் காணப்பட்டது. கிரேக்கர்களை எகிப்திய மற்றும் பாரசீக மக்களின் வாழ்க்கை முறை வெகுவாகக் கவர்ந்தது. பல்வேறு காலங்களில் வாழ்ந்த மக்கள் பயன்படுத்திய உலோகங்களின் அடிப்படையில் நாகரிகங்களின் காலங்களை,

1. பொற்காலம்

E-ISSN: 2581-7140
Special Issue: Vol. 2, April-2019 Available at: www.ijtlls.com

2. வெள்ளிக்காலம்
3. பித்தளைக் காலம்
4. புராண நாயகர்களின் காலம்
5. இரும்புக்காலம்

என ஐந்து வகையாகப் பிரித்தார்கள்.

**இந்தியாவில் தொல்லியல் வளர்ச்சிக்கு வித்திட்டவர்கள்**

இந்திய மன்னர்களால் போற்றிப் பாதுகாக்கப்பட்ட இக்கலைச் செல்வங்களின் அருமையை உலகிற்கு அறியச் செய்த பெருமை ஆங்கிலேய அறிஞர்களையே சாரும். ஆசியாவின் புராதனப் பெருமைகளை வெளிக்கொணர ஒரு அமைப்பை ஏற்படுத்தி அரிய பணியைச் செய்தவர் சர் வில்லியம் ஜோன்ஸ் என்பவர் ஆவார். சார்லஸ் வில்கின்ஸ், கலோனல் கோயின் மெக்கன்சி, ஜெம்ஸ்பிரின்ஸப், கலோனல் மிடோஸ் டைய்லர், மேஜர் கலோனல் அலெக்ஸாண்டர் கன்னிங்ஹாம், ராபர்ட் புரூஸ்பூட், ஜேம்ஸ்பர்கெஸ், கர்சன் பிரபு, சர்ஜான் மார்'ல், சர்மார்டிமர் வீலர் போன்றோர் தொல்லியல் துறையின் முன்னோடிகளாவர்.

**கல்வெட்டியல்**

பண்டைய வரலாற்றைத் தெரிந்து கொள்ள உதவும் பல்வேறு சான்றுகளில் கல்வெட்டுக்கள் மிக முக்கியமானவை. கல்லில் வெட்டப்பட்ட எழுத்துக்களைக் கல்வெட்டுக்கள் என்று கூறுகிறோம். கல்லில் எழுத்துக்களைப் பொறித்தால் அவை அழியாமல் நிலைத்து நிற்கும் என்பதை முன்னோர் கண்டனர்.

“இளமையில் கல்வி சிலையில் எழுத்து“
“நல்லார் ஒருவர்க்குச் செய்த உபதேசம்
கல்மேல் எழுத்துப்போல் காணுமே“

என்ற தொடர்கள் இதனை விளக்கும்.

கோயில்களுக்குக் கொடுத்த கொடைகளையும், கோயிலில் செய்த திருப்பணிகளையும் ஊரார் சபையார் முடிவுகளையும், அரசனது ஆணைகளையும் கோயிலில் கல்வெட்டுக்களாகப் பொறித்து வைத்தனர். புண்ணியத்திற்காகவும், புகழுக்காகவும் பொறித்து வைத்த கல்வெட்டுக்கள்தான் இன்று நமக்கு அக்கால வரலாற்றை அறிவிக்கும் சான்றுகளாகத் திகழ்கின்றன. அவை பெரும்பாலும் உரை வடிவிலும் சில இடங்களில் பாடல் வடிவிலும் காணப்படும்.

தொல்லியல் துறையில் முக்கிய அங்கம் வகிக்கும் ஒரு பிரிவு கல்வெட்டியல் ஆகும். கி.மு.3ஆம் நூற்றாண்டிலிருந்து பாறைகளிலும் குகைகளிலும் குறியீடுகளையும் எழுத்துக்களையும் பொறிக்க நம் முன்னோர்கள் ஆர்வம் காட்டினர். பிற்காலத்தில் உலகின் வரலாற்றுப் போக்கினைத் தெரிந்து கொள்ள இவை முதன்மை சான்றுகளாக நின்று உதவுகின்றன.

**இந்தியாவில் எழுத்துகளின் தோற்றம்**

பழங்கால மனித இனம் கூடிவாழவும் சிந்திக்கவும் தன் கருத்துகளைப் பிறரிடம் கூறவும் முற்பட்ட பொழுது ஒலிகளை எழுப்பினான். பின் தன் தங்கும் குகைகளில் சித்திரங்களைத் தனக்குக் கிடைத்த பச்சிலைகளைக் கொண்டு தீட்டினான். அவற்றிலேயே தன் எண்ணங்களை வெளிப்படுத்தியும் குறியீடுகளில் வேறுபடுத்தியும் காட்டினான். பின்பு குறியீடுகளை எழுத்துகளாக மாற்றிக் கொண்டான்.

E-ISSN: 2581-7140
Special Issue: Vol. 2, April-2019 Available at: www.ijtlls.com

**சிந்துச்சமவெளியில் காணப்பட்ட எழுத்துகள்**

சிந்துச்சமவெளி நாகரிகத்தை 5000 ஆண்டுகளைக் கடந்து அரிய நாகரிகம் என்கிறோம். அங்கு அகழ்வாய்வில் கிடைத்த சுடுமண் முத்திரைகளில் எழுத்துகள் காணப்படுகின்றன.

**அசோகர் காலக் கல்வெட்டுகள்**

கல்வெட்டுகள் என்றாலே அசோகரின் பாறை கல்வெட்டுகள் தூண்கல்வெட்டுகள் எனப் பல பிரிவுகளைக் கூறலாம். அவைகள் பிராகிருதம், சமஸ்கிருதம் போன்ற மொழிகளிலும், பிராமி, கரோ'ட்டி எழுத்துகளாலும் எழுதப்பட்டுள்ளன.

**தமிழ் பிராமி**

தமிழ் மக்கள் கி.மு. மூன்றாம் நூற்றாண்டு முதல் தமிழ் பிராமி என்ற எழுத்துகளை எழுதினர். சமணத்துறவிகள் தங்கியிருந்த இடங்களில் இத்தகைய எழுத்துகளைக் காணலாம்.

**கிரந்த எழுத்துகள்**

தமிழ் மொழியைத் தெரிவிக்க தமிழில் பயன்படுவது போல வடமொழியை உணர்த்த வரும் இடங்களில் கிரந்த எழுத்துகள் பயன்படுத்தப்பட்டன. பல்லவர்களை அடுத்து பாண்டியர்களும், சோழர்களும் கல்வெட்டுகள், செப்பேடுகள், காசுகள் இவற்றில் கிரந்த எழுத்துகளைக் கையாண்டனர்.

**வட்டெழுத்து**

தமிழர்கள் தங்கள் வசதிக்காகவும், ஓலைச்சுவடிகள் போன்றவை சேதமடையாமல் இருக்கவும், அழகிற்காகவும் எழுதும் எழுத்துகளை வட்டெழுத்துகள் என்கிறோம். திரு. கோபிநாதராவ் போன்றவர்கள் தமிழ் எழுத்துகளிலிருந்து தான் வட்டெழுத்து வளர்ச்சி பெற்றது என்கின்றனர். கி.பி. 5ஆம் நூற்றாண்டிலிருந்து வட்டெழுத்துகள் கையாளப்பட்டிருக்கலாம் என்பதை தருமபுரி மாவட்டத்தில் கிடைத்த நடுகல்லில் உள்ள வட்டெழுத்துகளும் தென்னாற்காடு மாவட்டத்தில் திருநாதர் குன்றமலைக் கல்வெட்டில் காணப்படும் எழுத்துக்களை கொண்டு அறியமுடிகின்றது. தமிழகம் முழுவதும் பல நூற்றாண்டுகளாக நடைமுறையில் இருந்த வட்டெழுத்துகள் கேரள மாநிலத்தில் கி.பி. 17ஆம் நூற்றாண்டு வரை நடைமுறையிலிருந்தது தெரிய வருகின்றது.

**நிறைவுரை**

தொல்லியலும் கல்வெட்டியலும் தமிழர்களையும், தமிழ்மொழியையும் எப்பொழுது தோன்றியது என்பதை அறிந்து கொள்ளும் காலக்கண்ணாடி என்று சொன்னால் மிகையாகாது. இந்த இரு துறைகளும் தமிழக மக்களின் வாழ்க்கையோடு பின்னிபிணைந்து காணப்படுகிறது என்பதை தொல்லியலாளர்களும், கல்வெட்டாய்வாளர்கள் நிரூபித்து வருகின்றார்கள்.

**ஆதாரங்கள்**

1. தமிழ்நாடு அரசு தொல்லியல் துறை, சென்னை-600008.
2. கல்வெட்டு காலாண்டிதழ்-67, சூலை (2005) தமிழ்நாடு அரசு, தொல்லியல் துறை.
3. கல்வெட்டு மூலமும் விளக்கவுரையும், திரு.வை.சுந்தரேச வாண்டையர், பழனியப்பா பிரதர்ஸ் பதிப்பகம்.

E-ISSN: 2581-7140
Special Issue: Vol. 2, April-2019 Available at: www.ijtlls.com

# தொல்லியல் ஓர் தொடரியல்
# Archaeology, a Continious Logy

**இரா. மஞ்சுளா தேவி,** உதவிப்பேராசிரியர்,
நா.ம.ச.ச.வெள்ளைச்சாமி நாடார் கல்லூரி, நாகமலை, மதுரை – 625 019.

## Abstract

*The focus of the study has been planned to prove that archaeology is not only the scientific study of the ancient remnants but a continious study (logy) to identify and to commemorate the reputation of a society or culture or civilization. This discussion suggests that in Tamil identity, the field of archaeology has done its important part in finding the historical object of Tamil civilization and culture. Moreover, the screening moves to find the architecture and sculpture patterns, ancient remnants and the excavations done at Korkai, Adichanallur, Keeladi, Kodumanal and other areas of Tamil Nadu. Hence, the paper discloses the derivated details from the resources.*

**Keywords:** Copper Plates, Kasakudi, Tamil Kings

### தொல்லியல்

வரலாற்றுக்கு முந்தைய கால மனிதர்களையும் அவர்கள் பயன்படுத்திய பொருட்களையும் பற்றிப் படிப்பது தொல்லியல் ஆகும். தொல்லியல் ஆய்விற்கு முக்கிய ஆதாரமாக அகழ்வாராய்ச்சிப் பொருட்கள் உதவுகின்றன. தொல்லியல் அல்லது தொல்பொருளியல் என்பது கட்டிடக் கலை தொல்பொருட்கள், தொல்லுயிர் எச்சம், மனித மிச்சங்கள் எண்ணிமப் பொருட்கள் மற்றம் நிலத் தோற்றங்கள் என்பன உள்ளிட்ட எஞ்சிய பொருட்களை வெளிக்கொணர்ந்து. ஆவணப்படுத்தி, பகுப்பாய்வு, பதிவு செய்வதன் மூலம் செய்யப்படும் மனிதப் பண்பாடே ஆகும்.

### தொல்லியலின் வரலாறு

"∵.பிளவியோ பியோன்டோ' என்ற இத்தாலிய வரலாற்று அறிஞர் பண்டைய ரோமின் தொல்பொருட்களைக் கொண்டு ஒரு முறையான காலக்கணிப்பு முறையை உருவாக்கினார். அதனால் இவர், 'தொல்லியலைக் கண்டுபிடித்தவர்' என்று போற்றப்படுகிறார். 'சிரியேக்கோ, பிசிகோலி' என்ற இத்தாலிய வணிகர் கிழக்கு மத்திய கடலில் உள்ள தொல்பொருட்களைக் கொண்டு 'கமான்டரியா' என்ற ஆறு தொடர் புத்தகங்களை பதினான்காம் நூற்றாண்டில் எழுதினார். அதனால் இவர் 'தொல்லியலின் தந்தை' என்று போற்றப்படுகிறார்.

இதற்குப் பிறகு 19ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியில் ஐரோப்பிய நாடுகளில் இத்துறை பெரும் வளர்ச்சி அடைந்தது. ஐரோப்பியர்கள் மறைந்து போனதாகக் கருதப்படும் 'ட்ராய்' நிலத்தை பற்றி அறிவதற்கான முயற்சிகளும் 'சார்லசு டார்வனின்' பரிணாமக் கொள்கையும் இத்துறை வளர்ச்சிக்கு முக்கியக் காரணிகளாக கருதப்படுகின்றன.

தொல்லியலாளர்கள் தங்கள் துறையில் பயன்படுத்தப்படும் முறைகள் பற்றி ஆய்வு செய்வதிலும் கவனம் செலுத்துகின்றனர். அத்துடன் கடந்த காலம் பற்றிய அவர்களது கேள்விகளில் தொக்கி நிற்கும். இவற்றைச் சார்ந்து அவர்களுக்கு ஆர்வம் உண்டு. புதிய

E-ISSN: 2581-7140
Special Issue: Vol. 2, April-2019 Available at: www.ijtlls.com

தொல்லியற் களங்களைக் கண்டுபிடித்தல், அவற்றை அகழ்வாய்வு செய்தல் என்பனவெல்லாம் தொல்லியலில் பெருமளவு நடைபெறுகின்றன.

**தொடரியல் களங்கள்**

**மனிதக் காலடித்தடங்கள்**

வரலாற்றுக்கு முந்தைய காலத்தில் மனிதர்கள் குகைகளில் வசித்தார்கள் என்பதற்கான சான்றுகளாக தமிழ்நாட்டில் உள்ள தொல் பழங்கால ஓவியங்கள் பதிவு செய்கின்றன. கீழ்வலை – விழுப்புரம், உசிலம்பட்டி – மதுரை, குமுதிபதி – கோவை, மாவடைப்பு – கோவை, பொறிவரை – கரக்கையூர், நீலகிரி போன்ற இடங்களில் உள்ள குகைகளில் இடம்பெற்றிருக்கும் ஓவியங்கள் சான்றுகளாகும். குகையில் வாழ கற்றுக்கொண்ட 'குரோமக்னானஸ்' மனிதர்கள் பிரான்சில் 'லாங்காஸ்' என்னுமிடத்தில் உள்ள குகைகளில் வாழ்ந்ததற்கான தொல்லியல் சான்றுகள் கிடைத்துள்ளன. இதையடுத்தே மனித நாகரீகம் தோன்ற ஆரம்பித்திருந்ததை அறிய முடிகிறது.

பல மில்லியன் ஆண்டுகளுக்கு முன்னால் நம் முன்னோர்கள் அலைந்து திரிபவர்களாகவே இருந்தார்கள். இவர்கள் 30 முதல் 40 பேர் கொண்ட குழுவாகவே வாழ்ந்தனர் என்ற செய்திகளும், இவர்கள் உணவிற்காக விலங்குகளை வேட்டையாட ஆரம்பித்தனர் என்பதுவும் அறியப்படுகின்றது. பின்னர் ஆயுதங்கள் செய்ய 'சிக்கிமுக்கிக் கல்லை' உரசி நெருப்பினை உண்டாக்கி அதனையடுத்து இறைச்சி, கிழங்கு வகைகளைச் சுட்டு உண்ணவும் பழகிய பின்பு களிமண்ணினால் பானை செய்து உணவுகள் சமைத்து உண்ணவும் கற்றுக் கொண்டான். இவையே மனிதர்களின் அடிப்படை பரிணாம வளர்ச்சியாகும். மேலும் மனிதர்கள் விதைகளையும், கொட்டைகளையும் சேகரித்து மண்ணில் விதைத்து விவசாயம் செய்ய ஆரம்பித்தான். விவசாய வேலைகளுக்கு தங்களுடன் துணையாக எருது போன்ற விலங்குகளையும் துணையாக்கிக் கொண்டான்.

மானுடவியலாளர்கள் கிழக்கு ஆப்பிரிக்காவில் உள்ள தான்சானியாவில் கிடைத்த சில மனிதக் காலடித்தடங்களை உலகின் பார்வைக்குக் கொண்டு வந்தார்கள். கல் படுக்கைகளில் பதிந்திருந்த அந்தத் தடங்கள் அதுவரை மண்ணில் புதைந்து கிடந்தன. அவை கதிரியக்கக் கார்பன் பகுப்பாய்வுக்கு உட்படுத்தப்பட்டன. மானுடவியலாளர்கள் அந்த காலத்தடங்களை 3.5 மில்லியன் ஆண்டுகள் பழமையானவை என்று கண்டறிந்தார்கள். இயற்கை மாற்றத்திற்கு ஏற்றவாறு மனிதர்கள் தங்களை தகவமைத்துக்கொண்டு பரிணாம வளர்ச்சியடைந்தனர்.

**புதையுண்ட நகரத்தைக் கண்டுபிடித்தல்**

- அகழ்வாராய்ச்சியாளர்கள் செங்கல், கற்கள், உடைந்த பானை ஓடுகள் போன்றவற்றை ஆராய்ந்து அவை பயன்படுத்தப்பட்ட காலத்தை அறிந்து கொள்கிறார்கள்.
- பண்டைய இலக்கிய ஆதாரங்களையும் பயன்படுத்துகின்றனர்.
- நிலத்தடியை ஆய்வுக்குப் பயன்படுத்துகின்றனர்.
- எஞ்சிய தொல்பொருட்கள் புதையுண்டு இருக்கின்றனவா? இல்லையா என்பதை 'ரேடார்' கருவி மூலம் அறிந்துகொள்கின்றனர்.
- 1920ல் தொல்பொருள் அய்வாளர்கள் 'ஹரப்பா' மற்றும் 'மொஹஞ்சதாரோ' நகரங்களை அகழாய்வு செய்ய ஆரம்பித்தனர். அப்பொழுது நீண்டநாள் மறைந்து கிடந்த நகரத்தின் எஞ்சிய பகுதிகளை உலகின் பார்வைக்குக் கொண்டு வந்தனர்.
- 1924ல் இந்திய தொல்பொருள் ஆய்வுத்துறையில் இயக்குநர் 'ஜான் மார்ஷல்' ஹரப்பாவிற்கும், 'மொஹஞ்சதாரோ' விற்கும் இடையே பொதுவான அம்சங்கள்

E-ISSN: 2581-7140
Special Issue: Vol. 2, April-2019 Available at: www.ijtlls.com

இருப்பதைக் கண்டறிந்தார். இவை இரண்டும் ஒரு பெரிய நாகரிகத்தைச் சார்ந்த பகுதிகள் என முடிவுக்கு வந்தார்.

**தொல்லியல் எச்சங்கள்**

**கட்டடக்கலை**

மணிமேகலை, சிலப்பதிகாரம் முதலிய இலக்கியங்கள் இடம்பெற்றுள்ள பூம்புகாரில் நடைபெற்ற அகழ்வாய்வில், புத்த விகாரம் ஒன்றும் பொருள்கள் ஏற்றுமதி, இறக்குமதி செய்யப்படும் முகத்துவாரக் கட்டடமும் அகழ்வாய்வில் கண்டுபிடிக்கப்பட்டுள்ளன.

'கொற்கையில்' நிகழ்ந்த அகழ்வாய்விலும் உறையூரில் மேற்கொண்ட அகழ்வாய்விலும் கி.பி. 11, 12ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த கட்டடப் பகுதிகள் கிடைத்துள்ளன.

அண்மையில் தமிழ்நாடு அரசு தொல்பொருள் ஆய்வுத் துறையில் 'கங்கை கொண்ட சோழபுரத்தின் பகுதியான உள்கோட்டையில் முதலாம் இராசேந்திர சோழன் வாழ்ந்த அரண்மனைப் பகுதி கண்டுபிடிக்கப்பட்டுள்ளது. முழுப் பகுதியும் வெளிப்படுத்தப் பட்டால், கி.பி. 10, 11ஆம் நூற்றாண்டுகளில் மன்னர்களது அரண்மனை எவ்வடிவில் இருந்தன என்பதை உணர்ந்துகொள்ள முடிகிறது.

**சிற்பக்கலை**

தமிழகத்தில் சிற்பங்கள் செய்யும் முறை தொடர்ந்து வழக்கிலிருந்தன என்பதை கொல்லிப்பாவை, கண்ணகி சிலை மற்றும் பெரும் மாளிகைகளின் சுதை உருவங்கள் அமைந்திருத்தல் ஆகியவற்றின் வாயிலாக அறியலாம்.

**செப்புப் படிமக்கலை**

இன்றைக்கு சுமார் 2800 ஆண்டுகளுக்கு முன்பிருந்தே செப்புப் படிமக்கலை மிக உன்னத நிலையில் தமிழ்நாட்டில் வளர்ச்சி பெற்றிருந்தது. திருநெல்வேலி மாவட்டம் ஆதிச்சநல்லூரில் கிடைத்துள்ள தெய்வச் செப்புத் திருமேனி இதற்குத் தக்கதொரு சான்றாகும். அண்மைக் காலங்களில் கண்டுபிடிக்கப்பட்ட செப்புத் திருமேனிகளினால் பல்லவர் காலத்தில் இக்கலை நல்ல வளர்ச்சியுற்ற நிலையில் விளங்கியிருந்ததை அறிய முடிகிறது.

சோழர் காலத்தில் செப்புத் திருமேனிகள் கலையழகும், கடவுள் தன்மையும் பெற்றிருந்தவை, உயிர் பெற்றெழுந்து விட்டனவோ என என்னும் அளவுக்குக் காணப்படும். உன்னதப் படைப்புடன் ஒவ்வொரு திருமேனியாலும் அக்கால சிற்பியின் கைத்திறன் பளிச்செனக் காணப்படும்.

**மரச்சிற்பக்கலையும் தந்தச் சிற்பக்கலையும்**

தந்தச் சிற்பங்களை குறிப்பாக நாயக்க மன்னர்கள் காலங்களில்தான் சிறப்புப் பெற்றிருந்தது. திருவரங்கத்தில் நாயக்க மன்னர், அவரது பட்டத்தரசி ஆகியோரது உருவங்கள் நான்கடி உயரத்தில் தந்தத்தில் கம்பீரமாகக் காட்சியளிக்கின்றன. அதே கோயிலில் திருமலைநாயக்கர் தம் பட்டத்தரசியோடு இருப்பது மற்றும் கடவுள் உருவங்கள் ஆகியவை சிறிய அளவில் நிரம்பியுள்ளன. அவை இப்பொழுது அங்குள்ள அருங்காட்சிக்கூடத்தில் வைக்கப்பட்டுள்ளன. மதுரை அருகிலுள்ள அழகர் கோயிலும், தந்தச் சிற்பங்கள் நிரம்ப இருக்கின்றன.

**கல்வெட்டுத் தகவல்கள்**

இந்தியாவில் கண்டுபிடிக்கப்பட்டள்ள கல்வெட்டுக்களில் தென்னிந்திய கல்வெட்டுக்களே மிகுதி. இந்தியாவில் கண்டுபிடிக்கப்பட்டுள்ள கல்வெட்டுக்களில் மிகவும் பழமையானவை அசோகரின் கல்வெட்டுக்களே ஆகும். இவற்றின் காலம் கி.பி. 3ஆம் நூற்றாண்டு பழந்தமிழக் கல்வெட்டுக்கள் கிடைத்துள்ள இடங்கள் கீழவளவு, மறுகால்தலை, ஆனைமலை,

E-ISSN: 2581-7140
Special Issue: Vol. 2, April-2019 Available at: www.ijtlls.com

அழகர்மலை, மேட்டுப்பட்டி, முத்துப்பட்டி, சித்தன்னவாசல், திருவாதவூர், விக்கிரமங்கலம், திருப்பரங்குன்றம், மாங்குளம். புகழூர், அரசனூர், மாமண்டூர், அரிட்டாபட்டி போன்றவையாகும்.

சிறந்த தொல்பொருள், கல்வெட்டு ஆய்வாளர் ஐராவரம் மகாதேவன், இவர் சிக்கலான பல கல்வெட்டுகளின் எழுத்தை மிகச் சரியாகப் படித்துப் பொருள் சொன்னவர்.

இரா. நாகசாமி தமிழ்நாடு தொல்பொருள் துறையில் முதல் இயக்குநர். கல்வெட்டியல் நிறுவனத்தைத் தோற்றுவித்தவர் கொற்கை, பல்வமேடு, கங்கை கொண்ட சோழவரம், கரூர் போன்ற இடங்களில் அகழ்வாராய்ச்சி செய்தவர்

**தமிழகத்திலுள்ள பெருங்கற்கால, இரும்புக்கால தொல்லியல் ஆய்விடங்கள்**

**ஆதிச்சநல்லூர் - தூத்துக்குடி மாவட்டம்**

இங்கு மேற்கொண்ட அகழ்வாய்வில், முதுமக்கள் தாழிகள், மண்பாண்டங்கள் (இடுப்பு, சிவப்பு) இரும்பாலான குத்து வாள், கத்தி, ஈட்டி, அம்பு, சில கல் மணிகள், ஒருசில தங்க ஆபரணங்கள் கிடைத்துள்ளன. மேலும், வீட்டு, காட்டு விலங்குகளின் வெண்கலத்தாலான உருவங்கள் கிடைத்துள்ளன.

**கீழடி – சிவகங்கை மாவட்டம்**

இந்திய தொல்பொருள் ஆய்வுத்துறை திருப்பத்தூர் தாலுகாவிலுள்ள கீழடி கிராமத்தில் சங்க காலத்தைச் சேர்ந்த பழமையான நகரத்தை அகழ்ந்து ஆய்வு செய்துள்ளது. செங்கற்களால் கட்டப்பட்ட கட்டிடங்கள், வடிகால் அமைப்புகள், தமிழ் - பிராமி எழுத்துகக்ள் பொறிக்கப்பெற்ற மண்பாண்டங்கள், கண்ணாடியினாலான மணிகள், செம்மணிகள், வெண்கல படிமம், முத்துக்கள், தங்க ஆபரணங்கள், இரும்புப் பொருட்கள், சங்கு, தந்தத்தினால் செய்யப்பெற்ற பொருட்கள் தோண்டி எடுக்கப்பட்டள்ளன.

2017ஆம் ஆண்டு, இந்திய தொல்லியல் துறை இரு மாதிரியான கதிரியக்க கார்பன் வயதுக் கணிப்பு முறையில் கணிக்க அமெரிக்காவில் புளோரிடா என்னும் இடத்தில் உள்ள பீட்டா அனாலடிக் என்ற நிறுவனத்துக்கு அனுப்பியது. அச்சோதனையில இப்பொருட்கள் கி.மு. 200 ஆண்டைச் சார்ந்தது என்பது தெரிய வந்துள்ளது. இங்கு ரோம் நாட்டைச் சார்ந்த பழங்காலப் பொருட்கள் கிடைத்துள்ளன.

**பொருத்தல் - திண்டுக்கல் மாவட்டம்**

புதைகுழிப்பொருட்கள், கண்ணாடி மணிகள் (வெள்ளை, சிவப்பு மற்றும் நீலப்பச்சை) இரும்பு வாள்கள், தமிழ்-பிராமி எழுத்துக்கள் பொறிக்கப்பட்ட மண்பாண்டங்கள், அரிதான கற்கள், சங்கு கண்ணாடி வளையல்கள் கிடைத்துள்ளன. இங்கு கிடைத்துள்ள அரிசி நிறைந்த பானை மக்களின் முக்கிய உணவாக அரிசி இருந்தது என்பதை மெய்ப்படுத்துகிறது.

**பையம்பள்ளி – வேலூர் மாவட்டம்**

இங்கு இரும்பினால் செய்யப்பட்ட பொருங்கற்கள் பெருநள்கரசர் கருப்பு, சிவப்பு மண்பாண்டங்கள் ரேடியோ கார்பன் மூலம் இம்மண்பாண்டங்களின் காலம் கி.மு. 1000 என கணிக்கப்பட்டுள்ளது.

**கொடுமணல் - ஈரோடு**

'பதிற்றுப்பத்தில்' இடம்பெற்றுள்ள இடம் இதுவே என அடையாளப்படுத்தப்பட்டடுள்ளது. இங்கு தமிழ்-பிராமி எழுத்துக்கள் கொண்ட 300க்கும் மேற்பட்ட மண்பாண்டங்கள் கண்டுபிடிக்கப்பட்டு, நூல்சுழற்றும் சுழல் அச்சு, சுருங்கள், துணிகளின் சிறிய துண்டுகள், கருவிகள், ஆதி, மணிகள், சிவப்பு நிற மணிகள் நினைவுக்கல் போன்றவை கண்டுபிடிக்கப்பட்டுள்ளன.

E-ISSN: 2581-7140
Special Issue: Vol. 2, April-2019 Available at: www.ijtlls.com

**பெருங்கற்கால நினைவுச் சின்னங்கள்**

புதிய கற்காலத்தின் இடைப்பகுதியில் வாழ்ந்த மக்களின் முதுமக்கள் தாழிகள் இருந்துள்ளன. அவர்களுக்கு நினைவுச் சின்னங்கள் இருப்பைக் குறித்த அறிவைப் பெற்றிருந்த நினைவுச் சின்னம் என்று இவை முன்னேறிய தமிழ் நாகரிகத்திற்கான சாட்சிகளாகும்.

இரண்டு கற்பலகைகள் வைத்து கற்திட்டைகள் வீரராகவரம் (காஞ்சிபுரம் மாவட்டம்) கும்மாளமருதுபட்டி – திண்டுக்கள் மாவட்டம் போன்ற பகுதிகளில் காணப்படுகிறது.

இறந்துபோன வீரர்களுக்கு நடுகற்கள் வைக்கப்பட்டுள்ளது. திண்டுக்கல் மாவட்டம், புலிமான் கோம்பை நடுகற்கள் கி.மு. 3ஆம் நூற்றாண்டு என கிடைக்கப்பட்டுள்ளது.

**சமணர் மலை**

மதுரை நகரிலிருந்து 15 கி.பி. தொலைவில் கீழக்குயில்குடி கிராமத்தில் சமணர் மலை என்ற பெயரில் உள்ளது. இது சமணத் துறவிகளால் உருவாக்கப்பட்ட தீர்த்தங்களின் உருவங்கள் இம்மலையில் காணப்படுகின்றன. இது இந்திய தொல்பொருள் அய்வுத் துறையால் பாதுகாக்கப்படும் நினைவுச் சின்னமாக உள்ளது.

**பாண்டவர் படுக்கை**

மதுரையிலிருந்து 25 கி.மீ. தொல்விலுள்ள அரிட்டாபட்டி என்ற கிராமத்தில் கலிஞ்சமலைப் பகுதியில் பாண்டவர் படுக்கை என்று அழைக்கப்படும் சமணர் குகைகள் உள்ளன. சமணர் துறவிகளுக்கான கற்படுக்கைகள் பாண்டவர் படுக்கை என அழைக்கப்படுகிறது.

**தொல்லியல் ஓர் தொடரியல்**

பூமிக்குள் புதைந்து மறைந்து கிடக்கின்ற மனித இனத்தோடு தொடர்புடைய பொருட்களையும், அவர்களின் வாழ்க்கை முறைகளையும், அதற்கான சான்றுகளையும் அறிய பெருந்துணையாக நமக்குக் கிடைத்துள்ள ஒரு புதையலே தொல்லியம் என்பதாகும்.

இந்திய தொல்லியல் துறை (ASI – Archaeological Survey of India) 1861ஆம் ஆண்டு அலெக்ஸாண்டர் கன்னிங்ஹாம்' என்ற நில அளவையாளர் உதவியுடன் நிறுவப்பட்டது. இதன் தலைமையகம் புது தில்லியில் உள்ளது. இதனைத் தொடர்ந்தே தொல்லியல் இன்றும் ஓர் தொடரியலாக நிலைபெற்றுள்ளது.

**பார்வை நூல்கள்**

1. தேவிரா (இராசேந்திரன்), தமிழ் இலக்கியத் தகவல் களஞ்சியம்.
2. சமூக அறிவியல் (6 மற்றும் 9ஆம் வகுப்புகள்) பள்ளிக் கல்வித்துறை, தமிழ்நாடு அரசு.
3. பொதுத்தமிழ் - மேல்நிலை இரண்டாம் ஆண்டு, தமிழ்நாடு பாடநூல் மற்றும் கல்வியியல் பணிகள் கழகம்.

**E-ISSN: 2581-7140**
**Special Issue: Vol. 2, April-2019** **Available at: www.ijtlls.com**

## தொல்லியல் – மானுடவியலுடன், மரபியல் சார்ந்த அறிவியல் பார்வையில்
## Archaeology- On Anthropological and Genetical Perspectives

**B. Mathivanan,** Research Scholar, **Dr.D.Jayakumar,** Asst. Professor, CEPT,
Periyar Maniammai Institute of Science and Technology, Thanjavur – 613 403.

### Abstract

*The paper traces the origins of archaeology and the study human science in the point of anthropological and microbiological perspectives. The openness of the archaeological excavations led the world to study the origin of human beings and their civilizations. That also led them to study the genetical stages they have developed by the fossils got in the excavations. These findings help to find out the culture and civilization of the Tamil people. Hence, the paper attempts all sorts of Tamil linguistic and archaeological explanations are detailedin the paper.*

**Keywords:** Archaeology, Anthropological and Genetical Perspectives, Tamil People

**தொல்லியலும், தமிழர் பண்பாடும்**

தமிழ் மொழியும், இனமும், நாடும் உலகில் மிகவும் தொன்மையானவை. எனவே, தொன்மையும் பழமையும் முதன்மையும் உடையது தமிழ்நாட்டு வரலாறு. இதனை நாம் அறியப் பெரிதும் நமக்கு உதவுவதாக அமைந்துள்ளவைகள் அனைத்தையும் பல்வேறு வகைகளில் நாம் மிகுந்த கவனத்தில் கொள்ளவேண்டிய ஒன்றாக அமைந்துள்ளதுடன், வரலாற்று மூலக்கூறுகளை, “தொல்லியல்” சான்றுகளின் (Archeological Evidences) அடிப்படையிலும், கால அடிப்படைகளின் மூலமாகவும் நாம் பகுத்து ஆராயும்போது வரலாற்று முற்பட்ட காலம், சங்க காலம், பல்லவர் காலம், சோழர்காலம், பாண்டியர் காலம் என முறைப்படுத்தலாம். எனவே, இதுவரையில் நாம் கண்டெடுத்த பல்வேறு இடங்களில், பல்வேறுபட்ட புதைப் பொருள்களில் மேற்கொண்ட ஆய்வுகளின் மூலமாக இலக்கியங்கள், மொழியியல் பின்புலம், கல்வெட்டுகள், செப்பேடுகள், நாணயங்கள், வெளிநாட்டாரின் குறிப்புகள், அரசு ஆவணங்கள் மூலமாகவும் தனியார் புரூஸ் பூட் என்பவரால், ஆதித்தநல்லூர் என்னும் இடத்தில் நடத்தப்பட்ட அகழ்வாராய்ச்சி நல்ல பலனைத் தந்துள்ளதுடன், திருச்சி, புதுக்கோட்டை, மதுரை, திருநெல்வேலி, செங்கற்ப்பட்டு, சேலம் ஆகிய இடங்களில் நடத்தப்பட்ட அகழ்வாராய்ச்சி மூலமாக இதுவரையில் நமக்கு கிடைத்துள்ள “தொல்லியல் சான்றுகள்”, தமிழர்களின் அந்நாளைய மானுடவியல் - வாழ்க்கை முறைகளை நமக்கு அறிந்து கொள்ளும் சான்றுகளாக அமைந்துள்ளதை நம்மால் உணரமுடிகிறது.

சர் மார்டிமோர் வீலர் அவர்களால், அரிக்கமேட்டில் நடத்தப்பட்ட அகழ்வாராய்ச்சியின் மூலம் நம் பழந்தமிழர்களின் வாழ்க்கை முறைகளையும், பூம்புகாரில் நடத்தப்பட்ட ஆய்வுகளும் நமக்கு நல்ல பயணைத் தந்துள்ளதை நம்மால் அறியமுடிகிறது.

தற்போது, புதிதாகக் கண்டெடுக்கப்பட்டுள்ள தொல்லியல் புதைபொருள்களின் பல்வேறு வகைகள், கீழடி அகழ்வாராய்ச்சியின் மூலமாக, சிந்துவெளி நாகரீக தொடர்பு, இதன்

E-ISSN: 2581-7140
Special Issue: Vol. 2, April-2019 Available at: www.ijtlls.com

தொடர்ச்சிகள் தற்போது உலகத்துக்கே ஒரு புதியதொரு சவாலாக அமைந்துள்ளதையும் நம்மால் உணரமுடிகிறது.

**புதைப்பொருள் - தொல்லியல் சான்றுகளும், தமிழர் பண்பாடும்**

**(Archeological Evidences - Related Ancient Tamil Culture)**

இவைகளின் மூலமாக,

1. சுமேரியாவின் தலைநகரமாகிய ''ஊர்'' என்னும் இடத்தில் கிடைத்த தேக்கு மரத்துண்டுகள் இந்தியாவிலிருந்தே கி.மு.நான்கு ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்பே அங்கு சென்றது என்று ஆராய்ந்து சொல்கிறார் சேஸ் என்ற அறிஞர்.
2. பாபிலோனியக் களிமண் ஏடுகள் இந்திய வணிகர்களின் குழுக்கள் அங்கு சென்று தங்கியிருந்த போது பயன்படுத்தப்பட்டவை எனவும்,
3. அரிக்கமேடு, உரையூர், மதுரை ஆகிய இடங்களில் கண்டெடுக்கப்பட்ட பொற்காசுகள் ரோமர்கள் இங்கு குடியிருப்புகளை அமைத்து வாழ்ந்து வந்ததற்கான சான்றுகளாக அமைந்துள்ளதாகவும்,
4. மைசூர் சந்திரவல்லியில் கண்டெடுக்கப்பட்ட சீன நாணயங்கள், கி.மு. இரண்டாம் நூற்றாண்டில் இந்தியர்களுடன், சீனர்கள் கொண்ட தொடர்பினை நமக்கு எடுத்துக் காட்டுவதாகவும் அமைந்துள்ளன.

**தொல்லியலில், மானுடம் சார்ந்த வாழ்வியல் - இலக்கிய சான்றுகளில் சில**

''முந்நீர் வழக்கம் மகடூ வோடில்லை'' என்று இயம்பும் தொல்காப்பிய - இலக்கண வரிகளின் மூலமாக, தொண்டியன்ன நலம் என்றும், கப்பல் போன்ற கோட்டை என்றும், கடலுட்கலம் கவிழ்ந்தாற் போலத் துன்பம்-என்னும் உவமைகளைச் சொல்லும் அளவில், கடற்செலவு அக்காலத்தில் சிறந்து விளங்கியதையெல்லாம் நாம் அறிந்து கொள்வதுடன்,

பெரும்பாணாற்றுப்படை கலங்கரை விளக்கத்தைச் சுட்டிக் காட்டுவதுடன்,

''வானம் ஊன்றிய மதலை போல, ஏணி சார்த்திய ஏற்றஞ் சென்னி

இரவில் மாட்டிய இலங்கு சுடர்ஞெகிழி''-என்ற பட்டினப்பாலை வரிகளின் மூலமாக வரி வசூல் செய்த சுங்க அதிகாரிகளின் அடையாளமான புலி பொறித்த செய்தியை நமக்கு கூறுகிறது.

இதுபோலவோ, அகநானூறு, பட்டினப்பாலை, மதுரைக்காஞ்சி, பதிற்றுப்பத்து, சிலப்பதிகாரம் ஆகியவைகள், காவேரிப்பூம்பட்டினம், (பூம்புகார்) கொற்கை, முசிறி, தொண்டி ஆகிய துறைமுகங்களின் பழைமை வாய்ந்த தொல்லியல் வரலாற்றுச் சான்றுகளின் மூலமாக, இவைகளின் வளத்தையும், யவனர்களையும், பிறமொழியாளர்களின் இருக்கை களையும் நமக்கு எடுத்துக்காட்டுகின்றன.

முசிறி சேரா துறைமுகம் யவனருடன் அதிகத் தொடர்பு உடையதைத்

> ''......... சேரலர்
> கள்ளியம் பேரியாற்று வெண்ணுரை கலகங்க
> யவனர் தந்த வினைமாண் நன்கலம்
> பொன்னொடு வந்து கறியொடு பெயரும்
> விளங்கெழு முசிறி'' (அகம்.. 149).

என்பதன் மூலமாக, பொன்னைக் கொடுத்து மிளகை யவனர்கள் பெற்றுச் சென்ற வரலாற்றில், தொண்டி பெண்களின் அழகும் உவமையாகக் கூறப்பட்டுள்ளது.

E-ISSN: 2581-7140
Special Issue: Vol. 2, April-2019 Available at: www.ijtlls.com

"தொண்டியன்ன என நலம் தந்து" – என்ற வரிகளை கூறும் குறுந்தொகையும் இதையே, அய்ங்குறுநூற்றில் தொண்டிப்பத்து என்னும் பதியானது தொண்டி நகரின் பல்வேறு சிறப்புகளை நமக்கு எடுத்துக் கூறுவதாக அமைந்துள்ளது.

இதுபோன்றே, முத்துக்கு பெயர் பெற்ற நகரின் சிறப்புகளாக, நற்றிணையில் காட்டப்படும் "முத்துபடு பரப்பின் கொற்கை முன்னுறை" - என்ற வரிகளின் மூலமாகவும், தாலமி என்ற தொல்பொருள் அறிஞர், கொற்கை முத்துக்குளிப்பிற்கு பெயர் பெற்றது என இயம்புவதுடன், சாலியூரின் துறைமுகச் சிறப்புக்களையெல்லாம் கூறும் போது,

"பொன் மலிந்த விழுப்பண்டம்
நாடார நன்கு இழிதரும்
ஆடியற் பெருநாவாய்
மழை முற்றிய மலைபுரையத்
துறை முற்றிய துளங்கிருக்கை" - என்ற வரிகளின் மூலமாக,

நமக்கு மதுரைக்காஞ்சி மலைபோன்ற கப்பல் நுழையக்கூடிய பெரிய துரைமுகம் எனவும் எடுத்துக் கூறுகிறது,

**தொல்லியல் சான்றுகளில் கவனத்தில் கொள்ளவேண்டிய சில**

சர் மார்டிமர் வீலர், புதுச்சேரியின் அருகில் உள்ள அரிக்கமேட்டில் தனது அகழ்வாய்வின் மூலம் உரோமானியர்களின் குடியிறுப்புகள் அங்கிருந்ததையும், வாசுதேவ நல்லூரில் கண்டெடுக்கபட்ட அகழ்வாய்வின் மூலப்பொருள்களான உரோம நாணயங்கள், உரோமக் குடியிருப்புகள் மைசூர் சந்திரவல்லியில் கண்டெடுக்கப்பட்டதன் மூலம் தென் கீழ்காசியத் தொடர்பு, தமிழகத்துடன் இருந்து வந்தவைகள் முக்கிய சான்றாக அமைவதுடன் இவைகள், சங்க இலக்கிய சான்றுகளில், வணிகக் குறிப்புகளில் காசுகளும், அயல்நாட்டினரின் பல்வேறு குறிப்புகளுடன் ஒத்துப்போவதாக அமைந்துள்ளன.

**சிந்துவெளி நாகரீகமும் (கி.மு.8,000 – 1200) ஆராய்ச்சி காலமும்**

வேதங்கள், பைபிள், பழைய புராணங்களின் மூலமாக அறிவியல் வளர்ச்சியில்லா காலத்திலும், புதைபொருள் ஆய்வாளர்களின் ஈடுபாடு, ஆர்வம் காரணமாக சிந்து மாநில நதிக்கரையில் மொகஞ்சோதரோவும், கிளை நதியின் ஒன்றான ரவி ஆற்றின் பக்கத்தில் ஹராப்பாவும் புதையுண்ட நகரங்களாக கண்டுபிடிக்கப்பட்டதிலிருந்து இன்றைய இருபதாம் நூற்றாண்டு காலம் தொட்டு "தொல்பொருள் அறிவியல்" – அறிஞர்களால் பல்வேறு காலகட்டங்களில், பல்வேறுபட்ட இடங்களில் புதுபுது அகழ்வாராய்ச்சிகள் தொடர்ந்து கொண்டே இருந்தாலும், தற்போது தமிழகத்தில் கிடைக்கப்பெற்ற அரிய பொக்கி'மான "கீழடி – அகழ்வாய்வு கண்டுப்பிடிப்புகள்" அனைத்தும், சிந்துவெளி நாகரீகம் முதலில் எங்கிருந்து தோன்றியது? இதுவரையில் கண்டுபிடிக்கப்பட்ட தொல்லியல் - ஆய்வு முடிவுகள் எல்லாம் சரியான வரலாற்று சான்றுகளா?- என உலக மக்களுக்கு நாகரீக கால பல்வேறு படிபடியான மாற்றங்கள் குறித்து, வியப்பூட்டும் வண்ணமாக தற்போது புதிதாகக் கண்டெடுக்கப்பட்டுவரும் கீழடி புதைப்பொருள்-ஆவணங்கள் அனைத்துமே, வியப்பான புதிய வினாக்களை எழுப்பும் வண்ணமாகவும், புது புது தகவல்களை, தரவல்லதாகவும் அமைந்துள்ளது.

இந்திய வரலாற்றில் தொடக்கம், ஆரியர் வருகையால் அல்ல! எனவும், ஆரியர், இந்தியாவில் நுழையும் முன்பே, இங்கு ஒரு சிறந்த நாகரீகம் நிலவியது என்பது உலகிற்கு உணர்த்தப்பட்டதன் வாயிலாக சிந்துவெளியில் கண்டெடுக்கப்பட்ட பழமையான பொருள்களின் மூலமாக் சுமேரிய, எகிப்திய, கிரீக், முதலிய நாடுகளில் பயன்படுத்தப்பட்ட பொருள்களோடு இங்கு கண்டெடுக்கப்பட்ட அகழ்வாராய்ச்சி புதை பொருள்கள் ஒத்துப்போவதால், சிந்துவெளி

E-ISSN: 2581-7140
Special Issue: Vol. 2, April-2019 Available at: www.ijtlls.com

மக்கள், பிறநாட்டு மக்களோடு தொடர்பில் இருந்து வந்ததை இவைகள் நமக்கு எடுத்துக்காட்டுவதாக அமைந்துள்ளது.

**மானுடம் கற்பித்த வர்ணபேதத்தில் - பல்வேறு சாதிய படிநிலைகள்**

இந்திய, சிந்து வெளி நாகரீகத்தில் ஆரியர் இங்கு வருகைக்கு பின்பு, பல்வேறுபட்ட சனாதன, தர்ம, நீதி விதிமுறைகளால் கட்டமைக்கப்பட்ட் மனுதர்ம-வர்ணபேத, சாதிப் படிநிலைகள் மனித வாழ்வில் கற்பிக்கப்பட்டு, அவனின் பிறப்புகள் அனைத்தும் கடவுளால் உருவாக்கப்பட்டனவென்றும், எனவே, வாழ்தல் வேண்டும் எனவும், அவர்கள் அவர்கள் தான் பிறந்த சாதிப் பிரிவுகளில் கூறப்பட்ட நான்கு வர்ண பேத அடிப்படையில் தொழில் செய்து, அனைவரும் ஆரிய வர்ணாசிரம, தர்ம நீதிகளுக்கு கட்டுப்பட்டு, வாழ்வதுடன் அவைகளின் மூலமாக கற்பிக்கப்பட்ட ‘தீண்டாமை’’ நிலைகளையெல்லாம் பிற்காலம் தொட்டு வாழ்க்கையில் கடைபிடிக்க ஏதுவாக அமைந்துவிட்டதுடன்˙ பல்லவர் கால கல்வெட்டுக்களில், சூத்திரர்கள் (நாலாம் சாதி) - பற்றிக் குறிப்பிடப்பட்டுள்ளதுடன், இவர்கள் ஊரின், ஒதுக்குப்புறங்களில் வாழ்ந்ததுடன் தங்களை உயர்ந்த சாதி மக்கள் என்று சொல்லிக்கொண்டு வாழ்ந்த மக்களின் பகுதியிலிருந்து, வெகு தொலைவில் வாழ்ந்து வந்த இவர்கள், களிமண்ணாலும், ஓலையாலும் அமைக்கப்பட்ட சிறிய குடிசை வீடுகளில் வாழ்ந்து வந்ததாகவும், பல்வேறு எடுத்துக்காட்டுகளின் மூலமாக பிராமணர்கள், சத்திரியர்கள், வைசியர்கள், சூத்திரர்களின் வாழும் நிலைகள், அவர்களின் தொழில்கள், உணவுமுறைகள், ஆபரணங்கள், உடைப்பழக்கம் இவைகளையெல்லாம் நாம் வகைப்படுத்தி அறிவதற்கு பெரும் உதவியாக பல்வேறு கல்வெட்டுகளில் பொறிக்கப்பட்ட செய்திகளின் மூலமாக நமக்கு தெரிய வருவதாக உள்ளது.

**கல்லிலே கலைவண்ணம் கண்ட பல்லவ மன்னர்கள்**

பல்லவர் கால கல்வெட்டுகளில், குடுமியான்மலை கல்வெட்டுகள், முதலாம் மகேந்திரவர்மனால் வெளியிடப்பட்டது எனவும், தாளங்களைப் பற்றி, "எட்டுக்கும் ஏழுக்கும்" - என அவன் காலத்து கல்வெட்டுகளில் குறிப்பிடப்பட்டிருப்பதன் மூலமாக, நாம் அறிவது பொதுவாக வீணைக்கு ஏழு நரம்புகளே இருக்கும், ஆனால், மகேந்திரவர்மன் காலத்திய கல்வெட்டுகளில் எட்டு நரம்புகளையுடைய ஒரு வீணையைக் கண்டுபிடித்ததன் மூலம் இக்கல்வெட்டில், “இந்த பண்புகளையும், தாளங்களையும், எட்டு நரம்புகள் உள்ள வீணையிலும், ஏழு நரம்புகள் உள்ள வீணையைக் கொண்டும் நாம் வாசித்து மகிழலாம் என்றெல்லாம் குறிப்பிடப்பட்டுள்ளதுடன், திருமயம்மலை – அடிவாரத்தில் அமைந்துள்ள சிவன் கோயிலில், முதலாம் மகேந்திரவர்மனால் கண்டுபிடித்து வெளியிடப்பட்ட இசைக் கல்வெட்டுக்களை டி.ஏ.கோபிநாதராவ் அவர்கள் கண்டுபிடித்ததுடன், இக்கல்வெட்டுகளில் ராகங்களை, “பரிவாதினி”-என்ற வீணையிலும் வாசிக்கலாம் என்றும், அம்மன்னர், “குணசீலன்” என்ற பட்டப் பெயரின் மூலமாகவும் குறிப்பிடப்பட்டுள்ளது போற்றத்தக்க ஒன்றாகும்.

**பிற்கால சோழர்கால வரலாற்றுச் சான்றுகள்**

இவைகளில், குறிப்பிடத்தக்க அய்ந்து வகைகளில், கல்வெட்டுகள், செப்பேடுகள், நாணயங்கள், நினைவுச் சின்னங்கள், மற்றும் இலக்கியங்கள் முதலியவைகளைப் பற்றியும் நாம் நினைவு கொள்ளலாம்.

**கல்வெட்டு கூறும் கதைகளில் சில**

சோழநாட்டின் பொருளாதார நிலைகளை நாம் நோக்கும்போது, சோழப்பேரரசில் மிகப்பெரிய பஞ்சம் ஏற்பட்டதாகக் கல்வெட்டுகளின் மூலம் அறிவதுடன், 1131ஆம் ஆண்டு ஒரு மிகப்பெரிய பஞ்சம் சோழநாட்டில் எற்ப்பட்டதாக தென்னாற்காடு மாவட்டத்தில் உள்ள

E-ISSN: 2581-7140
Special Issue: Vol. 2, April-2019 Available at: www.ijtlls.com

"அரசாண்டநல்லூர்"- கல்வெட்டு கூறுகிறது. 1152ஆம் ஆண்டிலும் மற்றொன்று ஏற்ப்பட்டதாக புதுக்கோட்டைக்கு அருகில் உள்ள "ஆலங்குடி"-கல்வெட்டு கூறுவதன் மூலம், பல்வேறுபட்ட பெரிய பொருளாதாரச் சிக்கல்களின் மூலமாகவே சோழப்பேரரசு வீழ்ச்சியடைந்த வரலாற்றை நாம் கல்வெட்டுகளின் மூலமாக உணர முடிகிறது.

உலக வரலாற்றுமேதை, டோபி (Toybee) என்பவர், பிறக்கின்ற ஒவ்வொரு பேரரசும் ஒரு காலக்கட்டத்தில் வீழ்ச்சி அடைந்துவிடும் என்று குறிபிட்டுள்ளதுடன், இவைகளையே அவர் "இயற்கை சட்டம்" எனவம் குறிப்பிடுகிறார்.

**தொல்மானுடவியல் நவீன அறிவியல் பார்வை நோக்கி ஒரு கண்ணோட்டம்**

**Archeology – Related With Importance Of Modern Science**

பழங்கல்வெட்டுகளைக் கண்டறிதல், வரலாற்றுச் சிறப்புமிக்க இடங்களிலெல்லாம் அகழ்வாராய்ச்சி மேற்கொள்ளுதல், அவைகளில் கிடைத்த வரலாற்றுச் சின்னங்களைப் பாதுகாத்தல்-என்னும் உயரிய மும்முனைக் குறிக்கோள்களுடன் "தொல்பொருள் ஆய்வுத் துறை" செயல்பட்டு வருகிறது. இத்துறை அகழ்வாய்வு நடத்திய பூம்புகார், கங்கைகொண்டசோழபுரம், கோவலன்பொட்டடல் ஆகிய இடங்களில் கண்டெடுக்கப் பட்டவைகள் என்றுமே வரலாற்றில் எவராலும் மறைக்கமுடியாத ஆவணங்களாக நமக்கு கிடைக்கப்பெற்றுள்ளன.

**பண்புடையோரின் பல்துறைப் பார்வைகள்**

"இன்றைக்கும் நாம் காணும் "நிறுவனச் சமயங்கள்" அனைத்தும் எதிர்காலத்தில் இல்லாமல் போகும்!" என்று விவேகானந்தர் சூசகமாகக் குறிப்பிடுகிறார்.

திருவள்ளுவர் உலகில் வாழும் மக்கள் இனத்தை ஒன்றெனக் கண்டார். "யாதும் ஊரே யாவரும் கேளீர்" – என்ற கணியன் பூங்குன்றனார் கூறியயுது வள்ளுவருக்கு மிகவும் பிடித்த கருத்து என்பதால், மக்களை அறிவு பெறச் செய்யும் நோக்கில்,

"யாதெனும் நாடாமல் ஊராமல் என்னொருவன்

சாந்துணையும் கல்லாத வாறு" – என்று கூறி வள்ளுவர், கணியன் பூங்குன்றனார் கருத்தை மேலும் தெளிவுப்படுத்தியுள்ளார்.

"உலகமயவியல் (Globalization) – வளரும் சமுதாயங்களின் இரத்தத்தை உறிஞ்சும் வாய்ப்பே அதுவென – என்று, இன்று நாமெல்லாம். உணரத் தொடங்கி இருக்கிறோம்

"தொழில் நுட்பர்கள் மனிதாயவாதிகளாக (Technocrats to Democrats) மாறினாலன்றி, மனித குலம் அழிந்துவிடுமோ? தொழில் நுட்ப மாற்றங்களுக்கு மனிதக் கடிவாளம் போடமுடியுமா? - என்ற சிந்தனையும் நம்மை ஒருபுறம் தூண்டத்தான் செய்கிறது.

சென்ற சில ஆண்டுகளாக, வளர்ந்து வரும் நவீன உயிர்த் தொழில் நுட்பங்களின் மூலமாக, பல புதிய உத்திகள் கையாளப்பட்டு தாவர, விலங்கினங்களில் அவைகள் பயன்படுத்தப்பட்டதன் விளைவாக மரபியல் (Genetics) சார்ந்த உயிரியல்-தொழில் நுட்பத்தில், நமக்கு பெரிதும் பயன்தரக்கூடியவைகள் "புதியனவைகள் உருவாக்கம்" பெறும் இத்தருணத்தில், தமிழரின் வாழ்வியலில், "நீதித்துறை தீர்வுகள்"-சங்க காலம் தொடங்கி சேர நாட்டில், நியாயத்திற்குச் கட்டுப்படும் ஒரு நடைமுறை இருந்ததையும், அந்த நீதித்துறை நடைமுறைகளுக்கு மன்னனும் விதிவிலக்கில்லை. நீதிக்கு நிலைக்களனாக இருந்த அரசனும் நீதிக்கு அடிபணிந்தவனே என்பது நமது நாட்டின் தொன்மையான பழைய மரபான ஒன்றாக காணப்பட்டதுடன், (சிலப்பதிகார – பாண்டிய மன்னனின் வரலாறு).

E-ISSN: 2581-7140
Special Issue: Vol. 2, April-2019 Available at: www.ijtlls.com

அறம் என்பது ஒழுக்கமே என்றும், எனவே, நீதிமன்றங்கள், முறைகள் தேவைப்படா என்றும், வள்ளுவர் கருதுவதாகப் பரிமேலழகர் அனுமானம் செய்வதாகநாம் கொள்ளலாம்.

**ஒருமைப்பாடே மானுடத்தின் முன்னேற்ற முதல் படிக்கள் ...**

"ஒருமைப்பாடு" (Integration) எனப்படுவது, வெள்ளையரும், பிறவண்ண மக்களும் அடங்கிய பல்வேறுபட்ட சமுதாயத்தை ஒரே முழு அமைப்பாக வகுத்தமைக்கும் செயல். (சென்னை பல்கலைக்கழக, ஆங்கில – தமிழ் அகராதி – விளக்கம்) சொல் வடிவில் ஒன்றுபடும் தன்மையையே, ஒருமைப்பாடு கட்டுகிறது. எனினும், சமுதாய அரசியல் கண்ணோட்டத்துக்கு பெரும்பாலும் உரியதாக உள்ள இன்றைய கருத்தழுத்தம் முன்பு இல்லை என்றே கூறலாம்.

பல்வேறு நிற மக்களை- பலநிறச் சமுதாயக் கூறுகளை- "ஒரே முழு அமைப்பாக வகுத்தமைக்கும் செயல்" - என்ற விளக்கம் தருகிறது. மானிட சமுதாயத்தில் இப்படி ஒரு செயல்∴ முயற்சி நடந்திருக்கிறதா, நடப்பதற்கான சுவடு ஏதேனும் இருக்கிறதா என்றெல்லாம் நாம் எண்ணிப் பார்ப்பதும் அவசியத்துடன், அத்தியவசியமான ஒன்றாகவும் கருத வேண்டியுள்ளது.

**மனித வாழ்வியலில் தொல்-மரபியல் கோட்பாட்டின் அடிப்படை தத்துவம்**

பல்வேறு காரணங்களால் செயற்கைக் காரணங்களாலும், இயற்கை காரணங்களாலும்- வேறுபட்டும் மாறுபட்டும் உள்ள இனங்களை "ஒரே முழு அமைப்பாக" ஆக்க முடிந்திருக்கிறதா? முடிந்திருந்தால், பன்னாட்டுக் கழகம் ஏன் தோற்றது? இன்றுள்ள ஐ.நா. மன்றம் ஏன் தடுமாறுகிறது? ஒற்றையமைப்பில் ஒன்றிவிட உலக இனங்களால் இன்று வரை முடியவில்லை என்ற வினாக்களும் நம் கண்முன்னே எழுபவைகளாக முடிவின்றியே தோற்றமளிப்பதாக காணப்படுவதுடன், எல்லா வகைப்பட்ட உதிரிகளையும் இணைத்துவிட்டால் "ஒருமைப்பாடு ஆக்கம்" கண்டுவிட முடியாது. நீரும் எண்ணெயும் எளிதில் இணைவதில்லை. எனவே, நாம் செயற்கையாக உருவா(க்)கும் இணைப்பினால் ஒருமைப்பாடு சிறப்பதில்லை என்பதையும் நாம் நிறைவிற்க் கொள்வது அவசியமாகிறது.

**நவீன தொழிற்நுட்பவியல் - ஓர் அறிவியல் பார்வை**

**(Micro Biological, Modern Technology Related, Genetical Genome - Rearrangement And Their Effects-Scientific Approaches)**

ஹெச்.டி.லாஸ்வெல் (H.D.Laswell) என்ற மேல்நாட்டு தொழில்நுட்ப வல்லுனர், தொடர்பைப் பற்றிக் கூறும்போது, "யார் யாருக்கு எதை எப்படி எவ்வளவு பதிவுடன் சொல்கிறார்"- என்றவாறு விளக்குகிறார். எல்லா தொடர்புத்தடைகளும், பல்வேறு வகைகளுக்கும் தடைகளாகவும், இயல்பாகவும் இருக்கவே செய்யும். மூலத்திலிருந்து இலக்கைச் சென்று அடையும் முன்பு பல தடைகளையெல்லாம் நாம் தாண்டிச் செல்ல வேண்டியிருக்கும் என்கிறார் அவர்.

இந்து என்றால் பிறர் துன்பம் கண்டு துன்பப்படுபவன், நல்வாழ்வு நெறிகளைப் போற்றுபவன்-என்று பொருள் என்று எழுதிச் சென்றுள்ளனர். சனாதன தர்ம நெறிகளின் தொகுப்பே இந்து மதம் என்பார் வரலாற்று அறிஞர்கள் பலர். "சனாதனம் என்றால் அழியாதது" - என்று பொருள். அழியாதது சத்தியம் ஒன்றே அப்படியானால், சத்தியத்தைப் போற்றும் எல்லா மதங்களும் இந்து மதமாகவே கருதப்படவேண்டும். சத்தியத்தைப் போற்றாத எந்த மதமும் உலகில் இல்லை.

E-ISSN: 2581-7140
Special Issue: Vol. 2, April-2019 Available at: www.ijtlls.com

இப்படி உயர்ந்த நெறிகளையெல்லாம் உள்ளடக்கி வாழ்ந்த சிந்து நதியின் மக்கள் வாழ்வு, சடங்குகளும் சம்பிரதாயங்களும் பிணைத்துப் பெருக்கப் பெற்று, பிரிக்கப்பெற்று ஏற்றத்தாழ்வுகள் கற்பித்து வாழ்வதனையே, இன்றைய இந்து மதம் (பல்வேறு மதங்கள்) என்பதை அடையாளமாக கொண்டுள்ளது. இதையெல்லாம், நாம் எண்ணிப் பார்த்து இக்கேடு விளைவிக்கும் சமுதாய, சாதிப் பிரிவுகளிலிருந்து விடுபட்டு, ஏற்றத்தாழ்வு இல்லாத வாழ்வு" வாழ வழிகோல்வதையே நமது இலட்சியமாக கொள்ளுதல் வேண்டும்.

இப்படி இவர்கள் கூறியன எல்லாம் நடக்காமல் போனால், உலகம் என்ன ஆகும் என்பதற்கு புவிஈர்ப்பு விசைக்கு வித்திட்ட அறிவியல் மேதை, அறிஞர் ஐன்ஸ்டின் அவர்கள், ஒரு விடையையும் கூறுகிறார். "நாம் முதலில் தொடங்க வேண்டிய இடம் மதங்களாகும்' மதங்களிடையே ஒருமைப்பாடு காணவேண்டும் எனவும், அவைகளும், உடனடியாக காலம் தாழ்த்தாமல் தொடங்கப்பட்டாக வேண்டும் என்றவர்,

"உலகம் தழுவிய அருள் எனும் வள்ளலாருடைய சமயம் மக்கள்

அதற்குத் தக்க கனிவுறும் முன்பாகவே வந்துவிட்டது – என்றும்

அவரது இனிய, இன்பச் செய்திகளை எல்லாம் ஆங்கிலத்தில் இவ்வுலக மக்களுக்கு எடுத்துச் சென்று சேர்க்க ஒரு விவேகானந்தர் அவருக்கு அப்போது கிட்டவில்லை. எதிர்காலத்தில், உலகம் ஒரே குடும்பமாக ஆகும்போது அவரது கவிதைகள், உலகின் இசைக்குரலாக, கவிக்குரலாக ஆகித்தான் தீரும்" என்று நம்பிக்கையூட்டுகிறார் அறிஞர்.தொ.பொ.மீ.அவர்கள்.

**வாழ்க்கையில் கனவு காணுங்கள்**

காலம் சென்ற குடியரசுத் தலைவர் டாக்டர் ஏ.பி.ஜே.அப்துல்கலாம் அவர்கள் சிறுவர்களே, கனவு காணுங்கள் - என்று சொல்லி வந்துள்ளார்கள் சிறுவர்களைக் கனவு காணச் செய்வதை பாட்டி சொல்லும் கதைகளும், குழந்தைகளுக்காகப் படைக்கப்பட்ட கதை நூல்களும் தாம். ஆனால், இவற்றை அறியாத இன்றைய சிறுவர்கள் எப்படி கனவு காண்பார்கள்! நாளைய சமுதாயம் நலமாக – வளமாக – பலமாக அமைய இன்றைய சிறுவர்கள் தமக்குரிய இலக்கியத்தைக் கற்க வேண்டும்! கற்க செய்ய வேண்டும்! என்றெல்லாம் அவரின் வாழ்நாள் முழுவதும் மாணவர்களிடம் உரை நிகழ்த்தியுள்ளார்கள்.

**இனிவரும் காலத்தில், கற்பனைக் கெட்டாத கணிப்பொறியுகம்**

மனிதன் மனிதனாக வாழவேண்டும், மனிதத் தன்மையோடு வாழவேண்டும், மனிதப் பண்புடனே வாழவேண்டும் என்றுதான் திருவள்ளுவர் விரும்பினார். மனிதன் தன் அறிவையும் அறிவுக்குக் காரணமாகிய சிந்தனையையும் பயன்படுத்தியே வாழ வேண்டும் என்று எண்ணினார். அறிவைக் கொண்டு நன்மை தீமைகளைப் பகுத்துணராமல் வாழும் மனிதனை நினைத்து வள்ளுவர் வருந்தினார்.

'அவிசொரிந்து ஆயிரம் வேட்டல்"- (259) தேவையற்றது என்பதைத் தான் அவர் வலியுறுத்தினார். ஒரே காலக்கட்டத்தில் நான்கு எரிமலைகள் வெடிக்கின்றன. ஒன்று, கணிப்பொறி – மின்னணு வெடிப்பு, இரண்டாவது, விண்வெளி ஆய்வு, மூன்றாவது, ஆழ்கடல் உலகம், நான்காவது, உயிரியல் தொழில நுட்ப அதிர்வு எனப்படும். ஆனால், எது முன்னால் ஓடிச் சாதனை புரிகிறதோ, காலம் பதில் சொல்லவேண்டும் - என்று வில்லியம் பிளேக் சொன்ன அனுபவம், கணிப்பொறி காலமாக தற்போது பிறந்திருப்பதுடன், மணல் துகள்தானே கணிப்பொறியின் ஆற்றல் மையம். ஆனால் இந்த யுகத்தில் அகல, நீள, ஆழ, விசாலங்களை அளக்க இப்போது நம்மால் முடியாது என்பதே உண்மையாகும்.

E-ISSN: 2581-7140
Special Issue: Vol. 2, April-2019 Available at: www.ijtlls.com

எனவே, புதிய சக்தி மையங்களில் கவனம் பாய்கிறது. இதன் விளைவே, மிகுந்த ஆற்றலைக் கொண்ட சூரியசக்தி பயன்பாட்டுக்கு வந்து கொண்டிருப்பதையெல்லாம் நம்மால் உணர முடிகிறது.

**மரபியல் வழி பல்வேறு ஆராய்ச்சிகளின் விளைவுகள்**

**(Microbiology & Modern Advanced Genetics With New Technological Research Works Will Be Producing)**

“குளோனிங்” (Cloning) - என்ற படியாக்க முறையின் மூலமாக ஆடுகளும், பசுக்கன்றுகளும் உற்பத்தி செய்யப்பட்ட முறைகளைப் போன்றே மனிதர்களும் உற்பத்தி செய்யப்பட்டு, ஒருவரைப் போல, அவரின் உருவம் பல பிரதிகளாக எடுக்கப்படலாம். இதன் மூலமாக தேவைப்படும் புதிய மனித உடல் உறுப்புக்கள் உற்பத்தி செய்யப்பட்டு தேவையானவர்களுக்கு பொறுத்தப்படுவதுடன், வேண்டாத மரபியல்-மூலக்கூறுகளான “ஜீன்கள்”, (Genes-Genome) குரோமோசோம்களிலிருந்து (Human Body - Diploid (2-n) Number Chromosomes) நீக்கப்பட்டு, பல்லாண்டு காலம் வாழும் நோயில்லா மனிதர்களும், உற்பத்தி செய்யப்படுவதுடன் தாவர, விலங்கினங்களின் உற்பத்தி பெருக்கத்தில் புது, புது முறைகளில் பல்வேறு உத்திகள் கையாளப்படுவதன் மூலமாக கலப்பின, மாற்று - மரபியல் மற்றும் தொழில் நுட்ப முறைகளைக் கையாண்டு (New Hybrid-Genome (Chromosome) Molecule’s Modifications – By Different Modern Microtechnological Advanced Experiment’s Result – Producing) இதனால், உணவு உற்பத்தியை மனித சமுதாயத்திற்கு தேவைப்படும் அனைத்து உணவு பொருள்களையும் நாம் உற்பத்தி செய்து கொள்ள வாய்ப்பாக அமையும் என்பது உறுதியாவதுடன்,

உலக மனித சமுதாயத்தில் “நிறவெறி”-இன்றும் இருக்கிறது. எனவே, மனிதனின் தொழில்நுட்ப அறிவின் மூலம் வருங்காலத்தில் மனிதர்களை நீல, மஞ்சள், பச்சை எனப் பல வண்ணங்களில் உருவாக்க முடிவதுடன், அக்காலத்தில் நிறவெறி எப்படி இருக்குமோ?

மகத்தான மாற்றங்கள் - மானுட வாழ்வை, மாறிவரும் மரபியல் சார்ந்த தொழில் நுட்பத்தின் மூலமாக திக்குத்திசை தெரியாத அளவுக்கு மாற்றும் கற்பனைக் கெட்டாத மாற்றங்கள் மடை திறந்த வெள்ளம் போல் வந்து கொண்டிருக்கின்றன என்பதும் உறுதியாகிறது என்பதை மனித சமுதாயம் நினைத்து, மகிழ்ந்து போன்றப்படுதல் அவசியமாக எக்காலத்திலும் கருதப்படுகிறது.

**நூற் பட்டியல்**

1. முனைவர்.ந.அறிவுராஜ், முனைவர்.ஆ.குமார் “தமிழக வரலாறும், தமிழர் பண்பாடும்” – முதற்பதிப்பு : ஜூன் 2010, வெளியீடு : பாவை பப்ளிகேஷன்ஸ், இராயப்பேட்டை, சென்னை 14.
2. டாக்டர்.கா.மீனாட்சிசுந்தரம், “பண்புடையோரின் பல்துறைப் பார்வைகள்”–(பல்துறைக் கட்டுரைகள்) இரண்டாம்பதிப்பு : 2006, வெளியீடு : DTP., KO Se.Iyyappan, Coimbatore – 46.
3. எஸ்.பி.விவேகி, “வேதமும் விஞ்ஞானமும்” – முதற்பதிப்பு : டிசம்பர் 2009, வெளியீடு: எஸ்.ஆர்.பிரிண்ட், அங்குசம், திருவொற்றியூர், சென்னை – 19.

**E-ISSN: 2581-7140**

**Special Issue: Vol. 2, April-2019** **Available at: www.ijtlls.com**

4. ஆர்.பி.சத்தியநாராயணன், “பாசமுள்ள புதிய தலைமுறைக்கு…”, முதற்பதிப்பு: 2010, வெளியீடு: புதிய தலைமுறை பதிப்பகம், தியாகராயநகர், சென்னை – 17.
5. வெ.பெருமாள்சாமி, “சிலப்பதிகாரம்” – மறுக்கப்பட்ட நீதியும், மறைக்கப்பட்ட உண்மையும்” நான்காம் பதிப்பு: செப்டம்பர் 2017, வெளியீடு : பாரதி புத்தாலயம் தேனாம்பேட்டை, சென்னை – 18.
6. டாக்டர்.பி.ஆர்.அம்பேத்கர், “இந்து மதத்தத்துவமும், மனு தர்மமும்!”–ஏழாம் பதிப்பு : 2018, வெளியீடு : பெரியார் சுயமரியாதைப் பிரச்சார நிறுவன வெளியீடு, சென்னை-7.
7. அறிஞர் அண்ணா, “ஆரியம் விதைக்காது விளையும் கழனி”–முதற்பதிப்பு : மார்ச்-2012, வெளியீடு : சுயமரியாதை பதிப்பகம், உடுமலைப்பேட்டை-642 126, திருப்பூர் மாவட்டம்.
8. தந்தை பெரியார், மற்றும், ”மெட்டீரியலிசம் அல்லது பொருள் முதல் வாதம்” (பிரகிருதிவாதம்), பனிரெண்டாம் பதிப்பு : 2016, வெளியீடு : திராவிடர் (கழக) இயக்க வெளியீடு, பெரியார் திடல், சென்னை – 7.

தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்
International Journal of Tamil Language and Literary Studies 
*A Bi-Yearly Peer-Reviewed International Journal*
E-ISSN: 2581-7140
Special Issue: Vol. 2, April-2019 Available at: www.ijtlls.com

# கல்வெட்டுகள், செப்பேடுகள்- ஓர் பார்வை
# A Glance on the Culverts and Copper Plates

**ப.செ.முத்துலெட்சுமி,** முனைவர் பட்ட ஆய்வளர்,
வரலாற்றுத்துறை, வ.உ.சிதம்பரம் கல்லூரி, தூத்துக்குடி - 628008.

## Abstract

*The paper traces the origins of archaeology and a glance on the culverts and copper plates. These findings help to find out the culture and civilization of the Tamil people. Hence, the paper attempts to trace Tamil archaeology.*

**Keywords:** Glance, Culverts, Copper Plates

### முன்னுரை

நாட்டின் தொண்மை வரலாற்றைப் பற்றி அறிந்து கொள்ள உதவும் தொல்லியல் சான்றுகளில் ஒன்று கல்வெட்டுகள் (அ) சிலாசாசனம் என்று அழைக்கப்படுகிறது. தமிழ்நாட்டில் காலந்தோறும் கல்வெட்டுகள் எவ்வளவு பொறிக்கப்பட்டுள்ளன என்பதை டாக்டர் எ.சுப்பராயுலு அவர்கள் கீழ்க்கண்டவாறு அட்டவணைப் படுத்தியுள்ளார்.

| வ.எண் | காலம் (கி.பி) | அரசர் | கல்வெட்டுகளின் எண்ணிக்கை |
|---|---|---|---|
| 1. | 550 – 850 | பல்லவர் | 300 |
| | | பாண்டியர் | 300 |
| | | பிற | 300 |
| 2. | 850 – 985 | சோழர் | 2000 |
| 3. | 985 – 1300 | பாண்டியரும் பிற அரசர்களும் | 7000 |
| 4. | 1300 – 1600 | பாண்டியர், சம்புவராயர் | 1000 |
| 5. | 1600 – 1900 | நாயக்கர், மராட்டியர், சேதுபதிகள், பிற குறு நில அரசர்கள் | 2500 |
| | | **மொத்தம்** | **13400** |

### செப்பேடுகளின் எண்ணிக்கை

கி.பி. 550 – 1300 - 60
கி.பி. 1300 – 1900 - 500
**மொத்தம் - 560**

E-ISSN: 2581-7140
Special Issue: Vol. 2, April-2019 Available at: www.ijtlls.com

**கல்வெட்டுகளின் தோற்றமும் வளர்ச்சியும்**

மிகப்பழங்காலம் தொட்டே இக்கல்வெட்டுகள் நிலவின என்பதற்கு புகழ்பெற்ற தொல்காப்பியத்திலும், சங்க இலக்கியங்களிலும் சான்றுகள் உள்ளன.

“பெயரும் பீடும் எழுதி அதர் தோறும்
பீலி சூட்டிய பிறங்கு நிலை நடுகல்”
“மருங்குல் நுணுகிய பே எழுதிர் நடுகல்
பெயர் பலம் படரத் தோன்று குயி லெழுத்து”

போன்ற அகநானூற்றுப் பாடல்களும்

“அணிமயிர் பீலி சூட்டிப் பெயர் பொறித்து
இனி நட்டனரே கல்லும்”
“இல்லடு கள்ளின் சில் குடிச் சீறூர்
புடை நடுகல்லின் நாட்பலியூட்டி”

போன்ற புறநானூற்றுப் பாடல்களும் நடுகல்லின் பெயரையும், பெருமையையும் பொறித்து வணங்கி வழிபட்ட பண்பினைப் பறை சாற்றுகின்றன.

**கல்வெட்டாய்வு**

1837-ம் ஆண்டு ஜேம்ஸ் பிரின்செப் என்ற வெளிநாட்டவர் இந்தியாவில் உள்ள கல்வெட்டுகளையெல்லாம் திரட்டி, படித்து அறிந்தோம் என்றால் இந்தியாவின் பழமையான வரலாற்றை மிகத்தெளிவாக அறிந்து கொள்ளலாம் என்ற கருத்தை வெளியிட்டார். இந்தியாவின் கல்வெட்டாய்வு ஆரம்பிக்கப்படுவதற்கு இவரே முக்கிய காரணம் ஆவார். 1861-ல் ‘அசோகர் காலத்திய கல்வெட்டுகள்’ என்ற தனித் தொகுப்பை இந்திய தொல்லியல் துறையின் டைரக்டர் ஜெனரல் அலக்சாந்தர் கன்னிங்காம் 1871-1885 வரை வெளியீட்டு வந்தார்.

சென்னை அரசாங்கத்தின் முதல் கல்வெட்டாய்வாளராக விளங்கிய ஹீல்ட்ஸ் என்பவர் தென்னிந்தியக் கல்வெட்டுகளை முதல் தொகுப்பை 1903-ல் வெளியிட்டார். சென்னை அரசாங்கத்தின் கல்வெட்டு இலாகாவினர் படியெடுத்த கல்வெட்டுகளின் முக்கிய குறிப்புகள் ‘தென்னிந்தியக் கல்வெட்டு அறிக்கை’ என்ற பெயரில் 1887-ம் ஆண்டு முதல் வெளிவர ஆரம்பித்தது. இதுவரை 1967-68-ம் ஆண்டறிக்கை வரை வெளிவந்துள்ளது. பிராமி எழுத்திலும், கரோஷ்டி எழுத்திலும் எழுதப்பட்டிருந்த இந்தியக் கல்வெட்டுகளைப் படித்த பெருமை பிரின்செப், பூலர், ஹீட்லஸ் போன்ற வெளி நாட்டவர்களையும், மித்ரா, பண்டார்க்கர், வி.வெங்கையா, கோபிநாரராவ், கே.வி.சுப்பிரமணிய அய்யர்,ஐராவதர், மகாதேவன் போன்ற இந்திய நாட்டினரையும் சாரும்.

தென்னிந்தியக் கல்வெட்டுகள் தொகுதிகள் இதுவரையில் ஒன்று முதல் பதினான்கு தொகுதிகள் தொடர்ந்து வெளிவந்துள்ளன. ‘எபிகிராபியா இந்தியா’ என்ற கல்வெட்டுத் தொகுதி ஒன்று முதல் முப்பத்தெட்டு வரை தொடர்ந்து வெளிவந்துள்ளது. 1887 முதல் 1936 வரை படி எடுக்கப்பட்டுள்ள கல்வெட்டுகள் எந்தெந்த ஊரில் தமிழகத்தில் படியெடுக்கப்பட்டன என்ற விபரம் அடங்கிய ‘படியெடுக்கப்பட்டுள்ள கல்வெட்டுகளின் வரிசை’ என்ற தொகுதி வெளியிடப்பட்டுள்ளது.

தமிழகத்தில் இருந்த சில மேலே நாட்டவர்களான சீவெல், மெக்கன்சி போன்றோர் தனிப்பட்ட முறையில் சில கல்வெட்டுகளை நேரிடையாகப் படித்தும், குறிப்பெடுத்தும் நூலாக வெளியிட்டுள்ளனர். ‘தென்னிந்திய வரலாற்றுக் கல்வெட்டுகள்’ என்ற பெயரில் ஒரு

E-ISSN: 2581-7140
Special Issue: Vol. 2, April-2019 Available at: www.ijtlls.com

தொகுதியை சீவெல் வெளியிட்டுள்ளார். சென்னை அருங்காட்சியகம் ‘இந்திய சாசனவியலும் தென்னிந்திய எழுத்துகளும்’ என்ற நூலைப் பதிப்பித்துள்ளது.

‘தமிழகம்’ என்ற ஆண்டு இழழையும்,‘கல்வெட்டு’ என்ற காலாண்டு இதழையும் வெளியிட்டு வருகிறது. தமிழ்நாட்டைச் சேர்ந்த ஐராவதம் மகாதேவன் அவர்கள் ஹரப்பன் எழுத்தைத் தொகுத்து ‘ஹரப்பன் எழுத்துகளின் தொகுதி’ ஒன்றை வெளியிட்டார். ஜப்பானிலுள்ள டோக்கியா பல்கலைக் கழகத்தின் தெற்கு ஆசிய வரலாற்றுத் துறை சோழர் காலக் கல்வெட்டுகளில் காணப்படும் பெயர்களை எல்லாம் திரட்டி ‘சோழர்கால கல்வெட்டுகளில் பெயர்கள்’ என்ற தலைப்பில் மூன்று தொகுதிகள் வெளியிட்டுள்ளது. 1861-ல் கல்வெட்டாய்வு ஆரம்பிக்கப்பட்டு இதுவரையில் சுமார் எழுபத்தைந்தாயிரம் கல்வெட்டுகள் படியெடுக்கப்பட்டுள்ளன.

**இலக்கியக் கல்வெட்டுகள்**

இலக்கிய சுவையுடன் இலக்கண விதிகளுக்குப் பொருந்தப் பாடல்கள் அமைந்துள்ள கல்வெட்டுகள் இலக்கிய கல்வெட்டுகள் என்று அழைக்கப்படுகிறது. பாண்டியரின் தளவாய்புர செப்பேடுகள் சோழரின் லெய்டன் செப்பேடுகள், அரச்சலூர் இசைக்கல்வெட்டு, நந்திவர்மரின் திருவெள்ளாறைப் பாடல் கல்வெட்டு, பராக்கிரபாண்டியனின் தென்காசி கல்வெட்டுகளில்சில ஆகும்.

“ஓங்குதிரை வியன்பரப்பில் உறுதி ஆலயமாகத்
தேங்கமிழ் மலர் நெடுங் கட்டிசை மகளிர் மெய்க்காய்”

என்ற பாடல் வரிகள் தளவாய்புரம் செப்பேட்டில் காணப்படுகிறது.

“சந்திரனது அழித்தோன்றிஇத் தாரமண்டல முழுத்தொண்டு
புண்டிந்திரன் முடிவுளை யுடைத்தும் இமயத்து கல்லெழுயும்”

என்ற இலக்கிய நயமிக்க பாடல் வரிகள் சிவகாசி செப்பேட்டில் காணப்படுகிறது.

“புலியைப் பயந்த பொன்மான் கலியைக்
கரந்து கரவாக் காரிகை சுரந்த” - திருக்கோவிலூர் கல்வெட்டு
“பல்லாக முதுகுடுமிப் பெருவழுதியென்னும் பரமேச்வரனாய்
வேள்விக்குடி யென்னப்பட்டது கேள்வியிற் றரப்பட்டதனைத்
துளக்க மில்லாக் கடற்றானையாம் களப்பிறா லிறக்கப்பட்டது”
- வேள்விக்குடி செப்பேடு

இராஜராஜ சோழன் சிறந்த இலக்கிய நடையில் மெய்கீர்த்திகளை அமைந்திருக்கிறான்.

“திருமகள் போல பெருநிலச் செல்வியும்
தனக்கே உரிமை பூண்டமை மனக்கொளக்
கந்தளுர்ச் சாலை கலமறுத்தருளி
வேங்கை நாடும் கங்கபாடியும்…”

இராஜராஜன் வழியைப் பின்பற்றி பின் வந்த சோழப் பேரரசர்களும் இலக்கிய மணம் கமழும் சிறந்த மெய்க்கீர்த்திகளை எழுதி வைத்துள்ளனர். முதலாம் இராஜராஜ சோழனின் இருபத்தி ஏழாம் ஆட்சியாண்டைச் சேர்ந்த கல்வெட்டு கவிதை நடையில் மிக அழகாகப் பொறிக்கப்பட்டுள்ளது.

“…..முத்தமிழ் நான்மைத்
தெய்வக் கவிதைச் செஞ்சொற் கபிலன்
முனிவன் டடக்கைப் பாரி தன்னடைக்கலப்

E-ISSN: 2581-7140
Special Issue: Vol. 2, April-2019 Available at: www.ijtlls.com

பெண்ணை மலையர் குதவிப் பெண்ணை
யலையுனவழுவத் தந்தாரிந் செல .....”

தென்ஆற்காடு மாவட்டம் செங்கம் சிவன் கோவிலில் உள்ள சோழர்கால கல்வெட்டு ஒன்று ‘பா’ வடிவில் அமைந்துள்ளது.

“எங்கட் பாரெங்கட் கிடவெனு மென்றரசர்
செங்கைவாழ் வல்லானைச் செவிப்பர் தங்கள்
கொடியொடுங் கொற்றக் குடையொடும் செம்பொள்
முடியொடு நின்றுணங்கி”

இவை தவிர படிமங்கலம், நடுகல், நந்திவர்மனான் திருவெள்ளரைப் பாடல் கல்வெட்டு, திருக்கோவிலூர் காடவர்கோன் பரவைக் கல்வெட்டு சோழ, பாண்டிய மன்னர்களின் மெய்க்கீர்த்திகள் முதலியவை இலக்கிய சுவைப் பொருந்திய இனிய பாடல் கல்வெட்டுகளில் சில ஆகும்.

**அரசியல் கல்வெட்டுகள்**

கி.பி. நான்காம் நூற்றாண்டு முதல் பதினேழாம் நூற்றாண்டு வரை உள்ள கால தமிழக வரலாறு பெரும்பாலும் கல்வெட்டுகளை அடிப்படையாக வைத்தே எழுத வேண்டியுள்ளது. மற்ற வரலாற்று மூலங்களைவிட கல்வெட்டுகளே நம்பத்தகுந்தவை ஆகும்.

அரசியல் கல்வெட்டுகளின் வகையில் வாயலூர்க் கல்வெட்டு முதலிடம் பெறுகிறது. கன்னியாகுமரியிலுள்ள வீரராஜேந்திரன் கல்வெட்டு சோழ மன்னர் தம் வழிமுறை மரபை வரலாற்று வழியில் கூறுகிறது. தென்னாற்காடு மாவட்ட திருவேண்டிபுரத்திலுள்ள மூன்றாம் இராஜராஜ சோழனின் கல்வெட்டு அரசியல் கல்வெட்டுக்கு சிறந்த உதாரமாகத் திகழ்கிறது.

தஞ்சாவூர் பிரகதீஸ்வரர் கோவிலுள்ள இரண்டாம் சரபோகி மன்னரின் மராட்டிய கல்வெட்டு போன்ஸ்லே வம்சாவழி வரலாற்றை காலவரன்முறைப்படி தெரிவிக்கிறது.

**நினைவு கல்வெட்டுகள்**

இந்த கல்வெட்டுகள் நடுகல் அல்லது வீரக்கல் ஆகும். போரில் தனது வீரம் காட்டி இறந்த வீரர்களின் நினைவாக நடப்படும் கல் நடுகல் எனப்படும். ஆநிரைக்கவர்ந்த போது அதை எதிர்த்துப் போரிட்டு உயிர் நீத்த வீரமறவர்களுக்கும் அவர்கள் நினைவாக நடுகற்கள் எடுக்கப்பட்டன. நடுகல் கல்வெட்டுகளில் மிகவும் பழமையானது. தருமபுரி மாவட்டம் இருளப்பட்டியில் கிடைத்த கல்வெட்டாகும்.

**கல்வெட்டின் காலம் நிர்ணயம்**

இந்தியாவில் காணப்படும் சகாப்தங்களின் அடிப்படையில் கல்வெட்டுகள் கால நிர்ணயம் செய்யப்படுகிறது. சக சகாப்தம் கிபி 78-ல் ஆரம்பமாகிறது. பல கல்வெட்டுகளிலும் செப்பேடுகளிலும், பண்டைய இலக்கியங்களிலும் சக ஆண்டு குறிக்கப்பட்டுள்ளது. யோக விபாகம் என்ற சமஸ்கிருத இலக்கியங்களிலும் சக ஆண்டு 380-ல் எழுதி முடிக்கப்பட்டதாக அந்த நூலில் குறிப்பு காணப்படுகிறது. மேலைச் சாளுக்கிய மன்னர் இரண்டாம் புலிகேசியின் பாதாமி கல்வெட்டு தான் சக ஆண்டைக் குறிக்கும் முதல் கல்வெட்டாகும். மதுரை மாவட்டம் ஐவர் மலைக் கல்வெட்டில் சக ஆண்டு 792 என்று பொறிக்கப்படடுள்ளது.

**தமிழ் பிராமி கல்வெட்டுக்கள்**

தற்கால தமிழ் எழுத்துக்கு முன்னோடியாக விளங்கிய எழுத்துக்களே தமிழி அல்லது தமிழ் பிராமி எழுத்துக்கள் என்று அழைக்கப்படுகிறது. இந்த எழுத்துக்கள் தான் தமிழகத்தில் கிடைத்துள்ள மிகவும் தொன்மையான எழுத்துக்கள் என்று அழைக்கப்படுகின்றன.

E-ISSN: 2581-7140
Special Issue: Vol. 2, April-2019 Available at: www.ijtlls.com

தமிழகத்தின் வட பகுதியிலிருந்து தென்பகுதிவரை பல இடங்களில் தமிழி எழுத்துக்களில் பொறிக்கப்பட்ட கல்வெட்டுகள், பானைகள், காசுகள் போன்றவை கிடைத்துள்ளன. தமிழகத்தில் இயற்கையாக அமைந்த குகைத்தளங்களில் தமிழ் பிராமி கல்வெட்டுகள் காணப்படுகின்றன.

**மாங்குளம் கல்வெட்டுகள் :**

கழுகுமலை அல்லது ஓவாமலை என்று அழைக்கப்படும் இந்த மலையின் கிழக்குப் புறத்தில் இயற்கை அமைந்த குகைத்தளங்களில் சிற கற்படுக்கைகள் இருக்கின்றன. 1906-ம் ஆண்டுக்கான கல்வெட்டுத் தொகுப்பில் 460 – 465ம் எண்களுடன் வெளியிடப்பட்டன.

**கல்வெட்டில் காணப்படும் எழுத்து**

“கணிய நந்த அ ஸிரிய இருவ் அன் கே
தம்மம் இத்த அ நெடுஞ்செழியன் பண அன்
கடல்அன் வழுத்திய் கொட்டுபித்த அ பளி இய்”

**விளக்கம்**

கணியாகிய நத்தஸ்ரீ இயக்குவனுக்கு நெடுஞ்செழியன் என்ற பாண்டியன் ஒரு பள்ளி செதுக்குவித்தான்.

**செப்பேடுகள் :**

பழங்காலத்தில் கற்களில் எடுத்துக்களைப் பொரித்தது போல உலோகத் தகடுகளிலும் எழுத்துக்களைப் பொறித்தார்கள். பித்தளை, செம்பு, வெள்ளி போன்ற பலவகையான உலோகத் தகடுகள் பயன்படுத்தப்பட்ட போதிலும் செப்புத் தகடுகளே அதிகமாக உபயோகிக்கப்பட்டிருப்பதால் இவைகள் செப்பேடுகள் என அழைக்கப்படுகின்றன. செப்பேட்டில் எழுதும் பழக்கம் கிபி 3-ம் நூற்றாண்டிலே இருந்து வந்துள்ளது.

செப்பேடுகள் பெரும்பாலும் பனை ஓலையின் வடிவில் நீண்ட சதுர வடிவில் காணப்படுகின்றன. செப்பேடுகள் பெருமன்னர்களால் வெளியிடப்பட்டதால் அவை அரச ஆணைகளைத் தாங்கி நிற்கின்றன. அதனால்தான் செப்பேடுகளில் செய்திகள் மிக விரிவாக எடுத்துக் கூறப்பட்டுள்ளன. இந்தியாவில் கிடைத்த செப்பேடுகளுள் பல்லவ செப்பேடுகள் காலத்தால் முந்தியவற்றுள் முதன்மையானவையாகும். கி.பி.மூன்றாம் நூற்றாண்டு வரை அவர்களின் செப்பேடுகள் கிரந்தம், பிராக்கிருதம், சமஸ்கிருதம் ஆகிய மொழிகளில் எழுதப்பட்டது. கி.பி. ஆறாம் நூற்றாண்டு முதல் காணப்படும் பல்லவ செப்பேடுகள் தமிழ், கிரந்தம் ஆகிய மொழிகளில் எழுதப்பட்டுள்ளன.

**கூரம் செப்பேட்டில் காணப்படும் வரிகள்**

கி.பி.ஏழாம் நூற்றாண்டில் வழக்கிலிருந்த பல்லவர் காலத்தில் விதிக்கப்பட்ட வரிகளைப் பற்றி கூறும் செப்பேட்டின் மூலம் அறியலாம். நிலம் 25 பங்காகப் பிரிக்கப்பட்டதைப் போல அரசனுக்குச் சேரவேண்டிய அனைத்து வரிகளும் 25 பங்குகளாக பிரிக்கப்பட்டு அவரவர் பொறுப்பு ஆணையிடப்பட்டது.

1. முனை : குடியிருக்கும் வீட்டு மனைக்காக வழக்கப்பட்ட வரி

2. மனைப்படைப்பு : வீட்டின் கொல்லைப்புறத் தோட்டத்துக்காக வாங்கப்பட்ட வரி

3. ஊராட்சி : ஊராட்சி நடத்துவதற்காக வாங்கப்பட்ட வரி

E-ISSN: 2581-7140
Special Issue: Vol. 2, April-2019 Available at: www.ijtlls.com

4. செக்கு : செக்காட்டும் வாணிபரிடம் வாங்கப்பட்ட வரி

5. துறி : தறியில் நெசவு செய்பவரிடம் வாங்கப்பட்ட வரி

6. கூலம் : தானியம் விற்பவரிடம் தானியமாக பெறப்பட்ட வரி

7. கத்திக்கானம் : கத்தி முதலிய போர்க் கருவிகளை செய்வோரிடம் வாங்கப்பட்ட ஆயுதவரி

சாசனத்தின் இறுதியில் இந்த சாசனத்தை வழங்கிய முதலாம் பரமேசுவரவர்மன் புகழைக் கூறும் சுலோகம் உள்ளது. அதில் அரசன் பரதன், சகரன், கர்ணன், யயாதி ஆகிய நான்கு அரசர்களுடன் ஒப்பிடப்பட்டு இருக்கிறான். கூரம் செப்பேட்டில் குறிப்பிடப்படும் வித்தியாவிநீத பல்லவராசன் வேண்டிக்கொள்ள பல்லவ அரசன் பரமேசுவரர் வர்மன் இந்த ஆணையைப் பிறப்பித்தான் என்று அறிய முடிகிறது. பரமேசுவர தடாகம் என்ற ஏரியையும் பாலாற்றிலிருந்து இதற்கு நீர் கொண்டு வரும் கால்யையும் இன்னும் காணலாம்.

**பார்வை நூல்கள்**

1. ஏ.வெங்கட்ராமன் - Tamil Epigrapghy , History Archaeology
2. சதாசிவ பண்டாரத்தார் - கல்வெட்டு கூறும் உண்மைகள்
3. தாமோதரன் - கல்வெட்டு ஒரு அறிமுகம்
4. உலகத்தமிழ் ஆராய்ச்சி கழகவெளியீடு - பாண்டியர் செப்பேடுகள்பத்து, பல்லவர் செப்பேடுகள் முப்பது

தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்

International Journal of Tamil Language and Literary Studies
*A Bi-Yearly Peer-Reviewed International Journal*
E-ISSN: 2581-7140
Special Issue: Vol. 2, April-2019 Available at: www.ijtlls.com


# கீழடி தொல்நகர அகழாய்வுக் களம்
# Keeladi Ancient Remnant City Archaeological Site

**முனைவர். வெ.முத்துலட்சுமி,** உதவிப்பேராசிரியர்,
தமிழ்த்துறை, ஜி.டி.என். கலைக் கல்லூரி, திண்டுக்கல்

## Abstract

*The paper tells about the Remnant city of Keeladi near the present Madurai. Tamil people's culture and origin has been dated and calculated by the help of Aathichanallur exvacations but the finding of the Keeladi site becomes prominent to know about the culture and the civilization there. Hence, the study paves way to comprehend the findings at the Keeladi site.*

**Keywords:** Keeladi, Ancient Remnant City, Archaeological Site, Madurai

**முன்னுரை**

சிவகங்கை மாவட்டத்தில் உள்ள திருப்புவனம் வழியாக இராமேசுவரம் செல்லும் தேசிய நெடுஞ்சாலையில், மதுரை நகருக்குத் தென்கிழக்கே சுமார் 12 கி.மீ. தொலைவில் கீழடி தொல்லியல் மேடும், அகழாய்விடமும் அமைந்துள்ளன. வைகை ஆற்றின் தென்கரையிலுள்ள இவ்வூர் கொந்தகை, மணலூர் போன்ற பல்வேறு வரலாற்றிடங்களால் சூழப்பட்டிருக்கிறது. கொந்தகை, மணலூர், பள்ளிச்சந்தை என்னும் தொன்மையான குடியேற்றங்களைக் கொண்டதாகவும், ஊருக்குள்ளேயே தொல்லியல் மேடு இருப்பதும் இக்கிராமத்தின் வரலாற்றுத்தன்மையை அரண் செய்யும்.

இங்கு கிடைக்கப்பெற்ற செங்கற்கட்டுமானமும் மற்றும் வாழ்வியல் தொடர்பான ஆயிரக்கணக்கான தொல் - பொருட்களும் ஒரு முழுமையான வளர்ச்சியடைந்த நகரம் புதைந்துள்ளதை எடுத்துக்காட்டுகின்றன. சங்க இலக்கியங்களில் கூறப்படும் நகர அமைப்புக்கள் கற்பனையல்ல, உண்மையென்று இவ்வகழ்வாய்வு நிரூபித்துள்ளது. மேற்கில் சேரமண்டலத்தையும், கிழக்கில் இராமேசுவரம் அப்பால் இலங்கையையும், பாண்டிய மண்டலத்தையும் இணைத்திடும் பல்வேறு வணிக வழித்தடங்கள் இப்பள்ளத்தாக்கினூடே கிளைத்துச் செல்கின்றன. இப்பெருவழித் தடத்தில் அமைந்துள்ளது சங்ககால ஊரான கீழடி.

**கீழடி தொல்நகரம் கண்டுபிடிப்பு**

இந்திய தொல்பொருள் பரப்பாய்வு நிறுவனம் 1861 – ஆம் ஆண்டு ஆரம்பிக்கப்பட்டது. இந்த நிறுவனத்தில் பல பிரிவுகள் உள்ளன. அதில் மிக முக்கியமான பிரிவு அகழாய்வுப் பிரிவு என்று கூறலாம். இந்தியாவில் கிட்டத்தட்ட 6 தொல்லியல் அகழாய்வுப் பிரிவுகள் உள்ளன. சமீபத்தில் 2001 இல் தான் தென்னிந்தியாவிற்கு என்று அகழாய்வுப் பிரிவு ஒன்று உருவாக்கப்பட்டது. இதற்கு முன் அமைக்கப்பட்ட 5 அகழாய்வுப் பிரிவுகளும் வடஇந்தியாவில் அமைக்கப்பட்ட 5 அகழாய்வுப் பிரிவுகளும் வடஇந்தியாவில் அமைக்கப்பட்டவை. கிருஷ்ணா, கோதாவரிக்கு கீழே எந்தவொரு பிரிவும் அமைக்கப்படவில்லை. 2013 இல் தான் இந்த பிரிவில் திரு.கி.அமர்நாத் ராமகிருஷ்ணா தொல்லியல் கண்காணிப்பாளர் அவர்களுக்கு

E-ISSN: 2581-7140
Special Issue: Vol. 2, April-2019 Available at: www.ijtlls.com

பொறுப்பேற்று தமிழகத்தில் அகழாய்வு செய்யும் வாய்ப்பு கிடைத்தது. இப்பிரிவின் இரண்டாவது அகழாய்வாக கீழடி அகழாய்வு கருதப்படுகிறது.

இதுவரை வைகை நதிக்கரையை ஒட்டி விரிவான அகழாய்வு செய்யப்படவில்லை எனலாம். மேலும், தமிழகத்தில் ஒரு பழமையான ஆற்றங்கரை நாகரிகம் மற்றும் நகரம் எவ்வாறு இருந்தன என்று தெளிவான நோக்கத்தில் ஆராய்ந்து அகழாய்வை மேற்கொள்ளவில்லை.

தென்னிந்தியாவில் தொடங்கப்பட்ட அகழாய்வுப் பிரிவின் கீழ் தமிழகத்தில் முக்கியமான ஒரு அகழாய்வு மேற்கொள்ள வேண்டும் என்ற எண்ணத்தில் மதுரையில் பழமை குறித்து ஆராயவும், மதுரைப் பகுதியின் நாகரிகம், ஆற்றுப் பள்ளத்தாக்கு குறித்து ஆராய்வதற்காக வைகை ஆற்றங்கரையோரப் பகுதிகளை தேர்ந்தெடுத்து மேற்பரப்பு கள ஆய்வு தொடங்கப்பட்டது.

தமிழ் நாட்டின் தொடக்க கால வரலாற்றை பறைசாற்றும் வண்ணம் வைகை ஆறு என்னற்ற தொல்லியல் சான்றுகளை தனக்குள் வைத்துள்ளது. குறிப்பாக தமிழ்நாட்டில் கண்டறியப்பட்டுள்ள தமிழ் - பிராமிக் கல்வெட்டுக்களில் கணிசமானவை, வைகை ஆற்றுப் பள்ளத்தாக்கைச் சேர்ந்தவை. இரும்புக் காலத்திலிருந்தே இப்பள்ளத்தாக்கு முழுவதும் உள்நாட்டு-வெளிநாட்டு வணிக நடவடிக்கைகளில் ஈடுபட்டு சிறந்திருப்பதாகத் தோன்றுகிறது.

மேற்குத் தொடர்ச்சி மலைகளில் வெள்ளிமலை அருகே பல காட்டோடைகளில் தோற்றம் கொள்ளும் வைகை ஆறு, தேனி, திண்டுக்கல், மதுரை, சிவகங்கை, இராமநாதபுரம் மாவட்டங்களின் வழியே பாய்ந்து சுமார் 250 கி.மீ. ஓடி, தென் தமிழகத்தின் வாழ்வாதாரத்திற்கு பெரும் உயிர் நாடியாக உள்ளது. மேட்டுப் பகுதிகளில் தோன்றி மறையும் ஓடையாகத் தோன்றிடும் வைகை, சுருளியாறு, கொட்டகுடி, வராகநதி, மஞ்சளாறு, மருதாநதி, உப்பாறு போன்ற துணையாறுகளின் உதவியால் தாழ் நிலங்களில் பெரும் உருவம் கொண்டு, இராமநாதபுரம் ஏரியிலிருந்து வெளிப்படுகையில் மீண்டும் சிற்றாறாகி, ஆரம்பகட்ட வரலாற்றுத் துறைமுக நகரம் அழகன்குளம் அருகே ஆற்றங்கரை என்னுமிடத்தில் வங்காள விரிகுடாவில் பெயரளவில் கலந்துவிடுகிறது.

இவ்வகையில், பல்வேறு காலகட்டங்களிலான பண்பாட்டு வளர்ச்சிகளைச் சரியாகப் புரிந்து கொள்ளும் விதத்தில், வைகை ஆற்றுப்பள்ளத்தாக்கில், 2013-14 இல் தொல்லியல் மேற்பரப்புகள் ஆய்வு மேற்கொள்ளப்பட்டதில் அடையாளம் காணப்பட்ட இடம் தான் கீழடி அகழாய்வுக் களம். ஒரு நல்ல வாழ்விடபகுதியை அகழாய்வு செய்ய வேண்டும் என்ற கொள்கையினால் தேர்ந்தெடுக்கப்பட்டது தான் கீழடி. மதுரையின் வரலாற்றைப் பற்றி ஆராய வேண்டுமென்றால் கீழடி, சித்தர்நத்தம், மாரநாடு ஆகிய மதுரையின் மிக அருகில் உள்ள இந்த மூன்று நகரங்களை ஆராய்தல் வேண்டும். அவற்றில் விதிகளுக்குட்பட்ட வகையில் இருந்தது கீழடி மட்டுமே.

**வரலாற்றுப் பின்புலம்**

கீழடியில் அகழாய்வுமேடு, இப்போதைய கிராமத்திற்கு தென்கிழக்கே ஒரு கி.மீ. தொலைவிலும், மணலூர் பாசன ஏரிக்கு மேற்கிலும் உள்ளது. இது உள்ளூரில் ‘பள்ளிச்சந்தை திடல்’ அல்லது ‘மேட்டு புஞ்சை’ அல்லது ‘வடக்குதிடல்’ எனப்படுகிறது. கீழடிக்கு அருகில் இருக்கும் கொந்தகை கிராமம் இரும்புக் காலத்தைச் சேர்ந்தது. அய்யனார் கோயிலுக்கும் ஏரிக்கும் இடைப்பட்ட புதைவிடத்தில், எண்ணற்ற முதுமக்கள் தாழிகள் கிடைத்துள்ளன. மேலும் வெவ்வேறு வடிவங்களில் கறுப்பு, சிவப்பு, கறுப்பு மற்றும் சிவப்பு பானைகளும் அதிக அளவில் கிடைக்கின்றன. அதில் இறந்தவர்களின் எலும்புகள் மற்றும்

E-ISSN: 2581-7140
Special Issue: Vol. 2, April-2019 Available at: www.ijtlls.com

பற்கள் கண்டறியப்பட்டன. அது போல கறுப்பு, கறுப்பு-சிவப்புப் பானைகளில் வெள்ளை நிறத்தில் அணிவேலைப்பாடும், சிவப்புப் பானைகளில் கறுப்பு நிற அணிக்கோடுகளும் கிடைப்பது தனித்தன்மை வாய்ந்ததாகும்.

இம்மேடு தவிர்த்து, கீழடியின் வரலாற்றுத் தன்மையை அறிய உதவுபவை, இங்குள்ள சிவன் கோயில் கல்வெட்டுகள். பொது சகாப்தம் 12-13 ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த பாண்டியர் காலத்தவை இவை. மாறவர்மன் குலசேகர பாண்டியனின் 31ஆம் ஆட்சி ஆண்டைச் சேர்ந்த ஒரு கல்வெட்டு, மலைமண்டலத்தைச் (சேரமண்டலம்) சேர்ந்த ஒருவருக்கு மகாசபையால் விற்கப்பட்ட நிலம் குறித்துப் பேசுகிறது. மணலூர் கண்மாய் அருகே நடந்த மேற்பரப்பு ஆய்வின் மூலம் பொ.ஆ.எ 8 - 9 ம் நூற்றாண்டைச் சேர்ந்த பாண்டிய மன்னர்களின் கல்வெட்டுகள் அங்குள்ள சிவன் கோயிலில் கண்டுபிடிக்கப்பட்டன. அதுபோல அங்குள்ள மடைக்கல்வெட்டும் பாண்டிய மன்னர்கள் குறித்து கூறுகின்றது. மேலும் முதலாம் இராஜராஜனின் காசுகளும், பிற்கால நாயக்கர்காலக் காசுகளும் இப்பகுதியில் கண்டெடுக்கப்பட்டுள்ளன. மதுரை வந்து சொக்கநாதர் மீனாட்சி அம்மன் கோயிலை நிர்மாணித்த பாண்டியர்களின் முன்னோர், மணலூர் நிலப்பகுதியிலிருந்து ஆட்சி செய்ததை பொது ஆண்டு 13ஆம் நூற்றாண்டில் இயற்றப்பட்ட திருவிளையாடற் புராணம் தெரிவிக்கின்றது.

**கீழடி அகழாய்வுக் களம்**

இவ்வகழாய்வுக் களம் சுமார் 110 ஏக்கர் பரப்பளவில் 4.5 கி.மீ. சுற்றளவில் இரண்டு வாழ்வியல் மேடுகளைச் சுற்றி அமைந்துள்ளது. இங்குள்ள மேடுகளில் உயரமானது இன்றைய தரைத்தளத்திலிருந்து சுமார் 6 அடிக்கும் மேலே உள்ளது. இம்மேட்டிற்குக் கிழக்கு மற்றும் மேற்குப் பகுதிகள் சமதளமாக்கப்பட்டு விவசாய நிலங்களாக மாற்றப்பட்டுள்ளன. பிறபகுதிகள் சிறு, குறு மேடுகளாகக் காணப்படுகின்றன. இம்மேட்டின் கிழக்குப் பக்கத்தில் மணலூர் கண்மாயும் விளைநிலங்களோடு கிராமமும் அமைந்துள்ளது. அகழாய்வுக்கு தேர்வு செய்த மேட்டில் இரண்டு பகுதிகளாக கிழக்கு மற்றும் மத்தியப் பகுதியில் சதுர கட்டங்களாகப் பிரித்து முறையாகக் குழிகள் வெட்டினர். கிழக்கு மேட்டில் 31 குழிகள் தோண்டினர் அதில் சில செங்கற்கட்டுமானங்களின் சான்றுகள் கிடைத்தன. மத்திய மேடுப் பகுதிகளில் 71 குழிகள் தோண்டப்பட்டன. ஏராளமான செங்கற் கட்டுமானங்களுடன் பானை ஓடுகளும் ஒருங்கே வெவ்வேறு வடிவங்களில் அடையாளம் காணப்பட்டு மீட்கப்பட்டன.

இங்கு தொல்லியல் சான்றுகள் மண்ணின் தன்மைக்கேற்ப சுமார் 6அடி முதல் 12அடி ஆழத்தில் கிடைத்துள்ளன. இவ்வகழாய்வில் பொதுவாக 5முதல் 8 மண்ணடுக்குகள் வரை தொல்லியல் சான்றுகள் கிடைக்கின்றன. இங்கு தந்தப்பொருட்கள், சுடுமண் பொருட்கள், உலோகப் பொருட்கள், கண்ணாடிமணிப் பொருள்கள், மணிகளிலான பொருட்கள், முத்துக்கள், கண்ணாடிப் பொருட்கள், கிளிஞ்சல் பொருட்கள், எலும்புப்பொருட்கள், கல்பொருட்கள், மான்கொம்புகள், சோழிகள் போன்றவை கிடைத்துள்ளன.

கிழக்கு மேட்டுப்பகுதிகளில் அகழாய்வு செய்ததில் கரடுமுரடான சிறிய மற்றும் பெரியபானைகள், அணி வேலைப்பாடு செய்யப்பட்ட பானைகள், கிண்ணங்கள், பானை ஓட்டின் மேல் கீறல்குறிகள், துளையிட்ட பாத்திரங்கள், நீர் வெளியேறும் வாய்ப்பகுதி உள்ள பானைகள், கறுப்பு, கறுப்பு-சிவப்பு பானைகள், பல்வேறு வண்ணத்தில் கண்ணாடி மணிகள், வட்டுக்கள், தட்டுக்கள், இரத்தினக் கல்வகைகள், பழுப்பு நிற பானைகள், இரும்புப் பொருட்கள், சுடுமண் மற்றும் கல்வெட்டுக்கல், வெள்ளை வண்ணத்தில் அணி வேலைப்பாடு செய்யப்பட்ட கறுப்பு-சிவப்பு பானைகள், கூம்புவடிவ கிண்ணங்கள், சாம்பல் மற்றும் எலும்புகளுடன் உள்ள பானைகள், சதுரங்க விளையாட்டுப் பொருட்கள், மத்திய மேட்டுப்

E-ISSN: 2581-7140
Special Issue: Vol. 2, April-2019 Available at: www.ijtlls.com

பகுதிகளில் வெவ்வேறு அடுக்குகளில் அகழாய்வு செய்த போது கறுப்பு-சிவப்பு பானைகள், கறுப்பு பானைகள், சிவப்பு பானைகள், தானியங்களை சேகரிக்கும் கலன்கள், பச்சை மற்றும் கறுஞ்சிவப்புக் கண்ணாடி மணிகள், சுடுமண் வட்டுகள், பழுப்பு நிற பானை ஓடுகள், சுடுமண்ணால் செய்யப்பட்ட காதணிகள், சதுரங்கக் காய்கள், செம்பினாலான கண்ணிற்கு மைதீட்டும் அஞ்சனக்கம்பி, விலைமதிப்பற்ற மணிகள், பளிங்குக் கல்மணிகள், சோழிகள், செம்பு வளையல்கள், தமிழ்-பிராமி எழுத்துக்கள் பொறிக்கப்பட்ட பானை ஓடுகள், எலும்பினால் ஆன கூர்முனைகள், வெள்ளை வண்ணம் பூசப்பட்ட கறுப்பு-சிவப்பு பானைகள், கற்கருவிகள், பெரிய நீர் சேகரிக்கும் மட்கலன்கள், சிறிய குடுவைகள், கிண்ணங்கள் போன்றவைகள் கிடைத்துள்ளன.

செங்கல் கட்டுமானங்கள், செங்கற்களால் கட்டமைத்த நீர்த்தேக்கத் தொட்டி, சுடுமண் சக்கரம், ஏராளமான செம்பு மற்றும் இரும்புப் பொருட்கள் கிடைத்துள்ளன. களிமண் தரைத் தளங்கள் சில குழிகளில் காணப்படுகின்றன. இங்கு பானை ஓடுகளும் செங்கல் துண்டுகளும் காணப்படுகின்றன. சில இடங்களில் தானியங்கள் சேகரிக்கும் சுடுமண் கலன்கள் இத்தளத்தின் மேல் வைக்கப்பட்டுள்ளன.

இங்கு கிடைத்த செங்கற்களின் அளவுகளில் சிறிது வித்தியாசம் இருப்பினும் பெரும்பாலானவை 36/24/6 செ.மீ. மற்றும் 33/23/6 செ.மீ. என்ற அளவிலேயே உள்ளன. கட்டுமானத்திற்குத் தேவையான வடிவமைப்பு மற்றும் அதன் அளவுகளுக்கு ஏற்ப செங்கற்களை உடைத்தும், ஒட்டவைத்தும் கட்டியுள்ளனர். செங்கற்களை ஒன்றோடு ஒன்று ஒட்ட வைப்பதற்கு மணலுடன் களிமண்ணை சேர்த்து பயன்படுத்தியுள்ளனர். இங்குள்ள சில செங்கற்கட்டுமானங்களில் துளைகள் காணப்படுகின்றன. அதுபோல நீரைச் சேமிக்க அல்லது வெளியேற்றுவதற்கான/கொண்டு செல்வதற்கான குழாய்களும் உள்ளன. சில குழாய்கள் வாயின் ஒரு பகுதி அகன்றும் மறுபகுதி குறுகியும் நேர்த்தியாக உருவாக்கப்பட்டுள்ளன. இவற்றின் பயன்பாடு குறித்துக் கூற போதுமான சான்றுகள் இதுவரை கிடைக்கப்படவில்லை. அது போல சில இடங்களில் இக்கட்டிடங்களின் தரைப்பகுதியில் குழிகள் தோண்டப்பட்டுள்ளன. அவைக் குப்பைக் குழிகளாக இருக்கலாம் என ஆய்வாளர்களால் கருதப்படுகின்றது. அதுபோல மேற்கூரைக் குகையால் தயாரிக்கப்பட்ட சுடுமண் கூரை ஓடுகளை மரங்களுடன் இரும்பு ஆணிகளையும் சேர்த்து பயன்படுத்தியுள்ளனர். எண்ணற்ற கூரை ஓடுகள் பல இடங்களில் கிடைக்கின்றது. மேலும், இங்குள்ள குழி ஒன்றில் தரைத்தளத்துக்குக் கீழே உறைகிணறு 21 வளையங்களோடு களிமண்ணிலிருந்து உருவாக்கப்பட்டுள்ளது.

தரைத்தளமும், சுவர்ப்பகுதியும் சேரும் இடத்தில் களிமண் கலவை கொண்டு நிரப்பியுள்ளனர். சில கட்டுமானங்களில், தரைத்தளத்திலிருந்து செங்கற்சுவர்களை செவ்வக வடிவத்தில் குறுகிய அறை போன்று எழுப்பியுள்ளனர். அவற்றின் பயன்பாடு குறித்துச் சொல்வதற்கு போதிய சான்றுகள் கிடைக்கவில்லை. ஆனால், வடிவமைப்பு மற்றும் அளவுகளின் அடிப்படையில் அவை சில குறிப்பிட்ட பொருட்களைச் சேமித்து வைக்கும் அறைகளாக இருக்கலாமெனக் கருதப்படுகின்றது. இங்குள்ள தரைத்தளம் ஒன்றில் மரக்கம்பு ஊன்றும் குழிகள் தோண்டப்பட்டுள்ளமை தெரிய வருகிறது.

உறைகிணறுகள் சில அணிவேலைப்பாடுகளுடன் காணப்படுகின்றன. மேலும் பெரும்பாலான உறைகிணறு வளையங்களில் உயரம் சுமார் 50 செ.மீ. ஆகவும் சுற்றளவு சுமார் 80 செ.மீ. ஆகவும், தடிமன் 3 செ.மீ. என்ற அளவிலும் இருக்கின்றது. சுடுமண் பொருட்கள் இங்கு கிடைத்துள்ள தொன்மையான பொருட்களில் மிகவும் அதிகமானவையாகும்.

E-ISSN: 2581-7140
Special Issue: Vol. 2, April-2019 Available at: www.ijtlls.com

சிறிய மோதிரங்கள், தூண்டில்பளு, பதக்கம், கூம்பு, அகப்பை, காதுவளையங்கள், குண்டுகள், உருவச்சிலைகள், குழாய், பகடைக்காய், அடைப்பான், மணிகள், விளக்குகள், தோடுகள், எடைக்கல், வீரர்கள், நூற்பு இயந்திரக் கருவிகள், வட்டுகள், சக்கரங்கள் போன்ற பல்வேறு வடிவங்கள் கிடைத்துள்ளன. மனித உருவ பொம்மைகள் நேர்த்தியான திறமையுடனும், சில கரடுமுரடாகவும் உள்ளன. விரிந்த வாயுடன் முகக்கூறுகள் தெளிவாகக் காட்டப்பட்டுள்ளன. தலைப் பகுதி துளைகளுடனும் அணிகலன்களுடனும் காணப்படுகின்றன. சுடுமண் பொருள்களில் ஒரு முத்திரை இருப்பது முக்கியமானதாகும்.

இங்கு வாழ்ந்த மக்கள் பல வகையான மட்கலன்களை அந்தந்த தேவைக்கேற்ப உற்பத்தி செய்து பயன்படுத்தி வந்துள்ளனர். வெள்ளை வரைக்கட்டுள்ள பானைகள், வெண்மை தீட்டப்பெற்ற சிவப்புபானைகள், வெண்மை தீட்டப்பெற்ற கறுப்பு – சிவப்பு பானைகள், சக்கரமுள்ள பானைகள், துளையிடப்பட்ட பானைகள் போன்ற வகைகளில் மட்பாண்டங்கள் கிடைக்கப்பட்டன.

**முடிவுரை**

கீழடி ஆய்வானது எதிர்காலத்தில் பண்பாடுகளின் காலத்தை நிர்ணயிக்கும் அகழாய்வாக இருக்கும் என்ற நம்பிக்கை உள்ளது. காலத்தைப் பொருத்தவரையில் அரிக்கமேடு அகழாய்வை வைத்து தான் இதுவரை கணித்து கொண்டிருக்கின்றார்கள். ஆனால் கீழடியில் கிடைக்கின்ற கட்டிடங்கள், அவற்றின் கீழே கிடைக்கும் பொருட்களை வைத்துப் பார்க்கும் போது இன்னும் கால அளவு முற்காலத்திற்குச் செல்வதற்கான சாத்தியம் உள்ளது. இதை ஆய்வின் வழி தெளிவுபடுத்தினால் தான் பெருங்கற்காலத்தையும், சங்ககாலத்தையும், தொடக்ககால வரலாற்றையும், இணைத்து தமிழ்நாட்டின் சரியான பண்பாட்டு வரலாற்றுப்படி நிலைகளை வரையறுக்க முடியும்.

**நூற்பட்டியல்**

1. தி.சுப்பிரமணியன், தமிழகத்தில் பெருங்கற்காலப் பண்பாடு, நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட், அம்பத்தூர், சென்னை – 600 098, மூன்றாம் பதிப்பு, டிசம்பர்-2018.
2. கே.வி.இராமன், தொல்லியல் ஆய்வுகள், நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட், அம்பத்தூர், சென்னை – 600 098, பதிப்பாண்டு – 2014.
3. சி.இளங்கோ, தமிழகத் தொல்லியல் ஆய்வுகள் கீழடி வரை, அலைகள் வெளியீட்டகம், இராமநாதபுரம், சென்னை – 600 089.
4. முனைவர் கே.வெங்கடேசன், முற்கால தமிழ்நாட்டு வரலாறு, இராஜபாளையம், 2012, பக்.105.
5. தமிழக வரலாறு மக்களும், பண்பாடும், கே.கே.பிள்ளை, சென்னை, 2009, பக். 468.

E-ISSN: 2581-7140
Special Issue: Vol. 2, April-2019 Available at: www.ijtlls.com

# கேரளக் கல்வெட்டுக்களில் - வேணாடு
# Venad in the Culverts of Kerala

**முனைவர்.ரா.முல்லை,** உதவிப்பேராசிரியர்,
ஸ்ரீசாரதா மகளிர் கல்லூரி, பெரம்பலூர்.

## Abstract

*The paper brings forth the details inscribed in the culverts regarding the county Venad in the culverts of Karala. The facts tell about the culvert edicts of Cholapuram, Thirukadithanam, Mampalli of present Kerala and Rameswaram temple of Tamil Nadu. The evidences got through the culverts say about the state of the Venad kings and their position under the Padian kings. This county lied between Kollam and Thiruvananthapuram. The glorious past of the Venad royalties are elicited in the paper. Hence, the paper discloses the derivated facts from the sources.*

**Keywords:** Venad, Culverts, Kerala, Kings of Venad

கல்வெட்டுக்கள் வரலாற்றின் தோழி எனலாம். கல்வெட்டுக்கள் இல்லையெனில் நமது கடந்தகால வரலாறும் இருளில் மறைந்திருக்கும் ஒரு நாடு, அந்நாட்டின் கடந்தகால வரலாறு பண்பாடு பழக்கவழுங்கங்கள் இவற்றை அறியத் துணைநிற்கும் வரலாற்றுச் சான்றுகளுள் கல்வெட்டுக்கள் முக்கிய இடம்பெறுகின்றன. பண்டைக் காலத்தில் இன்றிருப்பதுபோல் காகிதங்களின்பயிற்சியோ எழுத்து வசதிகளோ இல்லை. எனவே, அக்கால அரசர்கள் தங்கள் ஆணைகளையும், அறிவிக்கவிரும்பிய செய்திகளையும் கற்களிலும், செப்பேடுகளிலும், ஓலைச்சுவடிகளிலும் எழுதி வைத்தனர். ‘வன்மையான பொருள்களின் மீது எழுதுவதால் எழுதப்பட்ட செய்தி நீண்டகாலம் அழிவுபெறாமல் நிலைத்திருக்கும் என்று கருதியே இம்முறையைக் கையாண்டனர்’. என்று இரா.பன்னீர் செல்வம் குறிப்பிடுகிறார்.

இடைக்காலத்தில் சேரநாடு பல நாடுகளாகப் பிரிக்கப்பட்டு அரசர்கள் மற்றும் சிற்றரசர்களால் ஆட்சிசெய்யப்பட்டன. அந்நாடுகளில் வேணாடு அரசியல் வரலாற்றிலும், பொருளாதார வளர்ச்சியிலும் முக்கியமான இடத்தைப் பெற்றிருந்தது. எனவே, கல்வெட்டுகளில் அந்நாட்டினைக் குறித்துள்ள செய்திகளே இங்கு ஆய்வுக்கு உட்படுத்தப்பட்டுள்ளது.

**வேணாடு**

“பள்ளிக்கு எண்ணைக்கும் மற்றும் வேணாடங்குறைவு
வாராதேய செய்யக்கடவராக சமைச்சு இந்நகரம் கண்டு
நீரேற்ற மருவான் சபரீசோ செய்விச்ச தரிசாப்பள்ளிக்கு” (T.A.S. Vol.II.P.80)

என்ற தரிசாப்பள்ளிச் சாசனத்தில் வேணாடு என்ற சொல் முதன் முதலில் இடம்பெறுகிறது. சங்க காலத்தில் வேள்நாடு என்று அழைக்கப்பட்ட நாடே இடைக்காலத்தில் வேணாடு என்று அறியப்பட்டது. ஜடிலவர்மன் என்ற பாண்டிய மன்னனின் சென்னைப் பொருட்காட்சிச் செப்பேட்டில் வேள் மன்னன் என்றே வேணாட்டு அரசன் குறிக்கப்பட்டுள்ளதை காணலாம். (E.I.Vol.XXII.P.5758) தரிசாப்பள்ளிச் சாசனத்தில் வேள்குலசுந்தரன் வேணாடு வம்சத்தின்

E-ISSN: 2581-7140
Special Issue: Vol. 2, April-2019 Available at: www.ijtlls.com

வேறொரு சிற்றரசனாகும். உதயமார்த்தாண்ட வர்மா என்ற வேணாட்டு அரசனை 'வேளாதிபன்' என்று கி.பி.1168 ஆம் ஆண்டு படைக்கப்பட்ட 'சயாந்துரபுராண சமுச்சு' என்று வடமொழி நூலில் குறிப்பிடப்பட்டுள்ளது.

வேள் என்றால் சிற்றரசன் என்பது பொருளாகும். எனவே, சிற்றரசனின் கீழுள்ள நிலப்பகுதியை வேள் என்று கூறலாம். அதனால், வேள்மன்னன், வேளாதிபன், வேள் விசயன் என்று அரசர்கள் குறிப்பிடுகின்றனர்.

கி.பி.8 ஆம் நூற்றாண்டில் வேணாட்டின் மீதும், ஆய் நாட்டின் மீதும் சோழர்கள் படையெடுப்பு நடத்தினர். இதனால், வேணாட்டின் தலைநகரம் கொல்லத்திற்கு மாற்றப்பட்டுச் சேரர்களின் கீழ் குறுநாடாக விளங்கியது. ஆய்நாடு விழிஞ்ஞத்தைத் தலைநகரமாகக் கொண்டு பாண்டியர்களின் கீழ் ஒரு தனி நாடாக மாறியது. கி.பி.90 இல் சோழர்கள், பாண்டியர்களின் தலைநகரமான மதுரையைக் கீழடக்கி வேணாட்டின் பல பகுதிகளையும், ஆய்நாட்டையும் பிடித்தெடுத்தனர். பின்னர், 'தாக்கோலம்' என்ற இடத்தில் வைத்து கி.பி.919 இல் கழகம் உருவானது. இதனை வேணாட்டு அரசர்களும், ஆய்நாட்டு அரசர்களும் நன்றாகப் பயன்படுத்திக் கொண்டனர். ஆனால், விக்ரமாதித்ய வரகுணனுக்குப் பிறகு (883-912) ஆய்நாடு குறித்துள்ளக் கல்வெட்டுச் சான்றுகள் கிடைக்கவில்லை. கி.பி.10 ஆம் நூற்றாண்டில் நடுப்பகுதியில் சோழர்களின் சக்திவலுவிழந்தது.அந்த வேளையில் ஆய்நாடு சுதந்திரமானது. சேரர்களின் உதவியோடு ஆய்நாட்டவர் சோழர்களை எதிர்க்க ஒன்றுதிரண்டு அதில் வெற்றியும் கண்டனர். 'காந்தளூர்ச் சாலை சேரலன் சாலையாக விளங்கியது. இதன் பொருள் வேணாட்டின் ஆட்சி காந்தளூர்ச் சாலை வரைப் பரவியது என்பதாகும்.

வேணாட்டின் எல்லைகள் ஒவ்வொரு காலகட்டத்திலும் மாற்றத்திற்கு உட்பட்ட நிலையில் அமைந்திருந்தது. கி.பி.11 ஆம் நூற்றாண்டின் இறுதியில் வேணாட்டு அரசன் 'இராமன் திருவடி' தன்னைச் சேரநாட்டின் வாரிசாக நினைத்து முடிசூடிக் குலசேகரன் என்ற பட்டத்தையும் பெற்றார். இவர் நாஞ்சில் நாட்டின் சில பகுதிகளை வேணாட்டோடு இணைத்தார்.

**சோழபுரம் கல்வெட்டு (கி.பி.1126)**

> "வேணாடு வாழ்ந்தருளுகின்ற ஸ்ரீ வீரகேரணபன்மற்கு அமைஞ்ச
> ஆதிகாரிகள் வருக்கைப்பள்ளித் தனஞ்செயங்கண்டனும்
> மண்ணூர் வாழ்கின்ற இரவி சக்கிராயுதனாகின்ற ஸ்ரீ
> தோங்கப்பல்லவரையனும் எழுத்து சிவரிப்பள்ளி கண்ணங்
> கோவிந்தனும் உள்ளிருப்புக் குன்றின் மேல் விக்கிரமன்
> குன்றனான கேரளசிங்கப் பல்லவரையனும் காரியமாக
> கோட்டாறான மும்முடிசோழநல்லூர் இராஜேந்திரசோழ
> ஈசுவருடைய மகாதேவர்க்கு" (T.A.S.Vol.IV.P.17)

என்ற சோழபுரம் கல்வெட்டில் வேணாட்டு அரசன் ஸ்ரீ வீரகேரளவர்மன் காலத்தில் இன்றைய நாகர்கோவிலைச் சேர்ந்த பகுதியான கோட்டாறு வரை வேணாட்டின் பாகமாக மாறியது என்ற செய்தியை அறிந்துகொள்ள முடிகிறது. கி.பி.12,13ஆம் நூற்றாண்டுகளில் பாண்டிய, சோழ நாட்டின் சிலபகுதிகளைக் கீழடக்கிய இரவிவர்மன் என்ற அரசன் திருநெல்வேலியிலுள்ள தாமிரப்பரணிவரைப் பிடித்து வேணாட்டின் பகுதியாக மாற்றினான். சேரர் காலத்தில் வேணாட்டின் வளர்ச்சிக்குக் காரணமாக அமைந்தவை.

1. கொல்லம் துறைமுகம்
2. சிரியானி கிறித்தவர்களின் குடியேற்றம்

E-ISSN: 2581-7140
Special Issue: Vol. 2, April-2019 Available at: www.ijtlls.com

3. யூதர்களின் குடியேற்றம்
4. மணிக்கிரமம் அஞ்சுவண்ணம் போன்ற வியாபாரக் குழுக்களின் சேவை
5. கி.பி.825 இல் கொல்லமாண்டு துவக்கம்

போன்ற வரலாற்று நிகழ்வுகளால் பொருளாதாரம் மேன்மையடைந்து வேணாடு வரலாற்றில் தனக்கென்ற ஒரு தனியிடத்தைப் பிடித்தது. இதுபோன்ற சேரர்களின் தென்பகுதி வேணாடு பலமுறை சோழ, பாண்டியர்களின் கடற்படை ஆக்கிரமிப்பிற்கு உள்ளானது.

**திருக்கடித்தானம் கல்வெட்டு**

> "சொஸ் தஸ்ரீ கோப்பர்க்கரனிரவி மர் திருவடிக்கு
> செல்லாநின்ற யுாண்டிரான்டாமாண்டைக் கெதிர்
> பந்திராமாண்டு வேணாடுடைய கோவர்தனம்
> மார்த்தாண்டன் அமைச்சு நன்றுழைநாடு
> வாழ்ந;" (T.A.S.Vol.V.P.177)

என்ற பாஸ்காரரவிவர்மனின் திருக்கடித்தானம் கல்வெட்டில்கோவர்த்தன மார்த்தாண்டான் வேணாடு அரசனாக விளங்குகிறார். மேலும், அவரிடம் நன்றுழை நாட்டின் ஆட்சிப் பொறுப்பும் ஒப்படைக்கப்படுகிறது என்பதை அறிந்து கொள்ளமுடிகிறது.

**இராமேஸ்வரம் கோயில் கல்வெட்டு**

> "அச்சேரிக்கல் காராண்மை செய்த வேணாட்டு குமரனுதைய
> வர்ம்மன;............................." (T.A.S.Vol.V.P.45)

என்ற கொல்லம் இராமேஸ்வரம் கோயில் கல்வெட்டில் இராம குலசேகரனின் கோயிலதிகாரிகள் குமாரன் உதயவர்மன் என்பவரை வேணாட்டிலுள்ள சேரிக்கல்லின் (குடியிருப்பு) பொறுப்பை ஒப்படைக்கிறார். இவர் பின்னர் வேணாட்டு அரசனாக மாறியிருக்க வேண்டும். ஆனால் அக்கல்வெட்டுப் பகுதி அழிந்த நிலையிலையே கிடைத்துள்ளது. எனவே, தெளிவாக அறியமுடியவில்லை.

**மாம்பள்ளிச் செப்பேடு**

கொல்லத்தில் அமைந்துள்ள 'பனங்காவுல அரண்மனையைக்' குறித்து மாம்பள்ளிச் செப்பேடு (T.A.S. Vol.IV.P.9) மற்றும் பல கல்வெட்டுக்களில் செய்திகளில் உள்ளன. அந்த அரண்மனையில் வைத்து இராமகுலசேகரன் (கி.பி.1102) ஒரு கூட்டத்தை நடத்தியுள்ளார். எனவே, சேரர்களின் இரண்டாவது தலைநகரமாகக் கொல்லம் விளங்கியது. மேலும் பனங்காவு அரண்மனை அரசர்களின் விருந்தினர் மாளிகையாக விளங்கியிருக்கலாம். அதுபோன்று வேணாடு குறகிய காலத்தில் சக்தி வாய்ந்ததாக விளங்கியதற்குக் கொல்லத்தின் தலைநகரம் ஒரு முக்கியக் காரணமாகும்.

**முடிவுரை**

மிகப்பழங்காலத்தில் வேணாடு கொல்லத்திற்கும் திருவனந்தபுரத்திற்கும் இடைப்பட்ட ஒரு சிறு நாடாக இருந்தது. கி.பி.8-ஆம் நூற்றாண்டின் ஆரம்பம் வரை வேணாடு ஆய்நாட்டின் ஒரு பகுதியாகவே இருந்தது. கேரளக் கல்வெட்டுக்களில் முதன் முதலாக இப்பெயர் வேணாட்டு மன்னர் அய்யனடிகள் திருவடிகளின் தரிசாப்பள்ளி சாசனத்தில் இடம்பெறுகிறது. அதன்பிறகு சிரியன் செப்பேடு, திருவன்மண்டூர், திருக்கடித்தானம், இராமேஸ்வரம் கோயில்கல்வெட்டு, மாம்பள்ளிச் செம்பேடு, மாம்பள்ளிச் செப்பேடு போன்ற கல்வெட்டுக்களில் வேணாடு குறித்துள்ள செய்திகளும் அந்நாட்டை ஆம் நூற்றாண்டிலிருந்து பிற்காலம் வரை வேணாடு என அறியப்பட்ட நாடு கி.பி.17 ஆம் நூற்றாண்டிற்குப் பின் 'திருவிதாங்கூர்' என

E-ISSN: 2581-7140

Special Issue: Vol. 2, April-2019

Available at: www.ijtlls.com

மாறியது. திருவிதாங்கூரின் அமைப்பும் அதற்கு அப்பெயரும் மிகப் பிற்காலத்தில் ஏற்பட்டவையாகும்.

**துணைநூல்கள்**

1. பேராசிரியர் ஜே. தர்மராஜ், டாக்டர் த. எபிஜேம்ஸ், கல்வெட்டியல், டென்சி பப்ளிகேஷன்ஸ், சிவகாசி, ஐந்தாம் பதிப்பு – 2014.
2. முனைவர். சுப்புராயலு, தமிழ்க் கல்வெட்டியலும் அதன் வரலாறும், தமிழ்ப் பல்கலைக் கழகம், தஞ்சாவூர், முதற்பதிப்பு - 2001.
3. வை. சுந்தரேச வாண்டையார், (அண்ணாமலைப் பல்கலைக்கழக மொழியியல் துறையின் முன்னாள் கல்வெட்டு ஆராய்ச்சியாளர்), 30 கல்வெட்டுகள், 25, பீட்டர்ஸ் சாலை, சென்னை - 600004. முதற்பதிப்பு - 1958.

தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்
International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Special Issue: Vol. 2, April-2019
Available at: www.ijtlls.com


# தமிழர்சார் தொல்லியல் அகழாய்வுகள்
# Tamil Oriented Archaeological Excavations

**த.முனியம்மாள்,** முனைவர் பட்ட ஆய்வாளர்,
ஹோலி கிராஸ் ஹோம் சயின்ஸ் கல்லூரி, தூத்துக்குடி.

## Abstract

*The idea of the paper is to let know of the archaeological digging done in the region of the Tamil Nadu. It reveals the relic sites on the banks of Tamiraparani and Vaigai. Aadichanallur, Alagankulam and Keeladi are some example for the site studies. Hence, this article caters down the norms of archaeology, types, and methods in the archaeological department for estimation.*

**Keywords:** Tamil, River Culture, Remnants, Archaeology, Excavation

### முன்னுரை

தமிழர்களின் தொல்லியல் அகழாய்வுகள் இன்றும் நிகழ்ந்து வருகிறது. தொல்லியல் களம் மற்றும் அகழாய்வுகளின் வளர்ச்சிப் போக்கு குறித்து இக்கட்டுரையில் காண்போம்.

### தொல்லியல் - அகழாய்வு விளக்கம்

தொல்(தொன்மை, பழமை)+இயல் = தொல்லியல் பழைய காலத்தின் சுவடுகளைப் பற்றி ஆய்வது. தொல்லியலில் அகழாய்வு என்பது தொல்லியல் எச்சங்களை வெளிக்கொணர்தல், செயல்படுதல், பதிவு செய்தல் என்பவற்றை ஒருங்கே குறிக்கிறது. அகழ்தல் என்றால் பூமிக்கு அடியில் வரலாற்று எச்சங்களைத் தோண்டி ஆராய்வது அகழ்வாராய்ச்சி ஆகும். தொல்லியல் அல்லது தொல்பொருளியல் என்பது கட்டிடக்கலை, தொல்பொருட்கள் மற்றும் நிலத்தோற்றங்கள் என்பன உள்ளிட்ட எஞ்சிய பொருட்களை வெளிக்கொணர்ந்து ஆவணப்படுத்தி பகுப்பாய்வு செய்வதன் மூலம் செய்யப்படும் மனிதப்பண்பாடு பற்றிய படிப்பாகும்.

### தமிழக தொல்லியல் களங்கள்

தமிழக தொல்லியல் களங்கள் நான்கு வகைப்படும். அவை

1. வரலாற்றுக் காலத்திற்கு முந்தைய தொல்லியல் களங்கள்
2. ஆரம்ப கால தொல்லியல் களங்கள்
3. மத்தியக்கால தொல்லியல் களங்கள்
4. அண்மைய கால அகழவாய்வுகள்

### இந்தியத் தொல்லியல் ஆய்வகம்

இந்தியத் தொல்லியல் ஆய்வக அமைப்பானது இந்திய அரசாங்கத்தினால் உருவாக்கப்பட்ட அதிகாரப்பூர்வமான தொல்லியல் ஆய்வு அமைப்பாகும். இவ்வமைப்பு பண்பாட்டுத்துறை அமைச்சகத்தின் கீழ் உருவாக்கப்பட்டது.

### பணிகள்

i) இந்தியாவில் தொல்பொருள் ஆராய்ச்சிகளை மேற்கொள்ளல்
ii) இந்திய நாட்டின் தொன்மையான பண்பாட்டு மரபைக் காத்தல்

E-ISSN: 2581-7140
Special Issue: Vol. 2, April-2019 Available at: www.ijtlls.com

இந்தியாவின் பாரம்பரிய நினைவுச்சின்னங்கள் பாதுகாப்பு விதி 1958இன் கீழும் இந்திய தொல்பொருள் மற்றும் களைக்களஞ்சிய பாதுகாப்பு விதி 1972இன் கீழும் இந்திய நாட்டின் அனைத்து தொல்பொருள் ஆராய்ச்சிகளும் இவ்வமைப்பினால் முறைப்படுத்தப்படுகிறது.

**தொல்லியல் துறையின் நோக்கம்**

i) பழங்காலத்தைப்பற்றி ஆய்வு செய்தல்

ii) பழங்கால மக்களின் வாழ்க்கை முறை, தொழில், வணிகம், வேளாண்மை, அரசியல், நுண்கலைகள் முதலியவை பற்றி ஆய்ந்தறிதல்

**தொல்லியல் நிகழ்வுகளை கண்டறியும் முறை**

திட்டமிட்டுச் செய்யப்படும் ஆய்வுகளின் போதோ, தற்செயலாய்க் கிடைக்கும் தடயங்கள், எச்சங்களின் உதவியுடனோ, தொன்மைக்கால நிகழ்வுகளைத் தொல்லியல் ஆய்வாளர்கள் கண்டறிகிறார்கள்.

**அகழாய்வுக்குப் பயன்படும் இலக்கியங்கள்**

ஒரு நாட்டின் பழமையான இலக்கியங்கள் அகழ்வாய்விற்குரிய இடங்களைத் தெரிவு செய்வதற்கு உறுதுணையாய் இருக்கின்றன. அவற்றில் அக்காலத்தின் சிற்றூர்கள், நகரங்கள், துறைமுகங்கள், கோட்டைகள், அரண்மனைகள் முதலியவற்றைப் பற்றிய குறிப்புகள் பரவலாய்க் காணப்படும். அவற்றின் துணைகொண்டு அகழாய்வு செய்வதற்கான இடங்களைத் தீர்மானிக்க இயலும். தொல்லியல் ஆய்வுகளின் மூலம் நம் முன்னோர்களது காலத்தைப் பற்றியும், அவர்களின் சமூக, பொருளாதார நிலைகளைப் பற்றியும் பண்பாடு, பழக்கவழக்கங்கள் பற்றியும் நம்மால் அறிந்து கொள்ள இயலும்.

**அகழாய்வுகள் நடைபெற்ற இடங்கள்**

கீழடி கிராமம் தமிழ்நாட்டின் சிவகங்கை மாவட்டத்தின் திருப்புவனம் ஊராட்சி ஒன்றியத்தின் கீழடி ஊராட்சியில் உள்ள கிராமம் ஆகும்.

இந்தியத்தொல்லியல் ஆய்வகம் சார்பில் இந்த ஊரில் நடத்தப்பட்ட அகழ்வாராய்ச்சியில் சங்க காலப்பாடல்களில் (*சிலப்பதிகாரம், பரிபாடல், மதுரைக்காஞ்சி*) குறிப்பிடப்பட்டிருந்த பல பொருள்கள் கண்டெடுக்கப்பட்டன.

**“பொலம் புனை வினை மலா தெரிதிர டெரி யுருளி கனமிகு முரண**
**மிகு கடறரு மணியொடு முததி யாததநொணி நெறிசெறி” (பரிபாடல் - 15)**
**“தொய்யகம், புல்லகம், தொடர்ந்த தலைக்கு – அணி**
**மைஈர் ஓதிக்கு மாண்புற அணிந்து” (சிலம்பு-107,108)**
**“பிணிக்கு மருந்து பிறமன்; அணியிழை**
**தன்நோய்க்குத் தானே மருந்து” (திருக்குறள்-1102)**

இதற்காக, இங்கு 40திற்கும் மேற்பட்ட குழிகள் தோண்டப்பட்டன. இதுவே தமிழ்நாட்டில் நடத்தப்பட்ட பெரிய அகழ்வாராய்ச்சி ஆகும்.

**அகழாய்வில் கிடைத்தப் பொருட்கள்**

முத்துமணிகள், பெண்களின் கொண்டைஊசிகள், தாயக்கட்டைகள், சதுரங்கக்காய்கள், சுடுமண் பொம்மைகள், சில்லுகள், நூல் நூற்கும் தக்ளி போன்றவை இங்கு கிடைத்துள்ளன.

**சான்றுகள்**

பட்டினப்பாலையில் குறிப்பிடப்படும் சுடுமண் உறைகேணிகள், சுட்ட செங்கற்களால் கட்டப்பட்ட வீடுகள், மேற்கூரைகள் ஓடுகள் வேயப்பட்டிருப்பதையும், குளியலறைகள் இருந்ததற்கான சான்றும் கிடைத்துள்ளது.

E-ISSN: 2581-7140
Special Issue: Vol. 2, April-2019 Available at: www.ijtlls.com

**அழகன்குளம் தொல்லியல் களம்**

தமிழ்நாட்டின் இராமநாதபுரம் மாவட்டம், மண்டபம் ஊராட்சி ஒன்றியத்தில் உள்ள அழகன்குளம் தொல்லியல் களம் வைகை ஆற்றின் கரையில் வங்காள விரிகுடா கடற்கரையிலிருந்து மூன்றுகிலோ மீட்டர் தொலைவில் அமைந்துள்ளது. அழகன்குளம் கிராமத்தில் 1980களில் முதன்முறையாக சிறிதளவில் அகழாய்வு செய்ததில் இவ்விடத்தில் தொல்லியல் எச்சங்கள் இருப்பதை உறுதி செய்தனர்.

**வாழ்வியல் கூறுகள்**

இராமேஸ்வரம் அழகன்குளம் அகழாய்வின் மூலம் பண்டைய காலத்தில் வாழ்ந்த மக்களின் கலை, கலாச்சாரம், பண்பாடு, வணிகம், எழுத்தறிவு, வாழ்க்கை முறை உள்ளிட்ட பல்வேறு நுட்பமான வாழ்வியல் கூறுகள் தெரிய வந்துள்ளது.

**அகழாய்வு பணிகள் நடைபெற்ற ஆண்டுகள்**

அழகன்குளம் கிராமத்தில் 1986-87 ஆம் ஆண்டில் அகழாய்வு பணிகள் தொடங்கப்பட்டது. பின்னர் 1980-91, 1993-94, 1995-96,1996-97, 1997-98 மற்றும் 2014-15 ஆகிய வருடங்களில் ஆறு கட்டங்களாக அகழாய்வுகள் மேற்கொள்ளப்பட்டன.

**அகழாய்வில் கிடைத்த பொருட்கள்**

அழகன்குளம் தொல்லியல் களத்தில் பத்தடி நீளம், பத்தடி அகலம், இருபதடி ஆழம் கொண்ட ஐந்து பள்ளங்கள் தோண்டப்பட்டது. அதில் அப்பகுதியில் வாழ்ந்தவர்கள் பயன்படுத்திய ஆபரணப் பொருட்களான சங்கு வளையல்கள், சுடுமண் காதணிகள், அரிய கல் மணிகள், சுடுமண்ணால் செய்யப்பட்ட மணிகள், கண்ணாடி முத்துக்கள், பழங்காலத்து பானைகள், ரோமானிய காசுகள் பழங்காலத்து பானைகள் பல அளவுகளால் ஆன செங்கற்கள் போன்றவைகள் கண்டெடுக்கப்பட்டன. கடந்த 15 ஆண்டுகளுக்கு முன்னர் தொல்லியல் துறையினரால் மன்னரின் வாள், கேடயம் பொற்காசுகள் கண்டெடுக்கப்பட்டன.

இயற்கையை கடவுளாக வணங்கியதால் சிலைகள் இல்லை. சிறிய அளவிலான சுடுமண் சிற்பங்கள் மட்டுமே கிடைத்துள்ளன.

**அரிக்கமேடு தொல்லியல் களம்**

அரிக்கமேடு என்னுமிடம் தென் இந்தியாவின் பாண்டிச்சேரி யூனியன் பிரதேசத்தின் அருகிலுள்ள தொல்பொருளாய்வு சார்ந்த இடமாகும். சோழர் காலத்தில் அரிக்கமேடு ஒரு மீனவ கிராமமாக இருந்தது. இங்கிருந்து ரோம் நகருடன் வாணிபம் நடைபெற்றது என்று அகழ்வாராய்ச்சி தெரிவிக்கின்றது.

அரிக்கமேட்டுப் பகுதியில் அகழாய்வு செய்துப்பார்த்த அறிஞர்கள், அழகிய செங்கல் சுவர், ஈமத்தாழிகள், பலவண்ண மணிகள், பலவகை ஓடுகள், மணிகள், தமிழ் பிராமி எழுத்தாலான ஓடுகளைக் கண்டுபிடித்துள்ளனர்.

பதினொரு அடி ஆழத்தில் ஒரு மண்டை ஓடும் பூனைக்கண் மணிகளும், உறைகிணறுகள், படிகமணிகள், கோமேதகக்கல், பச்சைமணிக்கல், மோதிரம், ரோமானிய காசு முதலியன குறிப்பிடத்தக்க பொருள்களாகும்.

**அரிக்கமேடு அகழாய்வு நடைபெற்ற ஆண்டு**

1940 அளவில் அரிக்கமேட்டுப் பகுதியில் பூமியில் தென்னம்பிள்ளை நட குழி தோண்டிய பொழுது மண்சாடி, மட்பாண்ட ஓடுகள் கிடைத்தன. இதன் விளைவாக 1944இல் மார்ட்டின் வீலர் அரிக்கமேடு பகுதியில் பல்வேறு உண்மைகள் மறைந்து இருக்குமென நினைத்து அகழாய்வில் ஈடுபட்டார். இதில் பல்வேறு உண்மைகள் வெளிவந்தன.

E-ISSN: 2581-7140

Special Issue: Vol. 2, April-2019 Available at: www.ijtlls.com

**கீழபள்ளிச்சந்தை புதூர் தொல்லியல் களம்**

சிவகங்கை மாவட்டம், திருப்புவனம் அருகே கீழபள்ளிச்சந்தை புதூரில் மத்திய தொல் பொருந்துறையினர் மேற்கொண்டுள்ள அகழ்வாராய்ச்சியில் சங்க கால மக்கள் பயன்படுத்திய பல பொருட்கள் கண்டெடுக்கப்பட்டன. இங்கு கிடைத்துள்ள சான்றுகளை வைத்தே மதுரை எவ்வளவு தொன்மையானது என்பதை நிரூபிக்கலாம் என ஆய்வாளர்கள் கருத்து தெரிவித்துள்ளனர்.

**அகழாய்வில் கிடைத்த பொருட்கள்**

சங்ககால மக்கள் வாழ்ந்த வீடுகள், பயன்படுத்திய வீட்டு உபயோகப் பொருட்கள், தானியங்கள், சேமித்து வைக்கும் மண்பானைகள், கழுத்து காதுகளில் அணியும் அணிகலன்கள், சுடுமண் மணிகள், பளிங்கு மணிகள் மற்றும் காதணிகள், மனிதமுக அமைப்புடைய பொம்மை, நந்தி உருவ பொம்மைகள், உருவமற்ற சுதைகள், தந்தத்தால் ஆன தாயக்கட்டைகள், தற்காப்புக்காகவும், வேட்டையாடவும் பயன்படுத்தப்பட்ட இரும்பாலான பல்வகை ஈட்டிமுனைகள் உள்ளிட்ட ஏராளமான அரிதான பொருட்களும் கிடைத்துள்ளன.

**தொல்லியல் துறை அலுவலகங்கள்**

தமிழ்நாடு அரசு தொல்லியல்துறை 1961இல் ஆரம்பிக்கப்பட்டது. தமிழ்நாட்டில் இத்துறைக்கு சென்னை, சிதம்பரம், மதுரை, தஞ்சாவூர், திருநெல்வேலி, கோயம்புத்தூர், நாகர்கோவில், தர்மபுரி ஆகிய எட்டு இடங்களில் மண்டல அலுவலகங்கள் உள்ளன.

**முடிவுரை**

வரலாற்றிற்கு முந்தைய காலம் முதல் தற்காலம் வரையில் 33 இடங்களில் தமிழக அரசின் தொல்லியல் அகழாய்வுகள் மேற்கொள்ளப்பட்டது.

**மேற்கோள்கள்**

1. பேராசிரியர் டாக்டர் P.S.சோமசுந்தரம், பரிபாடல்.
2. புலியூர் கேசிகன், சிலப்பதிகாரம்.
3. திருக்குறள், பரிமேலழகர் உரை.

தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்
International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Special Issue: Vol. 2, April-2019 Available at: www.ijtlls.com


# ஸ்ரீவில்லிப்புத்தூர் வட்டாரத்தில் நெடுங்கல் வழிபாடும் வழிபாட்டு மாற்றமும்

# Stonehenge Worship and its Change in the Srivilliputtur District

**முனைவர் இரா. மூர்த்தி,** உதவிப் பேராசிரியர், தமிழ்த்துறை,
ஸ்ரீராமகிருஷ்ண மிஷன் வித்யாலய கலை அறிவியல் கல்லூரி, கோயம்புத்தூர் - 641020

## Abstract

*The paper tells about the Remnant Stonehenge Worship and its change in the Srivilliputtur District. Tamil people's culture becomes prominent to know about the culture and the civilization existed lang back there. Hence, the study paves way to comprehend the findings of stonehenge worship and its change in Srivilliputtur District.*

**Keywords:** Stonehenge, Worship, Change, Srivilliputtur District



தமிழரின் பண்பாட்டு மரபாக இருந்து வருவது நடுகல் வழிபாடாகும். இவ்வழிபாடு இன்று ஆண், பெண் இரண்டு தெய்வங்களுக்கும் நிகழ்த்தப்படுகிறது. ஆனால் தொடக்க காலத்தில் நடுகல் வழிபாடு போரில் உயிர் நீத்த வீரனுக்காகவும், ஆநிரை மீட்டலின் போது இறந்த வீரனுக்காகவும் நடுகல் எழுப்பப்பட்டு வழிபடப்பட்டன. இம்மரபு பண்பாட்டில் தொடர்மரபாக இருப்பினும் அதன் தன்மை இன்று சிதையும் நிலையில் இருக்கிறது.

நடுகல், நெடுங்கல் என்று பொதுப்பெயர் கொண்டு அழைக்கப்பட்ட நெடுங்கல்கள் எல்லாம் மாற்றுப் பெயர்கள் (நட்டுக்கல் முனியாண்டி, கருப்பசாமி கல், முனிஸ்வரன் கல்) இட்டு அழைக்கப்பட்டு வருகின்றன. அந்நெடுங்கல்லுக்கான தள அதிகாரம் குறிப்பிட்ட ஒரு சமூகத்தைச் சேர்ந்தவர்களுக்கு முக்கியத்துவப் படுத்தப்படுகின்றன. அதில் வழிபாடு நடத்தும் அதிகாரமும் அவர்களுக்கு உரித்தானதாகக் கொள்ளப்படுகிறது. இம்மரபு தொடர்மரபாக பண்பாட்டில் நிகழ்ந்து வந்தால் அதன் தொண்மை மறைக்கபடும். அதன் பெயர் மாற்றமும் மாற்றப்படும். அது குறித்து களஆய்வு செய்து வெளியிடுவதே இக்கட்டுரையின் நோக்கமாகம்.

### நெடுங்கல் நடும் மரபு

"பெருங்கற்காலப் பண்பாட்டின் தொடக்க காலம் கி.மு. ஆயிரம் ஆகும். இப்பண்பாடு தமிழகத்தில் வடக்கிலிருந்து தெற்காக முன்னேறிச்சென்றதாகும். அவ்வாறு செல்லச் செல்ல இதன் காலம் பின்னோக்கிச் சென்றன என்று தொல்லியல் அறிஞர் க. ராஜன் அவர்கள் கூறுகிறார்."1 ஏனென்றால் வடக்கில் தகடூரிலிருந்து கொங்குநாடு வரையிலுள்ள பகுதிகளில் தான் அதிகமான நடுகற்கள் கிடைத்துள்ளன. தெற்கு மதுரை, திருநெல்வேலி ஆகிய ஊர்களுக்கு இடம் பெயரும்போது அதிகமாக முதுமக்கள் தாழிகள் கிடைத்துள்ளன. இத்தன்மையைக் கொண்டு தென்பகுதிகளில் கிடைக்கும் நடுகல்கள் அனைத்தும் காலத்தால்

E-ISSN: 2581-7140
Special Issue: Vol. 2, April-2019 Available at: www.ijtlls.com

பிந்தியவை எனக் கருதமுடிகிறது. பெரும்பான்மையான தொல்லியல் அறிஞர்கள் இக்கருத்துக்களுக்கு உடன்படுகின்றனர்.

தமிழகத்தில் கிடைக்கின்ற பெருங்கற்கால சின்னங்களில் நெடுங்கல் நடுகல், கற்பதுக்கை ஆகிய அனைத்தும் தகடூர் பகுதியிலும், கொங்கு நாட்டில் கொடுமணல் பகுதிகளிலும் அதிகம் கிடைத்துள்ளன. தென்னாட்டில் மதுரை மாவட்டம் உசிலம்பட்டி, விருதுநகர் மாவட்டம் குன்னூர் போன்ற ஊர்களிலும் நெடுங்கல்லாகக் கிடைத்துள்ளன. இவ்விரு பகுதிகளும் குறிஞ்சி, முல்லை நிலத்தோடு தொடர்பு கொண்டுள்ள நிலமாகும். இந்நிலங்கள் கால்நடைகளுக்கு முக்கியத்துவம் கொடுக்கிறது. சங்க காலத்தில் முல்லை நிலத்தில் ஏற்பட்ட ஆநிரை கவர்தல், கவர்ந்த பசுக்களை மீட்டல் இவைகளினால் இறப்பவர்க்கு நடுகல் நடுவதும் கற்பதுக்கை அமைப்பதும் பண்டைய மரபாக இருந்துள்ளன. இது குறித்து சங்க இலக்கியமும் தொல்காப்பியமும் திறம்படக் உறுதி படுத்துகின்றன.

“பெருங்கற்காலப் பண்பாட்டுச் சின்னங்கள் குறித்து அன்மையில் களஆய்வு மேற்கொண்ட தொல்லியல் ஆய்வாளர்கள் கொங்கு நாட்டில் அதிகமான பெருங்கற்காலச் சின்னங்களும் அதன் அருகிலே நீண்ட நெடிய நெடுங்கல்லும் இருப்பதை கண்டறிந்தனர்.”2 நினைவுச் சின்னங்கள் அமைக்கும்போது அதன் அருகில் நீண்ட நெடிய நெடுங்கல் அடையாளமாக அமைக்கும் பழக்கத்தையும் பண்டையோர் மரபாகக் கொண்டுள்ளதுடன் அந்நெடுங்கல்லிற்கு நீர்ப்படையிட்டு படையல்கள் படைத்து வழிபட்டு வந்துள்ளனர். ஆகையால் வடபகுதியில் நெடுங்கல்லுக்குச் செய்துவந்த சடங்குகள் போன்று பாண்டிய நாட்டில் கிடைத்த நெடுங்கல்லிற்கும் இச்சடங்குகள் முறையாகச் செய்து வந்துள்ளனர். சிலப்பதிகாரத்தில் சேரன் செங்குட்டுவன் வடக்கில் இமய மலையிலிருந்து கண்ணகிக்கு கல்லெடுத்து கங்கையில் நீராட்டி சேரநாட்டில் கோவில் அமைத்து வழிபட்டு வந்தான் என்று சிலப்பதிகாரம் வாயிலாக அறியமுடிகிறது. ஆகையால் நடுகல் நட்டு வழிபடும் மரபு வடக்கிலிருந்தே தொடங்கப் பட்டவையாகும்.

**நெடுங்கல் – விளக்கம்**

நெடுங்கல் என்பது பெருங்கற்காலத்தில் எழுப்பபட்ட ஈமச்சின்னமாகும். இக்கல் இறந்தவர்கள் நினைவாக இறந்தவர்களைப் புதைத்த இடத்தில் எழுப்பப்படுவதாகும். “தன் கீழே அல்லது அருகில் கல்அறை,கல்வட்டம், கல்படை, கல்குவை, கல்திட்டை, கற்கிடை முதலியவைகள் காணப்படும். சில இடங்களில் எந்த வித ஈமப்பொருட்களும் இல்லாமல் வெறும் நெடுங்கல் மட்டும் காணப்படும். இக்கல்லின் மேற்புறம் கூர்முனையுடன் காணப்படும். சில இடங்களில் நெடுங்கற்கள் ஒரு கல் அளவிற்கு வட்டத்தின் பகுதியாகவும் அமைந்துள்ளன.”3 இவை தமிழகத்தின் பெரும்பாலான பகுதிகளில், மலைகள் மற்றும் பாறைகள் கிடைக்கும் இடங்களில் காணப்படுகின்றன. ஈரோடு மாவட்டத்தில் கொடுமணல் தகடூர் பகுதியில் திருமால்வாடி, மதுரை மாவட்டத்தில் ச.பாப்பாநாயக்கன்பட்டி, விருதுநகர் மாவட்டத்தில் குன்னூர் உட்பட பல ஊர்களில் இவை காணப்படுகின்றன. இதனை நாட்டுக்கல் என்றும் அழைக்கப்படுகிறது. நடுகல் என்பது நெடுங்கல்லின் வளர்ச்சியடைந்த வகையாகும். கற்பதுக்கை அமைத்த பின்னர் அதன் அருகில் நடப்படுவது நெடுங்கல். இதனை சங்க இலக்கியம் திறம்படக் கூறுகிறது.

புறநானூறு இதனை,

“பரலுடை மருங்கின் பதுக்கை சேர்த்தி
இனி நட்டனரே கல்லும்” (புறம்.264).

அகநானூறு இதனை,

E-ISSN: 2581-7140
Special Issue: Vol. 2, April-2019 Available at: www.ijtlls.com

"சிலை ஏறட்ட கணைவீழ் வம்பலர்
உயர்பதுக்கு இவர்ந்த அதர்கொடி அதிரல்
நெடுநிலைநடுகல்" (அகம்.289) என்றும்,
"பிடிமடித் தன்ன குறும்பொறை
நட்ட போலும் நடாஅ நெடுங்கல்" (அகம்.269)

என்றும் குறிப்பிடுகின்றன. இந்நெடுநிலைக் கற்கள் பிற்காலத்தில் நடுகற்களாக மாற்றம் பெற்றன. இந்நடுகற்கள் "மறவர், எயினர், மழவர் வேடர், கோவலர், வடுகர், கள்வர், பறையர், பாணர் ஆகிய குடிகளைச் சேர்ந்த சேவகன், இளமக்கள், இளையோர், ஆள், இளமகன், அடியாள், அடியார், மன்றாடி, தொறுவாளன் ஆகியோருக்கே பெரும்பாலும் எடுக்கப்பட்டன."4 என்று புலவர் செ.ராசு கல்வெட்டு ஆய்வாளர் அவர்கள் தொல்லியல் நோக்கில் சங்க காலம் எனும் கட்டுரையில் குறிப்பிட்டுள்ளார். இக்குடிகள் எல்லாம் சங்க காலப் பண்பாட்டின் தொல்குடிகளாகும்.

**நெடுங்கல் வழிபாடு**

வழிபாடு தொல்குடிமக்களிடத்தில் பெருங்கற்காலத்திற்கு முன்பு வழக்கில் இருந்து வருகின்றன. அதில் இறந்தவர்களை வணங்கும் மரபு பெருங்கற்காலப் பண்பாட்டிற்குப் பின்பு வளர்ச்சி பெற்றன. தொல்காப்பியம், சங்க இலக்கியம், சிலப்பதிகாரம் இது பற்றி விரிவாகப் பேசுகிறது. இச்சடங்குகள் எல்லாம் உயிர் நீத்தவரின் நினைவாக கல்நட்டு வழிபடும் மரபாக இருந்தன. சில இடங்களில் தாழியில் இட்டு புதைக்கும் வழக்கமும் இருந்துள்ளன.

தொல்காப்பியர் நெடுங்கல்கள் எழுப்பப்படும்போது கடைபிடிக்க வேண்டிய சடங்குகள் குறித்தும் விரிவாகப் பொருளதிகாரத்தில் கூறியுள்ளார்.

"காட்சி கால்கோள் நீர்படை நடுகல்
சீர்த்தகு சிறப்பின் பெரும்படை வாழ்த்தல்" (தொல்.பொரு.2-5)

என்று வரிசைப்படுத்திக் கூறுகிறது. அவையாவன,

காட்சி:

இறந்தவரை அவரது சுற்றத்தார் கண்டு வணங்குதல் பொருட்டுக் காட்சிப்படுத்துவதைக் காட்சி என்று அழைத்தனர்.

கால்கோள் இறந்தோரை ஒரு இடத்தில் வைத்துப் பஞ்ச பூதங்களும் அவற்றை எடுத்துக் கொள்ள அழைப்பதைக் கால்கோள் என்று அழைத்தனர்.

நீர்படை எஞ்சிய எலும்புகளை எடுத்து வந்து தூய்மைப்படுத்தி நீர் இடுவதை நீர்படை என்று அழைத்தனர்.

**நடுகல்**

இறந்தவர்களுக்காக (உயிர் நீத்தோர்களுக்காக) எழுப்பப்படும் நினைவுச் சின்னத்தை நடுகல் என்றும், இந்நினைவுச் சின்னத்தில் இறந்தவர்களுக்காக வைக்கப்படுகின்ற பொருட்களைப் பெரும்படை என்றும் பின்னர் இறந்து பட்டவரைப் பற்றி அவரது நற்செயல்களை, பண்புகளை வாழ்த்துதல் என்றும் பெருங்கற்படைச் சின்னம் உருவான விதத்தையும் அதற்காகக் கடைப்பிடிக்கக் கூடிய பல்வேறு சடங்குகள் பற்றியும் தொல்காப்பியம் தெளிவுறக் கூறுகிறது.

சங்க இலக்கியத்தில் இறந்தவர்களுக்காக நடப்பட்ட நடுகல்லை பல்வேறு பெயரிட்டு அழைத்தனர். எழுத்துடை நடுகல் (அகம்.53), முதிர் நடுகல் (அகம்.297), நடுகல் ஆயினன் (புறம்.221) என்று பல்வேறு பாடல்களில் இக்குறிப்புகள் இடம்பெற்றுள்ளன. நடுகல்

E-ISSN: 2581-7140
Special Issue: Vol. 2, April-2019 Available at: www.ijtlls.com

நடப்பட்டதுடன் அக்கல்லுக்கு எடுக்கப்பட்ட சடங்குகள் பற்றியும் பதிவுகள் உள்ளன. புறநானூற்றில் மதுரை அறுவை வாணிகன் இளவேட்டனார் இது குறித்து கூறும்போது

"இல்அடு கள்ளின் சில்குடிச் சீறூர்ப்
கல்லின் நாட்பலி ஊட்டி
நல்நீராட்டி நெய்ந்நறைக் கொளீஇய
மங்குல் மாப்புகை மறுகுடன் கமழும்" (புறம்.329.1-4)

என்ற பாடல் மூதின் முல்லை தன்மையை எடுத்துரைக்கிறது. இப்பாடல் வாயிலாக தொல்காப்பியர் கூறிய நடுகல் வழிபாட்டுச் சடங்குகளை விளங்கிக் கொள்ள முடிகிறது. இம்மரபு இன்றும் பண்பாட்டில் தொடர்மரபாக மக்கள் கடைபிடித்து வருகின்றனர்.

**பெயர் மாற்றம் - நட்டுக்கல் முனியாண்டி வரலாறு**

விருதுநகார் மாவட்டத்தில் திருத்தங்கல், வத்திராயிருப்பு குன்னூார் மூவரை வென்றான், நத்தம்பட்டி, நெடுங்குளம் போன்ற ஊர்கள் பெருங்கற்காலப் பண்பாட்டோடு தொடர்புடைய ஊர்களாகும். இங்கு கிடைத்த தாழிகள் சிவப்பு கருப்பு கலந்த பானை ஓடுகளுடன் கூடியன. நெடுங்கல்கள் அடிப்புறம் ஆறு அடி முதல் எட்டு அடிவரையிலும் மேல்பகுதி ஒரு அடிமுதல் இரண்டு அடிவரை அமைந்துள்ளது.

விருதுநகார், ஸ்ரீவில்லிப்புத்தூரா், சங்கரன்கோவில், திருத்தங்கல், குன்னூர், வத்திராயிருப்பு ஆகிய ஊர்கள் பிற்காலப் பாண்டியர்களின் ஆட்சித்திறம் நிகழ்ந்துள்ள ஊர்களாகும். சான்றாக ஸ்ரீவில்லிப்புத்தூர் வட்டத்தில் அமைந்துள்ளன. "குன்னூர்" எனும் ஊரை கி.பி.815 முதல் 862 வரை ஸ்ரீமாற ஸ்ரீவல்லபன் ஆட்சி செய்து வந்தான். அவனது ஆட்சிகாலத்தில் அவன் மகன் பராந்தக நெடுஞ்சடையன் என்பவன் ஆண்டு வந்தான். அவனது ஆட்சியாண்டில் குன்னூர் எனும் ஊரில் 815 -862 ல் மிகப்பெரிய போர் ஒன்று நடந்தன. அப்போரில் ஸ்ரீமாற ஸ்ரீவல்லவன் கலந்து கொண்டு போரிட்டான். அப்போரில் வெற்றி பெற்று குன்னூரை கைப்பற்றியதுடன் அவ்ஊருக்கு "கருநிலக்குடிநாடு" என்று பெயர் மாற்றிக் கொண்டான். இது குறித்து பிற்காலக் கல்வெட்டுகள் தெளிவுபடுத்துகின்றன. இச்செய்தியை பள்ளிமடம் கல்வெட்டும் உறுதி செய்கிறது. இம்மன்னனின் கல்வெட்டுகள் சாத்தூர், இருக்கன்குடி, நென்மேனி போன்ற ஊர்களில் காணப்படுகின்றன. இப்போரில் பல்வேறு வீரர்கள் இறந்துள்ளனர். அவர்களுக்கு நடுகல்லும் எடுக்கப்பட்டுள்ளன."5 என்று விருதுநகர் மாவட்ட கையேடு குறிப்பிடுகிறது.

குன்னூரிலிருந்து மேற்கு நோக்கி இரண்டு கிலோமீட்டர் தூரத்தில் மேற்குத் தொடர்ச்சி மலை அடிவாரத்தில் முனியாண்டி கோவில் அமைந்துள்ளது. இக்கோவில் ஒரே ஒரு நெடுங்கல்லைக் கொண்டு அமையப்பெற்றவையாகும். இக்கல்லின் உயரம் 25 அடிக்கு மேல் இருக்கும். அதன் அகலம் அடிப்பகுதி 6 அடி கொண்டு இருக்கும். இக்கல் கிழக்கு நோக்கி அமையப்பட்டிருக்கின்றன. அக்கல் அமைந்துள்ள ஊருக்கு நட்டுக்கல் முனியாண்டி கோவில் என்பது இன்றைய பெயாா். அதிலிருந்து இரண்டு கிலோமீட்டாா் தூரத்தில் கிருட்டிணன்கோவில் எனும் ஊர் அமைந்துள்ளது. அதன் அருகிலே மிக உயரமான குன்று ஒன்று உள்ளது. அக்குன்றின் மீது தரகு மாதா கோவில் ஒன்று இருந்து வருகிறது. இவ்வூர் செம்மண் நிலமாகும். முல்லை நிலத்தோடு தொடர்புடையது. மானவரி பயிறிடும் முறை மட்டும் அதிகம் நிகழ்கிறது. அத்தகைய சிறப்பு பெற்ற அவ்ஊரில் உள்ள நட்டுக்கல் முனியாண்டி முத்தொழில்களையும் (காத்தல், படைத்தல், அழித்தல்) செய்யக்கூடிய ஈஸ்வரன், முனி'வரனாகக் காட்சி தந்து மக்களுக்கு அருள் பலித்து வருகிறார். குன்னூரில் நடைபெற்ற போரில் பல்வேறு வீரர்கள் வீரமரணம் அடைந்துள்ளனர். அத்தகைய வீரமரணம் அடைந்த

E-ISSN: 2581-7140
Special Issue: Vol. 2, April-2019 Available at: www.ijtlls.com

வீரனுக்கு, அல்லது குன்னூர் ஆநிரைகள் அதிகம் இருந்துள்ள முல்லை நிலமாகும். ஆநிரைகளைக் கவர்ந்தவர்களிடமிருந்து மீட்டு வரும்போது உயிர்நீத்த ஒரு வீரனுக்காக நடப்பட்ட கல் இந்நெடுங்கல். இன்று மக்கள் அதனை தெய்வமாக வழிபட்டு வருகின்றனர். அவ்ஊரின் காவல் தெய்வமாகவும் இந்நடுகல் இருந்து வருகிறது.

**நட்டுக்கல் முனியாண்டி வழிபாடு**

நடுகல்லை வழிபாடும் மரபு சங்க காலத்திலிருந்து தொடர்ந்து இருந்து வருகிறது என்பதை முன்பு அறிந்தாலும் புறநானூற்றில் முல்லைநிலத்தில் வாழ்ந்த மனைவி ஒருத்தி தன் கணவன் போரில் அரசனுடன் சேர்ந்து வெற்றி பெற்றுச் செல்வத்துடன் வந்து விருந்து படைத்துத் தரும் வாழ்க்கையைத் தனக்குக் கொடுக்க வேண்டும் என்று நடப்பட்ட நடுகல்லை வழிபட்டாள். என்று புறநானூறு கூறுகிறது. இதனை,

“ஒலிமென் கூந்தல் ஒன்றுதல் அரிவை
நடுகல் கைதொழுது பரவும்” (புறம் 306.3-4)

என்ற பாடல் வரி இதனை உறுதி செய்கிறது. அம்மரபு இன்றும் மக்களிடத்தில் வழக்கில் நிலவி வருகிறது. இருப்பினும் அன்று இறந்த வீரனின் நினைவாக நடுகல் நட்டு அதனை வழிபட்டு வந்தனர். ஆனால் இன்று அந்நடுகல் வேண்டியோர்க்கு வேண்டியதைக் கொடுக்கும் தெய்வக்கூடமாகக் காட்சியளிக்கிறது.

**நடுகல் முனியாண்டிக்கு செய்யும் சடங்குகள்**

நெடுங்கல்லை நட்டுக்கல்லு முனியாண்டி என்று பெயரிட்டு அழைத்தாலும் முனி‘வரன் கோவில் என்றும் ஒரு சாரார் கூறுகின்றனர். வாரத்தில் ஞாயிறு, செவ்வாய், வெள்ளி ஆகிய மூன்று நாட்கள் விமரிசையாகத் திருவிழாக்கள் போன்று வழிபாடு நிகழும். குழந்தை இல்லாதவர்களுக்கு குழந்தைப்பேறு வழங்குவதாகவும் உடல் நிலை நோய்வாய்ப்பட்டவர்களுக்கு நோய்நீக்கி தருவதாகவும், திருமண தோசம், செய்வினை போன்ற நம்பிக்கைகளும் இங்கு வருவதால் நிவர்த்தியாகிறது என்ற நம்பிக்கையும் மக்கள் கைக்கொள்கின்றனர்.

வழிபாட்டுப் பொருட்களாகச் சங்க இலக்கியத்தில் நெடுங்கல்லுக்கு எத்தகைய சடங்குகள், படையல்கள் நிகழ்த்தினார்களோ அதே பின்னணியில் சடங்குகள் நிகழ்கிறது. உயிர் பலியும் சேர்த்து இச்சடங்கோடு நிகழ்கிறது. சடங்குப் பொருட்களாக, (படையல்களாக) இருபத்து ஒன்று முட்டை, ஆடு, கோழி, வெண்பொங்கல், சக்கரைப்பொங்கல், முனியாண்டிக்கு எட்டு முலம் வெள்ளைவேட்டி (நெடுங்கல்லின் அடிப்பகுதியில் சுற்றுவதற்கு) , சந்தணம், குங்குமம், பீடி, சுருட்டு, மதுபானம், வெற்றிலை, பாக்கு, இருபத்து ஒன்று எலுமிச்சை மாலை, தேங்காய், பழம், பொறி, அவல், இரண்டு கிலோ ஆப்பில், அரஞ்சு, திரட்சை, சவ்வாது, வெள்ளிக்காப்பு, நேர்த்திக்கடனாக மொட்டை போடுதல், காதுகுத்துல், கோயில் காணிக்கையாக ஆயிரத்து ஒன்று பணம் போன்றவை படையாளாகப் படைக்கப்படுகிறது. இப்பொருட்களில் பெரும்பாண்மை தொடக்க காலத்தில் நடுகல்லுக்குப் படைக்கப்பட்டவையாகும். இன்றும் இம்மரபு தொடர்கிறது.

**குறிசொல்லும் அதிகாரம்**

இக்கோவிலில் குறிசொல்லும் அதிகாரம் ஆண், பெண் இருவருக்கும் இருந்து வருகிறது. ஆனால் கோயில் தள அதிகாரம் (இடம்) அனைத்தும் பள்ளர், பறையர் இனத்தைச் சார்ந்தவர்கள் கையில் எடுத்துள்ளனர். கோயில் குறிசொல்பவர் பெரும்பாலும் பள்ளர் இனத்தைச் சேர்ந்தவர்களே ஆவார். நடுகல்லுக்குப் படைக்கப்படும் பொருட்கள்

E-ISSN: 2581-7140
Special Issue: Vol. 2, April-2019 Available at: www.ijtlls.com

காணிக்கைகள் அனைத்தும் குறிசொல்லுபவர்களே எடுத்துச் செல்கின்றனர். குறி சொல்லுதலுக்கு ஒருவர் மட்டும் அமர்த்தப்படவில்லை. முனி'வரன் சாமி யார் யாருக்கு எல்லாம் வருகிறதோ அவர்கள் எல்லாம் வந்து தனித்தனியாக அக்கல்லைச் சுற்றி வணங்கி வருகின்றவர்களிடம் ஐம்பத்து ஒன்று காணிக்கை வாங்கிக் கொண்டு சுருட்டைப் பற்றவைத்துக் குடித்துக்கொண்டு குறிசொல்லுகிறார்கள். குறியாக திருமணம், குழந்தைவரம், குடும்ப ஒற்றுமை, செய்வினை நிவர்த்தி என பல்வேறு துன்பங்களுக்கும் குறி கூறி வருகின்றனர். இவ்வழக்கம் இன்று தொடர்ந்து நிகழ்ந்து வருகிறது.

**முடிவுகள்**

நெடுங்கல்லை வழிபடும் மரபு இன்று தெய்வமாக ஆக்கப்பட்ட நிலையில் அதன் கீழ் அல்லது அதனைச்சுற்றி தொல்பொருள்கள் நிரம்பக் காணப்படும். அத்தகைய பொருட்களை இனிவரும் காலங்களில் தொடர்ந்து ஆய்வு செய்ய முடியும் என்றால் அவ்விடங்கள் தொல்லியல் துறையிடம் செல்லும்போது மட்டுமே அவை ஆய்வுக்கு உட்படுத்த முடியும். ஏனென்றால் இன்றைய அரசியல், சமூக காழ்ப்புணார்ச்சியில் அத்தொகுதிகள் தனித்தொகுதிகளாகத் தோர்தலில் இருந்து வருகிறது. அவை எல்லாம் அந்தந்த மக்களுக்கு உரித்தானது என்று கைக்கொள்ளும்போது அரசு அதன் ஆழம் எண்ணவென்று தெரியாமல் ஆட்சி என்ற நிலையில் ஒரு சார்பு நிலையிலே இயங்க முற்படும். இதனால் தமிழரின் தொல்மரபினை வெளிக்கொண்டு வரும் நிலை அடியோடு மழுங்கடிக்கப்படும். இதனால் தமிழரின் மரபும் தொடர்ந்து சிதைவுகளைச் சந்தித்து தீரும். ஈரோடு மாவட்டம், பெருந்துறை வட்டத்தில் நொய்யல் ஆற்றின் வடகரையில் அமைந்துள்ள கொடுமணல் ஊருக்கு அருகிலுள்ள சென்னிமலையிலும் நெடுங்கல்லின் நிலைமை இதே தன்மையைப் பெற்றுத் தான் இருந்து வருகிறது. இப்போக்குகள் எல்லாம் தெய்வம் என்ற பெயர்கொண்டு தாங்கும்போது இவ்வழிபாட்டுமுறைகள் எல்லாம் தொடர்ந்து நிகழ்ந்து கொண்டே இருக்கும்.

**துணை நூற்பட்டியல்**

1. 1.க.ராஜன். தொல்லியல் நோக்கில் சங்க இலக்கியம் - உலகத்தமிழாராய்சி நிறுவனம், சென்னை-113, முதல் பதிப்பு.2004. ப.33
2. புலவர் செ. இராசு. - தென் கொங்கு ஆய்வு மையம், தொல்லியல் நோக்கில் சங்க இலக்கியம் (கட்டுரை), ப.1
3. புலவர் செ. இராசு. - தென் கொங்கு ஆய்வு மையம், தொல்லியல் நோக்கில் சங்க இலக்கியம்(கட்டுரை), ப.3
4. மேலது ப.3
5. விருதுநகர் மாவட்ட கையேடு, தமிழ்நாடு அரசு வெளியீடு, ப.156
6. புறம்.264
7. அகம்.289
8. அகம்.269
9. தொல்.பொரு.2-5
10. புறம்.329.1-4
11. புறம் 306.3-4

E-ISSN: 2581-7140
Special Issue: Vol. 2, April-2019 Available at: www.ijtlls.com

# தொல்தமிழர்களின் உணவுத்தேடலும் பண்பாட்டு உருவாக்கமும்
# Search of Food and Cultural Origins of the Ancient Tamil People

**முனைவர் ப.சு. மூவேந்தன்,** உதவிப்பேராசிரியர். (அ.ப. பணிநிரவல்), தமிழ்த்துறை,
அ.சு.சு.அரசினர் கலைக்கல்லூரி, திருத்தணி – 631209, திருவள்ளூர் மாவட்டம்.

## Abstract

*The paper elicits about the search of food and cultural origins of the ancient Tamil people. The idea becomes prominent to know about the culture and the civilization existed lang back there. Hence, the study paves way to comprehend the search of food and cultural origins of the ancient Tamil people.*

**Keywords:** Search, Food, Cultural Origins, Ancient Tamil People

**முன்னுரை**

மொழியும் இலக்கியமும் மனிதப் பண்பாட்டின் நாகரிக வளர்ச்சியின் விளைவால் எழுந்தவை ஆகும். மொழியும் இலக்கியமும் மானுட வாழ்வின் பண்பாட்டுப் பரவல்களை அறிவிக்கவும் அறிவுறுத்தவும் செய்கின்றன. உலக இனங்களில் தமிழினமே தொன்மைத் தன்மையுடையதாகவும், ஏனைய இனங்களுக்குத் தம் பண்பாட்டுப் பங்களிப்பினைப் பகிர்ந்தளிப்பதாகவும் அமைந்துள்ளதனை அண்மைக்கால ஆய்வுகள் எடுத்துரைத்து வருகின்றன. தொன்மைத் தமிழர்களின் உணவுத்தேடுதலையும், அவ்வாறு பெற்ற உணவின் வழியாகப் பண்பாட்டை உருவாக்கிய நிகழ்வுகளையும் வெளிப்படுத்துவதாக இக்கட்டுரை அமைகின்றது.

**வேட்டைச் சமூகத்தில் உணவுத்தேடல்**

ஆதிமனிதனின் இனக்குழு வாழ்க்கையின் தொடக்கம் வேட்டைச் சமூகத்தில் தொடங்குவதை மானுடவியல் ஆய்வுகள் தெளிவுபடுத்துகின்றன. தொல்குடிச் சமூகமாக வாழ்ந்த ஆதி தமிழர்கள் அன்றைய உலகின் பரந்துபட்ட நிலப்பரப்பில் பூர்வகுடிகளாக வாழ்ந்தனர். அவர்கள் தொல் சமூகமாக வாழத்தலைப்பட்ட காலகட்டத்திலேயே தமிழினமாகத் திகழ்ந்தவர்கள் ஆவர். ஆதிமனிதன் தன் வாழ்க்கையை விலங்குகளைப் போன்றே அமைத்துக் கொண்டான். விலங்குகள் தமக்குரிய உணவினை வேட்டையாடிப் பெற்றுத் தீர்த்துக் கொள்வதனைப் போன்று ஆதித்தமிழனும் வேட்டையாடியே தமக்கான உணவினைப் பெற்றுக் கொண்டான். வேட்டையாடுவதற்கு ஏற்ற வகையிலான உடற்தினவையும், வலிமையையும், மனத்திடத்தையும் அவன் விலங்குகளைப் பார்த்தே அறிந்து கொண்டான். இதனால் இயல்பாகவே அவனிடம் வேட்டையாடும் போர்க்குணம் நிறைந்திருந்தது. இச்சிறப்பின் பொருட்டே தொல்தமிழர்கள்

“கல்தோன்றி மண்தோன்றாக் காலத்தே வாளொடு
முன்தோன்றி மூத்தகுடி” (பு.வெ.மா. கரந்தை, ப. 10-11)

என்று சிறப்பிக்கப்பட்டனர். ஆதித்தமிழர்களின் ஆயுதங்களாக வாளும், வேலும், கணையும், வில்லும், அம்புமே நிலைத்திருந்தன. இவை வேட்டைக்குப் பழக்கப்பட்ட நிலைப்பாட்டினைக் காட்டுவதாக அமைந்திருப்பதனை அறியலாம்.

E-ISSN: 2581-7140
Special Issue: Vol. 2, April-2019 Available at: www.ijtlls.com

**உணவுத்தேடுடலும் வேட்டையாடலும்**

தொல்தமிழர்களின் முதன்மையான தொழிலாக விலங்கின் வேட்டையாடுதலே இருந்தது. புறநானூற்றில்,

“............அம்குடிச் சீறூர்
எல்அடிப் படுத்த கல்லாக் காட்சி
வில் உழுது உண்மார் நாப்பண்...” (புற. 170:2-4)

என்னும் பாடலடிகளில், அழகிய குடியிருப்புகளை உடைய சீறூரில் பகற்பொழுதெல்லாம் வேட்டையாடித் திரிந்த கல்வி இல்லாத காட்சியை உடைய வில்லாகிய ஏரால் உழுது உண்பார்கள் என்று வேட்டைத் தொழில் பற்றிய குறிப்பு இடம்பெற்றுள்ளதனை அறியலாம். இதனால் வில்லை முதலாகக் கொண்டு உணவைத் தேடிய செய்தி தெளிவாகிறது.

**பசிய ஊன் உண்டநிலை**

தொல் பழங்குடி மக்கள் விலங்கின் இறைச்சியைப் பச்சையாக உண்பதனையே கற்றிருந்தனர். நாகரிக வாழ்க்கையின் முதற்படியாக அமைந்தது பசிய இறைச்சியை நெருப்பிலிட்டுச் சுட்டு உண்ணும் நிலைக்கு மாற்றியது. நெருப்பின் கண்டுபிடிப்பும், நெருப்பில் இட்ட பண்டங்களின் சுவைத் தன்மை மாற்றமும் வேட்டையாடிக் கொணர்ந்த பொருள்களை நெருப்பிட்டுச் சுட்டுத் தின்னும் பழக்கத்திற்கு மாற்றியது.

விலங்கு வாழ்க்கையிலிருந்து கிளைத்தெழுந்த மனித சமூகம் முதலில் விலங்கினத்தோடு ஒட்டிய வாழ்க்கை முறையினையே பின்பற்றியதில் வியப்பில்லை. காட்டுமிராண்டிகளாக, அநாகரிக வாழ்க்கை வாழ்ந்த மக்கள் கூட்டம் உணவுக்காக மட்டுமே வேட்டைத்தொழிலை மேற்கொண்டது. பசிய ஊன் உணவு உண்ணுவதையே அவர்கள் தொடக்கக் காலத்தில் மேற்கொண்டிருந்தனர் என்பதனைப் புறநானூறு,

“வெருக்குவிடை யன்ன வெருணோக்குக் கயந்தலை
புள்ஊன் தின்ற புலவுநாறு கயவாய்
வெள்வாய் வேட்டுவர்,,,,” (புற. 324:1-3)

என்னும் அடிகளில் எடுத்துரைக்கின்றது. பறவைகளின் பசிய ஊனைத் தின்றதால் புலால் நாற்றம் வீசுகின்ற மெல்லிய வாயினை உடையவர்களாக வேட்டுவர்கள் திகழ்ந்தனர் என்ற குறிப்பினை இப்பகுதி உணர்த்துகின்றது.

வேட்டையாடிய விலங்குகளைப் பச்சையாக உண்ணும் வழக்காறு உலகின் தொன்மைச் சமூகங்களில் இன்றும் வழக்கிலிருந்து வருகிறது. இவ்வாறு தொல் பழந்தமிழ்க் குடியைச் சார்ந்த வீரன் ஒருவனது செயல்பாட்டினை,

“பச்சூன் தின்று மைந்நிணம் பெருத்த
எச்சில் ஈர்ங்கை விற்புறத் திமிரிப்
புலம் புக்கனனே புல்அணற் காளை” (புற. 258:4-6)

என்னும் பாடலடிகள் புலப்படுத்துகின்றன. இதில் பசிய ஊனைத்தின்று, நிணமிக்க எச்சிலாகிய ஈரம் பொருந்திய கையைத் தன் வில்லில் முறுக்கேற்றிப் பூசும் நிகழ்வும், அவன் புல்லிய தாடியை உடைய காளை போன்று காணப்படுவான் என்பதும் இதன்வழி காட்டப்படுகிறது.

**தீயில் சுட்டு உண்ணுதல்**

காலமாற்றத்தில் நாகரிகமும் பண்பாடும் தமிழர்வாழ்வில் இணைந்தோடின. பசிய ஊனைத் தின்னும் வழக்கிலிருந்து மேம்பட்ட சமூகத்தில் வேட்டையாடிய விலங்குகளைத் தீயில் சுட்டு உண்ணப் பழகிய நிலைப்பாட்டினை,

“முளவுமாத் தொலைச்சிய முழுச்சொ லாடவர்

E-ISSN: 2581-7140
Special Issue: Vol. 2, April-2019 Available at: www.ijtlls.com

உடும்பிழு தறுத்த வொடுங்காழ்ப் படலைச்
சீறில் முன்றிற் கூறு செய்திடுமார்" (புற. 325:6-8)

என்னும் பாடலடிகள் உணர்த்துகின்றன. இதில் முள்ளம்பன்றியைக் கொன்று தின்ற நிகழ்வும், தங்கள் இல்லங்களின் முன்னராக உடும்பினது நிணத்தைச் சுட்டு, அதனை அறுத்து பங்கிட்டுத் தின்ற நிகழ்வும் புலப்படுத்தப்பட்டுள்ளன.

தமிழர் வாழ்வில் உடும்பினை வேட்டையாடித் தாம் உண்டது மட்டுமல்லாது, தம்மை நாடி வந்த விருந்தினர்க்கும் உடும்பினைத் தந்து அவர்தம் பசியாற்றிய நிகழ்வினைப் போன்று, முயல்களை வேட்டையாடி அதன் உடலை நெருப்பிலிட்டுச் சுட்டுத்தின்ற நிகழ்வினையும், அவ்வாறு கிடைத்த முயற்கறியைப் பாணர்களுக்கு விருந்தாக அளித்த நிகழ்வினையும்,

"படலை முன்றிற் சிறு தினை யுணங்கல்
புறவுமிதலு மறவுமுண்கெனப்
பெய்தற் கெல்லின்று பொழுதே யதனால்
முயல் சுட்டவாயினும் தருவேம் புகுதற்
தீங்கிருந்தீமோ முதுவாய்ப் பாண" (புறநானூறு, பா. 319:1-5)

என்னும் பாடலடிகள் தெளிவுறுத்துகின்றன. காலவோட்டத்தில் நிணத்தைத் தீயில் சுட்டுத் தின்பதோடு நெய்யில் பொரித்துத் தின்னும் உணவுப் பழக்கமும் ஏற்பட்டது. இதனை,

"கொழுந்தடிய சூடு என்கோ?
வளநனையின் மட்டு என்கோ?
குறுமுயலின் நிணம் பெய்தந்த
நறு நெய்ய சோறு என்கோ?" (புற. 396:15-17)

என்னும் பாடலடிகள் கொண்டு உணரலாம். உப்பும் உறைப்பும் இன்றி ஊனைப் பச்சையாகவும், சுட்டும் தின்று பசியாறிய இனக்குழு, நிணத்தை நெய்யில் பொரித்துச் சமைத்துண்ணும் மேம்பட்ட நிலைக்கு, மாறியதை இப்பாடலடிகள் தெளிவுறுத்துகின்றன.

**தாவர உணவினை மேற்கொள்ளல்**

ஆரம்ப காலத்தில் விலங்குகளை வேட்டையாடி, அதனை உணவாக உட்கொள்ள ஆரம்பித்தனர். பின்னரே அவர்கள் தாவர உணவுக்குப் பழக்கப்படுத்திக் கொண்டனர். தொடர்ச்சியான கடும் வறட்சியும், கால்நடைகளின் திடீர் அழிவும் அவர்களைத் தாவர உணவுக்கு உட்படுத்தியிருக்கலாம். இயற்கையாகக் கிடைக்கும் தாவர உணவினையும் தொல்குடியினர் விலங்குகளைப் பார்த்தே உண்ணத் தலைப்பட்டனர்.

"கலைஉணக் கிழித்த முழவுமருள் பெரும்பழம்
சிலைகெழு குறவர்க்கு அல்குமிசை வாகும்" (புற. 236:1-2)

என்னும் பாடலடிகள், மனித இனம் முயற்சியின்றி, குரங்கு கிழித்து உண்டதால் கிடைத்த உணவாகிய தாவர உணவை உண்ட செய்தியைப் புலப்படுத்துகின்றது.

இயற்கையாகக் கிடைத்த தாவர உணவாகிய கிழங்கு, பழங்கள், கொட்டைகள் முதலானவற்றை உண்ணத்தலைப்பட்ட மனிதஇனம் முறையான வேளாண் உற்பத்திக் களத்தைக் குறிஞ்சி நிலத்தில் மேற்கொண்டது. தொல் சமூகத்தின் வேளாண் உற்பத்திக்குப் பன்றிகளே ஆதிகாலத்தில் துணைநின்றன. பன்றிகளால் கிளறிப் புழுதியாக்கப்பட்ட இடங்களில் கானவர் மழைக்காலத்தில் தினை விதைக்க, அவ்வாறு விளைத்த தினை முனைந்து வளர்ந்து விளைந்தது. இந்நிகழ்வை,

"அருவி ஆர்க்கும் கழைபயில் நனந் தலைக்
கறி வளரடுக்கத்து மலர்ந்த காந்தட்

E-ISSN: 2581-7140
Special Issue: Vol. 2, April-2019 Available at: www.ijtlls.com

கொடுங்கிழங்கு மிளிரக் கிண்டிக் கிளையோடு
கடுங்கட் கேழல் உழுத பூழி
நன்னாள் வருதப நோக்கிக் குறவர்
உழாஅது வித்திய பரூஉக் குரற் சிறுதினை
முந்து வினை யாணர்" (புற. 168:1-7)

என வரும் பாடலடிகள் உணர்த்துகின்றன. மலைச்சாரலின் அகன்ற இடத்தில் மூங்கில் வளர்ந்த அகன்ற இடத்தில் மிளகுக் கொடி வளரும்; அச்சாரலில் மலர்ந்த காந்தளின் கொழுங்கிழங்கு வெளிப்பட்டுத் தோன்றும்படி தன் இனத்துடன் கூடி, தறுகண்மையுடைய பன்றி கிளறியது. அவ்வாறு பன்றி உழுத புழுதியில் குறவர் நல்ல நாள் பார்த்து உழாமலே தினையை விளத்தனர் என்ற செய்தியைப் புலப்படுத்துகின்றன. பன்றிகள் கிழங்ககழ்ந்தன் விளைவால் தினை உற்பத்தியாதலை அறிந்த மனிதன் அதன் பின்னர் அவ்வாறே தன் முயற்சியால் நிலத்தைக் கிளறி, தானிய உற்பத்தியில் ஈடுபடலானான். இயற்கையாகப் பெய்த மழையின் துணையும் அவனுக்குத் துணையாக அமைந்தமையால் உற்பத்திப் பெருக்கத்தைத் தன் இனத்துணையுடன் செய்து சிறப்புப் பெற்றான்.

எரித்துச் சுடப்பட்டுக் கிடந்த புனத்தை உழுத அகன்ற இடமுடைய கொல்லையில் வேடர்கள் ஐவன நெல்லை விதைத்ததும் அது கோடை மிகுதியால் வாடிய கதிர் பொலிவு பெறுவதற்கு மழை துணைநின்ற நிகழ்வும்,

"....கானவர்
கரிபுனம் மயக்கிய அகன்கண் கொல்லை
ஐவனம் வித்தி மையுறக் கவினி
ஈனல் செல்லா ஏனற்கு இழுமெனக்
கருவி வானம் தலைஇ யாங்கும்" (புற. 159:19-19)

என்னும் பாடலில் காட்டப்பட்டுள்ளன.

**பகுத்துண்ணும் பண்பு**

தொல்தமிழர்கள் மலைகளிலும் காடுகளிலும் தங்கள் வாழ்க்கையை அமைத்துக் கொண்டனர் என்பதனைச் சங்கப்பாடல்கள் அறிவுறுத்துகின்றன. இந்நிலப்பரப்புகள் அடிக்கடி வறட்சியையும். கடும் வெப்பத்தையும். கடும் மழையையும் சந்திக்கும் நிலப்பரப்புகளாக அமைந்தன. இதன் காரணமாகக் குழுக்களாக வாழ்ந்த சமூகங்கள் ஓரிடத்திலிருந்து மற்றோரிடத்திற்கு இடம்பெயர்தலை மேற்கொண்டன. இவ்வாறு குழுக்களாக வாழ்ந்த மக்களுக்குத் உணவுத்தேடல் சிக்கலானதாகவே அமைந்திருந்தது. சிலபோதுகளில் அளவுக்கு அதிகமாகவும், சில போதுகளில் மிகக் குறைந்தும் கிடைத்திருக்கலாம் என்றாலும், அவர்கள் தங்களுக்கு எவ்வளவு அளவிலான பொருள் கிடைத்தாலும் அதனைச் சரிசமமாகப் பங்கிட்டு உண்ணும் பழக்கத்திற்கு ஆளாகி இருந்தனர். வேட்டையாடிக் கொண்டுவந்த அளவில் மிகச்சிறியதாகிய உடும்பினையும் தமக்குள் சமமாகப் பங்கிட்டுப் பகிர்ந்து உண்டனர் என்பதனையும் இதன்வழி ஒரு பண்பாட்டு உருவாக்கத்தை மேற்கொண்ட நிகழ்வினையும்,

"களிறு நீராடிய விடுநில மருங்கின்
வம்பப் பெரும்பெயல் வரைந்து சொரிந் திறந்தெனக்
குழிகொள் சில்னீர் குராஅ லுண்டலின்
சேறு கிளைத்திட்ட கலுழ்கண் ணூறல்
முறையின் உண்ணும் நிறையா வாழ்க்கை
முளவுமாத் தொலைச்சிய முழுச்சொல் ஆடவர்

E-ISSN: 2581-7140
Special Issue: Vol. 2, April-2019 Available at: www.ijtlls.com

உடும்பிழு தறுத்த வொடுங்காய்ப் படலைச்
சீறில் முன்றிற் கூறு செய்திடு மார்
கொள்ளி வைத்த கொழு நிண நாற்றம்
மறுகுடன் கமழும்......." (புற. 325:1-10)

என்னும் பாடல் வெளிப்படுத்தக் காணலாம்.

**விருந்தோம்பற் பண்பாட்டு உருவாக்கம்**

இனக்குழுச் சமூகம் விருந்தோம்பற் பண்பில் சிறந்து விளங்குவதற்கு அவர்கள் மேற்கொண்ட இனக்குழு வாழ்க்கையே காரணமாக அமைந்திருந்தது, குறிஞ்சிநிலத்தில் வாழ்ந்த மக்களின் பகுத்துண்ணும் பண்பைப் புறநானூறு,

"நீருட் பட்ட மாரிப் பேருர் உறை
மொக்குளன்ன பொகுட்டு விழிக்கண்ண
கரும்பிடர்த் தலைய பெருஞ்செவிக் குறுமுயல்
உள்ளர்க் குறும்புதல் துள்ளுவன உகளும்
தொள்ளை மன்றத் தாங்கட் படரின்
உண்கென உணரா உயவிற் றாயினும்
தங்கினிர் சென்மோ புலவீர்! நன்றும்
சென்றதற் கொண்டு மனையோள் விரும்பி
வரகுந் தினையும் உள்ளவை யெல்லாம்
இரவன் மாக்களுணக் கொளத் தீர்ந்தெனக்
குறித்து மாறெ திர்ப்பைப் பெறா அமையிற்
குரல்உணங்கு விதைத் தினையுரல் வாய்ப்பெய்து
சிறிது புறப்பட்டன் றோவியளே" (புற. 333:1-13)

என்னும் பாடலில் எடுத்துரைக்கின்றது. இப்பாடலடிகள் உணர்த்தும் செய்தி சிந்திக்கத்தக்க தாகும். வரகும், தினையுமாகத் தன் மனையில் உள்ளவற்றையெல்லாம் இரவலர் உண்டதனாலும், கொண்டு சென்றதனாலும், தீர்ந்தனவாக விருந்தினராக வந்த பாணரை உண்பித்தற் பொருட்டு, வரகைக் கடனாகப் பெறமுடியாமையால் கதிரிடத்தே முற்றி உலரவிட்ட விதைத் தினையை உரலிற் பெய்து குற்றிச் சமைத்து மனைத்தலைவியானவள் உண்பித்தாள் என்று மனைத்தலைவி விருந்தினரின் பொருட்டு விதைத்தினையைக் குற்றிச் சமைக்க முற்பட்ட செய்தி குறிக்கப்பட்டுள்ளது, இங்கு காணும் மக்கள் வறுமைவாய்ப்பட்ட நிலையிலும் அவர்கள் பண்பால் ஓங்கி நிற்பதனைக் காணமுடிகிறது. இவ்வாறு அவர்கள் விருந்தோம்பற் பண்பில் உயர்ந்து நிற்பதற்கு அவர்கள் இனக்குழு வாழ்க்கையில் பெற்ற உணர்வே காரணமாக அமைந்திருப்பது தெளிவாகிறது.

தமிழர்கள் தம் முன்னோர்களின் இனக்குழு வாழ்க்கையில் பெற்ற முக்கியப் பயன் பகிர்ந்துண்ணும் பண்பாகும். இப்பகிர்ந்துண்ணும் போக்கே சங்கத் தமிழர்களிடம் விருந்தோம்பும் பண்பு மேலோங்குவதற்குக் களமாக அமைந்திருந்தது. தொல்தமிழர்கள் விலங்கின் இறைச்சியை உண்ட காலத்திலும், தாவர உணவினை மேற்கொண்ட காலத்திலும் கிடைத்த உணவினைப் பகிர்ந்தும், தம்மை நாடிவந்த இரவலர்கள் மகிழும்படியாகத் தந்தும் வாழ்ந்த நிகழ்வினைப் புறப்பாடல்கள் காட்டுகின்றன. உலகின் முதல்இனமாகத் திகழ்ந்ததோடு மட்டுமல்லாது, பண்பாட்டை ஏனைய இனத்திற்குக் காட்டிய இனமாகவும் தமிழினம் திகழ்ந்த திறம் இதன்வழி தெளிவாகிறது.

E-ISSN: 2581-7140

Special Issue: Vol. 2, April-2019 Available at: www.ijtlls.com

**கருவி நூல்கள்**

1. உ.வே.சாமிநாதையர், (ப.ஆ.), புறநானூறு மூலமும் பழைய உரையும், கபீர் அச்சுக்கூடம், சென்னை, 1971
2. கழகப் புலவர் குழுவினர், (ப.ஆ.), புறப்பொருள் வெண்பாமாலை, கழக வெளியீடு, சென்னை, 1965

E-ISSN: 2581-7140
Special Issue: Vol. 2, April-2019 Available at: www.ijtlls.com

# திருவோத்தூர் (சேயாறு) திருத்தலக் கல்வெட்டுச் செய்திகள்
# The Facts of the Thiruvothoor (Seyar) Culverts

**மைத்திரிஅன்பு,** தலைவர்,
தமிழ்மாடம் அறக்கட்டளை, அண்ணாநகர் – செய்யாறு – 604 407.

## Abstract

*The article traces the facts in the culverts of Thiruvothoor. many culverts evinces of the origin of the place. the Pandian and Chola kings had carved culverts related to the temples and of their administration. the name of the place can be seen in Thevaram and Malaipadukadam. the nobility of the people and the charity are seen through the culverts Hence, the study explain the interrelated particulars from the clarification found on the culverts.*

**Keywords:** Facts, Thiruvothoor, Seyar, Culverts

தமிழக வரலாற்றில் சங்ககாலம் தொடங்கி, சங்கம் மருவியகாலத்திற்குப் பிறகான பக்திஇலக்கியக் காலச்சூழலில், களப்பிரர்களால் உருவாக்கப்பெற்ற சமணமும் பௌத்தமும் செல்வாக்குகிழந்த நிலையில் சைவமும் வைணவமும் தோற்றம் பெற்றன. அதன்கீழ் தமிழகத்தின் எல்லைப்பரப்புக்குள் அமைந்திருக்கும் திருத்தலங்கள் அனைத்திலும் பக்திஇலக்கியங்கள் பாசுரங்களாகப் பாடப்பெற்று, திருமுறைகளாகத் தொகுக்கப்பட்டுள்ளது. அவற்றுள் சைவத்தின் பங்களிப்பு பெரிதும் பாராட்டப்பெறும் வகையில் அமைந்திருக்கிறது.

உலகின் பழமைக்கும் பண்பாட்டிற்கும் பெருமைச் சேர்க்கும் வகையிலான தமிழகத்தில், தமிழர் பண்பாடு உலகப்புகழ் பெற்றதாகவும் சமயம், பொருளாதாரம், வணிகம், வாணிபம், நுண்கலைகள், வீரம், தேசியம் என்னும் பல்வேறு பண்பாட்டு அடிப்படைகளைத் தன்னகத்தே கொண்டதாகவும் அவற்றை காலந்தோறும் பேணிக்காக்கும் தகைமை கொண்டதாகவும் தமிழகம் திகழ்கிறது. இத்தமிகழத்தின் தோற்றத்தோடும் காலத்தோடும் சைவமும், வைணவமும் பல்வேறு நெறிமுறைகளை வகுத்துத்தந்துள்ளன. இச்சூழலுக்கு முன்னும் பின்னும் தோற்றம்பெற்றதாக சமணம், இஸ்லாம், கிறித்துவம் என்னும் சமயங்கள் இடம்பெறுகின்றன.

மேற்கண்ட சமயங்களை அடிப்படையாகக் கொண்டு எழுந்துள்ள இறைவழிபாட்டு ஆலயங்கள் பண்பாட்டின் மிகமுக்கியச் சின்னங்களாப் போற்றப்படுகின்றன. தமிழக எல்லைப்பரப்பை தன் ஆட்சிக்கு உட்படுத்தியிருந்த பாண்டியர், சோழர், பல்லவர், விஜயநகர நாயக்கமன்னர்கள் ஆகியோரை மையமாகக் கொண்டே சிற்பம், கட்டிடம், இசை, நடனம், ஓவியம் முதலான நுண்கலைகளும் இப்பகுதியில் வளர்ச்சிபெற்றுள்ளது.

சங்ககாலம் முதலே இந்து சமயத்தைப் பின்பற்றும் மக்கள், தமிழகத்தில் அதிக அளவில் வசித்துள்ளனர். அவர்கள் பின்பற்றிய கலாச்சாரங்களும் பழக்கவழக்கங்களும் இன்றளவிலும் பண்பாட்டு அடையாளங்களாக பார்க்கப்பெறுகின்றன. தமிழ்நாட்டின் இத்தகைய தலவரலாறுகளையும் பண்பாட்டுச் சிறப்புகளையும் அறிய கலைக்களஞ்சியங்கள் உதவுகின்றன. அதன் விளக்கங்களுக்குப் போதாமை ஏற்படும் சூழலில் தலவரலாற்று

E-ISSN: 2581-7140
Special Issue: Vol. 2, April-2019 Available at: www.ijtlls.com

ஆய்வுகளே போதிய பண்பாட்டு தன்மையிலான விளக்கங்களை கொண்டவைகளாகச் சிறப்பிடம் பெறுகின்றன. அவ்வகையில் தலவரலாற்றை பேசும் ஆய்வுகளும், குறிப்புகளும் தமிழகத்தின் தொடக்கக் காலத்தையும், பக்திஇலக்கியக் காலகட்டத்தையும் அறியஉதவும் வரலாற்று ஆவணங்களாகப் போற்றப்பெறுகின்றன. அதனொரு நீட்சியாகவே திருவண்ணாமலை மாவட்டத்தில் அமைந்துள்ள திருவோத்தூர் சைவத்திருத்தலத்தில் காணலாகும் கல்வெட்டுக் குறிப்புகளை ஆய்வு எல்லையாகக் கொண்டு இவ்வாய்வு கட்டுரை அமைக்கப்பெறுகிறது.

**திருவோத்தூர் பெயர் காரணம்**

நாயன்மார்கள் காலத்தில் இவ்வூர் ‘ஓத்தூர்’ என்று அழைப்பட்டு வந்ததாக தேவாரப்பாடல்கள் மூலம் அறியமுடிகிறது. சங்க இலக்கியம் ‘மலைப்படுகடாம்’

“கடுவரற் கலுமிக் கட்கின் சேயா(ற்)று
வடுவாழ் எக்கர் மணலினும் பலரே”[1]

என்று இவ்வூரைக் குறிப்பிடுகிறது.

முக்கிய சிவதலங்களில் ஒன்றான திருவோத்தூர் எனும் ‘செய்யாறு’ 63 ஆவது தேவாரம் திருஞானச்சம்பத்தரின் பதிகத்தில் உள்ள பதினொரு பாடல்களில் எட்டுப்பாடல்களில் ‘ஓத்தூர்’ எனவும் மூன்று பாடல்களில் ‘திருவோத்தூர்’ எனவும் இருவகையான பெயர்களில் குறிப்பிடப்பட்டுள்ளது. மழைக்காலங்களில் ஆற்றில் ஓத்தூருடைய நாயனராகி ‘திரு’ என்னும் அடைமொழியைப் பெற்று திருவோத்தூருடையராக எழுந்தருளிய இடமாகியதால் இவ்விடம் ‘திருவோத்தூர்’ என்றானது.

செய்யாற்றங்கரையில் இந்நகர் அமைந்திருப்பதால் ‘செய்யாறு’ என்ற பெயரும் பெற்றுள்ளது. திருவோத்தூருடைய நாயனாருக்குப் பூசைச்செய்ய சேயோனால் (முருகன்) இந்த ஆறு உருவாக்கப்பட்டதால் சேயா(று)ற்றில் அமைந்திருக்கும் ஊர் ‘சேயாறு’ எனவும் வழக்கப்படுகிறது. மேலும் சேயாற்றில் வெள்ளப்பெருக்கெடுத்து ஓடும்நீர் செவ்வையாக (சிகப்பு) ஓடுவதால், செய்யாறு என்று ஆற்றிற்கும் ஆற்றங்கரையோர நகரத்திற்கும் பெயர் இலங்கியிருக்கிறது. இதனை அருணகிரிநாதரின் திருப்புகழ் “செழுநீர் சேய்நதி” என்று குறிப்பிடுகிறது.

சோழர்கால கல்வெட்டுகளும், பெரியபுராணமும் இவ்வூரை சில நூற்றாண்டுகளுக்கு முன்பாகவே ‘திரு’வோத்தூர் என்றும் ‘திருவத்தியூர்’ என்றும் குறிப்பிட்டுள்ளன. இதிலிருந்து திருவத்தூர் என்றாக, இதில் பரிதிபுரம் இணைக்கப்பட்டு ‘திருவத்திபுரம்’ என்றும் வரலாற்று வரைபடங்களில் இவ்வூர் குறிக்கப்பட்டுள்ளது.

**திருவோத்தூர் கல்வெட்டுகள்**

திருவோத்தூர் திருத்தலத்தில் காணப்படும் கல்வெட்டுகள் (29 கல்வெட்டுகள்) மிக முக்கியமானவைகளாகத் திகழ்கின்றன. 1900–1910 இல் தமிழகஅரசு இக்கல்வெட்டுகளைப் பதிவு செய்திருக்கிறது. அவற்றுள் இராஜாதிராஜன், குலோத்துங்கன், இராஜேந்திரன், பொத்தப்பிச்சோழன், ராஜராஜன்-I-II விக்கிரமசோழன் ஆகியன சோழஅரசர்கள் காலத்தைச் சேர்ந்தது ஒருமுகமாகவும் சுந்தரபாண்டியன், வீரபாண்டியன் காலத்தைச் சேர்ந்தது ஒருமுகமாகவும் இத்தலத்தில் இருவேறு கல்வெட்டுகள் காணக்கிடைக்கின்றன. இதன்றி கோப்பெருஞ்சிங்கன் காலத்திலான கல்வெட்டு ஒன்றும், ராஷ்டிரகூட கன்னரதேவன் காலத்திலான கல்வெட்டு ஒன்றும் கூட இத்தலத்தில் காணப்பெறுகிறது.

இக்கல்வெட்டுகளில் இத்தலத்தில் இருக்கும் இறைவனின் பெயர் ‘ஓத்தூருடைய நாயனார்’ என்று குறிப்பிடப்பட்டுள்ளது. விஜயநகர ஆட்சியில் ‘வேதபுரி’ என்பது இவ்வூருக்குப்

E-ISSN: 2581-7140
Special Issue: Vol. 2, April-2019 Available at: www.ijtlls.com

பெயரானபோது இறைவனுக்கு 'வேதபுரிநாதன்' என்ற பெயர் வழங்கப்பட்டுள்ளது. மேலும் கோயில் வழிபாட்டிற்கும், நிவேதனத்திற்கும், அர்ச்சகர்க்கும் நிலமளித்த செய்திகளும் பூந்தோட்டத்திற்கு நிலமளித்த செய்திகளும் இக்கல்வெட்டுகளில் குறிப்பிடபட்டுள்ளன.

**கல்வெட்டுகள் தரும் செய்திகள்**

திருவோத்தூர் கல்வெட்டு ஒன்று விளக்கிற்காக பசுக்கள் வாங்கிவிடப்பட்டச் செய்தியைத் தெரிவிக்கிறது. *''விளையாட்டாக வேட்டைக்குச் சென்ற ஒருவன் எய்த அம்பு குறிதவறி ஒரு மனிதன்மேல் பட்டுவிட, அதற்காகத் திருவோத்தூர் சபையாரைக் கூட்டிக் குற்றத்தைக் கூறி, சபை விதித்த வண்ணம் குற்ற தண்டமாகக் கோயிலுக்கு 16 பசுக்கள் வாங்கிக்கொடுத்து, விளக்கு அளிக்கப்பட்டக் கருத்தை ஒரு கல்வெட்டுக் (எண்:77) குறிப்பிடுகிறது.''*[2] அதேபோல,*''விக்கிரமசோழன் (கி.பி.1118-35) காலத்தில் ஊருக்குள் வெள்ளம் புகுந்து விளைச்சல் அழிந்ததால், குடிமக்களால் வரிகட்ட முடியாமல் போக, விக்கிரமசோழன் இரண்டாயிரம் குழிநிலத்தை 25 காசிற்கும், 4450 குடி புன்செய்யை 20 காசிற்கும் கோயிலுக்கு விற்று இறையிலி செய்தான் என்றச்செய்தி ஒரு கல்வெட்டில் (எண்கள்:87,88) குறிப்பிடப்பட்டுள்ளது.''*[3] அவ்வாறே, மூன்றாம் குலோத்துங்கன் பொன்ஆபரணங்களை இக்கோயிலுக்கு அளித்தச் செய்தியையும், குலோத்துங்கசோழன் திருமுறையில் விருப்புடையவன் என்பதை விளக்கும் முகமாக,*''திருவோத்தூர் திருக்கோயில் திருப்பதிகம் பாடிவரும் குருடர்கள் பதினாறுவரும். இவர்களுக்குக் கண்காட்டுவர் இருவரும் ஆக பதிணேன்மர்… மூன்று சந்தியும் வந்து விண்ணப்பம் செய்து….''*[4] என்றக்குறிப்பையும் இக்கோயிலில் இருக்கும் கல்வெட்டுகளில் (எண்:98-100) காணக்கிடைக்கின்றன.

**சேயாற்றால் பாதிக்கப்பட்ட திருவோத்தூர் நிலங்கள்**

சேயாற்றின் வடகரையில் ஒரு தீபகற்பத்தைப் போல வளர்ந்த ஊர் திருவோத்தூராகும். பெருமழைக் காலங்களில் இங்கு ஏற்படும் வெள்ளப்பெருக்கால் இவ்வூரில் பல இடர்பாடுகள் நிகழ்ந்துள்ளன. ஆற்றிலிருந்து பெருக்கெடுத்து வரும் வெள்ளம் ஊருக்குள் புகுந்துவிடும் அபாயம், பல நூற்றாண்டுகளாக இவ்வூரில் நிகழ்ந்திருப்பதை விக்கரமசோழன் (கி.பி.1125) கல்வெட்டு குறிப்பிடுகிறது. அதில்,*''பெருவெள்ளம் கொண்டு ஊரும் போகமும் அழிந்தன''*[5] என்ற விளக்கம் தரப்பெற்றுள்ளது. மேலும் குடநகர் என்னும் பகுதி, வெள்ளச்சேதத்தினால் பெரும்பாலும் பாதிப்புக்கு உள்ளாகும் சூழல் இருப்பதும் குறிப்பிடப்பட்டிருக்கிறது. அப்பொழுது இவ்வூரில் வாழ்ந்த பெருந்துறையினர் ஒன்று கூடி வெள்ளப்பெருக்கால் ஏற்பட்ட பயிர்சேதங்களை ஈடுசெய்ய சில விளைநிலங்களை விற்று, அரசுக்கான தீர்வைகளைச் செலுத்தினர் என்பதற்கானக் குறிப்புகளும் இக்கல்வெட்டில் இடம்பெற்றுள்ளன.

**திருவோத்தூரின் பழமையை விளக்கும் கல்வெட்டு**

திருவோத்தூர் கோயிலின் தொன்மையான கல்வெட்டாக கி.பி.960-இல் மூன்றாம் கிருஷ்ணன் எனும் இராஷ்ரிடகூடமன்னன் காலத்தில் பொறிக்கப்பட்ட கல்வெட்டு காணப்பெறுகிறது. இதைத்தொடர்ந்து பெரிதும் சிறிதுமாக சுமார் 80 கல்வெட்டுகள் பல்வேறு காலக்கட்டங்களில் இக்கோயிலில் செதுக்கப்பட்டுள்ளன. இவற்றில்,*''கி.பி.984-இல் உத்தமசோழன் கல்வெட்டு ஒன்று இக்கோயிலுக்குரிய ஆடுகள் பலவற்றை அம்மன்னன் சூறையாடப்பட்ட அந்தச்சாவாமூவாப் பேராடுகளுக்கு ஈடாக 200 வளமான ஆடுகளைக் கோயில் பணிக்கெனச் சோழ மன்னன் கொண்டு செலுத்தினான்''*[6] என்று குறிப்பிடுகிறது. அதேபோல, இங்கிருக்கும் கல்வெட்டுகள்,*''சோழப்பேரரசி செம்பியன் மாதேவியின் மருமகளும், உத்தமசோழனின் மனைவியுமான ஆரூரன் அம்பலத்தடிகள் என்பவள், கோவிலுக்கு தீபம் ஏற்ற 25 கழஞ்சு பொன் தானமளித்தார்.''*[7]என்றும் *''ஜெயங்கொண்ட சோழ மண்டலத்துக் காலியூர்*

E-ISSN: 2581-7140
Special Issue: Vol. 2, April-2019 Available at: www.ijtlls.com

*கோட்டத்துக் காழியூர் நாட்டு திருவோத்தூர் உடையார் என்றே கோயிலில் இருக்கும் கல்வெட்டில் குறிப்பிடப்பட்டுள்ளது. இறைவன் முன்பு தினமும் ஐந்துபேர் வேதம் ஓதுவதற்காக தனியே மானியம்''8 வழங்கினார் என்றும் ''விஜயநகர மன்னர் ஹரிஹரர் காலத்தில் இக்கோயிலில் ரிக்வேதம் ஓதுவதற்காக தானம் அளிக்கப்பட்டது.''*[8] என்றும் பல்வேறு கொடையாளர்களின் செய்திகளை இக்கல்வெட்டுகள் தெரிவிக்கின்றன.

மேலும், ஞானசம்பந்தர் பல்லக்கில் வருவது போன்றும் கோயிலுக்கு கோனேரிராயன் வழிபாட்டுக்காக பல்லக்கில் வருவது போன்றும் இரண்டு சிற்பங்கள் இத்தலத்திலிருக்கும் கல்வெட்டுகளுக்கு இடையேக் காணப்படுகிறது.

**காலத்தால் முந்தய கல்வெட்டுகள்**

திருவோத்தூரில் மூலவர் அமைந்திருக்கும் கோயில் கி.பி.ஐந்தாம் நூற்றாண்டில் அமைக்கப்பட்டதாகும். பல்லவமன்னர்களால் இது நிறுவப்பட்டது. அதேபோல பல்லவர் அமைத்த கருவறை சோழமன்னரால் செப்பம் செய்யப்பட்டுள்ளது. அது முதற் குலோத்துங்கசோழன் காலத்தில் நிகழ்ந்ததால் அவன்மகன், *''விக்கிரமசோழன் காலத்துக் கல்வெட்டு ஒன்று கர்ப்பக்கிரகத்தினின்றும், கீழே இறங்கியப் பின் படிக்கட்டை அடுத்துள்ள, சுவரில் ஆசிரியப்பாவால் இயற்றப்பெற்று இன்றும் அழியாமல் இருந்துவருகிறது.''*[9] இக்கல்வெட்டு பெரியபுராணம் தோன்றுவதற்கு முன்பாகவே பொறிக்கப்பட்டது என்பதால், இத்திருத்தலத்தின் பழைமை விளங்குவதாக இஃது அமைகிறது. இக்கல்வெட்டின் காலம் 11 நூற்றாண்டின் பிற்பகுதி என்று வரையறுக்கப்படுகிறது. இதற்கும் முன்பாக திருஞானசம்பந்தப்பெருமான் பாடல் பெறுவதற்கு முன்னரே இத்திருத்தலம் எழிலோடும் ஏற்றத்தோடும் இருந்திருக்க வேண்டும் என்பதை உறுதிசெய்யும் விதத்தில், *''முதற் பராந்தகசோழன் கி.பி.ஒன்பதாம் நூற்றாண்டில் கோயிலின் வெளிப்பிரகாரத்தில் பஞ்சமூர்த்தித் தலங்களுக்குரிய ஐந்து திருக்கோயில்களை அமைத்து அனைவரும் வணங்குமாறு செய்துள்ளான்.''*[10] என்ற செய்தியைத் தாங்கியவாறு தில்லைச்சிதம்பரேசர் கல்வெட்டு ஒன்று இங்கு அமைத்திருக்கிறது.

**வரலாற்றுக்கு ஆதாரமாகும் கல்வெட்டுகள்**

திருவோத்தூரில் ஞானசம்பந்தர் காலத்தில் 'புனதகை' என்னும் ஊரில் சமணர் கோயில் ஒன்று சிறப்புற இருந்தது என்றும் அங்கிருந்த சமணர்கள் நீறுபூசிக்கொண்டு சைவர்களானபின், அது இடிக்கப்பட்டது என்றும் இங்கிருக்கும் கல்வெட்டுகள் குறிப்பிடுகின்றன. மேலும் இத்தலத்தில் கோயில் கொண்டுள்ள இறைவனை ஓத்தூருடைய நாயனார் என்றும் வேதபுரி என்றும் மறைசெயம்பதி என்றும் ஓத்தூர் என்றும் கல்வெட்டுகள் குறிப்பிடுகின்றன. இத்தகைய சிறப்புமிக்க இத்தலத்தின் கோயில் சுவர்களில் பராந்தகனுடைய கல்வெட்டும், குலோத்துங்கன் காலத்திய கல்வெட்டும் முதற்பிரகாரத்தின் வாயிலின் தென்புறச்சுவரில் காணப்பெறுகிறது. அதில் ஆதிரை முதலிய விழாக்களுக்காக அமைந்த கட்டளைகள் குறிக்கப்பட்டுள்ளன. *''மாறவர்மன் சுந்தரபாண்டியன் காலத்துக் கல்வெட்டு, குலோத்துங்கன் அதில் யாதவர்கள் தாங்கள் வேண்டிக்கொண்ட கருத்து இறைவனால் முற்றுப்பெற்றதனால் இக்கோயிலுக்கு நந்தா விளக்கை நெய்யினால் எரிப்பதற்கு நெய்தரும் பசுக்களையும் சாவா மூவாப் பேராடுகளையும் கொடுத்தச் செய்தியைக் குறிப்பிடுகிறது.''*[11] அதேபோல, *''இரண்டாம் குலோத்துங்கன் காலத்திற்கு இறுதியில் இவ்வூரில் வாழ்ந்து, கோயிலுக்குத் தொண்டாற்றி வந்த தேவதாசி ஒருத்தி கோமாஸ்கந்தர் விக்கிரகத்தை சோமாஸ்கந்த மூர்த்தம் மிகப்பழமையும், பெருமையும் உடையது. சிறிய வடிவிலும் ஒரு சோமாஸ்கந்த மூர்த்தம், கந்தப்பெருமான் வடிவின்றி இருப்பதால் அதனை திருவிழாக் காலங்களில் கொண்டு வருவதில்லை. கர்ப்ப கரகத்தின்*

E-ISSN: 2581-7140
Special Issue: Vol. 2, April-2019 Available at: www.ijtlls.com

*முதல் சுற்றுச்சுவரில் சண்டேசநாயனார் இருக்கும் இடத்துக்கு எதிரில் இரண்டாம் இராசராசன் காலத்திலும், மூன்றாம் குலோத்துங்கன் காலத்திலும், அம்மன்னர்க்குக் கீழ் சிற்றரசர்களாக இப்பகுதியை ஆண்டுவந்த சம்புவராயர் காலத்திலும், இவ்வூரில் தேவாரக்கல்லூரி ஒன்று இயங்கி வந்ததாகத் தெரிவிக்கிறது.''*[12] இதுபோன்ற இன்னும் பல வரலாற்றுச்சான்றுகள் சேயாறு திருத்தலத்தில் ஏறக்குறைய 50 கல்வெட்டுகளில் காணக்கிடைக்கின்றன.

**நிறைவுரை**

திருவோத்தூர் திருத்தலத்தில் இருக்கும் நர்த்தன வினாயருக்குப்பின் சுவரில் மூன்றாம் இராசராசன் கல்வெட்டு ஒன்று இருக்கிறது. இதன் காலம் கி.பி.13-ஆம் நூற்றாண்டாகும். இதில் ஆவணி முழுமதிநாளில் இறைவனுக்கு விழாச்செய்வதற்கு இவ்வூரைச்சூழ்ந்த சில ஊர்களின் வருவாயையும், இங்கு அக்காலத்தில் இருந்த அச்சுத்தறி, கொல்லத்தறி ஆகியவற்றுக்காக வாங்கும் வரியையும் பயன்படுத்திக்கொள்ளுமாறு அரசன் ஆணை பிறப்பித்தமை உள்ளிட்டச் செய்திகள் குறிக்கப்பெற்றுள்ளன. இதனால் இவ்வூரில் அச்சுத்தறி முதலான தொழில்கள் சிறப்பாக நிகழ்ந்தத் தகவலை அறியமுடிகிறது. இதுபோல இத்தலத்தில் காணப்படும் கல்வெட்டுகளில் இன்னும் பல வரலாற்றுச்செய்திகள் இடம்பெறுகின்றன. எனவே இத்தல வரலாற்றை இங்கு காணக்கிடைக்கும் கல்வெட்டுகளுடன் ஆராயும் வகையில் கூடுதல் விளக்கங்கள் கிடைக்க வாய்ப்பிருக்கிறது. இத்தலத்தில் பெயராய்வு தரும் குழப்பத்தைப்போல, இத்தல வரலாற்றிலும் சில குழப்பங்கள் இருக்கின்றன. கல்வெட்டுச் செய்திகளுடன் அவற்றை ஒப்பிட்டு ஆராயும் தேவையை அவை உணர்த்துகின்றன.

**அடிக்குறிப்புகள்**

1. பட்டினப்பாலை., பா.அ.555-556.
2. தி.பூ.பச்சையப்பன்., திருவோத்தூர் தலவரலாறு., ப. 19., (2014).
3. மேலது.
4. ப.கந்தசாமி., தமிழ்நாட்டின் தலவரலாறுகளும் பண்பாட்டுச் சின்னங்களும்., ப.56.(2011).
5. மேலது., ப.62.
6. தி.பூ.பச்சையப்பன்., திருவோத்தூர் தலவரலாறு., ப. 21.
7. சிவராம்ஜி., திருமுறை திருத்தலங்கள்., ப. 118.
8. மேலது., ப.23.
9. மேலது.ப. 24.
10. தி.பூ.பச்சையப்பன்., திருவோத்தூர் தலவரலாறு., ப. 21.
11. மேலது.ப. 21.
12. மேலது.,பக்.23-24.

தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்

International Journal of Tamil Language and Literary Studies

*A Bi-Yearly Peer-Reviewed International Journal*

E-ISSN: 2581-7140

Special Issue: Vol. 2, April-2019 Available at: www.ijtlls.com



# விருதுநகர் மாவட்டத் தொல்லியல் களங்கள்

# Archaeological Sites in Virudhunagar District

**முனைவர் கு.மேனகா,** உதவி பேராசிரியர், தமிழ்த்துறை,
மனோன்மணியம் சுந்தரனார் பல்கலைக்ககழகக் கல்லூரி, பணகுடி.

## Abstract

*The paper traces the origins of archaeology in the Virudhunagar District. The archaeological evidences are enough to find the antique state of the Tamil culture. The places such as Thiruthangal, Sivakasi, Venpukottai, Kollankondan, Puliparaipatti, Venganallur, Chettur, Veppankulam, Kottankulam and Cholapuram have rare culverts and archaeological sites with rare relics. Hence, the paper attempts to bring forth all sorts of evidences to trace down the facts related to it.*

**Keywords:** Archaeological Sites, Virudhunagar District, Tamils, Culture

விருதுநகர் தமிழ்நாட்டிலுள்ள விருதுநகர் மாவட்டத்தின் தலைநகரம் ஆகும். விருதுநகரின் பழைய பெயர் விருதுப்பட்டி ஆகும். இங்கு உணவுப் பொருட்கள் வியாபாரமும், மலைத் தோட்ட விளைப் பொருட்கள் வியாபாரமும் பெரிய அளவில் நடைபெறுகிறது. விருதுநகர் மாவட்டம் வியாபார நகரம் மட்டுமின்றி பல வரலாற்றுத் தொன்மைகளைத் தன்னுள்ளே கொண்ட மாவட்டமாகவும் விளங்குகிறது.

விருதுநகர் மாவட்டத்தில் ஈஞ்சார், புலிப்பாறைப்பட்டி,கொல்லங்கொண்டான், வெங்காநல்லூர், வேப்பங்குளம், கொத்தங்குளம், சோழபுரம் சோலைச்சேரி, தளவாய்புரம், வடமலை, தென்மலை ஆகிய இடங்களில் சமணமுனிவரின் சிலைகள் குகைகள் நாணயங்களள் கல்வெட்டு மோதிரம் முதுமக்கள் தாழி போன்ற தொலியல் சான்றுகள் கிடைத்துள்ளன.

### ஈஞ்சார் தொல்லியல் களம்

விருதுநகர் மாவட்டம் சிவகாசி அருகே ஈஞ்சார் எனும் ஊரில் சிவனுக்கும், பெருமாளுக்கும் கோயில்கள் உள்ளன. வரலாற்றுச் சிறப்புமிக்க இந்தக் கோயில்கள் சோழர் பாண்டியர் கட்டடக்கலையை ஒத்துள்ளன. இக்கோயில்கள் ஆயிரம் ஆண்டுகளுக்கு முற்பட்டதாக கொள்ளலாம். தற்போது சிவன்கோயில் மட்டும் உள்ளது.பெருமாள் கோயில் அழிந்துவிட்டது. சிவன் கோயிலை மீனாட்சி கோயில் என்றே அழைத்து வருகின்றனர். இக்கோயில்களில் உள்ள சிலைகளின் நெற்றியில் சூரிய ஒளிபடும் படியாக கோயில் மேல்தளத்தில் துவாரம் இடப்பட்டுள்ளன. இது கோயிலின் சிறப்பு அம்சமாகும். பெரும்பாலான சிவன் கோயில்கள் கிழக்குப் பார்த்துத்தான் இருக்கும் ஆனால் மேற்கு திசையைப் பார்த்திருப்பது சிறப்புக்குறியதாகும்.

### கல்வெட்டுகள்

இக்கோயில் வெளிசுவர்களில் கல்வெட்டுகள் உள்ளன. இந்த கல்வெட்டில்விளைந்த நிலத்துக்கு வரிகள் நிர்ணயம் செய்யபட்ட திணை, வரகு, எள் முதலிய தானியவகை

E-ISSN: 2581-7140
Special Issue: Vol. 2, April-2019 Available at: www.ijtlls.com

பெயர்கள் குறிக்கப்பட்டு இருக்கிறது. கல்வெட்டு முடிவில் பெரும் மணவள மந்திரி ராமனான பல்லவன் எழுத்து என்று குறிப்பிடப்பட்டு உள்ளது.

**புலிப்பாறைப்பட்டி தொல்காப்பியம்**

சிவகாசியிலிருந்து ஆலங்குளம் செல்லும் வழியில் புலிப்பாறைபட்டி கிராமம் உள்ளது. இங்கு களஆய்வு செய்யும் போது சிவலிங்கமும், முதுமக்கள் தாழியும் மற்றும் அந்த காலத்து ஓடுகள் அம்மி ஆட்டுரல் போன்றவையும் கிடைத்துள்ளன என தகவலாளர் கூறுகிறார்.

புலிப்பாறைப்பட்டி அருகே காயக்குடி என்னும் நதி ஓடுகிறது. இந்த நதிக்கரையில் பெரிய ஊர் ஒன்று இருந்து அழவுற்றதற்கான சான்றுகள் உள்ளன. இககாய்ககுடி ஆற்றில் மணல் அள்ளியபோது சுமார் 3 அடி ஆழத்தில் இருந்த சிவலிங்கம் எடுக்கப்பட்டது. இந்த லிங்கம் தற்போது புலிப்பாறைப்பட்டி செல்வ விநாயகர் கோயிலில் உள்ளது.

**கொல்லங்கொண்டான் தொல்லியல்களம்**

கி.பி.1268-ம் ஆண்டில் மதுரையில் முதலாம் மாறவர்மன் குலசேகர பாண்டியன் அரியணை ஏறினான். அவன் ஆட்சியில் தொடக்க காலத்தில் (1275) திருவாங்கூர் நாட்டின் மீது படையெடுத்துச் சென்று சேர மன்னனை வென்றான். இந்த வெற்றியின் காரணமாக சேரனை வென்றான் என்றும் சேர நாட்டின் ஒரு பகுதியாகிய கொல்லத்தில் போர் நடந்ததால் “கொல்லம் கொண்டான்” என்றும் குலசேகர பாண்டியன் சிறப்புப் பெயர் பெற்றான்.

அவன் போர்படையில் கொல்லங்கொண்டான் ஊரைச் சேர்ந்த பல வீரர்கள் இடம் பெற்று இருந்தனர். அதன் காரணமாக இந்த ஊருக்கு, குலசேகர பாண்டியன் நினைவாக “கொல்லங் கொண்டான்” என்று பெயர் ஏற்பட்டது. ஆரம்ப காலத்தில் இந்த ஊர் “திருப்பணிபுரம்” என்றும் “குலசேகரபுரம்” என்றும் வழங்கப்பட்டிருக்கிறது.

ராஜபாளையம் அருகே கொல்லங்கொண்டான் கிராமத்தில் கி.பி.14 ம் நூற்றாண்டைச் சார்ந்த லிங்கம் கண்டுபிடிக்கப்பட்டது. மாறவர்மன் வீரபாண்டியன் (கி.பி.1340-1380) வரை கொல்லங்கொண்டான் பகுதியை தன்னாட்சி நடத்தி வந்தான். அப்போது சிவன் கோயில் ஒன்றைக் கட்டி அக்கோயிலுக்கு ‘வீரபாண்டீஸ்வரர்’ என்று பெயர் சூட்டினான்.

இம்மன்னன் பெயரில் இங்குள்ள பெரிய குளத்தில் ஒரு கல்வெட்டும் உள்ளது. 7ம் நூற்றாண்டைச் சேர்ந்த கூன் பாண்டியன் காலத்தில் சமண முனிவரின் சிலை கண்டுபிடிக்கப்பட்டுள்ளது.

கி.பி.18 ம் நூற்றாடைச் சேர்ந்த எறிகுண்டுகளும் கண்டுபிடிக்கப்பட்டன. பீரங்கி மற்றும் துப்பாக்கி மூலம் குண்டுகள் வீசப்படுகின்றன. அவை இல்லாமல் கையினால் வீசப்படுவதுதான் எறிகுண்டுகள் ஆகும். எறிகுண்டுகளில் வெடிகுண்டு, தீக்குண்டு, விஷவாயுக்குண்டு ஆகிய ரகங்கள் இருந்தன. இப்பகுதியில் 3 எறிகுண்டுகள் கண்டுபிடிக்கப்பட்டுள்ளன. இது விஷவாயு எறிகுண்டுகள் ஆகும். அவை களிமண்ணும், மணலும் கலந்து செய்யப்பட்டவை. லட்டு போன்ற உருவம் உள்ளவை. இவற்றில் 2 குண்டுகள் சிதைந்தும் 1 குண்டு சிதையாமல் முழுமையாகவும் உள்ளன.

அதுமட்டுமல்லாமல் பல்லவகாலத்து மோதிரமும் கண்டுபிடிக்கப்பட்டுள்ளது. இந்த மோதிரம் செம்பினால் உருவாக்கப்பட்டது. கி.பி 9ம் நூற்றாண்டைச் சேர்ந்தது ஆகும்.

**வெங்காநல்லூர் தொல்லியல் களம்**

ராஜபாளையம் அருகே வெங்காநல்லூர் என்ற கிராமம் உள்ளது. முற்காலத்தில் வெண்கலத்தால் செய்யப்பட்ட ரதத்தில் சிவசக்தி வலம் வந்துள்ளார்கள். அதனால் இந்த கிராமத்திற்கு தெற்குவண்கலநல்லூர் என்று பெயர் இருந்தது. இப்போது தெற்கு

E-ISSN: 2581-7140
Special Issue: Vol. 2, April-2019 Available at: www.ijtlls.com

வெங்காநல்லூர் என மருவி விட்டது. இங்குள்ள சிதம்பர சுந்தரேசுவரா் என்ற கோவில் பிரசித்தி பெற்றது. இந்தக் கோயிலில் 13-ம் நூற்றாண்டின் பாண்டிய மன்னன் 2ம் மாறவா்மன் சுந்தரபாண்டியனின் கல்வெட்டுகளும், 14ம் நூற்றாண்டின் சேரமன்னன் ரவிவா்மன் குலசேகரனின் கல்வெட்டுகளும் உள்ளன. இந்த கோயிலின் ஈசான மூலையில் ஒரு கல்வெட்டும் உள்ளது. சிவனுக்கு கண் கொடுத்த வேடன் கண்ணப்பா் சிலையும் இங்கு கிடைத்துள்ளது குறிப்பிடத்தக்கதாகும்.

**சேத்தூா் தொல்லியல் களம்**

ராஜபாளையம் அருகேசேத்தூா் மேட்டுப்பட்டிக்கு தென்கிழக்கில் தளவாய்புரம் அருகில் மொட்டமலை உள்ளது. அந்த மலையில் ஒரு கல்மண்டபம் இருக்கிறது. அந்த மண்டபத்திற்குள் ஒரு குகை உள்ளது. அந்த குகை 7ம் நூற்றாண்டைச் சோ்ந்த சமண முனிவா்கள் தங்கி வாழ்ந்த குகை என்பது கண்டுபிடிக்கப்பட்டுள்ளது. சேத்தூாில் சமண சமயத்தை நிறுவிய மகாவீரா் சிலையும் கண்டுபிடிக்கபட்டுள்ளது. இச்சிலை கி.பி.7ம் நூற்றாண்டைச் சோ்ந்ததாகும்.

**வேப்பங்குளம் தொல்லியல் களம்**

ராஜபாளையம் சஞ்சீவி மலையின் கீழ்ப்புறம் வேப்பங்குளம் என்ற கிராமம் உள்ளது. இவ்வூா் ஆற்றங்கரைப்பகுதியைத் தோண்டிப் பாா்த்ததில் துா்க்கை அம்மன் தட்சிணாமூா்த்தி, கன்னிமாா்கள், நந்திதேவா், உமாதேவி, சிவலிங்கம் உள்ளிட்ட பல அரிய கல் சிறபங்கள் கிடைத்துள்ளன. 1000 ஆண்டுகளுக்கு முந்தைய சிவன் கோயிலும் கண்டுபிடிக்கப்பட்டுள்ளது.

**கொத்தங்குளம் தொல்லியல் களம்**

ஒரு நாட்டின் வரலாற்றைப் பற்றித் தெரிந்து கொள்வதற்கு சான்றுகளாக உள்ளவைகளில் நாணயங்கள் மிக முக்கியமானவையாகும். கொத்தங்குளத்தில் ராமபிரான் லக்குவன் உருவம், விக்டோரியா உருவம் பொறிக்கப்பட்ட நாணயங்களும் கண்டுபிடிக்கப்பட்டுள்ளன.

**இராமா் லக்குவன் உருவம்**

18ம் நூற்றாண்டில் நடைபெற்ற மைசூா் போாில் வெற்றி பெற்றதைக் கொண்டாடும் விதமாக கிழக்கிந்திய இயக்கம் என்ற பெயாில் தங்கப்பதக்கங்களை வெளியிட்டனா். தகுதிக்கேற்றவாறு பல்வேறு உலோகங்களில் பதக்கங்கள் வெளியிடப்பட்ட பின்னரே நாணயங்களை வெளியிட்டனா். அந்த நாணயங்களில் மிகவும் முக்கியமாகக் கருதப்படுவது ராமபிரான் லக்குவன் ஆகியவா்களின் உருவம் பொறிக்கப்பட்டதுதான். இருவரும் வில்லுடன் நின்ற கோலத்தில் உருவம் செதுக்கப்பட்டுள்ளது. நாணயத்தின் இருபக்கங்களிலும் இரண்டு சிற்பங்கள் நின்ற வண்ணமாய் நடுவிலுள்ள கிழக்கிந்தியக் கம்பெனியின் சின்னத்தை தாங்கி கொண்டிருக்கும் வண்ணம் உள்ளது.

**விக்டோாியா மகாராணி**

கிழக்கிந்தியக்கம்பெனி பிாிட்டஷ் மன்னா்களின் உருவங்களை நாணயங்களில் வெளியீட்டு வந்தது. அந்த வகையில் விக்டோாியா மகாராணி ஆட்சி செய்து வந்தபோது அவருக்கும் நாணயம் வெளியிடப்பட்டது. அந்நாணயத்தில் மகாராணியின் மாா்பு அளவு உருவம் பொறிக்கப்பட்டுள்ளது.

**சோழபுரம் தொல்லியல் களம்**

ராஜபாளையத்திலிருந்து சங்கரன்கோவில் செல்லும் சாலையில் சோழபுரம் அருகே தேவியாறு உள்ளது. இந்த ஆற்றின் கரையில் கி.பி.16 ம் நூற்றாண்டைச் சோ்ந்த பாண்டிய மன்னன் சிலை தற்கொலை செய்து கொண்ட நிலையில் கண்டுபிடிக்கப்பட்டுள்ளது.

E-ISSN: 2581-7140
Special Issue: Vol. 2, April-2019 Available at: www.ijtlls.com

11-ம் நூற்றாண்டில் செம்பு உலோகத்தால் செய்யப்பட்ட இலங்கை நாணயம் கண்டுபிடிக்கப்பட்டுள்ளது. ராஜேந்திர சோழனின் ஆட்சி பாண்டிய நாடு மற்றும் இலங்கை வரை பரவியிருந்ததால் இலங்கை நாணயங்கள் பாண்டிய நாட்டிலும் புழகத்தில் இருந்தது. பாண்டிய நாட்டின் ஒரு பகுதியாகிய சோழபுரத்தில் இந்த நாணயம் கிடைத்துள்ளது. இந்நாணயத்தின் இருபக்கமும் மனிதஉருவம் பொறிக்கப்பட்டு இருப்பது குறிப்பிடதக்கதாகும்.

**தகவலாளி பட்டியல்**

ந.ராசையா, வயது 60, கொல்லங்கொண்டான், 2001-ம் ஆண்டு இராஜபாளையம், விருதுநகர் மாவட்டம்.

**துணைநூல்**

கே.கே. பிள்ளை, தமிழக வரலாறும் பண்பாடும், உலகத்தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னனை - 2004.

E-ISSN: 2581-7140
Special Issue: Vol. 2, April-2019 Available at: www.ijtlls.com

# தொல்பொருள் மானிடவியலில் சங்கு
# Sangu in Archeo-Anthropology

**இரா.மோகன வசந்தன்,** ஆய்வியல் நிறைஞர்,
உலகத்தமிழாராய்ச்சி நிறுவனம், தரமணி, சென்னை-600113.

## Abstract

*The paper elicits the details of the use of Sangu (Conch) and the cultivation of it. The study details it with the evidences from the culverts and the authentic literary sources. Thoothukudi is on of the very important place in Pandiya Nadu in diving to get Sangu for making the ornaments from it. The medical qualities of Sangu flesh are also discussed in the article. Hence, the critique gives out the minuscule information of the use of Sangu in Tamil culture.*

**Keywords:** Sangu, Archeo-Anthropology, Tamil Culture

“நான் ஒரு மனிதன், மனிதனுக்குச் சம்பந்தமான எது பற்றியும் நான் அக்கறை கொண்டே ஆக வேண்டும்” (டெரன்ஸ், தன்னைத்தானே வருத்துபவர் என்ற நூலின் ஆசிரியர்) மனிதனுக்குச் சம்பந்தமான எதுவும் மானிடவியலுக்கு அந்நியமாய் இருப்பதில்லை, அந்த வகையில் தொல்பொருளான கடலில் கிடைக்கும் சங்கானது தமிழ் மக்களின் வாழ்வில் தொழில், நம்பிக்கை, வழிபாடு, அணிகலன்கள், கட்டடக்கலை போன்றவற்றில் தொன்று தொட்டு புழக்கத்தில் இருந்ததை அகழ்வாராய்ச்சிப் பொருட்கள், கல்வெட்டுச் செய்திகள், இலக்கியப பதிவுகள் போன்றவற்றைக் கொண்டு விளக்குவதே இக்கட்டுரையின் நோக்கமாக அமைகிறது.

**பரிணாமப்பார்வை**

”ஒரு துறையாகப் பார்த்தால், மானிடவியல் வெளிப்படையான பரிணாமப் பார்வையை மனித நடத்தையை ஆய்வதற்குப் பயன்படுகிறது. “மானிடவியலின் நான்கு முக்கியமான உப துறைகளிலும் (அ) சமூகக் கலாச்சார மானிடவியல்) உயிரியல் மானிடவியல்) தொல்பொருள் மானிடவியல்) மொழியியல் மானிடவியல் மனிதன் நீண்ட பரிமாணப் பாதையில் வந்து கொண்டிருக்கிறான் என்று ஒப்புக் கொண்டு, அதை ஆய்வதன் வாயிலாகவே மனிதனாக இருப்பது என்றால் என்ன? என்று புரிந்து கொள்ள இயலும் என்று ஒப்புக்கொள்கிறது” (OUR KIND- நம்மைப் போன்றோர், மார்வின் ஹாரிஸ், அமெரிக்க மானிடவியல்)

**தொல்பொருள் மானிடவியல்**

மனிதனின் வரலாறு எழுத்துக்களிலும் புத்தகங்களிலும் மட்டும் எழுதி வைக்கப் படவில்லை. அது குகை ஓவியங்களிலும் சித்திர எழுத்துக்களிலும் தூக்கியெறியப்பட்ட கல்லுளிகளிலும் மண்பாண்டங்களிலும் மதச் சிலைகளிலும் இன்னும் பழங்காலம் தூக்கியெறியப்பட்ட சின்னச் சின்ன தூள்களிலும் தகடுகளிலும் எழுதி வைக்கப்பட்டிருக்கிறது. தொல்பொருள் துறை சார்ந்த மானிடவியலாளர்கள் இந்த ஆச்சர்யமான சின்னச்சின்ன

E-ISSN: 2581-7140
Special Issue: Vol. 2, April-2019 Available at: www.ijtlls.com

விசயங்களிலிருந்து பழங்காலச்சமூகம் எப்படி இருந்தது? அதன் கலாச்சாரம் என்ன? என்பதை மீண்டும் நிரூபிக்க முயல்கிறார்கள். இந்தத் தொன்மையான பொருட்களினூடாக மனிதர்களைப் படிப்பதை தொல்பொருள் மானிடவியல் எனலாம்.

**சங்கு எடுத்தல்**

வரலாற்றின் தொடக்ககாலம் முதல் இன்று வரை தூத்துக்குடி, இராமநாதபுரம், புதுக்கோட்டை போன்ற மாவட்டங்களில் “சங்குளித்தல்” என்ற பெயரில் சங்கு எடுக்கும் தொழில் குறிப்பிட்ட காலக் கட்டங்களில் நடைபெறுகிறது. முத்துக்குளித்தல் இல்லாத காலங்களில் சங்குளித்தல் தொழில் பரவலாக நடைபெறுகிறது.

**அகழ்வாராய்ச்சியில் சங்குப்பொருட்கள்**

தஞ்சைத் தமிழ்ப் பல்கலைக்கழகத்தின் நீரகழ்வாய்வு மையத்தின் பேராசிரியர் ந. அதியமான் அவர்களின் “சங்கு” என்ற நூலில் தமிழகத்தில் நடைபெற்ற அகழ்வாய்வுகளில் 37-இடங்களில் சங்குப் பொருட்கள் கிடைத்துள்ளதாகப் பதிவு செய்துள்ளார். இதில் சங்கு வளையல்கள், சங்கினாலான கொண்டை வாரி வளையல்கள், சங்கு மணி, போன்றவவை குறிப்பிடத்தகுந்தவை, மேலும் மேற்குறிப்பிட்ட இடங்களுள், கொடுமணல், கொற்கை, அழகன்குளம், ஈஞ்சார், வேம்பக் கோட்டை, சங்கரலிங்கபுரம் போன்ற இடங்களில் சங்கு தொடர்பான வேலைப்பாடுகள் செய்யும் “சங்கு தொழிற்கூடம்” இருந்தமைக்கான சான்றுகளைக் கண்டறிந்துள்ளனர்.

இவை வரலாற்றுத் தொடக்க காலம் தொடங்கி, புதிய கற்காலம், இரும்புக்காலம் எனப் பழங்காலத்தைச் சேர்ந்தவை என நிரூபிக்கப்பட்டுள்ளது.

இதே போல இராமநாதபுரம் மாவட்டம் தேரிருவேலியில் நடைபெற்ற அகழ்வாய்வில் பெரும்பான்மையான சங்குப் பொருட்கள் கிடைத்துள்ளன, இவற்றை இரண்டு காலக் கட்டங்களாகப் பகுத்துள்ளனர்.

முதலாம் கால கட்டம்: கி.மு.300 முதல் கி.பி.100 வரை

இரண்டாம் கால கட்டம்: கி.பி.100 முதல் கி.பி.300 வரை.

(தேரிருவேலி அகழ்வாய்வு, தி.ஸ்ரீதர், தமிழ் நாடு அரசு தொல்லியல் துறை)

பன்னெடுங்காலந் தொட்டே தொன்மையான பொருளாக விளங்கும் சங்கானது மக்களின் அன்றாட வாழ்வில் இயைந்து வந்துள்ளமையை அறிய முடிகிறது.

**கல்வெட்டுக்களில் சங்கு பற்றிய செய்திகள்**

**மேல்சேவூர்**

(செஞ்சி வட்டம்) ரிஷப புரீஸ்வரர் கோயிலில் உள்ள முதல் இராசராசன் கல்வெட்டு மற்றும் தஞ்சைக் கோயிலில் உள்ள கல்வெட்டின் செய்திகள்- கோயில் வழிபாட்டின் போது சங்கு ஊதப்பட்டதாகவும் இதற்காகச் சங்கு ஊதுவோர்க்கு நிலம் அளிக்கப்பட்டதாகவும் எழுதப்பட்டுள்ளது-

காலையில் இறைவனுக்குப் பள்ளியெழுச்சி முதல் எல்லா நிகழ்ச்சிகளிலும் பயன்படுத்தப்பட்ட இசைக்கருவிகளுள் சங்கும் இடம் பெற்றதாகக் குறிப்பிடப்பட்டுள்ளது. (ஆர்.வசந்தி தேவி, கல்வெட்டாய்வாளர், தொல்பொருள் ஆய்வுத்துறை)

**திருச்சோற்றுத்துறை- சோழன் இராசகேசரிவர்மன் கல்வெட்டு**

திருச்சோற்றுத்துறை மகாதேவர்க்கு இரண்டு சங்குகள் அளிக்கப்பட்டு ஊதுவார்க்கு நிலமளித்த செய்தியும் இடம்பெற்றுள்ளது. (SII.VO VL NO.615)

E-ISSN: 2581-7140
Special Issue: Vol. 2, April-2019 Available at: www.ijtlls.com

**சிதம்பரம் நடராசர் கோயில்- கோப்பெருஞ்சிங்கன் கல்வெட்டு**

கோயிலில் சங்காபிஷேகம் செய்யுமிடத்து அச்சங்கில் நீரூற்றி அபிஷேகம் செய்வானுக்கு நிலமளித்த செய்தி குறிப்பிடப்படுகிறது. (ஆர்.வசந்தி தேவி, கல்வெட்டாய்வாளர், தொல்பொருள் ஆய்வுத்துறை)

**வீரவ நல்லூர்க்கல்வெட்டு**

திருநெல்வேலி பெருமாள் என்பவர் நித்ய பூசைக்கும் மற்ற சிறப்பு வழிபாட்டுக்கும் நிலமளித்த செய்தி பொறிக்கப்பட்டுள்ளது. (குமரி கல்வெட்டு, 87-1969)

இவ்வாறாகச் சங்கானது கோயில், வழிபாடு, பூசை, தானம் என்பனவாக நாகரிக வளர்ச்சியில் தொடர்ந்து பயணித்து வருவதை அறிய முடிகிறது.

**இலக்கியங்களில் சங்கு**

அ) **சங்கு எடுப்போர்**

கடலில் இறங்கி சங்கெடுக்கும் மக்களுக்கெனத் தனிதனிச் சேரியே இருந்ததை அறிய முடிகிறது. ("இலங்குவளை இருசேரி"-மதுரைக்காஞ்சி, அதாவது விளங்குகின்ற பெரிய சங்கு குளிப்பார் இருப்பு)

**ஆ) சங்கு வேலை செய்வோர்**

சங்கினை அறுத்து வளை செய்தலைப்பற்றி ஏராளமான குறிப்புகள் கிடைக்கின்றன. இவ்வேலையை பார்ப்பனர் செய்துவந்தனர் என்பதை

"வேளாப்பார்ப்பான் வாளரந் துமித்த வளை"-(அகம்:291)

என்னும் குறிப்பால் அறியலாம்.

சங்கினை அறுத்து வளை செய்தலைப்பற்றி,

"அரம்போழ் அவ்வளை பொலிந்த முன்கை"-(அகம்:6)

"கோடுபோழ் கடைஞரும்"-(ம.காஞ்சி)

"விலங்கரம் பெறாத சங்கின் வெள்வளை"-(சீவ:2441)

"விலங்கரம் பொரூஉம் வெவ்வளை போழ்நர்"-(மணி.வரி.330)

என்ற பாடல்களின் வழியாகச் சங்கானது சிறிய அரத்தால் அறுக்கப்பட்டு வளையல்களாகச் செய்யப்பட்டதை அறிகிறோம்.

**இ) அணிகலன்கள்**

சங்கு வடிவில் ஒரு தலையணிகலன் இருந்தது. சங்கு என்பதற்கு வளை என்றே பெயரிருந்தது. அப்பெயரே கையிலணியும் ஓரணிகலனுக்கும் பெயராகிச் சங்க இலக்கியங்களில் சிறப்புறப் பேசப்பட்டது. (ஐங்.நூறு: 191, 193, 194)

**ஈ) கட்டடம்**

சங்கினைச் சுட்டுச் சுண்ணாம்பாக்கிப் பூசுவதற்குப் பயன்படுத்தினர். அந்தச்சுண்ணம் அங்காடிகளில் விற்கப்பட்டன என்பதை,

"நீடு கொடி இலையினர்
கோடு சுடு நூற்றினர்" (மது:401)

**உ) வழிபாட்டில் சங்கு**

வைணவர்கள் வலம்புரிச்சங்கை நலம் தரும் பொக்கிசமாகக் கருதுவர். பரிபாடலில் திருமாலைக் குறிக்கும் போது,

"நீயே வளையொடு புரையும் வாலியோற் கவ
னிளைய னென்போர்க் கிளையை யாதலும்"

E-ISSN: 2581-7140
Special Issue: Vol. 2, April-2019 Available at: www.ijtlls.com

என்றும்,

"இருவேறு மண்டிலத் தியக்கம் போல
நேமியும் வளையும் ஏற்றம் கையில்
கருவி மின்ன"
"சலம்புரி தண்டேந்தினவை
வலம்புரி வயநேமியவை"

என்றும் பரிபாடலில் திருமாலின் கையில் சங்கு இருப்பது குறிக்கப்படுகிறது.

**ஊ) நிமித்தம் பார்த்தல்**

சங்க காலந்தொட்டே நிமித்தம் பார்க்கும் வழக்கம் தமிழ் மக்களிடையே உண்டு. இதையே விரிச்சி என இலக்கியங்களில் படிக்கிறோம். இங்கு சங்கு முழங்குவது நன்நிமித்தமாகக் கருதப்பட்டது (சீவக.1888) அரசன் போருக்கு புறப்படும் போதும் வெற்றி அடைந்த போதும் சங்கு முழங்கல் வழக்கமென்பதைப் பல நூல்களில் காணலாம்.

**எ) நம்பிக்கை**

ஆடவர் கையில் சங்கு ரேகை இருப்பது சிறப்புடையது என்பதை "வலம்புரி பொறித்த வண்கை தேவலி" (சீவக.204) என்னும் பகுதியால் உணரலாம்.

பிணியைப்போக்கும் பேராற்றல் சங்கிற்கு உண்டு.அதனால் தான் தாய்மார்கள் தங்கள் குழந்தைகளுக்கு பால், மருந்து போன்றவற்றை சங்கினால் கொடுக்கின்றனர். சங்கின் கறியானது கொடிய வியாதிகளையும் மடிய வைக்கும் ஆற்றல் கொண்டது. மிகவும் சுவையானது இறப்பின் போது சங்கின் சத்தத்தை இப்போதும் கேட்க முடிகிறது. ஆக மனிதனுடைய வாழ்வில் இன்றளவும் பயன்பாட்டில் இருக்கும் சங்கானது மிகவும் தொன்மையான பொருள் என்பதைக் காட்டிலும் அது பயன்பாட்டில் இருப்பது போற்றத் தக்கது. இந்திய நாகரிகத்தின் தொட்டில் என்றழைக்கப்படும் சிந்துவெளி நாகரிகத்திற்கு முந்தைய நாகரிகம் நம் தமிழர் நாகரிகம் என்பதை மெய்ப்பிக்க தொல்பொருள் மானிடவியல் என்பது அவசிமான ஆய்வாகிறது. இத் தொன்மையான பொருட்களை இலக்கியங்களோடு பொருத்திப்பார்த்து ஒரு முடிவை எட்டுவதே சாலச்சிறந்ததாகும்.

**நூற்பட்டியல்**

1. OUR KIND (நம்மைப் போன்றோர்)- மார்வின் ஹாரிஸ்- அமெரிக்க மானிடவியலாளர்.
2. சங்கறுக்கும் எங்கள் குலம், ஜெ.பாலன் –நெய்தல் பதிப்பகம்-1982, சென்னை.
3. சங்கு, பேரா.ந.அதியமான், நீரகழாய்வு மையம், தஞ்சைத் தமிழ்ப் பல்கலைக்கழகம்.
4. தேரிருவேலி அகழ்வாய்வு, தி.ஸ்ரீ.ஸ்ரீதர்-இஆப, தமிழ்நாடு அரசு தொல்லியல் துறை.
5. ஆர். வசந்த கல்யாணி, கல்வெட்டாய்வாளர், தொல்பொருள் ஆய்வுத்துறை.

E-ISSN: 2581-7140
Special Issue: Vol. 2, April-2019 Available at: www.ijtlls.com

# 'கண்ணகி மண்ணில்' பொருண்மையில் தொல்லியல் ஓர் பார்வை
# Archaeology in the Land of Kannagi

**இரா. யசோதா,** முனைவர் பட்ட ஆய்வாளர், தமிழ்த்துறை,
பிஷப் ஹீபர் கல்லூரி, திருச்சிராப்பள்ளி - 620017.

## Abstract

*The paper elicits about* archaeology in the land of Kannagi**.** It *becomes prominent to know about the culture and the civilization existed lang back there. Hence, the study paves way to comprehend the region that Kannagi lived before ages back and these evidences may help to understand the cultural origins of the ancient Tamil people.*

**Keywords:** Archaeology, Land of Kannagi, Poombukar, Deluge, Culture, Tamils

**முன்னுரை**

தொல்லியல் என்பது கட்டிடக்கலை, தொல்பொருட்கள், தொல்லுயிர் எச்சம், மனித மிச்சங்கள், எண்ணிமப் பொருட்கள் மற்றும் நிலத்தோற்றங்கள் என்பன உள்ளிட்ட எஞ்சிய பொருட்களை வெளிக்கொணர்ந்து, ஆவணப்படுத்தி, பகுப்பாய்வு செய்வதன் மூலம் செய்யப்படும் மனிதப் பயன்பாடு பற்றிய படிப்பாகும். புதிய தொல்லியற் களங்களைக் கண்டுபிடித்தல், அவற்றில் அகழ்வாய்வு செய்தல், வகைப்படுத்தல், பகுப்பாய்தல் பேணிக்காத்தல் என்பனவெல்லாம், தொல்லியல் சார்ந்த வழிமுறைகளின் பல்வேறு முக்கியமான கட்டங்கள் ஆகும். இங்ஙனம் ஆராயப்படும் தொல்லியல் சார்ந்த அகழாய்வுகளையும், அகழாய்வின் மூலம் கண்டெடுக்கப்பட்ட சிலைகளையும் பற்றி, பொருள்களையும் கண்ணகி வாழ்ந்த மண்ணாகிய பூம்புகாரில் கிடைத்த தகவல்களைப்பற்றி 'கண்ணகி மண்ணில்' என்னும் தாயம்மாள் அறவாணனின் பொருண்மையில் ஆராயப்படுவதை இக்கட்டுரை வாயிலாக அறியலாம்.

**கண்ணகி மண் - பூம்புகார்**

பழைய இலக்கிய புகழ்பெற்ற காவிரிபூம்பட்டினமே பூம்புகார் ஆகும். இது கற்புக்கரசி கண்ணகியின் வாழ்விடமாம். இந்நகரில் பண்பாடு, பழக்க வழக்கங்கள், கலைகள், வாழ்க்கை முறைகள் போன்றவை மிகச்சிறந்த முறையில் பின்பற்றப்பட்டு வருகின்றன.

"பார்கூழ் என்ற இடத்தில் கட்டப்பட்ட காபியின் வேலிக்கற்களுள் ஒன்றைக் கொடை அளித்த பௌத்தப் பெண் துறவியான சோமா என்பவர் 'காகந்தி' என அந்நாளில் வழங்கப்பட்ட இக்காவிரிப் பூம்பட்டினத்தைச் சேர்ந்தவர். ஆக காகந்தி என்ற பெயர் காவிரிப்பூம்பட்டினத்திற்கு வழங்கப்பெற்ற பல பெயர்களுள் ஒன்று. (தாயம்மாள் அறவாணன், கண்ணகி மண்ணில், ப.219)

இது மட்டுமல்லாமல் பூம்புகாரில் மக்களுக்கு ஏற்படும் துன்பங்களான பசி, நோய், பகை முதலியவை தாக்காமலிருக்க, 'வசியும் வளனும் சுரக்க வேண்டும்' என்று வாழ்த்தி, பெண்களெல்லாம் பூசை செய்யும் ஒரு பலிபீடத்தில், வெற்றி வேந்தன் வெற்றி பெறுமாறு வீரர்கள் எல்லாம் முரசு அறைந்து பலிகொடுப்பர். இதுபோன்ற நம்பிக்கைக்குரிய செயல்களும் இந்நகரில் இடம் பெறுவதை அறிய முடிகிறது.

E-ISSN: 2581-7140
Special Issue: Vol. 2, April-2019 Available at: www.ijtlls.com

மேலும் இந்நகரானது இந்திரனுக்கு விழா நடத்தாததால் கடலுக்குள் மூழ்கியதாகவும் மணிமேகலை குறிப்புகள் இடம்பெறுவது கவனிக்கக்கூடிய ஒன்றாகும். ஆனால், "சைவக்குரவர்கள் புகாரில் உள்ள இறைவனை, 'புகாரப் பல்லவனீச்சப் பெருமானே' என்று பாடியுள்ளதால் புகார் முழுவதும் கடலுள் மறையவில்லை எனக் கொள்ளலாம்." (தாயம்மாள் அறவாணன், கண்ணகி மண்ணில், ப.219) என்ற குறிப்பும் உள்ளது.

அதோடு இந்நகரில், மண்ணில் புதையுண்டு கிடக்கும் தொல்லியல் சார் பொருள்களான சிலைகளும், பொருள்களும் கண்டெடுக்கப்பட்டு, பொதுமக்களின் பார்வைக்கு வைக்கப்படும் அருங்காட்சியகமும் இங்கு அமைக்கப்பட்டுள்ளது. இங்ஙனம் அகழாய்வு செய்யப்பட்டு பல்வேறு பொருள்கள் கண்டெடுக்கப்படும் ஒரு தொல்லியல் ஆய்வுக்களமாகவும் இந்நகர் அமைந்துள்ளது மிகப் போற்றுதலுக்குரியதாகும்.

**சிலைகளும், பொருள்களும் - கண்டெடுப்பு**

கண்ணகியின் வரலாறு பேசும் பூம்புகாரில் புதையுண்டு கிடந்த பொருள்களின், சிலைகள், முதுமக்கள் தாழிகள், செப்புத்தகடுகள், காசுகள், சுடுமண் பொம்மைகள், சீனரோமானியப் பொருள்கள், பல்லவர்காலச் சிற்பங்கள் போன்ற அனைத்தும் கண்டெடுக்கப்பட்டு அருங்காட்சியகத்தில் வைக்கப்பட்டுள்ளன. இவற்றில்,

"சம்பாபதி அம்மன் கோயிலில் உள்ள பூதங்களின் படங்கள் வைக்கப்பெற்றுள்ளன. இவை மிகத் தொன்மையான சம்பாபதி கோயில் உட்பகுதியிலும் வெளிப்பகுதியிலும் நிறுவப்பெற்றுள்ள ஆண், பெண் பூத வடிவப் புகைப்படங்களாகும்." (கண்ணகி மண்ணில், தாயம்மாள் அறவாணன், ப.231)

பல்லவர் காலச் சிற்பங்களான "மேலப்பெரும்பள்ள சங்கந்தம் குளம் மேட்டுப்பகுதியில் கவனிப்பாரற்றுக் கிடந்த பல்லவர் காலச்சிற்ப அமைதியுடைய ஐயனார் சிலை கம்பீரமாக அமர்ந்த நிலையில் காட்சிக்கூட நுழைவாயிலில் அமர்த்தியுள்ளார்கள். கடற்பகுதியில் கிடைத்த விநாயகச் சிற்பம் ஒன்றும் வைக்கப்பெற்றுள்ளது." (கண்ணகி மண்ணில், தாயம்மாள் அறவாணன், ப.231)

இதுபோன்ற கம்பீரமான தெய்வச் சிலைகளும், தாய் தெய்வ உருவங்களும், சுடுமண் உருவங்களின் தலைப்பகுதிகளும், புத்தபாதமும், புத்தர் சிலைகளும் கிடைத்துள்ளன. இது மட்டுமல்லாமல், காவிரிப்பூம்பட்டினத்தில் கண்டுபிடிக்கப்பட்ட புத்த விகாரமானது, ஆந்திர தேச நாகர்ஜீன கொண்டாவில் காணப்பட்ட விகாரத்தைப் போன்று அமைந்துள்ள சிறப்பும் உள்ளது. இந்த புத்தவிகாரங்கள் பற்றிய குறிப்புகள் மணிமேகலையில் குறிப்பிடப்பட்டுள்ளது.

"பள்ளிக்கறை மண்டபம் உண்டு அதனுள்ளது
துநிற மாமணிச் சுடரொளி விரிந்த
தாமரைப் பீடிகை தான் உண்டு" (மணி, 364-65)

இதுபோன்ற பூம்புகாரில் கிடைத்துள்ள புத்தபாத விகாரங்களானது அமராவதி, நாகார்ஜீன கொண்டா முதலிய இடங்களில் உபயோகிக்கப்பட்ட ஒருவகைக் கல்லால் செய்ததாகும். மேலும் புத்தர் தியானத்தில் அமர்ந்திருக்கும் செப்புச் சிலைகளும் புகாரில் கண்டெடுக்கப்பட்டுள்ளன.

"காவிரிப்பூம்பட்டினத்தின் மேலையூர் என்ற பகுதியில், புத்த விஹாரம் கிடைத்துள்ள பகுதியில் போதி சத்வ மைத்ரேயரின் செப்புத்திருமேனி ஒன்று பூமிக்கடியில் இருந்து கிடைத்தது. இது எட்டாம் நூற்றாண்டைச் சார்ந்தது அக்கால கட்டத்தில் இப்பகுதியை ஆண்ட மன்னன் இராஜசிம்மன்." (கண்ணகி மண்ணில், தாயம்மாள் அறவாணன், ப.218)

E-ISSN: 2581-7140
Special Issue: Vol. 2, April-2019 Available at: www.ijtlls.com

இதுபோன்ற பல சிலைகள் வித்தியாசமான நிலைகளில் கண்டுபிடிக்கப்பட்டு பூம்புகார் அருங்காட்சியகத்திலும், சென்னை அருங்காட்சியகத்திலும் வைக்கப்பட்டுள்ளது.

**அகழாய்வு சிறப்புகள்**

பூம்புகாரில் அகழாய்வு சிறப்பிடங்களாக பல இடங்கள் காணப்படுகின்றன. அந்த வகையில் 'கிழார்வெளி' என்னும் ஊரில் மக்கள் தங்கள் வழிபாட்டு நேர்த்திக் கடனுக்காக சுடுமண்ணால் ஆகிய தாமரை மலரில் அமைந்த சிறிய அளவிலான புத்தர் பாதங்கள் அவலோகீஸ்வரர் போன்ற சுடுமண் பொம்மைத்தலைப்பகுதி, பறவை போன்றன கண்டெடுக்கப்பட்டுள்ளன. இதுபோன்று கிழார்வெளிக்கு அருகில் மணிகிராமம் என்னும் ஊரில் சுடுமண் உருவத்தின் தலைப்பகுதி ஒன்று கிடைத்துள்ளது. இது புத்தர் உருவமாகவோ அல்லது முருகன் உருவமாகவோ இருக்கலாம் எனவும் ஆராயப்படுகிறது. மேற்கில் மேலையூரில் நாயக்கர் காலத் தொல்பொருள்கள் கிடைத்திருப்பதால் பண்டைய நகரம் இதற்குக் கிழக்கில் அமைந்திருக்க வேண்டும் என்று அகழாய்வில் குறிப்பிடுகின்றனர்.

"வளையல்களுக்காக அறுத்த சங்குகள், சீனக்குடுவைகள், ரோமானியக் காசுகள், சங்ககாலச் சதுரக்காசு, குதிரை உருவம் பதித்த ரோமானியப் பானை ஓடு, மான் கொம்பு, ரோமானிய ஆம்பரோ மதுக்கலத்தின் பகுதியில், கண்ணாடி மற்றும் பீங்கான் ஓடுகள், உறைகிணறு அடுக்குகள், பூம்புகார் அகழ்வாய்வில் தொல்பொருள் துறையால் கண்டெடுக்கப்பட்டன." (தாயம்மாள் அறவாணன், கண்ணகி மண்ணில், ப.223)

மேலும் கண்ணகி வாழ்ந்த மண்ணிற்கு அடையாளமாக அவளது சிலம்பானது கண்டெடுக்கப்பட்டு அருங்காட்சியகத்தில் வைக்கப்பட்டுள்ளது. "கொல்லம் கடற்கரையில் கடலில் 10 அடி ஆழத்தில் சிலம்பு கிடைத்து. இதைக் கொல்லத்தைச் சேர்ந்த தியாகராஜன் என்பவர் கண்டுபிடித்தார். அவர் அனுமதியுடன் காட்சியில் பூம்புகாரில் வைக்கப்பெற்றுள்ளது. முன்பகுதி பரந்தும் பின்பகுதி சிறுத்தும் அமைந்துள்ளது. காலில் அணியும் வகையில் உள்பகுதி வழவழப்பாக உள்ளது. உள்ளே பரல்கள் இடவசதியாகக் காயாக அமைக்கப் பெற்றுள்ளது." (தாயம்மாள் அறவாணன், கண்ணகி மண்ணில், ப.234)

கரிகாலன் காலச் செப்புக்காசுகளும், காசுகளில் யானை பொறிக்கப்பட்ட அமைப்பும், வாலைத் தூக்கிய நிலையில் உள்ள அமைப்புகளும் இடம் பெறுவது குறிப்பிடத்தக்கதாகும். அதோடு சோழர் காலத்து வடிவிலான இரு அரச உருவங்களின் தலைப்பகுதிகள் ஒரு பீடம், ஒரு நடன மாதுவின் உடல், அழகிய சுடுமண் பொம்மைகள் போன்றவை வெள்ளையன் இருப்புப் பகுதிகளில் அமைந்துள்ளது படகுத்துறையில் கண்டெடுக்கப்பட்ட கற்களின் அளவுகளும் குறிப்பிடப்பட்டுள்ளன. அவை,

"படகுத்துறையில் இருந்து சில கற்களை எடுத்து வந்து காட்சியில் வைத்துள்ளார்கள். அந்தக் கல்லின் அளவு மிகப் பெரிய செங்கல்லின் அளவு 61/4.5/10 சென்டிமீட்டர் சில கற்கள் 52 x 32 x 8 சென்டிமீட்டர்." (தாயம்மாள் அறவணான், கண்ணகி மண்ணில், ப.234)

**அருங்காட்சியகப் பொருள்கள்**

அகழாய்வில் சிறப்பிடம் பெற்று பல பொருட்கள் கண்டெடுக்கப்பட்டு பூம்புகார் அருங்காட்சியகத்தில் வைக்கப்பட்டுள்ளது. இது இங்கு உள்ள பொருட்கள் பூம்புகாரில் கண்டெடுக்கப்பட்ட பொருட்களாக இருந்தாலும் அவை சீன தேசத்து மக்கள் பயன்படுத்திய பொருள்களாகவும், ரோமானியப் பொருட்களாகவும் இடம் பெற்றிருப்பது குறிப்பிடத்தக்கதாகும்.

"ரோமானியக் காசுகள் காட்சிப் பொருளாக வைக்கப்பட்டுள்ளன. அவற்றில் கப்பல் சின்னம் பொறிக்கப்பட்டுள்ளது. சீனதேசத்து மதுசாடியும் அருங்காட்சியகத்தில் உள்ளது சீனக்குடுவைகள், குதிரை உருவம் பதித்த ரோமானியப் பானை ஓடுகள், இலை, பறவை

E-ISSN: 2581-7140
Special Issue: Vol. 2, April-2019 Available at: www.ijtlls.com

உருவம் பொறிக்கப்பட்ட ரோமானியப் பானை ஓடுகள், சீனதேசத்து அரிய பானை ஓடுகள்" (தாயம்மாள் அறவாணன், கண்ணகி மண்ணில், ப.230) போன்றவைகள் இடம் பெறுவதோடு,

"டிரிட்கரா என்று அழைக்கப்படும் கல்லாக மாறிய கிளிஞ்சல் 2.5 கோடி ஆண்டுகளுக்கு முற்பட்டது என்று சுட்டப்பட்டுள்ளது. பூம்புகார் பகுதியில் 2000 ஆண்டுகள் பழைமை வாய்ந்த பொருட்களான முதுமக்கள் தாழிகள், சுடுமண் கலையம், பற்கள், எலும்புகள், கருப்பு சிவப்புக் கிண்ணம், குறுவாள், உறையுடன் போர் வாள் இவை கிடைத்துள்ளன." (தாயம்மாள் அறவாணன், கண்ணகி மண்ணில், ப.230)

மேலும் பல அரிய கலைப் பொருள்களான கலயம், அகல் விளக்கு, எலும்புத் துண்டுகள் போன்றவைகளும் அதோடு கண்ணாடி, பீங்கான் ஓடுகள், பல்வண்ண மணிகள் போன்றவைகளும் கிடைத்துள்ளன.

**இறக்குமதியாகும் பொருள்கள்**

பூம்புகாரில் அகழாய்வில் கண்டெடுக்கப்படும் பொருள்கள் மட்டுமின்றி இறக்குமதியாகும் பொருள்களும் பல உள்ளன. அவை, பொற்கலன்கள், தங்கக்காசுகள், ரோமானியக் கலன்கள், பீங்கான் கலன்கள், பாவை விளக்குகள், சீனப்பட்டு, குதிரைகள், மதுவகைகள், நறுமணப் பொருள்கள், குங்குமம், பனிநீர், கற்பூரம், கண்ணாடிப் பொருள்கள், பட்டாசுகள், சீனி, இயந்திரப் பொருட்கள் போன்றவைகளாகும். (தாயம்மாள் அறவாணன், கண்ணகி மண்ணில்,ப.232)

**கடலில் சேகரிக்கப்பட்ட பொருட்கள்**

பூம்புகாரின் கடற்பகுதியில் சேகரிக்கப்பட்ட பொருட்களான, "கருப்பு-சிவப்புப் பானை ஓடுகள், சாம்பல்நிறப் பானை ஓடுகள், ரோமானிய 'ஆம்பொரா' பானை ஓடுகள், குறியீடுள்ள பானை ஓடுகள் கிடைத்துள்ளன. இவ்வரிய பானை ஓடுகள் பூம்புகார் வாணகிரி கடற்பகுதியில் சேகரித்தவை என்று சொல்லப்படுகிறது." (தாயம்மாள் அறவாணன், கண்ணகி மண்ணில், ப..232)

**முடிவுரை**

காவிரிபூம்பட்டினமாகிய பூம்புகாரில் தொல்லியல் சார் ஆய்வுகளும், அகழாய்வில் கண்டெடுக்கப்பட்ட பொருள்களும், அதனை சேகரித்து வைக்கப்பட்ட அருங்காட்சியகங்களும் பற்றிய அனைத்து தகவல்களையும் விளக்கியுள்ளதை இக்கட்டுரை வாயிலாக அறிய முடிகிறது.

**சான்றெண் விளக்கம்**

1. தாயம்மாள் அறவாணன், கண்ணகி மண்ணில், சபாநாயகம் பிரிண்டர்ஸ், சிதம்பரம், 2003 திசம்பர்
2. www.wikipedia.com

E-ISSN: 2581-7140
Special Issue: Vol. 2, April-2019 Available at: www.ijtlls.com

# கல்வெட்டுக்களில் நிலம் பற்றிய தொன்மக்கூறுகளின் புலப்பாடுகள்
# The Traces of Land Donations and Revenue in Culverts

**முனைவர் ஏ.யோகசித்ரா,** உதவிப்பேராசிரியர் (தமிழ்த்துறை),
அறிஞர் அண்ணா அரசு மகளிர் கலைக்கல்லூரி, வாலாஜாப்பேட்டை, வேலூர் மாவட்டம்.– 632513

## Abstract

*The article discusses on the land related edicts from the Pandian age to the later Chola age. The evidences are clearly depicting that the kings and philanthrophists had a great deal of land administrative system and charity norms. Every of their actions are carved in the culverts to be retained in the future. The scope lies on the idea to study the land donations, measurement system, sale and revenue regarding land. Hence, the study brings out the related facts from the substantiation.*

**Keywords:** Traces, Land Donations, Revenue, Culverts, Tamil Kings

**ஆய்வு நோக்கம்**

கல்லில் எழுத்துக்களைப் பொறிக்கும் கல்வெட்டுக்கள் அக்கால மன்னர்களின் ஆட்சிமுறையினை ஆண்டாகக் குறிப்பிடுவதோடு கோயில்களுக்கு வழங்கப்பட்ட இறையிலிகளைப் பற்றிய ஆவணங்களைப் பதிவுகளாகவே விட்டுச் சென்றுள்ளனர். இத்தகைய நிலையில் நிலம் பற்றி வரிகளும் மற்றும் அளவைகளும், நில விற்பனை, நிலத்தின் பெயர்கள் போன்றவற்றை பாண்டியர் கால, சோழர் கால ஆட்சிகளில் ஒப்பீடாகக் கொண்டு இவ்வாய்வுக் கட்டுரை இலங்குகிறது.

**கல்வெட்டுக்களின் நோக்கம்**

கல்வெட்டு பொறிக்கப்பெற்ற காரணத்தை விளக்கும் பகுதி காணப்படும். கல்வெட்டுக்களில் கோயில்களுக்கு நிலம் இறையிலியாக வழங்கியதையோ அல்லது கோயில்களில் திருநந்தா விளக்கு அமைப்பதற்கு கொடுத்ததையோடு குறிப்பிட்டு எழுதப்படுவதாக கல்வெட்டு அமையும்.

நிலம் கோயிலுக்கு விற்கும் போதும், பிறருக்கு விற்கும்போதும் அந்நிலத்தின் பரப்பளவு, அதன் நான்கு பக்க எல்லைகள், அந்நிலத்தைச் சார்ந்திருக்கும் பிறபொருள்கள், அந்நிலத்திற்கு நீர்பாய்ச்சும் வாய்க்கால் ஆகியவை விளக்கமாகக் கல்வெட்டுக்களில் காணப்படுவதைச் சான்றுகள் வழி அறியலாம்.

**இறையிலி**

சிவன் கோயிலுக்கு நிலம் விற்கப்பட்ட போதெல்லாம் சண்டேசுவரர் பெயராலேயே விற்கப்பட்டன. மற்றப் பொருட்கள் கொடையாக அளித்தால் அந்தக் கொடையானது இயற்கையை வழுத்தி சான்றாக்கி காக்கப்பெறும் என இயல்பாகவேச் சுட்டி எழுதும் வழக்கம் கல்வெட்டில் காணப்படுவது சிறப்பாகும். அளிக்கப்பெற்ற கொடை சந்திராதித்தர் உள்ளளவும் நிலை பெற்றிருக்கும் என்று குறிக்கப்பெற்றிருத்தல் இயற்கையை முன் நிறுத்தி வாழ்ந்த காலச்சூழலைக் காட்டுவதாக அமைகிறது.

**E-ISSN: 2581-7140**

**Special Issue: Vol. 2, April-2019** **Available at: www.ijtlls.com**

மன்னர் ஆட்சியில் திருக்கோயில்களுக்கு அளிக்கப்பட்ட நிபந்தங்கள் பாதுகாக்கப்பட்டதோடு மக்களின் வாழ்வியலோடு இணைந்த பான்மையை சான்றுகள் வழி உய்த்து அறியலாம். வரிகள் செலுத்தப்பட்ட விவரங்கள் கல்வெட்டுக்களின் மூலம் அறியப்பட்டதை,

> "ளை ஆதித்ததேவரும் வாலையாரும் நாட்டாரும் சாத்துப்படிபரிவட்டம் படி விஞ்சனத்துக்கும் முதல் அடங்க இறையிலி ஆகிவிட்ட திருநாமத்துக்காணி விரையாவிடங்க நல்லூரிலும் பொன்மெந்த பெருமாள் நல்லூரிலும் ய-ஆவது காத்திகை மாதவரை நாட்டில் வகுப்பில் கூட்டிக் கிடந்த ஆயுமுதலும் மார்கழி மாத மு(த)ல் எற்றிக் கொள்ளும் செட்டிகள் பலபட்டடையும் தறிஇறை தட்டார் பாட்டம் செனைக்கடை வெட்டைக்காறர்க் கடையும் குளவடை ஒழுக்கு நீர் (மின்) பாட்டம் செக்காயம் வண்ணார் கற்காசு பல (கணி) மாலைகளும் உப்புவழிச்சாரிகை உள்ளிட்ட அனைத்து ஆயவற்க(ங்க)ளும் குடிஎற்றிக் கொண்டு இந்த ஆயவற்கங்களாலுள்ள முதல்களும் இந்த நாச்சியா(ர்)க்கு சாத்துப்படி திருப்பரி வட்டம் (படி விஞ்சனத்துக்கும் விட்டது இப்படிக்கு செம்பிலும் கல்லிலும் வெட்டிக் கொள்க இப்படிக்கு சந்திரர் (ஆ)தித்த வரையும் இறையிலி ஆக கொள்க" (நன்னிலம் கல்வெட்டுக்கள் முதல் தொகுதி கல்வெட்டு 7, தொடர் எண் 9-1977)

சுந்தரபாண்டியனின் பத்தாவது ஆட்சியாண்டில் திருமிகைச்சூருடைய நாயனார் கோயில் திருக்காமக் கோட்டமுடைய சிவகாமசுந்தரி நாச்சியாருக்கு சாத்துபடி, பரிவட்டம், விஞ்சனம் ஆகியவற்றுக்கு இறையிலியாக, விரையாவிடங்க நல்லூரிலும், பொன் மேய்ந்த பெருமாள் நல்லூரிலும் பல பட்டடை, தறிஇறை, தட்டார் பாட்டம், செனைக்கடை, வேட்டைக்காரர்கடை, குளவடை, மீன்பாட்டம், செக்காயம், வண்ணார் கற்காசு, உப்புவழிச் சாரிகை உள்ளிட்ட வரிகளை மார்கழி மாதம் முதல் இவ்வூர் சபையாரும், நாட்டாரும், உடையார் காலிங்கராயரும், ஆதித்ததேவரும் அளித்தனர் என்று இக்கல்வெட்டின் மூலம் தெரிய வருகிறது.

**நிலத்தின் பெயர்கள்**

> "சேறு என்று பேர் கடவப்பட்ட நிலத்துக்குக் கீழ்பார்க் கெல்லை சிறுமன்றூர் கிழவர் திருவாஞ்சியமுடையார் பக்கல் திருநாமத்துக் காணியாகக் கொண்ட நிலத்துக்கு இற்றை நாள் இன்னாயனார்க்கு விற்க்கின்ற நிலத்துக்கு மேற்கும் (தெ)ன்பாற்கெல்லை செனனாதன் வாய்க்காலுக்கும் மேல்பார்க்கெல்லை சிறுமன்றூர் கிழவர் திருஞானசம்பந்தர் நிலத்துக்குக் கிழக்கும் வடபார்க்கெல்லை திருவாஞ்சியமுடையார் நிலத்துக்கு தெற்கும் இக்கண்டத்து ஓடை என்(று) பேர் கடவப்பட்ட நிலத்துக்குக் கீழ்பாற்க்கெல்லை பாக்கத்து எல்லைக்கும் தெற்குகெல்லைல செனனாதன் வாய்க்காலுக்கு வடக்கும் மேல்பார்க் கெல்லை இற்றைநாள் இந்நாயனார்க்கு விற்றுக் குடுத்த நிலத்துக்கு" (பாண்டியர் 10வது ஆட்சியாண்டு நன்னிலம் கல்வெட்டுக்கள் முதல் தொகுதி தொடர் எண் 24-1977 )

இக்கல்வெட்டானது திருவாஞ்சிநாதர் கோயில் இரண்டாம் திருச்சுற்றுத் தென்புறச் சுவரில் உள்ளது.

ஜடாவர்மன் வீரபாண்டியனின் இருபதாவது ஆட்சியாண்டில், திருவாஞ்சியமுடைய நாயனார் கோயில் ஆதிசண்டேசுர தேவகன்மிகளுக்கு, சிறுமன்றூர் கிழவன் அழகிய நாயகன்

E-ISSN: 2581-7140
Special Issue: Vol. 2, April-2019 Available at: www.ijtlls.com

அரையன் திருவம்பலப் பெருமாள் என்பவன் நிலம் விற்றுக்குடுத்து உள்;ர் வியாபாரி ஒருவர் சாட்சியாக பணம் நாற்றி ஐந்து பெற்றுக்கொண்டு, நில விலைப்பிரமாணம் செய்து கொடுத்த செய்தி கூறப்பட்டிருக்கிறது. இக்கல்வெட்டின் பெரும்பகுதியில் விற்கப்பட்ட நிலத்திற்கு எல்லைகள் கூறப்பட்டிருக்கின்றன.

ஆவூர் வாய்க்கால், உட்சிறு வாய்க்கால், செனனாதன் வாய்க்கால், பத்தாறு போன்ற வாய்க்கால்களின் பெயரும் குறிப்பிடப்படுகின்றன. நிலங்களின் பெயர்களாக சேறு, விளாகம், பனங்கரை, ஆரா அமுது, ஓடை என்று கூறப்பட்டிருக்கின்றன. பிடாரி கோயில் ஒன்று அவ்வூரில் இருந்த செய்தியும் தெரியவருகிறது. திருவாஞ்சியத்தில் பல வியாபாரிகளும் இருந்தனர் என்று தெரியவருகிறது.

**நில அளவுகளுக்கானப் பெயர்கள்**

> “இந்நான்கெல்லையுளகப் பட்ட நத்தம் குழி (150) இக்குழி நூற்றைம்பதும் இன்னமும் இவற்கு விற்றுக் குடுத்த விளை நிலத்துக்குக் கீழ்பாற்கெல்லை உட்சிறு வாய்க்காலுக்கும் பழையக் குடையான் வெள்ளானை விடங்கர் நிலத்துக்கு மேற்கும் தென்பாற்கெல்லை பழையக்குடையான் வெள்ளானை விடங்க நத்தத்துக்கும் இந்நாயனாற்கு நான் விற்று நத்தத்துக்கு வடக்கும் வடபாற் கெல்லை கருப்புடையார் நிலத்துக்கு தெற்கும் இந்நான்கெல்லை நடுவுபட்ட இன்னிலம் எழுமாவும் இன்னமும் இவற்கு விற்றுக் குடுத்த இக்கண்டத்துக்கு வடக்கடைய நிலத்துக்கு கீழ்பாற்க் கெல்லையும் தென்பாற் கெல்லை கருப்புடையார் நிலத்துக்கு மேற்கும் வடபாற்கெல்லை” (2வது ஆட்சியாண்டு – பாண்டியர் ஸ்ரீவல்லபதேவர்) நன்னிலம் கல்வெட்டுக்கள் மூன்றாம் தொகுதி தொடர் எண் 382.∴1978)

ஸ்ரீவல்லபப் பாண்டியனின் இரண்டாம் ஆட்சியாண்டைச் சேர்ந்த இக்கல்வெட்டில், அரையன் திருச்சிற்றம்பலமுடையான் மனைவி இவ்வூர் வெள்ளானை விடங்க தேவர் கோயிலுக்கு திருநாமத்துக் காணியாக நிலம் விற்றுக் கொடுத்த செய்தி கூறப்பட்டுள்ளது.

அவ்வாறு விற்றுக் கொடுக்கப்பட்டது நத்தம் குழி 150 என்றும், விளைநிரம் ஏழு மா என்றும், மனைநிலம் குழி 150 என்றும் கூறப்பட்டுள்ளது. இத்தனையும் விற்றுக்கொடுத்து எண்பத்தைந்து பணம் பெற்றுக் கொண்ட செய்தியும் தெரியவருகிறது.

**நிலவிற்பனைப் பற்றிய செய்தி**

> “இந்நிலம் முக்காலும் ஆக மனைக்குழி முப்பது விளை நிலம் ஒன்றே ஒரு மாவும் விற்றுக் குடுத்துக் கொள்வதான எம்மிலிசைந்த விலைப்பொருள் அன்றாடு நற்காசினால்.....இருபதுக்கும் இந்நிலம்......யும் விற்றுக் குடுத்தேன் மாதரன் மங்கலமுடையான் நாங்....ன் இந்த மாதரன் மங்கலமுடையார் நாயனபிள்ளை வீரதற் குறியானமைக்கும். இவர்.....விடையாட்டத்துக்கு கிழக்கும் வடபாற்கெல்லை வாய்க்காலுக்குத் தெற்கும் அர்த்த மண்டபத் தெற்குப்புறக் கம்பில் உள்ளது. நற்காசினால் இப்பணம் இருபதுக்கும் இந்நிலம் ஆறு மாவும்.....ங்கப் பெருமான் திருவெண்காவுடையா எழுத்து இப்படி அறிவேன். இவ்வூர் திருமுற்றத்துக்காணி உடைய நம்பிமாரில் ஸ்ரீகர‘பட்டன் எழுத்து” (நன்னலம் கல்வெட்டுக்கள் மூன்றாம் தொகுதி தொடர் எண் 471-1978)

இக்கல்வெட்டில் நிலவிற்பனைப் பற்றிய செய்தி அறியப்படுகிறது.

ஏழு மா நிலத்திற்கு பணம் இருபத்தைந்து பெற்றுக் கொண்டு வாழ்வித்தான் கருமாணிக்கம் பல்லவரையரும் செய்யமேனி வாணவதரையரும் விற்றுத்தந்ததையும், நிலம்

E-ISSN: 2581-7140
Special Issue: Vol. 2, April-2019 Available at: www.ijtlls.com

காலுக்கு பணம் இருபது பெற்றுக்கொண்டு முழையூருடையான் திருவெண்காடுடையான் விற்றுத் தந்ததையும், நிலம் முக்கால், மனைக்குழி முப்பது, விலைநிலம் ஒரு மா ஆகியவற்றுக்கு பணம் இருபது பெற்றுக்கொண்டு மாதரன் மங்கலமுடையார் நாயனபிள்ளை விற்றுத்தந்ததையும் கூறுகிறது. கி.பி.12, 13ஆம் நூற்றாண்டுகளில் அறியப்பட்ட இக்கல்வெட்டுச்செய்தி நுண்மைத்தன்மையை வெளிப்படுத்தியுள்ளமை கருதத்தகும்.

**நில வரிகள்**

> "க்கு தேவதானமான செம்பதிநாயக விளாகத்தில் புத்த தேவர் பஞ்சந்திவாணந்.....பள்ளிச் சந்தமானசெம்பாதியுமாக இட்டு இப்படிக்கு உடையார் திருநாகிசுரமுடையார் இறையிலி கல்வெட்டின.... இப்புத்ததேவர் கோயிலில் தேவதானத்துடன் பள்ளிச்சந்தம் சேராதென்று சொல்லி இதுக்கு தலைமாறு. (மதுரவாயல் கல்வெட்டு, பக் 35,36)
> மன்றபாக்கம் பள்ளிச்சந்தமாக இடுவித்து கொள்ளுகையாலே திங்க;ரில் பள்ளிச்சந்தமான செம்பா.....மதுரைவாயிலில் உடையார் திருவக்கிசுரமுடைய நாயனார்க்கு ஐஞ்சாவது ஆடி மாதம் முதலாக..... இநநாள் முதல் இக்கோயில் தானத்தார்க்கு இறை கடமை குடிமை இறுப்பதாகவும் இப்படிக்கு உடையார் திருநாகிசுரமுடைய நாயனார் கோயிலிலே கல்லுவெட்டி கொள்வதாகவும் சொன்னோம் இப்படிக்கு இவை நீலகங்கரையன்." (மதுரவாயல் கல்வெட்டு, பக் 35,36)

விசைய கண்ட கோபாலனின் 4 ஆம் ஆட்சியாண்டு (கி.பி. 1254) கல்வெட்டில் புத்ததேவர் கோயிலுக்கு பள்ளிச்சந்தமாக விடப்பட்ட நிலத்துக்கு ஈடாக (தலைமாறு) மன்றபாக்கம் என்னும் ஊரினை பள்ளிச்சந்தமாக விடப்பட்டுள்ளது. திங்க;ரில் பள்ளிச்சந்தமாக உள்ள நிலத்தின் வரிகளை மதுரைவாயில் உடையார் திருவக்கிசுரமுடைய நாயனார் கோயில் தானத்தார் பெற்றுக்கொள்ள வேண்டுமென இப்பகுதி சிற்றரசன் நீலகங்கரையன் ஆணையிட்டுள்ளான்.

மதுரைவாயிலைச் சேர்ந்த திருவிராமிசுரமுடையான், திருநல்லுழார் பெரிய நாயனார் மகள் கொண்டியார், திருநல்லுழார் கனகராயர் மகள் சிவதாண்டை, இவ்வூரைச் சார்ந்த உலகியார் ஆகிய நான்கு பேரும் வைத்த சந்தி விளக்கினை சந்திராதித்தவரை எரிப்பதாக இக்கோயில் சிவப்பிராமணனான காஸ்யபன் திருமுல்லைவாயிலிலுடையான் பட்டன் அம்மை அப்பன் என்பவன் உறுதியளித்துள்ளதை விசைய கண்ட கோபாலனின் 7ஆம் ஆட்சியாண்டுக் (கி.பி.1257) கல்வெட்டு கூறுகிறது.

**விஜயநகரக் கொடைகள் (நிலம் அளித்தவை)**

அச்சுதேவராய கல்வெட்டு (கி.பி.1532) செங்கப்புத்தேரி நகரத்தார் காமப்புல்லூரில் இருக்கும் திருக்காமிசுரமுடைய தம்பினார்க்கு நிலம் அளித்த செய்தியைத் தெரிவிக்கிறது. அச்சுதேவராயரின் மற்றொரு கல்வெட்டு காமிசுரமுடைய கோயிலுக்கு ஊழியர் ஒருவர் நியமனம் செய்யப்பட்டு அர்ச்சனா விருத்தியாக நிலம் அளித்த செய்தியைக் கூறுகிறது. காமப்புல்லூர் ஊரவர்கள் திம்மப்ப நாயகன் பேரால் 'மகாநவமி' திருவிழாவிற்கு நிலம் கொடையாக அளித்துள்ளனர்.

**சோழர் காலம்**

கோயில்களுக்கு அளிக்கப்படும் பரிசுகளைப் பெற்று மேற்பார்வையிட இசைந்து கையொப்பமிட்ட கோயில் தானத்தாருடைய பெயர்கள் கல்வெட்டுக்களில் காணப்படுகின்றன. ஊர்ச்சபை கோயிலுக்கு நிலத்தை விற்றபோதும், கோயிலிலிருந்து நிலத்தை வாங்கியபோதும்

E-ISSN: 2581-7140
Special Issue: Vol. 2, April-2019 Available at: www.ijtlls.com

அல்லது தனிநபருக்கு விற்றபோதும் விலைப்பிரமாணமும் செய்து கல்லில் வெட்டி வைத்துள்ளமை அறியப்படுகிறது. இக்கல்வெட்டுக்களின் இறுதியில் இது என் எழுத்து என பலருடைய கை ஒப்பந்தம் குறிக்கப்படும்.

**கோட்டம் எனும் பிரிவு**

இராஜேந்திர சோழன் கல்வெட்டில் ஜெயங்கொண்ட சோழ மண்டலத்து பல்குன்ற கோட்டத்து மண்டைகுல நாட்டு இராஜசூளாமணி சதுர்வேதி மங்கலமான காமப்புல்லூர் என்றும், பல்குன்றக் கோட்டம் என்றும் சொல்லப்படும். முதலாம் இராஜேந்திரனின் இரண்டாம் ஆட்சியாண்டு கல்வெட்டு பல்குன்றக் கோட்டம் என்ற கோட்டப்பிரிவையும், 6ஆம் ஆட்சியாண்டு கல்வெட்டு பங்கள நாடு என்ற நாட்டுப்பிரிவையும் கூறுகின்றன.

“சோழமண்டலத்தும் பாண்டியநாடான ராஜராஜமண்டலத்தும்
தொண்டை நாடான ஜயங்கொண்ட சோழமண்டலத்தும்”
“இராஜேந்திர சோழமண்டலத்துத் திருவேங்கடக் கோட்டத்துக்
குடவூர் நாட்டுத் திருச்சுகநூர்”
“இராஜராஜ வளநாட்டுப் பொயிற் கூற்றத்துக் கொற்ற மங்கலத்து”
“ராஜராஜ வளநாட்டுக் கீழ்வேங்கை நாட்டு ஜயங்கொண்ட சோழநல்லூர்”
(கல்வெட்டியல்-தொல்லெழுத்தியலும்,கல்வெட்டியலும்- ப.97)

சோழர்களுடைய கல்வெட்டுக்கள் ஓர் ஊரைக் குறிப்பிடும்போது மண்டலம், கூற்றம், வளநாடு, நாடு, ஊர் என்று நாட்டுப்பிரிவுகள் வகுக்கப்பட்டுள்ளமை தெரியவருகிறது.

**நுண்ணிய அளவை முறைகள்**

“அளந்தபடி நிலம் பதினைஞ்சரையே, காணி அரைக்காணி முந்திரிகைக் கீழ் அரையே மும்மாவரை முந்திரிகைக் கீழ் அரையே இரண்டு மாவிலும்”
“ஊரிருக்கையும் இவ்வூர்க் களமும் கம்மாளச்சேரியும் இவ்வூர்ப் பறைச் சேரியும் இவ்வூர் அகையாறும் ஆக இறையிலி நீங்குந் நிலம் முக்காலே நான்கு மா நீக்கி” (கல்வெட்டியல்-தொல்லெழுத்தியலும், கல்வெட்டியலும்- ப.100)

என்றும் மிகவும் நுண்ணிய நில அளவை முறைகள் இராஜராஜன் ஆட்சிக்கு வந்த பிறகு குறிக்கப்பட்ட செய்தி அறியப்படுகிறது.

**தற்கால கண்டுபிடிப்புகள்**

வேலூர் தொரப்பாடியில் பெருங்கற்கால ‘கற்கிடை’ கண்டுபிடிப்பு.

**கற்கிடை**

இறந்தவர்களை புதைத்து அவர்களின் நினைவாக அதற்குமேல் இந்த கற்களை அடுக்கி வைப்பார்கள். நான்கு புறமும் கற்கள் அடுக்கி, அதன்மேல் பெரிய ஒற்றைக்கல்லை வைப்பார்கள். எகிப்தியர்கள் அரசர்களுக்கு பிரமிடுகள் கட்டியது போன்று இங்கு இறந்த ஒரு சாதாரண நபரின் நினைவாக அக்கால மக்கள் இதனை கட்டியிருக்கலாம் என வரலாற்று ஆர்வலர் தமிழ்வாணன் தினத்தந்தி செய்தித்தாளுக்கு (தினத்தந்தி 17.03.2019 ப.9) அளித்த விவரத்தில் அறியமுறப்படுகிறது.

இங்ஙனமே திருவண்ணாமலை மாவட்டத்தில் ஜவ்வாது மலையில் காணப்படுகிறது. கற்கால மக்கள் வேலப்பாடி பகவதி மலையில் வாழ்ந்ததற்கான ஆதாரங்கள் காணப்படுகிறது என்பதும் ஆய்வில் பெறப்பட்ட செய்திகளாகும்.

இத்தகைய தொல்லியல் கண்டுபிடிப்புகள் வாயிலாக பண்டைய மக்களின் வாழ்வியலை அறிவதோடு சமுதாய மரபுகளை இனங்காணவும் இயலுகிறது. மக்களின்

E-ISSN: 2581-7140
Special Issue: Vol. 2, April-2019 Available at: www.ijtlls.com

தொன்மக்கூறுகளை ஆய்வதன்வழி, புதிய ஆய்வுப் பதிவுகளுக்கு வழிவகை செய்ய அடிப்படை ஆதாரங்களை அறியச்செய்யும் தன்மைத்தாக இலங்குகிறது.

**தொகுப்புரை**

பாண்டியர் காலக் கல்வெட்டுக்களில் வரிகள் விதிக்கப்பட்ட செய்தி அறியப்படுகிறது. இதனுள் வெஞ்சனம் என்ற சொல் சுட்டப்பட்டுள்ளது. இதற்கு 'கல்வெட்டுச் சொல்லகராதி' (தி.நா.சுப்பிரமணியன், ப.106) 'கறிக்கு உதவும் பண்டம்' எனப் பொருள் உரைத்துள்ளமை குறிப்பிடத்தக்கது. உணவுப் பொருள்களுக்கு வரி விதிக்கப்பட்ட அக்கால நிலையை அறியும் தன்மை புலனாகிறது. கல்வெட்டில் விஞ்சனம் என்றே சுந்தரபாண்டியனின் பத்தாவது ஆட்சியாண்டில் கோயில் கல்வெட்டில் இடம் பெற்றுள்ளமை கருதத்தகும். பட்டடை, தறி இறை, தட்டார் பாட்டம், செனைக்கடை, வேட்டைக்காரர் கடை, குளவடை, மீன்பாட்டம், செக்காயம், வண்ணார் கற்காசு, உப்புவழிச்சாரிகை முதலான வரிகளின் பெயர்கள் நுட்பத்தைக் காட்டுவதாகவே அமைந்துள்ளன.

நிலப் பெயர்களான சேறு, விளாகம், பனங்கரை, ஆராஅமுது, ஓடை சுட்டப்பட்டுள்ளமை அறியத் தக்கது. நில அளவைப் பெயர்களாக குழி, மா, வேலி என்பனவாகும். அளத்தல் முறைகளில் காணி, அரைக்காணி, முந்திரிகை, மா என நிலஅளவை முறைகளில் துல்லியமானத் தன்மை காணப்பட்டுள்ளமை கல்வெட்டுகளில் புலனாகின்றது. சோழர்காலக் கல்வெட்டுக்களின் வாயிலாக நாட்டுப்பிரிவுகளாக மண்டலம், கூற்றம், வளநாடு, ஊர் என சுட்டியுள்ளமை அறியத் தக்கது.

நிலவிற்பனையின் போது நான்கு எல்லைகள் சுட்டியுள்ளமை பெறப்படுகிறது. இத்தகு தொன்மக்கூறுகளின் சிறப்புக்களை கல்வெட்டுக்களின் வாயிலாக அறிய இடமேற்படுகிறது. தொல்லியல்துறையின் அகழ்வாய்வுகள் தொடர்ந்து நடைபெறின் பண்பாட்டு நுகர்வுகளைப் பதிவு செய்யும் பேருதவி புரிந்திடின் வருங்காலத்திற்கு நன்மை பயக்கும் வாய்ப்பு ஏற்படும் என்பதில் ஐயமில்லை. இத்தகு மாநாடுகள் பேர் ஊக்கத்தை துரிதப்படுத்தும் என்றால் அது மிகையாகாது. தொன்மங்களின் கூறுகளை ஆராய்ந்து பயன்பெறுவோம்.

**துணைநூற்பட்டியல்**

1. நன்னிலம் கல்வெட்டுக்கள் - முதல் தொகுதி –தொகுப்பாளர் திருமதி ஆ.பத்மாவதி, தமிழ்நாடு அரசு தொல்பொருள் ஆய்வுத்துறை, சென்னை. முதற்பதிப்பு 1979.
2. நன்னிலம் கல்வெட்டுக்கள் - மூன்றாம் தொகுதி –தொகுப்பாளர் திருமதி ஆ.பத்மாவதி, தமிழ்நாடு அரசு தொல்பொருள் ஆய்வுத்துறை, சென்னை. முதற்பதிப்பு 1980.
3. கல்வெட்டியல் (தொல்லியலும்,கல்வெட்டியலும்) – தொகுப்பாசியர் இரா.நாகராமி (தொல்பொருள் ஆய்வுத்துறை இயக்குநர்), தமிழ்நாடு அரசு தொல்பொருள் ஆய்வுத்துறை வெளியீடு, சென்னை.
4. கல்வெட்டுச் சொல்லகராதி – தி.நா.சுப்பிரமணியன், தமிழ்நாடு அரசு தொல்லியல்துறை, சென்னை-600008, முதற்பதிப்பு 2011.
5. கல்வெட்டு – காலாண்டிதழ் - 84 - தமிழ்நாடு அரசு தொல்பொருள் ஆய்வுத்துறை, ஜனவரி 2011.
6. தினத்தந்தி செய்தித்தாள், 17.03.2019, ப.9.

தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்
International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Special Issue: Vol. 2, April-2019 Available at: www.ijtlls.com


# பண்டைய கந்தரோடையின் இன்றைய சுவடுகள்
# Remnants of the Ancient Kandharodai

**கோ. ரகுவரன்,** விரிவுரையாளர்,
சுவாமி விபுலானந்த அழகியற்கற்கைகள் நிறுவகம், கிழக்குப் பல்கலைக் கழகம், இலங்கை.

## Abstract

*The article details about the ancient place Kandharodai which acted as a capital of the northern Tamil territory of Ilankai. The facts related to the name of the place is explained rationally. It was also a famous business centre on those days. Valukai River and the evidences of agriculture before 2500 years back at Jaffna are detailed with possible evidences. Temples are the very important relic to consider and Seeri Meenakshi Amman, Kannaki Amman, Vatrakkai Amman temples are very famous and age old classic temples. The well before the Vatrrakai Amman is a very old one in the place. Hence, the study make lucid the combined minutiae from the disclosure found on reliable sources.*

**Keywords:** Remnants, Ancient, Kandharodai, Jaffna, Ilankai

இலங்கையின் திருநாட்டின் மிகப் புராதன ஊர்களில் ஒன்றாக கந்தரோடை, அனுராதபுரம் போன்று வடபகுதியின் முக்கிய தலைநகராகக் காணப்பட்டுள்ளது. கிறிஸ்துவுக்கு முற்பட்ட காலத்திலிருந்தே இது பெருமைக்குரிய இடமாக விளங்கியுள்ளது. "கி.மு இரண்டாம் நூற்றாண்டிலிருந்து யாழ்ப்பாணப் பகுதியில் மக்கள் குடியேற்றம் இருந்தது என்பதைத் தொல்பொருட் சான்றுகள் திட்டவட்டமாக நிறுவுகின்றன. கந்தரோடைப் பிரதேசத்தில் குடியேறியிருந்த மக்கள் பண்பாட்டில் முன்னேற்றம் அடைந்தவர்களாக கிறிஸ்துக்கு முற்பட்ட நூற்றாண்டுகளிலிருந்து பிறநாடுகளுடன் தொடர்பு கொண்டு உலோகத்தின் உபயோகத்தையும் அறிந்துவாழ்ந்தனர்." என்று எடுத்துக் கூறியுள்ளார். கா.இந்திரபாலாஅவர்கள் (2006 : 105)

கந்தரோடை எனும் சொல்லுக்குப் பல்வேறு பொருள்கள் கூறப்படுகின்றன. அந்த வகையில் கந்து எனும் சொல் கட்டுதற்குரிய கட்டுத்தறியைக் குறிக்கக்கூடியது. விலங்குகளைக் கட்டுத்தறியில் கட்டி வைத்தலைப் போன்று கந்தழியாக பற்றற்று ஓடும் ஓடை நீரினை இடையிடையே குளங்கள் பலவெட்டிக் கட்டி வைத்த நீரோடை (கந்துஓடை) கந்தரோடை எனவாயிற்று. இது வேறுஒருபொருளில் கந்தனுக்கு கொடையாக வழங்கப்பட்ட நிலம் என்பதால் கந்தகொடை எனப்பட்டு கந்தரோடை ஆனது என்றும் கூறுவர்..

உற்பத்திசார் நாகரிக உச்சமும், தொழில்முறை நாகரிகங்களும் நீர்வளப் பகுதிகளிலேயே அமையும் என்பது முன்பே அறிந்ததே. அவ்வகையில் கந்தரோடை யாழ்ப்பாணக் குடாநாட்டின் நீர்வளமான பகுதியில் அமைந்த தொல்நாகரிகமையமாகும். நொய்யல், பவானி, அமராவதி என்பனவாக ஆறுகளின் பெயரே ஊருக்கும் பெயராயிற்று. அவ்வாறானது பாண்டிய மன்னன் பெருவழுதியால் நீர்ப்பாசன கட்டுமானத்திற்கும் சீரமைப்புக்கும் உட்பட்டபோது வழுதியாறு என்னும் அரசியல் ஆட்சிமைப் பெயரைப் பெற்று

E-ISSN: 2581-7140
Special Issue: Vol. 2, April-2019 Available at: www.ijtlls.com

காலவோட்டத்தில் மருவிவழுக்கையாறு எனவழங்கலாயிற்று. ஆனால் கந்தரோடை என்னும் இவ்வாற்றின் பண்டைய பெயர் வழக்கு ஊர்ப்பெயராக இன்றளவும் வழங்குகின்றது. இதனைச் சொல்லாய்வு வழிகளிலும் இங்கு கிடைக்கும் பெருவழுதி நாணயங்கள் முதலான சான்றுகளின் வழியாகவும் அறியலாம். (வைத்தீசுவரக் குருக்கள் நூற்றாண்டு மலர்,பக்கம் - 222)

கந்தரோடை வரலாற்றுக் காலத்துக்கு முற்பட்ட வாணிப மற்றும் தொழில் நகரமாக விளங்கியது என்பதனைப் பல்வேறு சான்றுகளின் வழி அறியலாம். எம் ஊரைச் சுற்றிவழங்கும் ஊர்ப் பெயர்கள் யாவும் இதன் வணிக தொழில் வளத்தினை உணர்த்துவதாக அமைகின்றன. மாசியப்பிட்டி மாணிக்கற்களைப் பட்டைத் தீட்டிய இடமாகவும் சங்கிலிப்பாய் என்ற சொல்லிருந்து சண்டிலிப்பாய் அதாவது சங்கிலி போன்ற அணிகலன்களை வடிவமைக்கும் மையமாகவும், அளவெட்டி என்பது நாணயங்களும், அளவைகளும் உற்பத்தி செய்யும் மையமாகவும் அமைந்தமையினைப் பெயர் வழங்குகளின் வழி அறியலாம்.

கந்தரோடைக்குள் காணப்படும் சில முக்கியமான புரதான இடங்கள் இன்றும் சிறப்பாகவுள்ளன. அந்த வகையில் யாழ் குடாநாட்டில் ஓடும் ஒரேயொரு ஆறாக வழுக்கையாறு காணப்படுகின்றது. இவ்வழுக்கையாறு வசாவிளானில் ஆரம்பித்து கந்தரோடையூடாக அராலிக் கடலைச் சென்றடைகின்றது. இது அராலியில் குடாக்கடலுடன் கலக்கும் இடத்திற்குச் சிறிது தொலைவிலேயே நாவாந்துறை உள்ளது. நாவாய்கள், கப்பல்கள் வந்து நிற்கும் இடம் என்பதாலேயே இவ்விடம் நாவாந்துறை என்று அழைக்கப்படுகிறது.

எனவே இவ்விடத்தில் பிறநாடுகளிலிருந்து வரும் நாவாய்கள் தரித்து நிற்றல் வேண்டும். இங்கிருந்து வழுக்கையாற்றின் வழியாக சங்கடம் என்னும் சிறுதோணிகள் அல்லது வத்தைகள் மூலம் கந்தரோடை நகருக்குப் பொருட்கள் கொண்டு செல்லப்பட்டிருத்தல் வேண்டும் என்று கருதப்படுகிறது. அத்துடன் கந்தரோடையிலுள்ள இடப்பெயர்களும் வழுக்கையாற்றின் அமைப்பும் கந்தரோடையுடனான கடல் வழிப் போக்குவரத்தை உறுதி செய்யும் விதத்தில் அமைந்துள்ளன. "வழுக்கையாறே சிலகாலங்களின் கந்தரோடை கடலோடு கொண்டிருந்த தொடர்பில் முக்கிய பங்கேற்றிருக்கலாமென கொள்ளப்படுகிறது." என்று பேராசிரியர் சிற்றம்பலம் அவர்கள் கூறியுள்ளமையும் இங்கு கவனத்திற் கொள்ளத்தக்கது. (1993: 11)

வரலாற்று முக்கியத்துவம் வாய்ந்த பல தொல்லியற் கருவுலங்களைத் தன்னகத்தே கொண்டதும் கந்தரோடையின் இருதய ஸ்தானமாகவும் விளங்குவது கயற்கண்ணி. இது கயற்கணை, கயற்கேணி, கயக்கேணி என்ற பெயர்களாலும் அழைக்கப்படுகின்றது. கயற்கண்ணி என்பது கயல் என்றால் மீன். அக்ஷி என்றால் கண். கயற்கண்ணி, மீன்கண்ணி, மீனாக்ஷி என்பன ஒரே பொருளுடையன. கயற்கண்ணியான மீனாக்ஷி ஆட்சிபுரிந்த இடம் மதுரை. மதுரை மீனாக்ஷியே பாண்டியரின் குலதெய்வம். அந்தவகையில் கயற்கண்ணி என்ற பெயருக்கும் பாண்டியர்களுக்கு இடையில் தொடர்பு இருத்தல் சாத்தியமானதே. இலங்கையின் முதற் சிங்கள அரசனான விஜயன் காலத்திலிருந்தே சிங்களவருக்கும் பாண்டியர்களுக்குமிடையில் தொடர்பு இருந்துவந்துள்ளது. சிலசமயங்களில் பாண்டியர்கள் இலங்கைமீதுபடையெடுத்தும் வந்துள்ளனர். (காலத்தை வென்றுநிற்கும் கந்தரோடைப் பக்கங்கள் 32-33)

இக்கயற்கேணி காணப்படும் பகுதியிலேயே இன்றும் சில இறந்தோரை அடக்கம் செய்துகட்டப்படும் தூபிகள் சிதைவடைந்த நிலையிலுள்ளன. இதனைக் கொண்டே பௌத்தர்கள் கந்தரோடை சிங்கள ஆட்சிக்குட்பட்டது என்று கூறுகின்றனர். ஆனால்

E-ISSN: 2581-7140
Special Issue: Vol. 2, April-2019 Available at: www.ijtlls.com

இவற்றின் பண்டைய வரலாறை ஆய்வு செய்யவேண்டியது முக்கியமான ஓர் அம்சம் ஆகும். பௌத்த சமயத்தில் பொதுவாக இரு பிரிவுகள் உள்ளன. அவைமகாயானம், தேராயனவாதம். இதில் மகாயான தமிழ்ப் பௌத்தம் இப்பகுதியில் காணப்பட்டது. ஏன் எனில் இறந்தோரை அடக்கம் செய்து அதன் மேல் தூபிகள் வைத்துக் கட்டுவது இவர்களின் வழக்கமே. தேராயனவாத பௌத்தம் இறந்தோர் உடல்களை எரித்து எலும்பையும் சாம்பலையும் கடலில் கலக்கவிடும் போக்குடையது. இதுவே பிற்கால சோழர்கால சைவத்திலும் பள்ளிப்படைக் கோவிலாக வடிவு கொண்டது. ஆவை தமிழர்களின் பண்டைய நடுகல் வழிபாட்டின் தொன்மை நீட்சியாகும்.

கந்தரோடையில் பல ஆலயங்கள் காணப்படுகின்றன. அவற்றில் மிகப் பழமையானது. அங்கணம்மைக் கடவை சிறீமீனாட்சிஅம்மன், கண்ணகிஅம்மன் ஆகியவைகள் ஆகும். முன்பு கந்தரோடை வாணிபக் கடவாக (சுங்கச்சாவடி) இருந்தமையால் அங்கண்ணம்மை கடவு என்பதே அங்கணம்மைக் கடவை என மருவியது. இக்கோயில்களில் கண்ணகி அம்மன் கோயிலே மிகப் புராதனமானதும் சிறப்பானதும் ஆகும். இக்கண்ணகியே இலங்கையில் கண்ணகி வழிபாடு பரவுவதற்கு அடிப்படையாக அமைந்தது. கயவாகு மன்னனுக்கும் இக்கோயிலுக்கும் இடையில் பல தொடர்புகள் காணப்படுகின்றன. இவனால் அமைக்கப்பட்ட பூவல் எனும் குளம் இன்றும் காணப்படுகின்றது.

கந்தரோடை வற்றாக்கை அம்மன் ஆலயத்திற்கு முன்பாகவுள்ள கேணி மிகப் பழமையானது. இக்கேணி என்றும் வற்றா தன்மை கொண்டது. எனவே இக்கோயிலுக்கு வற்றாக்கை எனும் பெயர் தோன்றியதாகக் கருதப்படுகிறது. இக்கேணிக்கு அருகில் ஆவுரஞ்சிக்கல், சுமைதாங்கி என்பன இன்றும் தொன்மையான சுவடுகளாக் காணப்படுகின்றன. ஆவுரஞ்சிக்கல் என்பது கால்நடைகள் நீர் பருகிய பின்னர் தமது உடலைத் தேய்த்து அதிலுள்ள சிறு புழு, பூச்சிகளை அகற்றிக் கொள்வதற்கு வசதியாக சொரசொரப்புடன் கூடிய உயரமானகல் ஒன்றை நாட்டி வைத்தலாகும். அடுத்து சுமைதாங்கியானது சாதாரண மக்கள் தலையில் சுமந்து வந்த பொருட்களை இதில் இறக்கி வைத்து ஓய்வெடுப்பதற்காகக் கட்டப்படுபவை ஆகும். இவ்விரண்டும் இன்று தொல்லியல் திணைக்கழத்தினால் பாதுகாக்கப்பட்டு வருகின்றது.

மேலும் யாழ்ப்பாணத்தில் 2500 ஆண்டுகளுக்கு முன்னரே விவசாயமும், கால்நடைகளும் வளர்க்கப்பட்டு வந்தமைக்கான ஆதாரங்கள் கந்தரோடை, ஆணைக்கோட்டை ஆகிய இடங்களில் மேற்கொள்ளப்பட்ட தொல்லியல் ஆய்வுகளின் போது கிடைத்துள்ளன. இவற்றைமேலும் உறுதிப்படுத்துவதாக இன்றும் கந்தரோடையில் பரந்து விரிந்து காணப்படும் விவசாய நிலங்களைக் கொண்டு நோக்கலாம்.

இத்தகைய பொருளாதார வர்த்தக, விவசாயத் தலைநகராகக் காணப்பட்ட கந்தரோடை இன்று கல்வியில் முக்கியத்துவமுடைய ஓர் இடமாக மாறி வருகின்றது. இதற்கு அடிப்படையாக இங்கு காணப்படும் இரு பாடசாலைகளின் கல்வியின் முன்னேற்றமே காரணமாகும். இவ்விரு பாடசாலைகளும் நூற்றாண்டு கடந்து இன்றும் சிறப்பாக இயங்கி வருவதுடன் இப் பாடசாலையின் வரலாறு கந்தரோடையின் வரலாறுடன் பின்னிப் பிணைந்துள்ளது.

இவ்வாறு கந்தரோடையானது அன்று தொடக்கம் இன்று வரை இலங்கையின் முக்கியத்துவம் வாய்ந்த இடங்களில் ஒன்றாக இருந்து வருவதுடன், பண்டைய கந்தரோடையின் இன்றைய சுவடுகளைத் தன்னகத்தே கொண்டதாக சிறப்புடன் இது விளங்குகிறது எனலாம்.



International Journal of Tamil Language and Literary Studies
*A Bi-Yearly Peer-Reviewed International Journal*
E-ISSN: 2581-7140
Special Issue: Vol. 2, April-2019 Available at: www.ijtlls.com



**ஆய்வுக்கு பயன்பட்ட நூல்கள்**

1. தர்மராஜ். ஜே., எபிஜேம்ஸ். த., **தொல்லியல்,** டென்சி பதிப்பகம், சிவகாசி, 2010, ப. 55.
2. அன்தோன்வா. அ.கொ., போன்காரத் - லேவின், கத்தோவ்ஸ்கி .கி.கி., **இந்தியாவின் வரலாறு,** முன்னேற்றப் பதிப்பகம், மாஸ்கோ, 1979, ப. 12.
3. தர்மராஜ்.ஜே., **தமிழக வரலாறு,** டென்சி பதிப்பகம், சிவகாசி, 2012, ப. 8.
4. **கல்வெட்டு**, ப. 14.
5. Burton Stein (ed.), **Essays on South India,** Vikas Publishing House Pvt. Ltd., Delhi, 1975, P. 3.
6. தர்மராஜ் .ஜே., எபிஜெம்ஸ் .த., **தொல்லியல்,** ப. 244.
7. Venkatraman .R., **Indian Archaeology**, P. 22.

E-ISSN: 2581-7140
Special Issue: Vol. 2, April-2019 Available at: www.ijtlls.com

# சிந்துசமவெளி எழுத்துக்கள்
# The Scripts of Indus Valley Civilization

**ரா.ரஜுலா,** உதவிப்பேராசிரியர், தமிழாய்வுத்துறை,
ஜமால் முகம்மது கல்லூரி, திருச்சி-20

## Abstract

*The paper elicits about* the scripts of Indus Valley Civilization**.** It *becomes important to know about the culture and the civilization existed lang back there. Hence, the study paves way to understand the region that kannagi lives before ages back and these evidences may help to understand the cultural origins of the ancient Tamil people.*

**Keywords:** Scripts, Indus Valley Civilization, Tirunelveli, Tamils

**முன்னுரை**

சிந்துவெளியில் கிடைத்த முத்திரைகளில் பொறிக்கப்பட்டுள்ள 'சித்திரக் குறிகளே சிந்துமக்கள் பயன்படுத்திய எழுத்துகள் என்பது ஆராய்ச்சியாளர் கருத்து. அவ்வெழுத்துகளை வகைபடுத்தி 'சிந்து வெளியின் பண்டை எழுத்துக் குறிகளின் பட்டியல்' என்றும், 'பண்டை இந்திய எழுத்துகளின் அமைப்பு முறை' என்றும், 'சிந்து வெளி எழுத்துகள்' என்றும் அறிஞர்கள், தாம் அறிந்தவற்றை வெளிப்படுத்தியுள்ளனர். அவர்கட்குப் பிறகு டாக்டர் ஹன்ட்டர் என்னும் பேரறிஞர் சிந்துவெளி எழுத்துக்களைப் பற்றி விரிவாக ஆராய்ந்து, அழகிய நூல் ஒன்றை 1934இல் வெளிப்படுத்தியுள்ளார்.' இவ்ஆய்வினை அடிப்படையாக வைத்து சிந்துசமவெளி எழுத்துகளைப் பற்றி இக்கட்டுரை தெளிவுப்படுத்துகிறது.

**எழுதப்படும் பொருட்கள்**

ஸ்டெடைட் (Steatite) என்னும் ஒருவகைக் கல்மீது சுண்ணம் தடவிச் சுட்டு, அதன்மீது எழுத்துகளும் விலங்கு முதலிய உருவங்களும் பொறிக்கப்பெற்றுள்ளன. இக்கற்களாலே பொருள்கள் சதுரமாகவும் நீளச் சதுரமாகவும் நீண்டு உருண்ட வடிவமாகவும் அமைந்துள்ளன. சில முச்சதுரமாக அமைந்துள்ளன. கயிற்றைக் கோர்த்துக் கழுத்தில் கட்டிக் கொள்வது போல அமைந்துள்ளன. செம்பாலான நீள் சதுரத் தகடுகள் பல கிடைத்துள்ளன. அவற்றில் விலங்கு உருவம் பொறிக்கப்பட்டுள்ளது. எழுத்துகள் மேலும் கீழாகப் பொறிக்கப்பட்டுள்ளன. அவை அரசரின் பெயர்களாக இருத்தல் கூடும். இரண்டொரு நீள் சதுரக் களிமண் தட்டுகள் மீது சில எழுத்துகள் காணப்படுகின்றன.

**எழுதும் முறை**

சிந்துவெளி மக்கள் இங்குக் கிடைத்த முத்திரைகள், நாணயங்கள் முதலியவற்றின் மீது எழுதியதோடு அல்லாமல் அழியும் பல்வேறு பொருள்கள் மீதும் எழுதி வந்தனர். அவர்கள் தோல், பாபிரஸ், பட்டு இவற்றில் ஒன்றையோ இரண்டையோ பயன்படுத்தி இருக்கலாம். எழுத்துகள் மேலிருந்து கீழ்நோக்கி எழுதப்பட்டுள்ளன. நேராக அமைந்துள்ளன. இந்த எழுத்துக்கள் அகரவரிசை உடையன அல்ல. சித்திர எழத்துகள் பல. ஒலிக்குறிப்பு உடையன பல. இவ்வெழுத்துகள் வலம்-இடமாக வாசிக்கப்படுபவை. சில இடங்களில் இடம் -

E-ISSN: 2581-7140
Special Issue: Vol. 2, April-2019 Available at: www.ijtlls.com

வலமாக வாசிக்கத் தக்கபடி அமைந்துள்ளன. இவை பல்வேறு காலத்து வளர்ச்சியுடையனவாகக் காணப்படுகின்றன.

**பிராமி எழுத்துகள்**

அசோகன் சாசனங்களில் காணப்படும் பிராமி எழுத்துகள் கி.மு.மூன்றாம் நூற்றாண்டைச் சேர்ந்தவை. 'அவை இழந்துவிட்ட இந்தியா எழுத்துக் குறிகளிலிருந்து தோன்றியிருத்தல் வேண்டும்'[6] என்று ஸர் அலெக்ஸாண்டர் கன்னிங்ஹோம் முன்னர் கருதினார். பேராசிரியர் லாங்டனும் அதனை வழிமொழிந்தார். 'சிந்துவெளி எழுத்துக் குறிகளிலிருந்தே பிராமி எழுத்துகள் தோன்றியிருத்தல் வேண்டும்' என்று பல காரணங்களைக் காட்டி மெய்ப்பித்துள்ளார். 'சிந்துவெளி நாகரிகம் கி.மு.2500க்கு முற்பட்டது. பிராமி எழுத்துகள் கி.மு.300க்குச் சரியான காலத்தவை.

**எழுத்துக்கள்**

சிந்துவெளி எழுத்துகளைச் சோதிக்கையில் தெளிவான வேறுபட்ட 234 எழுத்துக் குறிகள் காணப்படுகின்றன. பிராமியில் அ,ஆ,இ,ஈ,உ,ஊ,ஏ,ஒ என்னும் எட்டு உயிர் எழுத்துகளும் 33 மெய்எழுத்துகளும் காணப்படுகின்றன. இவற்றால் உண்டான உயிர்மெய் எழுத்துகள் (33X8=264)ஆகும். இவற்றில் 50 எழுத்துகளுக்கு உரிய குறிகள் சிந்துவெளி எழுத்துகளில் தெளிவாகக் காணப்படுகின்றன. ஆசிய-ஆஸ்ட்ரேலிய (முண்டா) மொழிகளின் குறியீடுகள் சில சிந்துவெளி எழுத்துகளில் காணப்படுகின்றன. அவற்றின் குறியீடுகள் சில பிராஹுயிமொழி எழுத்துகளிலும் காணப்படுகின்றன. இந்தியாவில் முண்டா மொழிகளே திராவிடத்துக்கு முற்பட்டவை. ஆதலால் அவை திராவிடத்திலும் ஓரளவு கலந்திருக்கலாம்.

சிந்துவெளி மக்கள் மொழி ஓரசையுடைய (monosyllabic) சொற்களையே பெரிதும் கொண்டதாகும். அம்மொழி சமஸ்கிருதமன்று. செமைட்டிய மொழியும் அன்று என்பது உண்மை.

சிந்துவெளி எழுத்துகளாகக் கருதப்படுபவை மீன், கட்டங்கள், நாய், கோழி, வாத்து, வண்டு, மனித உருவம், வேறுபல வளைவுகள் முதலியன. இவை சித்திர எழுத்துகள் ஆகும். சில கட்டங்களுள் 2 முதல் 21 கட்டங்கள் வரையில் இருக்கின்றன. இவை அனைத்தும் தனிப்பட்ட பகுதிகளாகவும் சொற்களாகவும் இணைப்புண்ட சொற்களாகவும் இருத்தல் கூடும் என்று அறிஞர் கருதுகின்றனர். இந்த உரு எழுத்துகள் ஒலி எழுத்துகளாக மாறுவதற்கு நீண்ட காலம் ஆகியிருத்தல் வேண்டும்.

'இந்த எழுத்துக் குறிகளைச் சோதித்தால், பல பொருள்களைக் குறிக்க ஒரே சித்திரம் பயன்படுத்தப்பட்டதை உணரலாம். உதாரணமாக, 'வெளிச்சம் விளக்கு, சூரியன், ஒளி, சுடர்' என்னும் பலவற்றைக் குறிக்க ஏறக்குறைய ஒரே அடையாளம் காணப்படுகிறது. ஆரியர் கி.மு.1200க்கு முன் இந்தியாவில் புகவில்லை. அவர்களுக்கு முன் சிந்துவெளியில் இருந்தவர் திராவிடர்கள். பலுசிஸ்தானில் உள்ள ப்ராஹுயி மொழியில் பெரும்பாலும் திராவிடக் கலப்பு இருத்தலும், ப்ராஹுயி மக்கள் மண்டை ஓடுகளை ஒத்தவை மொஹெஞ்சொதரோவில் கிடைத்திருந்தாலும், சிந்துவெளி மொழி ப்ராஹுயியை போல ஓரசைச் சொல் உடையதாக இருத்தலை நோக்கத் திராவிடம் வடஇந்தியாவில் ஆரியர் வருகைக்கு முன் இருந்தது எனலாம். திராவிடரே தங்கள் கலைகளையும் பிறவற்றையும் ஆரியரிடம் ஒப்படைத்திருக்க வேண்டும்.'

'சிந்துவெளி எழுத்துக் குறிகள் பழைய திராவிட மூல எழுத்துக் குறிகளிலிருந்து பிறந்திருக்க வேண்டும். இத்தகைய எழுத்துகள் லிபியாவிலும் கிடைத்துள்ளன. பழைய லிபிய எழுத்துகளிலிருந்து ஐபீரியன், எட்ரஸ்கள், லிபியன், மினோவன், பழைய எகிப்திய எழுத்துகள்

E-ISSN: 2581-7140
Special Issue: Vol. 2, April-2019 Available at: www.ijtlls.com

முதலியன தோற்றமெடுத்தன. சிந்துவெளி எழுத்துகளிலிருந்து பிறந்தவை: 1.சுமேரியர் எழுத்துக்குறிகள். இவற்றிலிருந்து பிறந்தவை பாபிலோனிய எழுத்துக்களும் பிற்கால அசிரிய எழுத்துகளும் ஆகும். 2.பழைய ஏலத்து எழுத்துகள். இவை இன்றளவும் வாசிக்ககூடவில்லை. 3.பழைய சீன எழுத்துகள் 4. தென் அரேபியாவில் உள்ள 'சபியன்' எழுத்துகள்.

'வட பிராமி எழுத்துகளும் தென் பிராமி எழுத்துகளும் சிந்துவெளி எழுத்துகளிலிருந்து வளர்ச்சி பெற்றவையே. தென் பிராமி எழுத்துகள் சிந்துவெளி எழுத்துகளிலிருந்து திராவிடரால் வளர்க்கப்பட்ட நேரான வளர்ச்சியுடைய எழுத்துகள். அவற்றின் ஒருமைப்பாட்டைத் திருநெல்வேலியில் கிடைத்த மட்பாண்டங்கள் மீதுள்ள எழுத்துக் குறிகளையும், நீலகிரியில் உள்ள கல்வெட்டுகளையும், ஹைதராபாத் சமாதிகளில் கிடைத்த எழுத்துக் குறிகளையும் கொண்டு நன்குணரலாம். வடபிராமி எழுத்துகள் சிந்துவெளி எழுத்துக் குறிகளிலிருந்து நேரான வளர்ச்சி பெற்றவை அல்ல. அவை எழுதத் தெரியாமல் இந்தியாவை அடைந்த ஆரியரால் ஏற்று வளர்க்கப்பட்டவை. அவர் தம் வடமொழிக்கேற்ப நாளடைவில் மாற்றப்பெற்றவை. அசோகனுடைய பிராமி எழுத்துகள் ஆரியரால் வளர்க்கப்பெற்ற சிந்துவெளி எழுத்துகளின் பிற்காலத் தோற்றம் ஆகும். இக்காரணத்தால் தான் வட பிராமி எழுத்துகள், தென் பிராமி எழுத்துகளினின்றும் வேறுபட்டுக் காணப்படுகின்றன. அவை சிந்துவெளி எழுத்துகளினின்றும் மாறுபட்டுக் காணப்படுகின்றன.

'சிந்துவெளி எழுத்துகளைக் கொண்ட மொழி பழைய திராவிடமாகும். அத்திராவிடத்தின் பெரும்பாலான சொற்கள் தமிழிலேயே காணப்படுகின்றன. ஆயினும் சில சொற்கள் கன்னடம், துளுவம் முதலிய பிற திராவிட மொழிகளில் காணப்படுகின்றன. ப்ராஹுயி மொழியில் உள்ள திராவிடச் சொற்களும் சிந்து, பலுசி, பாரசீக மொழிகளால் தம் உண்மையான உச்சரிப்பை இழந்துள்ளன. எனவே, சிந்துவெளித் திராவிடமொழி இன்று பேசப்படுகின்ற திராவிட மொழிகளைப் போன்றதன்று. இவற்றின் தாய்மொழி என்பது பொருந்தும். அது பழைய கன்னடத்தையும் சங்கத் தமிழையும் ஒருவாறு ஒத்ததாகும். ஒரு முத்திரையில் 'மூனுதயது' என்னும் சொற்றொடர் காணப்படுகிறது. அதன் பொருள் மூன்று கம்பளி போர்த்துக் கொள்ளத்தக்க குளிரையுடைய காலம் என்பதாகும். இவ்வழக்கு இன்றும் கன்னட நாட்டுக் கௌடரிடம் இருந்து வருகின்றது கவனிக்கத்தக்கது. பேராள், எண்ணாள், மூக்கண் என்பன சிவனைக் குறிப்பன.

இதுகாறும் கூறியவற்றால் சிந்து வெளி மக்கள் லிபியாவிலிருந்து வந்தவர்கள். அவர்கள் நெடுங்காலத்திற்கு முன்பே இந்தியாவை அடைந்து ஆஸ்ட்ரேலிய மக்களுடன் கலப்புண்டனர். நம் வெண்மை நிறத்தையும் உருவ அமைப்பையும் இழந்தனர். தங்கள் சித்திர எழுத்துகளை மேன்மையுற வளர்த்து வந்தனர். அவர்தம் எழுத்துகள் உலகப் புகழ்பெற்ற பல எழுத்துகள் பிறப்பதற்கு மூலமாயின. அந்த எழுத்துக் குறிகளைக் கொண்டே வடபிராமி வளர்ந்தது எனவும் அறியப்படுகிறது.

தமிழில் உரு எழுத்து, தன்மை எழுத்து, உணர்வெழுத்து, ஒலி எழுத்து நால்வகை உண்டு. விளக்கமாக நன்னூல் மயிலைநாதர் உரையில் எழுத்தியலில் காணப்படுகின்றன. யாப்பருங்கல விருத்தியின் கடைசிச் சூத்திர உரையிலும் இவ்வகை எழுத்துகளைப் பற்றிய இலக்கணம் விளக்கமாகக் கூறப்பட்டுள்ளது. சிலப்பதிகாரத்தில், காவிரிப்பூம்பட்டினத்துத் துறைமுகத்தில் இறக்குமதியான மூட்டைகட்கும் பண்டம் ஏற்றிய வண்டிகட்கும் 'கண் எழுத்துகள்' இடப்பட்டிருந்தனவாம்.

"வம்ப மாக்கள் தம்பெயர் பொறித்த
கண்ணெழுத்துப் படுத்த எண்ணுப் பல்பொதி

E-ISSN: 2581-7140
Special Issue: Vol. 2, April-2019 Available at: www.ijtlls.com

இருபதி னாணிரம் கண்ணெழுத்துப் படுத்தன
கைபுனை சகடமும்"

இவற்றால் கடைச் சங்க காலத்தில் (கி.மு.300 – கி.பி.200) தமிழ் நாட்டின் கண் எழுத்துகள் வழங்கின' என்பதை அறியலாம். கண்ணெழுத்து – சித்திர எழுத்து, கண்ணுள் வினைஞர்-சித்திரக்காரிகள் என்னும் நச்சினார்க்கினியர் உரை சுவைத்தற்குரியது. 'கரந்தெழுத்து' என்னும் ஒருவகை எழுத்தும் வழக்கில் இருந்தமையை சிந்தாமணி கூறுகிறது. தமிழாசிரியன் ஒருவன் நாட்டில் வழங்கும் இத்தகைய எழுத்து வகைகளை எல்லாம் உணர்த்தல் வேண்டும் என முன்னோர் நியமித்திருந்தனர். பழைய வடிவு முதலிய சங்கேத எழுத்துகள் தமிழ்நாட்டில் பெருவழக்குப் பெற்றிருந்தன என்றும் அவை யாவும் முன்னோரால் முறையாகக் கற்கவும் கற்பிக்கவும் பெற்றுவந்தன என்று அறிய முடிகிறது.

எழுத்துகள் நெடுங்கணக்கின் நிலையை அடைவதற்கு முந்திய காலங்களில் பெற்றிருந்த உருவங்களைப் பற்றிய குறிப்புகள் தமிழைத் தவிர வேறு இந்திய மொழிகளில் உள்ள இலக்கியங்களில் காணப்படவில்லை. இவற்றால் சித்திரங்களாலும் வேறு குறிகளாலும் மனிதர்கள் ஒரு காலத்தில் எழுதி வந்த பழக்கத்தைத் தமிழ்மக்களும் அறிந்திருந்தார்கள் என்பது நோக்கத்தக்கது. எழுத்து என்னும் சொல் தமிழில் பயிலப்படுவதை நோக்கினாலும் இது வெளிப்படும். 'எழுத்து' என்னும் தமிழ்ச் சொல்லுக்கு அச்ஷரம், லிகிதம், கல்வி, ஓவியம், பதுமை எனப்பல பொருள்கள் உள. பழைய தமிழ் நூல்களில் எழுத்து, எழுதுதல் என்னும் சொற்கள் பல இடங்களில்,

'இன்னபலபல எழுத்து நிலை மண்டபம்' (பரிபாடல்,19)
'தெய்வக் குடவரை எழுதிய பாவை' (குறுந்-89)

என்பன போலச் சித்திரம், பாவை முதலியவற்றை நிருமித்தல் ஆகியவற்றைக் குறிப்பதற்குப் பயிலப்பட்டுள்ளன. இதனால் பழந்தமிழ் மக்கள் சித்திரத்தையும் எழுத்தின் வகையாகவே கொண்டனர் என்று கொள்ளுதல் கூடும்.

**சிந்துசமவெளி எழுத்துகளால் அறியப்படுவன**

1. சிந்து வெளி எழுத்துகள் உச்சரிப்பைக் குறிப்பன
2. ஒலிக்குறிப்பையும் உணர்வுக் குறிப்பையும் அடிப்படையாக் கொண்டவை
3. கி.மு.3000க்கு முற்பட்டது
4. 'ஜெம்டெட் நஸர்' நகரில் காணப்பட்ட பழைய சுமேரியர் எழுத்துக் குறிகளை (கி.மு.3500) மிகவும் ஒத்துள்ளன.
5. சிற்சில எழுத்துக் குறிகள் எகிப்தியக் குறிகளை ஒத்துள்ளன.
6. கிரீட் தீவில் காணப்பட்ட எழுத்துகளும் ஒத்துள்ளன. எனவே, மிகப் பழைய காலத்தில் சித்திர எழுத்துகள் மூலமாகக் கொண்ட ஒரு பொது மொழியிலிருந்தே இவை அனைத்தும் பிரிந்திருக்க வேண்டும்.
7. சபிய எழுத்துகள், சைப்ரஸ் எழுத்துகள், பொனீஷிய எழுத்துகள் ஆகிய மூன்றிலும் உள்ள ஒரு பகுதி எழுத்துகள் இந்த சிந்து வெளி எழுத்திலிருந்தே பிரிந்திருக்க வேண்டும். அப்பண்டைக்காலத்தில் சிந்துவெளி மக்கள் அரபிக்கடல், செங்கடல், மத்திய தரைக்கடல் ஆகிய இம் மூன்றின் வழியாக மேற்குப் புறநாடுகளோடு வாணிபம் செய்து வந்தனர். இதனால் எழுத்துக்குறிகள் கலந்து எழுதப்பட்டுள்ளன.

**E-ISSN: 2581-7140**

**Special Issue: Vol. 2, April-2019** **Available at: www.ijtlls.com**

**முடிவுரை**

சிந்துவெளி எழுத்துகள் ஓரசையைச் சிறப்பாகக் கொண்ட மொழியைச் சேர்ந்தவை, அவற்றிலிருந்தே பிராமி எழுத்துகள் தோன்றி வளர்ச்சி பெற்றன. பிராமி எழுத்துகள் தமிழ் மொழிக்கென்றே அமைக்கப்பட்டுப் பின்னர் வடமொழிக்கும் பயன்படும்படி புதிய குறிகள் உண்டாக்கப்பட்டன, சிந்து வெளி எழுத்துக் குறிகள் திருநெல்வேலி நாணயங்களிலும் கிடைத்துள்ளன, இந்திய மொழிகளில் தமிழ் ஒன்றிலே தான் எழுத்துகள் நெடுங்கணக்கு நிலையை அடைவதற்கு முன்பே உருவங்களின் இலக்கணம் கூறப்பட்டுள்ளது என்னும் சுவை பயக்கும் செய்திகளை அறியலாம். எனவே சிந்துவெளி எழுத்துக் குறிகள், ஹீராஸ் பாதிரியார் கூறுவதுபோல பண்டைத் திராவிட மக்கள் தோற்றுவித்தனவே அவை திராவிட மொழிக்கு அமைந்த பண்டை எழுத்துக் குறிகளே என்று முடிபா கூறுவது பொருந்தும்.

**பார்வை நூல்கள்**

1. (சிந்துவெளி எழுத்துகட்கும் பிராமி எழுத்துகட்கும் இடைப்பட்ட வளர்ச்சி உடையன என்று கருதத் தக்க குறிகளைக் கொண்ட சாஸனம் ஒன்று நடு இந்தியாவில் விக்ரமகோல் என்னும் இடத்திற் கிடைத்துள்ளது – Indian Antiquary Vol.62)
2. சிலப்பதிகாரம், அடி:136
3. எம்.ராகவ ஐயங்கார், இலக்கிய சாசன வழக்குரைகள், கலைமகள், சென்னை.
4. பி.என்.சுப்ரமணிய ஐயர், தொன்மையான தமிழ் கடிதங்கள்,ப.103

தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்

International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Special Issue: Vol. 2, April-2019 Available at: www.ijtlls.com


# புறநானூற்றில் நடுகற்கள்
# The Erection of Stonehenges in *Purananooru*

**முனைவர் பொ.ராணி,** உதவிப் பேராசிரியர், தமிழ்த்துறை,
அவினாசிலிங்கம் மனையியல் மற்றும் மகளிர் உயர்கல்வி நிறுவனம், கோயம்புத்தூர்-43

## Abstract

*The article deals with erection of stonehenges in Tamil culture as revealed by the classical work 'Purananooru' It also has other significances. The culture of the people belong to a category giving much importance to valour. Therefore, the study traces the erection of stonehenges found in the classical work 'Purananooru''tamil society.*

**Keywords:** Formation, Stonehenges, *Purananooru*

பண்டையத் தமிழரின் வாழ்வியல் பதிவுகளை உணர்த்திடும் சான்றுகளுள் நடுகற்கள் பெரும்பங்கு வகிக்கின்றனர். நடுகல் என்பது பண்பாட்டின் அடையாளச் சின்னமாகும். தமிழர்களின் வீரவுணர்வையும், அறக்கோட்பாட்டையும் விளக்குவதாக அமைந்து நீண்ட வரலாற்றுப் பின்புலத்தினைப் பறைசாற்றுகின்றன. அத்தகைய நடுகற்கள் பற்றிய குறிப்பினை புறநானூற்றுப் பாடல்களின் வழி எடுத்துக்காட்டுவதாக இக்கட்டுரை அமைகின்றது. புறநானூற்றில் பன்னிரண்டு பாடல்களில் (221, 232, 235, 260, 261, 263, 264, 265, 306, 314, 329, 335) நடுகல் தொடர்பான செய்திகள் இடம்பெறுகின்றன. ஆநிரைப் போரில் இறந்த வீரனுக்கு நடுகல் எழுப்பி, கல்லுக்கு வேங்கை மலர்களை பனை நாரினால் கட்டி மாலையாக்கி வழிபட்டனர் என்பதை,

"ஓங்கு நிலை வேங்கை ஒள்ளினர் நறுவீப்
போந்தைய தோட்டினர் படலைக் சூட்டக்
கல்லாயினையே கடுமான் தோன்றல்" (புறம் - 265)

என்ற பாடலடிகளின் வழி அறியமுடிகின்றது. போர்க்களத்தில் இறந்த வீரனின் பெயரையும், செயலையும் அக்கல்லில் பொறித்து அக்கல்லுக்கு நீராட்டி, நெய் பெய்து, வாசனைப் புகை காட்டி, விளகேற்றி, மயிற்பீலி சாத்தி, காப்பு நூல் கட்டுவர். இச்செய்தியினை,

"மரல் வகுந்து தொடுத்த செம்பூங் கண்ணியொடு
அணிமயிற் பீலிசூட்டி பெயர் பொறித்து
இனி நட்டனரே கல்லும்" (புறம் - 264)

என்ற பாடலடிகள் உணர்த்துகின்றன.

நடுகல்லைச் சுற்றி வில், வேல், வாள் போன்ற கருவிகளால் வேலியமைத்து கல் படைத்து துடிப்பறை ஒலித்து, ஆட்டுக்கிடாய்களை பலியிட்டு நல்கல்லை வழிபட்டனர். மல்லி நாட்டுக் காரியாதி என்ற மன்னனுக்கு நடுகல் நட்டதை,

"பல்லா தழீஇய கல்லா வல்வில்
உழைக்குரற் கூகை அழைப்ப ஆட்டி" (புறம் - 261)

E-ISSN: 2581-7140
Special Issue: Vol. 2, April-2019 Available at: www.ijtlls.com

என்ற பாடலடிகளில் கரந்தைப் போரில் வீரனொருவன் பகைவர்களிடமிருந்து ஆநிரைகளை மீட்டு வரும்போது பகைவருடைய அம்புகள் தைத்து இறந்துபட்ட செய்தியை ஆவூர் மூலங்கிழார் என்ற புலவர் பதிவுசெய்துள்ளார்.

யானையுடன் போரிட்டு மாண்ட வீரனொருவனை புலிக்குத்திப் பட்டான் கல்போல் களிறு எறிந்து வீழ்ந்தவர் என்று குறிப்பிடுவதை,

"ஒன்னாத் தெவ்வர் முன்னின்று விலங்கி
ஒளிறேந்து மருப்பிற் களிறெறிந்து வீழ்ந்தெனக்
கல்லே பரவின் அல்லது
நெல்லுகுத்துப் பரவும் கடவுளும் இலவே" (புறம் - 335)

என்ற பாடலடிகள் குறிப்பிடுவதை மாங்குடி மருதனார் எடுத்துரைத்துள்ளார். வீரர்களைத் தவிர நாட்டை ஆண்ட மன்னர்களுக்கும் நடுகல் எழுப்பினர் என்பதை,

"நனந்தலை யுலக மரந்தை தூங்கக்
கெடுவில் நல்லிசை சூடி
நடுகல் லாயினன் புரவலன் எனவே" (புறம் - 221)

என்னும் அடிகள் கோப்பெருஞ்சோழன் வடக்கிருந்து உயிர் துறந்து வீரக்கல்லாய் விளங்கியதை உரைக்கின்றது.

ஆநிரைகளைப் பகைவர்களிடமிருந்து மீட்டு வரும்போது கடும் போர் புரிந்ததால் பகைவீரர்கள் எய்த அம்புகள் அவனுடைய உடம்பு முழுவதும் தைத்ததால் இலக்கு மரம் போல் காணப்பட்டது என்பதை,

"கம்பமொடு துளங்கிய இலக்கம் போல
அம்பொடு துளங்கி ஆண்டொழிந் தன்றே
---படஞ்செய் பந்தர்க் கல்மிசை யதுவே" (புறம் - 260)

என்ற புறநானூற்றுப் பாடல் விளக்குவதை இலக்குக் கம்பத்தில் அம்புகள் தைத்துக் கொண்டிருப்பது போல் வீரனுடைய உடம்பில் அம்புகள் தைத்த்திருந்த செய்தி தருமபுரி நடுகற்களிலும் இடம்பெற்றுள்ளது. வீட்டிலே காச்சிய கள்ளை சிற்றூரில் உள்ள குடும்பத்தினர் கூட்டமாகச் சென்று முன்னோர்களின் நடுகல்லுக்கு பகல் பொழுதில் படையலிடுவர். அப்பொழுது நடுகல்லை நீராட்டி, நெய்யிட்டு, விளக்கேற்றி வழிபடும் செய்தியினை

"இல் அடு கள்ளின் சில் குடிச் சீறூரார்ப்
புடை நடு கல்லின் நாட்பலி ஊட்டி,
நல் நீராட்டி, செய்ந் நறைக் கொளீஇய" (புறம் - 329)

என்ற பாடலடிகள் விளக்குகின்றன. அதியமான் இறந்துபட்ட செய்தியை அறிந்த ஔவையார் வருத்தமுற்று பாடிய பாடலில்

"இல்லாகியரோ, காலை மாலை
அல்லாகியர், யான் வாழும் நாளே
நடுகல் பீலி சூட்டி, நார் அரி
சிறு கலத்து உகுப்பவும்" (புறம் - 232)

காலை, மாலை என்ற இரண்டு வேளைகளிலும் இனி எனக்க இல்லாது ஒழியட்டும். ஏன் வாழ்நாள் முழுவதும் இருண்டு போகட்டும். ஊரார் இவன் நடுவல்லுக்கு மயில்பீலி சாத்தி அழகுபடுத்தி, கள்ளை ஊற்றிப் படையல் செய்வதைப் பெற்றுக்கொள்வானோ! என்று கூறியுள்ளார். அதியமானுக்கு தகடூரில் நடுகல் நடப்பட்டது போல் தற்போது திருச்செங்கோட்டிலும் அது போன்று நடுகல் எடுக்கப்பட்டுள்ளது.

**E-ISSN: 2581-7140**

**Special Issue: Vol. 2, April-2019** **Available at: www.ijtlls.com**

பழங்காலத்தில் கால்நடைகளைப் பாதுகாக்கவும் பெண்களின் மானத்தைக் காக்கவும் விலங்குகளிடமிருந்து மக்களைக் காப்பாற்றவும் என வெவ்வேறு காரணக்களுக்காகப் போரிட்டு உயிர்துறந்த வீரர்களுக்கு நடுகற்கள் எடுக்கப்பட்டன. தற்போது சவ அடக்க முறைகளில் ஒன்றான வீரக்கல் அல்லது நடுகற்களில் வீரர்களின் உருவங்கள் செதுக்கப்பட்டும், இறந்த வீரர்களின் பெயர், இறந்த நாள், இறந்ததற்கான காரணம் போன்றவை பொறிக்கப்படுகின்றன. இத்தகைய நடுகற்கள் வழிபாட்டு முறைகளுள் ஒன்றாகவும் விளங்குகின்றன என்பதை சங்ககாலப் பாடல்களின் வழி அறியமுடிகின்றது.

**துணை நூல்**

1. ச.கிருஷ்ணமூர்த்தி, நடுகற்கள், மெய்யப்பன் பதிப்பகம், சிதம்பரம்.

E-ISSN: 2581-7140
Special Issue: Vol. 2, April-2019 Available at: www.ijtlls.com

# கொல்லங்கொண்டான் தொல்லியல் களம்
# Kollankondan Archaeological Site

**கோ.ராஜன்தாஸ்,** முனைவர் பட்ட ஆய்வாளர், நாட்டார் வழக்காற்றியல் துறை,
மனோன்மணியம் சுந்தரனார் பல்கலைக்கழகம், திருநெல்வேலி.

## Abstract

*The paper elicits about* the Kollankondan Archaeological Site**.** It *becomes a need and its very important to know about the culture and the civilization existed lang back at Kollankondan. Hence, the study paves way to understand the region to understand the cultural origins of the ancient Tamil people.*

**Keywords:** Kollankondan, Archaeological Site, Tamil Culture

கொல்லங்கொண்டான் தொல்லியல் களம் இந்திய மாநிலமான தமிழ்நாட்டின் விருதுநகர் மாவட்டம் இராஜபாளையம் நகருக்கு தென்மேற்கில் ஏறத்தாழ 10 கிலோ மீட்டர் தூரத்தில் கொல்லங்கொண்டான் என்னும் ஊர் உள்ளது. இவ்வூரின் அருகே தேவியாறும் உள்ளது.

**ஊர்பெயர் காரணம்**

கி.பி.1268-ம் ஆண்டில் மதுரையில் முதலாம் மாறவர்மன்குலசேகர பாண்டியன் அரியணை ஏறினான். அவன் ஆட்சியில் தொடக்க காலத்தில் (1275) திருவாங்கூர் நாட்டின் மீது படையெடுத்துச் சென்று சேர மன்னனை வென்றான். இந்த வெற்றியின் காரணமாக சேரனை வென்றான் என்றும் சேர நாட்டின் ஒரு பகுதியாகிய கொல்லத்தில் போர் நடந்ததால் “கொல்லம் கொண்டான்” என்றும் குலசேகர பாண்டியன் சிறப்புப் பெயர் பெற்றான். அவன் போர்படையில் கொல்லங்கொண்டான் ஊரைச் சேர்ந்த பல வீர்கள் இடம் பெற்று இருந்தனர். அதன் காரணமாக இந்த ஊருக்கு, குலசேகர பாண்டியன் நினைவாக “கொல்லங் கொண்டான்” என்று பெயர் ஏற்பட்டது. ஆரம்ப காலத்தில் இந்த ஊர் “திருப்பணிபுரம்” என்றும் “குலசேகரபுரம்” என்றும் வழங்கப்பட்டிருக்கிறது.

இக்கொல்லங்கொண்டான் பகுதியில் கி.பி.9-ம் நூற்றாண்டைச் சார்ந்த சமணர் சிலை, பழமையான சுயம்புலிங்கம் ஆகியவை கண்டெடுக்கப்பட்டுள்ளது.

செம்பினால் உருவாக்கப்பட்ட பல்லவர் காலத்து மோதிரம் கி.பி. 9-ம் நூற்றாண்டைச் சேர்ந்தது ஆகும். மருதநாயகம் என்று அழைக்கப்பட்ட கான்சாகிப் 1759-ம் ஆண்டில் சுதந்திர போராட்ட வீரரான கொல்லங்கொண்டான் பாளையக்காரர் வாண்டாயத் தேவனையும், பொது மக்களையும் பீரங்கியால் சுட்டுப் பொசுக்கினான். அந்த பீரங்கிக்குண்டு சிதறல்களைத் தேடிக் கண்டுபிடிக்கும் ஆராய்ச்சியை மேற்கொண்டபோது பல்லவர் காலத்து மோதிரம் கிடைத்துள்ளது. இம்மோதிரம் பூமிக்குள் புதைந்து கிடந்த பழைய காலத்து மண்பானைக்குள் இருந்தது. இந்த மோதிரத்தில் நந்தி (காளை) உருவம் பொறிக்கப்பட்டுள்ளது.

பிற்காலப் பல்லவர்கள் கொடிகளிலும், காசுகளிலும் நந்தி ‘இலஞ்சினை’ பயன்படுத்தி வந்துள்ளனர். ‘இலஞ்சினை’ என்பது அரசின் அதிகாரத்தைக் குறிக்கும் முத்திரை ஆகும்.

E-ISSN: 2581-7140
Special Issue: Vol. 2, April-2019 Available at: www.ijtlls.com

பல்லவ மன்னவர்களான இரண்டாம் நந்திவர்மன் (கி.பி.710-775) நந்திவர்மன் (கி.பி.775-825) கிருஷ்ணன் (கி.பி. 780-794) ஆகியவர்கள் ஆட்சி செய்த காலத்தில் பாண்டிய மன்னர்களான வரகுண பாண்டியன் (கி.பி.765-815) சீமாறன் பல்லவன் (கி.பி. 830-862) இரண்டாம் வரகுண பாண்டியன் (கி.பி. 862-880) பராந்தக பாண்டியன் (கி.பி. 850-900) ஆகியோர் மதுரையை ஆண்டு வந்தார்கள். இவர்கள் காலத்தில் பல்லவ பாண்டியர் போர்கள் நடந்ததாக வரலாறு கூறுகிறது. இந்த போர்கள் நடந்த காலத்தில் நந்தி,உருவ மோதிரம் அணிந்த பல்லவன்இப்போரின் போது இந்த இடத்தில் இறந்து இருக்கக்கூடும் என தகவலாளர் கூறுகிறார்.

பொதுவாக மோதிரத்தின் மேல்பரப்பில் சித்திரம் செதுக்குவது தான் வழக்கம். ஆனால் இந்த மோதிரத்தில் படுத்து இருக்கும் நந்தியின் உருவம் உயரமான சிற்ப வடிவத்தில் செதுக்கப்பட்டுள்ளது புதுமையாகும். எனவே கொல்லங்கொண்டான் கிராமத்தில் கண்டுபிடிக்கப்பட்ட மோதிரத்தை அணிந்தவர் பல்லவ மன்னனின் உயர் அதிகாரியாக இருந்து இருக்கலாம் என்றும், அந்த அதிகாரி பல்லவர்களுக்கும் பாண்டியர்களுக்கும் இடையே நடந்த போரில் மரணம் அடைந்திருக்க வேண்டும் என்று தகவலாளர் ந.ராசையா கூறினார்.

**சமண முனிவர் சிலை கண்டுபிடிப்பு**

கொல்லங்கொண்டான் கிராம மலையடி வாரத்தில் 7-ம் நூற்றாண்டைச் சேர்ந்த சமண முனிவரின் சிலை கண்டுபிடிக்கப்பட்டுள்ளது.

சங்க காலத்தில் பல சமயத்தைச் சேர்ந்தவர்கள் சிறிதளவேனும் வேறுபாடு இல்லாமல் வாழ்ந்து வந்தனர். நிலங்களை அடிப்படையாகக்கொண்டு கடவுள்களை வழிபட்டு வந்தனர். தொல்காப்பியத்தில் முல்லை நிலத்துக்கு மாயோனும், குறிஞ்சி நிலத்துக்கு முருகனும், மருத நிலத்திற்கு இந்திரனும், நெய்தல் நிலத்திற்கு வருணனும் தெய்வங்களாகக் கூறப்பட்டுள்ளது. சிவபெருமானின் பெயர் கூறப்படாமல் இருந்தாலும் குறிப்பிட்ட மாற்றுப் பெயர்களால் அழைக்கப்பட்டு வந்ததற்கான சான்றுகள் உள்ளன. சமண சமயம் மௌரிய மன்னன் காலத்திலும் பௌத்த சமயம் அசோகர் காலத்திலும் தென்னாட்டில் பரவியது குறிப்பிடத்தக்கதாகும்.

**சமண மதம்**

சங்க காலத்திலும், சங்கம் மருவிய காலத்திலும் சமண மதம் மற்ற சமயங்களுடன் சுமூக உறவுடன் இருந்தது. களப்பிரர்களின் ஆட்சிக்காலத்தில் சமணமதம் புதிய வளர்ச்சியைக் கண்டது. பல்லவர் காலத்தில் சமணமதத்தையும், பௌத்த மதத்தையும்அழிப்பதற்கு சைவமதமும், வைண மதமும் முற்பட்டன. சோழர் காலத்தில் ஒழுங்குமுறைக்ள சீர்படுத்தப்பட்டன. சமணமதம் உயிரும் (ஆன்மாவும்), சடப்பொருளும் அழிவற்றவை. ஆன்மாக்கள் பல என்பது போன்ற கொள்கைகளைக் கூறுவதும், அகிம்சை வாழ்க்கை நெறியாகக் கடைபிடித்தும் கூறுகிறது.

அய்யனார் வழிபாடு, சாத்தனார் வழிபாடு, தீபாவளிப்பண்டிகை, சித்தர் வழிபாடு ஆகியவை சமணர்களிடமிருந்து வந்தவையாகும். முதலாம் மகேந்திரவர்மனை (580-630) சமணத்திலிருந்து சைவத்திற்கு மாற்றினார்திருநாவுக்கரசர். இதைப் பற்றி திருச்சிராப்பள்ளி கோயில் கல்வெட்டுகள் கூறுகிறது.

கூன்பாண்டியனின் வெப்புநோயைக் போக்க சமணர்களால் முடியவில்லை. சைவமதத்தைச் சார்ந்த திருஞானசம்பந்தன் கூன்பாண்டியனின் வெப்புநோயைத் தீர்த்து வைத்ததால் அவன் சமண சமயத்திலிருந்து சைவ மதத்திற்கு மாறினான். முதலாம் நரசிம்மவர்மன் (630-668) காலத்தவர். திருஞானசம்பந்தரின் காலம் ஏழாவது நூற்றாண்டாகும்.

E-ISSN: 2581-7140
Special Issue: Vol. 2, April-2019 Available at: www.ijtlls.com

கூன்பாண்டியன் சமண சமயத்தில் இருந்தபோது பாண்டிய நாட்டின் தென் பகுதியில் சமண மதத்தைப் பரப்புவதற்காக நேரடியாக வந்தான். அப்போது ராஜபாளையம் அருகே உள்ள சோழபுரம் பாண்டிய நாடு தலைசிறந்த பகுதியாக விளங்கியது.

**கூனங்குளம்**

ராஜபாளையம் பகுதியைச் சேர்ந்த கூனங்குளம் இளந்திரைகொண்டான், கொல்லங்கொண்டான், புத்தூார், சேத்தூார், முதலிய ஊர்களில் கூன்பாண்டியன் சமணமதத்தைப் பரப்பினான். அப்போது அவன் குளங்களையும் வெட்டினான். கூன்பாண்டியன் அந்த குளத்தை வெட்டியதால் அந்த இடம் தற்போது (கூனன்குளம் என்றே அழைக்கப்பட்டு வருகின்றது.

கூனங்குளத்திற்கு அருகிலுள்ள இளந்திரைகொண்டானில் வசித்துவந்த வேதியர்களை சமண மதத்தில் சேர்ந்தான் என்று வரலாறு கூறுகிறது. இவன் காலத்தில் ராசபாளையம் அருகே உள்ள சேத்தூார், தளவாய்புரம், புத்தூார் ஆகிய இடங்களிலுள்ள மலைகளில் சமணர்கள் தங்கிய குகைகள் இன்னும் உள்ளன. சமண முனிவர்களின் சிலைகளும் உள்ளன.

கொல்லங்கொண்டான் மலையடி வாரத்தில் சமணமுனிவர்கள் சிலை வடக்கிலிருந்து தியானம் செய்யும் நிலையில் உள்ளது. இப்போது இந்த சிலையை மோர்த்தாய் என்று கூறி வழிபாடு செய்து வருகின்றனர். இந்த சிலையை மஞ்சள் குங்குமம் விபூதி ஆகியவற்றைக் கொண்டு அலங்கரித்துள்ளனர். இதனால் உண்மையான உருவத்தைக்காண முடிகிறது. முனிவரின் பின்பகுதியில் கட்டிடம் போன்ற அமைப்பு உள்ளது.

கூன் பாண்டியன் கி.பி.7 ம் நூற்றாண்டைச் சேர்ந்தவனாகையால் சமண முனிவரின் சிலையும் 7ம் நூற்றாண்டைச் சார்ந்ததாகும். இதே நூற்றாண்டைச் சார்ந்த சமண முனிவர்கள் சிலை சேத்தூாரில் உள்ளது.இவ்வட்டத்தைச் சேர்ந்த சாஸ்தா கோவில்களும், அய்யனார் கோவில்களும் கி.பி.7ம் நூற்றாண்டைச் சார்ந்தவையாகும் என்பது குறிப்பிடத்தக்கது.

**அதிசயலிங்கம் கண்டுபிடிப்பு**

கொல்லங்கொண்டான் என்ற ஊர் இப்பொழுது அயன்கொல்லங்கொண்டான் என அழைக்கப்படுகிறது. இக்கிராமத்தில் தண்ணீர் குழாய் பதிப்பதற்காக தோண்டிய போது பூமிக்குள் 14ம் நூற்றாண்டைச் சார்ந்த அதிசயலிங்கம் கண்டுபிடிக்கப்பட்டுள்ளது.

**சுயம்புலிங்கம்**

பூமிக்குள் இருந்து வெளியே வந்துள்ள லிங்கத்தை சுயம்புலிங்கம் என்று அழைக்கின்றனர். உலகில் 64 சுயம்புலிங்கங்கள் தோன்றி உள்ளன என்று லிங்கபுராணம் கூறுகிறது. அந்த வகையில் தற்போது கிடைத்துள்ள இந்த லிங்கத்தையும் சுயம்புலிங்கம்என்றே அழைக்கலாம். சுயம்புலிங்கம் பொதுவாக சொரசொரப்பாக இருக்கும். ஆனால் இந்த லிங்கம் அவ்வாறில்லாமால் லிங்கத்தின் மேல்பகுதி வழுவழுப்பாகவும் மத்திய பாகமும் அடிப்பாகமும் சொர சொரப்பாகவும் காணப்படுகிறது என்று தகவலாளர் ந.ராசையா கூறுகிறார். இந்த லிங்கம் 1 அடி விட்டமும் 3 அடி உயரமும் கொண்டு 3 சமபாகங்களாக பிரிக்கப்பட்டுளளது. லிங்கத்தின் கீழ்ப்பாகம் நான்கு பட்டைகளுடன் கூடியதும் நடுப்பாகம் எட்டு பட்டைகளுடன் கூடியதுமான தூண் போன்ற அமைப்பின் மேல் லிங்க அமைப்பு உள்ளது. தற்போது ஆலயங்களில் உள்ள லிங்கத்தைப் போல் வட்டவடிவமான சக்தியுரு இதில் இல்லை. நீண்ட உருண்டையான தண்டுப்பகுதி மட்டுமே உள்ளது. லிங்கத்தை திருவுருவாகவும் லிங்கத்தில் பொருத்தப்பட்டிருக்கும் வட்ட வடிவமான பகுதி சக்தி உருவமாகவும் அழைக்கப்படுகிறது. இவை இரண்டும் ஒன்று சேர்ந்ததே சிவனுடைய

E-ISSN: 2581-7140
Special Issue: Vol. 2, April-2019 Available at: www.ijtlls.com

உடலாகும். ஆனால் சிவலிங்கத்தின் மேல் பாகத்தில் மூன்று திருநீறுப் பட்டைகளும் அதன் மத்தியில் சந்தணமும் குங்குமும் சேர்ந்த பொட்டும் வைக்கப்பட்டுள்ளது.

தற்போது கிடைத்துள்ள லிங்கத்தில் மேற்கூறிய குறியீடுகள் இல்லை. இந்த லிங்கத்தில் விபூதி அணிந்திருக்க வேண்டிய இடத்தில் நெற்றிக்கண் போன்ற அமைப்பு உள்ளது. நெற்றிக் கண்ணிலிருந்து மூன்று கயிறுகள் தொங்குகின்றன.நடுவிலுள்ள கயிறு லிங்கத்தின் அடிப்பாகம் வரையிலும் செல்கின்றது. அது கொப்புகளை சுட்டிக் காட்டுவதாக இருக்கலாம் இடது மற்றும் வலது புறத்தில் தொங்கும் கயிறுகள் இரண்டும் பின்புறமாகச் சென்று லிங்கத்தின் மையப் பகுதியில் முதுகுத்தண்டு முடியும் பகுதியில் இணைக்கப்பட்டுள்ளது. இத்தகைய குறியீடுகளைக் கொண்ட அதிசயலிங்கம் வேறெங்கும் காணப்படவில்லை. இக்குறியீகள் மனிதர்களுக்கு குண்டலினி சக்தியை விளக்குவதற்காக அமைந்திருக்கக் கூடும் எனக் கூறப்படுகிறது. லிங்க சாஸ்திரத்தில் கூறி உள்ளபடி லிங்கத்தின் மேல் பாகம் ருத்திர பாகமென்றும் நடுப்பாகம் விஷ்ணுபாகம் என்னும் அமைந்திருப்பது இந்த லிங்கத்தின் சிறப்பம்சமாகும். பதஞ்சலி முனிவர் காலத்திலேயே உருவ வழிபாடு இருந்து வந்துள்ளது. தமிழகத்தில் உருவ வழிபாடு சிவலிங்க வழிபாடாகவே முதலில் தொடங்கி உள்ளது.

கி.பி 2 ம் நூற்றாண்டில் ஆந்திராவில் தடிமல்லம் என்ற கிராமத்தில் லிங்க வழிபாடு இருந்துள்ளது. இதுவே தென்னகத்தின் முதல் லிங்க வழிபாடு பாண்டியர்கள் காலத்தில் ஏற்பட்டதாக தெரிகின்றது. மாறவர்மன் வீரபாண்டியன் (கி.பி.1340-1380)வரை கொல்லங்கொண்டான் பகுதியை தன்னாட்சி நடத்தி வந்தான். அப்போது சிவன் கோவில் ஒன்றைக் கட்டினான் என்றும் அக்கோயிலுக்கு வீரபாண்டீஸ்வரர் என்று பெயர் சூட்டினான் என்றே அழைக்கப்பட்டு வருகின்றது. அப்போது இந்த அதிசயலிங்கத்தைப் பிரதிஷ்டை செய்திருக்க வேண்டும்.

**கல்வெட்டு**

மாறவர்மன் பெயரில் இங்குள்ள பெரிய குளத்தில் ஒரு கல்வெட்டும் உள்ளது. இப்பகுதியில் நடந்த சோழ பாண்டிய போர்களினாலோ சைவ வைணவ சமண மதங்களில் ஏற்பட்ட சச்சரவுகளினாலோ அல்லது ஆற்காடு நவாப் ஆங்கிலேயர் நடத்திய போர்களில் மருதநாயகம் என்ற முகமது யூசுப்பான் இவ்வூரை இடித்து தரை மட்டமாக்கிய போதோ இநத அதிசயலிங்கம் பூமிக்குள் புதைக்கப்பட்டிருக்கலாம்.

இவ்வூரைச் சுற்றிலும் சமண பத்துறவி துர்க்கை நாகர் மற்றும் ஏராளமான சிலைகள் ஆங்காங்கே சிதறிக் கிடப்பதே இதற்கு சான்றாகும்.

**தகவலாளர் பட்டியல்**

ந.ராசையா வயது 60, கொல்லங்கொண்டான், 2001ம் ஆண்டு, இராஜபாளையம், விருதுநகர் மாவட்டம்

**துணைநூற்பட்டியல்**

கே.கே.பிள்ளை, தமிழக வரலாறும் பண்பாடும் உலகத்தமிழராய்ச்சி நிறுவனம், சென்னை. - 2004

தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்
International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Special Issue: Vol. 2, April-2019
Available at: www.ijtlls.com


# கட்டடக்கலை வாயிலாக அறியப்படும் தமிழின் தொன்மையும் தமிழர் பெருமையும் - ஒரு மீள்பார்வை

# A Bird Eye Study on the Eminence of Tamil Culture and Antiquity through Architecture

**பெ.ராஜா,** முனைவர் பட்ட ஆய்வாளர்,
முதுகலைத் தமிழாய்வு துறை, பிஷப் ஹீபர் கல்லூரி, திருச்சி-17.

## Abstract

*The paper elicits a bird eye study on the eminence of Tamil Culture and Antiquity through Architecture. It becomes a requirement and its very important to know about the culture and the civilization existed lang back through the architecture. Hence, the study paves way to understand the region to understand the cultural origins of the ancient Tamil people by architectural evidences.*

**Keywords: Bird Eye Study, Eminence, Tamil Culture, Antiquity, Architecture**

### முன்னுரை

காலந்தோறும் தமிழர் போற்றி வளர்த்த கலைகளுள் கட்டக்கலை குறிப்பிடத்தக்கது. மரபும் புதுமையும் கலந்து அவர்கள் உருவாக்கிய கட்டுமானங்களுள் பல, இன்றளவும் வாழ்ந்து அவர்தம் கலைத்திறம் கூறுவதோடு, பல்வேறு காலகட்டங்களில் இக்கட்டமைப்புகள் பெற்ற வடிவ மாற்றங்களையும் புத்திணைப்புகளையும் அவற்றின் பின்னமைந்த கலைஞர்களின் உண்மையான உழைப்பையும் உலகுக்கு உணர்த்தி நிற்கின்றன. மனிதனது உள்ளத்தைத் தன் வயமாக்கி, நிரம்பி, அவ்வளவோடு நில்லாமல் வெளிப்படும் ஆற்றலே கலை எனப்படும். கூடுதல், குறைதல் இன்றி எப்பொருளும் அளவோடு அமைந்திருப்பின், அந்த அமைப்புக் கண்ணைக் கவருவது இயல்பு. எனவே, கலை என்பது அளவும் பொருத்தமும் தன்னுள் அடக்கி நிற்பது; அது சமயத்தில் உள்ளத்திறகு உவகை ஊட்டுவது; உள்ளத்தைத் தன்பால் ஈர்ப்பது இவை கலை கலை என்பதாகும்.

### கலையின் படைப்புக்கள்

நாகரிகத் தொடக்கத்தில் தவழத் தொடங்கிய பழைய கற்கால மனிதன், தான் வாழ்ந்த மலைக்குகையில் இருந்த பாறைகள் மீது தன் கைவண்ணத்தைக் காட்டினான். அக்கைவண்ணம் சில ஓவியங்களாக இன்றளவும் காட்சி அளிக்கிறது. அவரது உள்ளத்திலிருந்து பொங்கி எழுந்த கலை உணர்வே அவனை ஓவியப் புலவனாக்கியது. சிறிய கத்தியைக் கொண்டு சிறிதளவு மரப்பட்டையைச் சீவி, அச்சீவப்பெற்ற இடத்தில் அழகிய பிள்ளையார் உருவத்தைக் கல்லாக் கனிமகன் அமைக்கின்றான். அவனது உள்ளத்திலிருந்து பொங்கி எழும் கலை ஆற்றலே அவன் கை வழியாகப் புகுந்து அவ்வழகிய சிற்பத்தை அமைக்கின்றது.

E-ISSN: 2581-7140
Special Issue: Vol. 2, April-2019 Available at: www.ijtlls.com

**கலைஞன் இலக்கணம்**

கலஞன் இயற்கை அமைப்புக்களைக் கூர்ந்து கவனித்தறிதல் வேண்டும்; பொருள்களின் பல்வேறு இயல்புகளையும் அவற்றுக்கேற்ப பொருத்தத்தையும் நன்கு தெளிதல் வேண்டும்; தன் நினைவில் தோன்றுவனவற்றைக் காவியமாகவோ, ஓவியமாகவோ, சிற்பமாகவோ, வேறொன்றாகவோ வெளிப்படுத்தும் ஆற்றல் பெற்றிருத்தல் வேண்டும். கலையின் பொருளையும், வாழ்க்கை முறையையும் நன்கு அறிந்து தெரிந்திருத்தல் வேண்டும்; கலைஞன் சிறந்த ஒழுக்கம் பெற்றிருத்தல் வேண்டும். இவை அனைத்தும் ஒரு சேரப் பெற்றவனே சிறந்த கலைஞன் ஆவான்.

**சங்ககாலக் கட்டடக்கலை**

முதலாம் மகேந்திரவர்மருக்கு (கி.பி.590-630) முற்பட்டு வாழ்ந்த தமிழர்களின் கட்டடக்கலை அறிவை அறிய இலக்கியங்கள் உதவுகின்றன. அவை காட்டும் மனைகள் இறைவாழ் மனைகளாகவும் குடிவாழ் மனைகளாகவும் அமைந்தன. குடிவாழ் மனைகளுள் சிறிய அளவின சிற்றில், குரம்பை, என்றழைக்கப் பெற்றன. பெரிய அளவின வளமனை, நகர் எனப்பட்டன. புல்வேய் குரம்பை, குவிந்த குரம்பை, புதுக் கலத்தன்ன செவ்வாய்ச் சிற்றில் எனும் இலக்கியச் சுட்டல்கள் இவற்றின் கட்டமைப்பைக் கூறுகின்றன.

**நகர் சொல்**

இறைவாழ் மனைகளைச் சுட்டவும் பயன்படுத்தப்பட்டுள்ள நகர் எனும் சொல், ‘மாடமான் நகர்’, ‘விண்பொரு நெடுநகர்’, ‘கடியுடைவியன் நகர்’, ‘அகல் நகர்’ ‘நிழற்கயத்தன்ன நீள்நகர்’இ ‘வினைவளம் கெழு திருநகர்’இ ‘நளிமனை நெடுநகர்’ என வளமனைகளின் அகலம், நீட்சி, உயர்ச்சி, பெருமை புலப்படுத்தும் சொற்களுடன் இணைத்தாளப் பட்டுள்ளது. இந்த வீடுகள் செங்கல் கட்டடங்களாய்ச் சுதை பூசப்பெற்று ஓவியத் தீற்றலால் அழகுபடுத்தப் பட்டிருந்தன. இவற்றில் அரபியம் என்றழைக்கப்பட்ட நிலாமுற்றங்கள் இருந்தன. உத்திரங்களும் தூண்களும் மரத்தால் அமைக்கப் பட்டிருந்தன என்பது குறித்தும் ‘நகர்’ குறிப்பிடப்படுகின்றன.

**கட்டட அமைப்பு முறைகள்**

அரண்மனைகள் அமைந்த விதம், அவற்றை அமைத்த சிற்பாசிரியர் திறன் குறித்து நெடுநல்வாடை பாடல் குறிப்பிடுகிறது. நூலறி புலவர்கள் என்று போற்றப்படும் இந்தக் கைவினைஞர்கள் மதில், வாயில், நிலை, தோரணம், கதவுகள், மாடம், நிலாமுற்றம், எழுதணி மண்டபம் இவற்றைச் செம்மையுற அரசர்க்கு ஏற்பத் திட்டமிட்டு அமைத்தனர். ‘செம்பு இயன்றன்ன செஞ்சுவர்’இ ‘குன்று குயின்றன்ன அந்தணர் பள்ளி’இ ‘குன்று குயின்றன்ன ஓங்குநிலை வாயில்’இ ‘வரை குயின்றன்ன வான்தோய் நெடுஞ்சுவர்’இ ‘கொடுங்கால் மாடத்து நெடுங்கடை’இ ‘ஒண்சுவர் நல் இல் உயர்திண்ணை’ இவை போன்ற சொற்றொடர்கள் அக்காலக் கட்டமைப்புகளை விளக்க வல்லன.

**காப்பிய கால கட்டட அமைப்பு முறைகள்**

காப்பிய காலத்தில், புதிய கட்டடக்கலைச் சொற்கள் தென்படுவதிலிருந்து சங்கக் கட்டமைப்புகளில் மாற்றங்கள் நேர்ந்தமையை உணரலாம். போதிகை எனும் சொல், தூணுக்கும் உத்திரத்திற்கும் இடையலமரும் தாங்கலைக் குறிக்கும். மணிமேகலையில் கையாளப்பட்டுள்ள இக்கலைச் சொல், சங்க காலத்தில் கால்களின் மீது அமர்ந்த உத்திரங்கள், காப்பிய காலத்தில் இடையில் போதிகையைப் பெறத் தொடங்கிவிட்டமையைத் தெளிவாய்ச் சுட்டுவது காணலாம். கூரையின் சுமையைப் பரவலாகத் தாங்க இப்புத்தமைப்பு, கட்டுமான கலைஞர்களுக்கு உதவியது. மேலும் வேதிகை எனுஞ்சொல் அடித்தளத்திற்கும்

E-ISSN: 2581-7140
Special Issue: Vol. 2, April-2019 Available at: www.ijtlls.com

சுவருக்கும் இடைப்பட்ட கட்டமானத்தைக் குறிக்கக் காப்பிய காலத்தில் பயன்படுத்தப் பட்டது. கந்திற்பாவைகள் காப்பிய காலச் சிறப்பமைப்புகள். சங்கச் சுவர்ப் பாவைகளைப் போல இவையும் தெய்வதம் பெற்றன.

**காப்பியக் காலம்**

தமிழ்நாட்டுச் சிற்பாசிரியர்களுடன் மகதம், மராட்டம், அவந்தி, யவனம் ஆகிய பல்நாட்டுக் கைவினைஞர்களும் கூடித் தொழில் செய்த காலமாகக் காப்பிய காலத்தைக் குறிக்கலாம். 'பவளத் திரள்கால் பன்மணிப் போதிகை தவள நித்திலத் தாமம் தாழ்ந்த கோணச் சந்தி மாண்வினை விதானத்துத் தமனியம் வேய்ந்த வகைபெறு வனப்பின் மெழுகாப் பசும்பொன் மண்டபம்' பெற்ற அரண்மனைகளின் கட்டமைப்புப் பற்றி விரிவான தரவுகள் காப்பியங்களில் பதிவாகவில்லை எனினும், அங்கொன்றும் இங்கொன்றுமாய்க் கிடைக்கும் சான்றுகள் கொண்டு ஓரளவிற்கு ஊகிக்க முடிகிறது. ஆடல் அரங்கம் நூல் நெறி மரபின்படி அமைக்கப்பட்டதை அரங்கேற்று காதையால் அறியலாம்.

**கோவில் கட்டடங்கள்**

காப்பிய காலத்தில் கோயிற் கட்டுமானத்தில் நிகழ்ந்த மிகப்பெரிய புரட்சியை அறிய பக்தி இயக்கம் உதவுகிறது. இலக்கியம், செப்பேடு, கல்வெட்டுச் சான்றுகளால் அறியப்படும் கோச்செங்கணான் என்ற சோழ அரசரே இந்தப் புத்தமைப்பை உருவாக்கியவர். அதுநாள் வரையிலும் கட்டப்பட்ட கோயில்களின் கட்டுமானங்கள் தரைமட்டத்தில் அமைந்திருந்தன அல்லது குன்றுகளின் மீது இருந்தன. கோச்செங்கணான், மாடக்கோயில்கள் எனும் புதுவகைக் கட்டமைப்புகளைத் தமிழ் நாட்டுக் கலையுலகிற்கு அறிமுகப்படுத்தினார். இதனால் தரை மட்டத்தில் அமைய வேண்டிய கோயில்கள், மலைமேல் அமைந்தவை போல் உயர்ந்தன. வெற்றுத் தளமொன்றை முதலில் நிறுவி, அத்தளத்தின் மேல் கோயில் கட்டடத்தை அமைக்கும் இந்த உத்தியே பின்னாளைய கோயிற் கட்டங்களின் துணைத்தள அமைப்பிற்கு வழிகோலின.

**கட்டடக்கலை வரலாற்றின் திருப்புமுனை**

அழியும் பொருட்களால் ஆக்கப்பட்டு அழிவுற்ற கட்டடங்களால் ஏற்பட்ட மாற்றமா அல்லது விசித்திர சித்தத்தால் விளைந்த புதுப்பார்வையின் பயனா என்றறியவியலா வண்ணம் முதலாம் மகேந்திரவர்மரின் ஆட்சிக்காலம் தமிழ்நாட்டுக் கட்டடக்கலை வரலாற்றின் திருப்புமுனையாக அமைந்தது. செங்கல் இல்லாமல், சுதையில்லாமல், மரமில்லாமல், உலோகமும் இல்லாமல் அந்தச் சித்திரகாரப் புலியால் தொண்டை நாட்டின் முதற்கட்டடம் கல்லில் வடிவெடுத்தது. ஈமச்சின்னங்களுக்காகவே ஒதுக்கப்பட்டிருந்த கல்லில் இறைக்கோயில் எழுப்பியது புதுமை மட்டுமல்ல, காலப்புரட்சியுமாகும். இந்தக் கைவினை பாண்டிய நாட்டிலும் இருந்தது. தமிழ்நாட்டின் அனைத்துப் பகுதிகளிலும் குடைவரைகள் அமைந்தன. இவை அமைப்பில் சங்கப் பொதியில்களை அடியொற்றின. ஒரு செவ்வக மண்டபமும் மண்டபப் பின்சுவரில் கருவறைகளுமென உருவான இக்குடைவரைக் கோயிலக்ள் மரப்பொட்டி அமைந்தவைதான் என்றாலும் புதிய முயற்சிகளையும் உள்ளடக்கியவையே.

**குடைவரைகள்**

முகப்பு, மண்டபம், கருவறை என ஒன்றன்பின் ஒன்றாக அமைந்துள்ள குடைவரைக் கட்டமைப்பின் முகப்பு, தூண்களால் ஆனது. பாறைச் சுவரை ஒட்டியமையும் பக்கத்தூண்கள் அரைத்தூண்களாகவும் அவற்றிற்கு இடைப்பட்டமைந்து முகப்பைப் பல அங்கணங்களாகப் பிரிப்பவை முழுத்தூண்களாகவும் அமைக்கப்பெறும். இத்தூண்களின் தலைமேல் மணிமேகலை அறிமுகப்படுத்தும் போதிகை, இதன் கைகள் இருபுறத்தும் விரிந்து தாங்கும் உத்திரத்திற்கு

E-ISSN: 2581-7140
Special Issue: Vol. 2, April-2019 Available at: www.ijtlls.com

மேல், கூரையை ஒட்டிச் சிறுகம்பு, மரத்திலும் செங்கல்லிலும் அமைந்த கட்டுமானங்களைப் பின்பற்றி, மரபு வழுவாது கல்லிலும், பயன்பாட்டு நோக்கின்றி, அதே உறுப்புகளை அந்நாளைய கல் தச்சர்கள் கொணர்ந்தனர். கட்டுமானப் பொருள் மாறியபோதும் கட்டமைப்பு மாறாதகாலமது. சதுரம், கட்டு, சதுரம் என்ற அமைப்பிலும் நான்முகமாகவும் மண்டகப்பட்டில் உதயமாகும் முகப்புத் தூண்களின் தூணுடல், வளர்நிலைகளாக எண்முக, பன்முக உடல் பெற்றமைவதை மாமல்லபுரம் குடைவரைகளில் காண முடிகிறது.

**தூண்களில் வடிவமைப்பு முறைகள்**

தூணின் அடிப்பகுதியாகப் பாதம் சற்றுப் பிற்பட்ட நிலையிலும், அந்தப் பாதத்திற்கும் தூணுடலுக்கும் இடையில் விலங்குருவம் ஒன்று இடம்பெறுவது அதற்குப் பின்னாளிலும் அறிமுகமாயின. சிம்மம், யாளி, ஆடு, யானை, நாகம் எனப் பல்வேறு உருவங்கள் தூணடிகளாக வடிவெடுத்திருப்பதைப் பல்லவர் கோயில்களில் பார்க்க முடிகிறது. சதுரம், கட்டு, சதுரம் என அமைந்த தூணுடலின் வெறுமையான சதுர முகங்களில், புதுமை அவாவிய சிலர் தாமரைப் பதக்கங்களை அமைத்தனர். மகரம், யானை, கின்னரர் எனப் பல்வேறு செதுக்கல்களை அமைத்துக் காட்டினர். கொடிகளின் வளைவுகளில் கருத்திழந்த சிலர், கொடிக்கருக்குகளைப் பல்வேறு படர்வுகளில் படைத்துப் பரவசமாயினர். முதலாம் மகேந்திரர் காலத்திலேயே இவையனைத்தும் இடம்பெறுவது நோக்க, கால இடைவெளிக்குக் காத்திராமல் புத்தமைப்புகள் மரபுசார் கட்டுமானங்களில் புரப்பார்க்கேற்ப பதிவானமை உணரலாம்.

**தமிழரின் கட்டிடக்கலை வியப்பு**

குடைவரைகளில் உருவாக்கப்பட்ட சிற்பங்கள், அந்த அமைப்புகளோடு, ஒன்றிப் பிறந்தவையாதலாலும் அவற்றிற்கு உயிரூட்டுபவையாகவே அமைவதாலும் அவற்றைக் கட்டமைப்புகளிலிருந்து பிரித்துப் பார்த்தல் இயலாது என்பது மட்டுமல்ல, சரியன்றும் கூட பல்லவர்களின் தொடக்கக் காலக் கருவறை இறையாக இடம்பெறும் சோமாஸ்கந்தர் வடிவம் பல்லவச் சிற்பாசிரியர்களின் புதிய வடிவமைப்பாகும். சங்க, காப்பியப் பாடலடிகளில் எங்கும் இந்தக் குடும்பியைக் காணக்கூடவில்லை. தமிழ்நாட்டுக் கட்டடக்கலை வரலாற்றிலும் சிற்பக்கலை வரலாற்றிலும் இந்தப் பேரழகுப் படிவம் பல்வேறு காரணங்களால் தனித்துவம் பெற்றுவிடுவதை யாரே மறுக்க முடியும்?

**விமான அமைப்பு முறைகள்**

முழுமையுறாத இம்முத்தள ஒருகல் தளி ஒன்றன்மேல் ஒன்றாய் அமைந்த மூன்று தளங்களிலும் இறையகம் கொண்டது. ஒவ்வோர் இறையகத்தின் முன்னும் முன்றில் பெற்றது. முத்தளக் கருவறைகளும் திருச்சுற்றுப் பெறுமாறு திட்டமிடப்பட்டது. மேலிரு தளங்களிலும் இறையகச் சுவர்கள் பத்திகளாக்கப்பட்டுப் பத்திமை விளக்கச் சிற்பங்கள் கொண்டன. கீழ்த்தளச் சுற்று முகப்புகளாலான நால்வழிச் சுற்றாய் வடிவமைக்கப்பட்டது. மேற்றளச் சுற்றுகள் தளங்களைத் தழுவாது தள்ளியமைந்த ஆரங்களால் விளைந்தவை. பாதச்சுவர்க்கட்டோ அதுவரை காட்டப்படாத கபோதபந்தமானது. கட்டமைப்பிலும் உருவாக்கத் திறனிலும் சிற்ப அமைவிலும் பல புதிய மரபுகளை விதைத்த இந்தப் பல்லவப் பெருந்தளி, ‘அத்யந்தகாமம்’ என்ற பெயரில் கால வெளிச்சத்திற்கு முறையாகக் கொணரப்பட்டுள்ள தமிழர் தம் கட்டடக்கலை உன்னதமாகும். இத்தளியில் இடம்பெற்ற சிற்பங்கள் சில, அதற்கு முன்னரும் பின்னரும் வேறு எத்தளியிலும் இடம்பெறவில்லை என்பது குறிப்பிடத் தக்கது.

E-ISSN: 2581-7140
Special Issue: Vol. 2, April-2019 Available at: www.ijtlls.com

**புதிய கட்டடக்கலை அமைப்புகள்**

தமிழ்நாட்டுக் கட்டடக்கலையில் பிற்சோழர் காலத்தில் விளைந்த புதிய கட்டமைப்புகளாக நூற்றுக்கால், ஆயிரங்கால் மண்டபங்களைக் குறிப்பிடலாம். இவை புதிய அமைப்புகள். திருவரங்கம் ஆயிரங்கால் மண்டபத்தின் அடித்தளம் டாக்டர் மா.இராசமாணிக்கனார் வரலாற்றாய்வு மையத்தால் அண்மையில் வெளிப்படுத்தப்பட்டது. இதன் தாங்குதளக் கண்டப் பகுதியில் தொடராக ஆடற்சிற்பங்கள். மண்டபத்தின் கால்கள் நூல் பிடித்தாற் போல் ஓர் ஒழுங்கிற்குள் வரையறுக்கப்பட்டுள்ளது. முற்சோழர் காலத்திருபோலக்க மண்டபங்களின் வளர்நிலைகளாக இவற்றைக் கொள்ளலாம்.

**முடிவுரை**

தமிழர் கட்டடக்கலை, மரபு வட்டத்திற்குள் மட்டும் சுழலவில்லை. அதே சமயம் மரபை முற்றிலுமாய்த் துறந்து புதுமை மயமாய் மாறிடவும் இல்லை. மரபுகளைப் பின்பற்றியும் மாற்றியமைத்தும் புதியனவற்றை வேண்டுமித்து வேண்டுமாறு தேவைக்கேற்ப சேர்த்துக் கொண்டும் வளர்ந்த தமிழர் கட்டடத்தின், காலந்தோறும் உலகம் வியந்து போற்றும் உன்னதக் கட்டுமானங்களை உருவாக்கியது. எந்தப் புத்தமைப்பையும் பயன்பாட்டு நோக்கிலும் அழகியல் நோக்கிலும் சிந்தித்து உருவாக்கிய தமிழ்நாட்டுச் சிற்பாசிரியர்கள் அவற்றை மரபுசார் கட்டமைப்பில் நன்கு பொருந்திடுமாறு இணைத்துக் கொண்ட நேர்த்தி பாராட்டற்குரியதாகும். தமிழ்நாட்டுக் கட்டடக்கலை அறிஞர்களை வழிப்படுத்த பல நூல்களிருந்தன. நெடுநல்வாடைக் காலத்தலேயே நூலறி புலவரென்றுதான் கட்டுமான அறிஞர்கள் அழைக்கப்பட்டன. மயமதம், காசியபம், மானசாரம் போன்ற பல கட்டடக்கலை நூல்கள் அந்நாளில் இருந்தனவெனக் கருதலாம். நூல்வழிப் படித்து, குருகுலக் கல்வியாய்க் கற்று, களத்திலிறங்கிய கலைஞர்கள் எத்தகு கருவிகளைப் பயன்படுத்தினர். கற்களைக் கொணரவும் உயரங்களுக்கு ஏற்றவும் எத்தகு தொழில்முறையை கையாளப்பட்டது என்பது பற்றியெல்லாம் அறிய விரிவான தரவுகள் கிடைக்கவில்லை.

**பார்வை நூல்கள்**

1. இராசமாணிக்கனார் மா., தமிழகக் கலைகள், மூன்றாம் பதிப்பு : மார்ச், 1980, பாரி நிலையம், 184, பிராட்வே, சென்னை-600001.
2. கலைக்கோவன் இரா., வாருணிக்கு எழுதிய வரலாற்று மடல்கள், முதற்பதிப்பு : 2012, அருள் பதிப்பகம், 66, பெரியார் தெரு, எம்.ஜி.ஆர். நகர், சென்னை-78.

E-ISSN: 2581-7140
Special Issue: Vol. 2, April-2019 Available at: www.ijtlls.com

# ஜவ்வாது மலை- மலையாளிப் பழங்குடியினரின் தெய்வ நம்பிக்கைகள்
# Deity Beliefs of Javathu Hills Malayali Tribes

**அ. ராஜேஷ்,** முனைவர் பட்ட ஆய்வாளர்
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை- 600 113

## Abstract

*The paper focuses on the beliefs of deities amidst the Malayali Tribes of Javadhu Hills. It is a clear evidence of the ancient worship among the tribal people. It reveals the fact that they follow Tamil culture in the worshipping methods. Hence, the article traces the evidences related to it.*

**Keywords :** Javathu Hills, Malayali Tribes, Deity Beliefs

பண்டையகால மனிதன் இயற்கையோடு இயைந்து வாழ்க்கையை நடத்தியவன். இயற்கை மாறுதலுக்கேற்ப அவனுடைய மனமும் மாறுபட்டது. அவனின் இயற்கையோடு இயைந்த வாழ்வில் நம்பிக்கைகள் தோன்றின. நாகரிகம் தோன்றிய மனித சமுதாயத்தில் மக்கள் நம்பிக்கையோடு செயல்படுவதைக் காணமுடிகிறது. ஆனால் தனிமனித நம்பிக்கை தோன்றியது. அது அந்தந்த மனிதர்கள் காலப்போக்கில் சமுதாய நம்பிக்கையாக மாறிவந்திருப்பதை ஜவ்வாது மலைவாழ் மக்களின்வழி அறியலாம். காரணகாரியங்களின் வாயிலாக நிறுவ முடிந்ததை நம்பிக்கை என்றும் காரண காரியங்களின் மூலமாக நிறுவ முடியாதவற்றை மூடநம்பிக்கை என்றும் அறிஞர்கள் கூறுவர்.

ஜவ்வாது மலையானது தமிழ்நாட்டில் வேலூர், திருவண்ணாமலை மாவட்டங்களின் எல்லைகளில் பரவியுள்ளது. ஜவ்வாது மலை புதூர்நாடு, சித்தூர், மேலூர், நெல்லிவாசல், கோம்பை, வலசை என 32 கிராமங்களை உள்ளடக்கியதாக அமைந்துள்ளது. இங்குள்ள மலையாளிப் பழங்குடியினர் மாடுமேய்த்தல், விவசாயம் செய்தல், தேனெடுத்தல் போன்ற தொழில்களை மேற்கொள்கின்றனர். அவர்களுடைய தெய்வநம்பிக்கைகள் குறித்து ஆய்வதே இக்கட்டுரையின் நோக்கமாகும்.

**தெய்வ நம்பிக்கை**

ஜவ்வாது மலையின் 32 கிராமங்களும் கல்லாவூர் என்ற கிராமம் வரலாற்றுச் சிறப்புவாய்ந்த இடம் எனலாம். “இங்கு மூங்கில் மரங்களுக்கு நடுவில் ஒரு கல்திட்டை உள்ளது. அதற்குள் மூன்று மண்பானைகள் காணப்படுகின்றன. அதைப் பார்ப்பதற்கு யாருக்கும் அனுமதியில்லை. அந்தப்பானைக்குள் பாம்பு இருக்கிறது என்றும், அப்படிப் பார்த்தால் அது தெய்வ குற்றமாகிவிடும் என்றும் மக்கள் நம்பிக்கைக் கொள்கின்றனர். கல்திட்டையின் அமைப்பு பழங்கற்கால மனிதர்களின் உடல்களை அடக்கம் செய்துவைத்த இடம்போல தோன்றுகிறது” (ஜவ்வாது மலை பழங்குடி மக்கள், ப.11) என்கிறார் ஜே . ஆர். இலட்சுமி. இதை நாம் கவனத்தில் கொள்ளவேண்டியுள்ளது.

ஜவ்வாது மலைவாழ் மலையாளிப் பழங்குடியின மக்கள் கடவுள் நம்பிக்கை மிகுந்தவர்களாக இருக்கின்றனர். கீழூரில் வேந்தியப்பன் சிலை ஒரு நடுகல்லாக உள்ளது. அதனைக் கடவுளாக வழிபடுகின்றனர் மலையாளிகள். இந்த நடுகல் போரில் அல்லது

E-ISSN: 2581-7140
Special Issue: Vol. 2, April-2019 Available at: www.ijtlls.com

வேட்டையின்போது வீர மரணம் அடைந்தவருக்கு எடுக்கப்பட்டதாகக் கூட இருக்கலாம். அவ்வாறு வேந்தியப்பனுக்கான வழிபாடுகள் நடக்கின்றன. அக்கோயிலினுள் அமைந்திருக்கும் விதானத்தில் மலர்ந்த தாமரை போன்று நடுவில் மகரந்தம் நிரம்பிய பகுதி மஞ்சள் நிறத்திலும், இதழ்கள் சிவந்த நிறத்திலும் அதனைச் சுற்றிப் பச்சை வண்ணத்திலும் வண்ணங்கள் தீட்டப்பட்டுள்ளன

**தெய்வம் இளைப்பாறுதல்**

ஒவ்வொரு ஊரிலும் உற்சவர் உலாவரும் போது, இடையில் இளைப்பாறுவதற்குப் பூப்பந்தல் போடப்படுகிறது. அதை ‘இளைப்பாத்தி’ என்கின்றனர். இவ்வாறு கடவுள் இளைப்பாறுவதாக மக்கள் நம்பிக்கைக் கொண்டுள்ளதைக் காணமுடிகிறது.

**வேட்டியப்பனை வணங்கிச் செல்லுதல்**

மொழலை கிராமத்தில் வேட்டியப்பன் கோயில் உள்ளது. இக்கிராம மக்கள் காட்டுக்குள் செல்லும்போது இத்தெய்வத்தை வணங்கிவிட்டு செல்கின்றனர். ஏனென்றால் இவ்வேட்டியப்பனை வணங்கிச் சென்றால் தங்களுக்குப் பெருந்துன்பம் ஏதும் நேராது என்பதில் நம்பிக்கை உடையவர்களாக இருக்கின்றனர்.

**கோயிலில் காணிக்கை**

புதூர் நாட்டில் தங்களின் நல்வாழ்வுக்காக வேண்டிக்கொள்வோர் காணிக்கையாக மண்ணாலான ஆண், பெண், விலங்கு போன்ற அமைப்புகள் உள்ள பொம்மைகளைச் சுண்ணாம்பும் காவியும் கலந்த வர்ணங்களோடு அலங்கரித்து கோயிலின் உட்சுவர்களிலே வைத்திருக்கின்றனர். இவ்வாறு பொம்மைகளை வைத்தால் தங்களுக்கு நல்வாழ்வு அமையும் என்பதில் நம்பிக்கைக் கொண்டவர்களாக உள்ளனர்.

**தெய்வம் பேசுதல்**

சித்தூர் கிராமத்தில் புற்றுக்கோயில் தானாகப் பிறந்தது என்கின்றனர். “அந்த இடத்தில் மாடு ஓட்டிச் செல்லும் போது, மாட்டின் காலடியில் இரத்தம் வந்ததாகவும், அதன்பின் அங்கிருந்த, ஒருவருக்கு அருள்வந்து, நான் பெருமாள் தோன்றியிருக்கின்றேன். எனக்குக் கோயில் கட்டுங்கள் என்று சொன்னதால் இவ்விடத்தை மக்கள் பார்த்தனர். அங்கே புற்று இருப்பதைக் கண்டனர். அதன் பின் புற்றினைச் சுற்றிலும் சிமெண்டால் கோயில்கட்டி வழிபட்டனர்”.(ஜவ்வாது மலை மக்கள், ப.38) என்று ஜே. ஆர். இலட்சுமி பதிவிடுகிறார். இவ்வாறு இறைவனே நேரில்வந்து பேசியதாக, மக்கள் நம்பிக்கை கொண்டதோடு கோயில்கட்டி வழிபாட்டினையும் மேற்கொள்கின்றனர்.

**கொல்லை முனி**

மேலூரில் உள்ள மக்கள், தங்களுடைய ஒவ்வொருவரின் நிலத்திலும் ‘கொல்லை முனி’ இருப்பதாக நம்பிக்கைகொண்டு வழிபடுகின்றனர்.

**முன்னோர்களைத் தெய்வமாக வழிபடுதல்**

ஜவ்வாது மலைவாழ் மக்கள் இறந்தவர்களைத் தங்களது நிலங்களிலேயே அடக்கம்செய்து விடுகின்றனர். அவர்களை ‘முன்னோடிக்காரர்’ என்று கூறி தெய்வமாக வணங்குகின்றனர். புலியூர் கிராமத்தில் உள்ள மக்கள் பலா மரத்தின் அடியில் முன்னோர்களின் நினைவாகச் சிறிய கற்களால்ஆன சமாதி அமைத்து இறைவனாக வழிபடுவதைக் காணமுடிகிறது. கற்களை முன்னோர்களாக நினைத்து வழிபடுவதில் நம்பிக்கை உடையவர்களாகக் காணப்படுகின்றனர்.

E-ISSN: 2581-7140
Special Issue: Vol. 2, April-2019 Available at: www.ijtlls.com

**அழிஞ்சி மரத்தைத் தெய்வமாக வழிபடுதல்**

மொழலை கிராமத்தில் “வேடி என்பவர் பாம்புக்கடிக்கு மருத்துவராக விளங்குகிறார். இந்தப் பாம்புக் கடியில் இருந்து மீண்டு வருவதற்குப் புழுங்கல் அரிசி, புளிப்பில்லாரசம் போன்ற உணவுகளைப் பத்தியமாக உட்கொண்டால் சரியாகிவிடும் என்பதில் நம்பிக்கை உடையவர்களாக மலைவாழ் மக்கள் இருக்கின்றனர்”.(ப.31) என்று ஜே. இலட்சுமி கூறுகிறார். பெரும்புள்ளி கிராமம் பசுமையான வயல்வெளி, மரங்களுக்கு நடுவே அமைந்துள்ளது. இங்குள்ள கோயிலினுள் அழிஞ்சிமரம் காணப்படுகின்றது. இம்மரம் மந்திரம் செய்தல், பேய் ஓட்டுதல் போன்ற செயல்களுக்குப் பயன்படுவதாக மக்கள் நம்புகின்றனர்.

**சோதிட நம்பிக்கை**

கம்புக்குடி கிராம மக்கள் சோதிடத்தில் நம்பிக்கையுடையவர்களாகத் திகழ்கின்றனர். அவருக்குக் ‘கனி சொல்லுபவர்’ என்று பெயரிட்டு அழைக்கின்றனர்.

**பேய், பிசாசு, ஆவி குறித்த நம்பிக்கை**

வசந்தபுரம் மலைக் கிராமத்தில் இறந்தவர்களுக்காக மொட்டை அடித்துக் கொள்ளும் பழக்கம் இல்லை. இறந்தவர்களைப் புதைப்பதற்குத் தனியாக சுடுகாடு அமைக்கப்பட்டுள்ளது. உடல்நலம் சரியில்லாது வெளியிடங்களுக்குக் கொண்டுசென்று அங்கு இறந்து விட்டால் அவர்களை ஊருக்குள் கொண்டுவரும் போது பல விதமான சடங்குகளைச் செய்கின்றனர். குறிப்பாக “ஊருக்குள் வரும்போது அந்த இடங்களில் விறகுச் சுள்ளிகளை வைத்து நெருப்பு மூட்டிய வண்ணம் வருகிறார்கள். அப்போதுதான் ஊருக்குள்ளே பேய், பிசாசு, கெட்ட ஆவிகள் உள்ளே வராது என்று நம்புகின்றனர் மலையாளிகள்”. (ப.114) என்று ஜே. ஆர். இலட்சுமி அவர்கள் கூறுவதின் மூலம் ஜவ்வாது மலையாளிகளின் பேய், பிசாசு நம்பிக்கையைத் தெரிந்துகொள்ளமுடிகிறது.

**மகாபாரதம் குறித்த நம்பிக்கை**

ஜவ்வாது மலையில் ‘அங்குத்தி ஜொனை’ என்ற சுனை உள்ளது. அதில் பெரிய சுனையை தர்மராஜா ஜொனை என்றும், சிறிய சுனையை கிருஷ்ணஜொனை என்றும் கூறுகின்றனர். மேலும் அதைவிட சிறியசுனையை அர்ஜுனன் ஜொனை என்றும் கூறுகின்றனர். மேலும் நகுலன் குளம், சகாதேவன் குளம் என்ற பெயருடன் குளங்கள் உள்ளன. இங்குத் துரியோதனர் பாம்பை ஏவிவிட்டதாகவும் இந்தப் பாறையில்தான் பஞ்சபாண்டவர்கள் படுத்திருந்ததாகவும் மக்கள் நம்புகின்றனர்.

**முடிவுரை**

ஜவ்வாது மலைவாழ் மக்கள் தெய்வத்தின்மீது நம்பிக்கை உடையவர்களாகக் காணப்படுகின்றனர். உற்சவர் உலாவரும் இடையில் தெய்வத்தை இளைப்பாற வைக்கின்றனர். மொட்டைபோடுதல், காதுகுத்துதல் சடங்குகளில் நம்பிக்கைக் கொண்டுள்ளனர். கீழூரில் வேந்தியப்பன் சிலை ஒரு நடுகல்லாக உள்ளது. அதனைக் கடவுளாக வழிபடுகின்றனர் மலையாளிகள். இந்த நடுகல் போரில் அல்லது வேட்டையின்போது வீர மரணம் அடைந்தவருக்கு எடுக்கப்பட்டதாகக் கூட இருக்கலாம். தங்களின் நல் வாழ்விற்காகத் தெய்வத்திற்குக் காணிக்கையிடுகின்றனர். இறந்தவர்களைத் தங்களுடைய நிலத்தில் புதைத்து தெய்வமாக வழிபடுகின்றனர். சோதிடத்தில் நம்பிக்கை உடையவர்களாகக் காணப்படுகின்றனர். மந்திரம் செய்தல், பேய் ஓட்டுதலுக்கு அழிஞ்சமரத்தைப் பயன்படுத்துகின்றனர். பாம்புக் கடிக்குப் பத்திய உணவை உட்கொண்டால் சரியாகும் என்ற நம்பிக்கைகளைக் கொண்டவர்களாக உள்ளனர் என்பதை இக்கட்டுரைவழி அறியமுடிகிறது.

தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்


International Journal of Tamil Language and Literary Studies

*A Bi-Yearly Peer-Reviewed International Journal*

**E-ISSN: 2581-7140**
**Special Issue: Vol. 2, April-2019** **Available at: www.ijtlls.com**

**நூல்கள்**

1. ந.ரத்தினக்குமார், பெ.க.பெரியசாமி ராஜா (தொப்பாசிரியர்கள்) தொல்லியல் தமிழர் வரலாற்றுத் தடங்கள் சிந்து சமவெளி முதல் கீழடிவரை (மதுரை : கருத்துப்பட்டறை, 2018), 13 – 14.

E-ISSN: 2581-7140
Special Issue: Vol. 2, April-2019 Available at: www.ijtlls.com

# வள்ளுவர் நவிலும் தமிழர் பண்பாட்டு வாழ்க்கை நலப்பண்புகள்
# Life Ethics of Tamil Culture by Valluvar

**ஸ்ரீ. ரெஜிலா குமாரி,** முனைவர் பட்ட ஆய்வாளர்,
தமிழ்க்கலை ஆய்வகம், தெ.தி. இந்துக்கல்லூரி, நாகர்கோவில்.

## Abstract

*Thirukkural is great social treatise of Tamil culture written by Thiru Valluvar. His ideas are really the ones of soulfully experienced ones. The Tamil people are very notable for moral and ethical life. The customs of the society and the attitude of the people are clearly portrayed in the work by Valluvar. Hence, this paper tries to bring out thr values from the work that has been taken from the antique literary sources.*

**Keywords:** Life Ethics, Tamil Culture, Valluvar

**முன்னுரை**

நீதிநூற்களுள் வாழ்வு நெறி காட்டும் வளம் மிகுந்த வழிகாட்டி நூலாக திருக்குறள் திகழ்கிறது. வான்புகழ் வள்ளுவர் அளித்த தெள்ளமுதாகிய திருக்குறள் உலகப் பொதுமறையாக விளங்குவதோடு வாழ்க்கைக்கு வழிகாட்டும் கலங்கரை விளக்கமாகவும் கற்கும் தோறும் புதுப்பொருள் தரும் நற்றமிழ் இலக்கியமாக தொன்றுத்தொட்டே வழங்கி வருகிறது. இதன் தொன்மையான கருத்துகள் ஒவ்வொன்றும் மக்களைச் செம்மையான பாதையில் நவிலச் செய்ய வைக்கின்றது. இன்று உலக மக்களால் தங்களுக்கு உரிய செல்வமாக பொதுச்சொத்தாக அரிய இலக்கணமாக போற்றப்பட்டு வரும் பெருமையை மிகவும் அடைந்து வருகிறது. இதனாலன்றோ பல ஆண்டுகளுக்கு முன்னமே நம் தேசிய கவிஞரான சுப்ரமணிய பாரதியார் தமது முன்னோக்கிப் பார்க்கும் திறனால் வள்ளுவன் தன்னை உலகினுக்கே தந்து வான்புகழ் கொண்ட தமிழ்நாடு என்றார்.

**பண்பாடு**

பண்பாடு என்னும் சொல்லானது ‘culture’ என்னும் ஆங்கிலச் சொல்லின் மொழிப்பெயர்ப்பு ஆகும். இவ்வாங்கிலச் சொல்லிற்கு ஒரு பொருள் உண்டு. ஒரு பொருள் தோன்முறை மக்கள் வரலாற்றியலுக்குப் பொருந்துவது. மற்றொருப் பொருள் திருத்தமுற முயலும் மனநிலையை குறிக்க வருவது ஆகும். பகுத்தறிவால் நல்லதன் நலனும் தீயதன் தீமையும் ஆய்ந்தறிந்து முழுமுதற் செழும்பொருள் பற்றோடு ஒழுக்கத்தை விழுமியதாக போற்றி மேன்மேலும் திருத்த திருத்தமுற முயலும் மனநிலையே உளப்பாங்கே பண்பாடாகும்.

**திருக்குறள் காட்டும் பண்பாடு**

திருக்குறளில் மக்கள் பண்பாடு பெறுதற்கு எண்ணற்ற கருத்துகளை வழங்கி வழிகாட்டினார் திருவள்ளுவர். அவர் இளமைத் தொட்டே கருத்து வளமிக்க நூல்கள் பல பயின்று அறமனப்பான்மையுடன் குடும்பத்தோடு வாழ்ந்து குழந்தைகள் மீதும் தாயின் மீதும் எல்லாவற்றுக்கும் மேலாக மக்கள் மீதும் தணியாத அன்பு கொண்டு நாம் வாழ நல்லுலகம் வாழ நமது பண்பாடு வளர அறிய கருத்துகளை திருக்குறளில் அள்ளி வழங்கியுள்ளார்.

E-ISSN: 2581-7140
Special Issue: Vol. 2, April-2019 Available at: www.ijtlls.com

மேலும் இல்லற வாழ்க்கையின் சிறப்பினை ஒப்பிடும் போது மேலை நாடுகளுக்கு பாரதப் பண்பாடு தருகின்ற கொடை என்றே கூறலாம். இல்லறமே அறங்களிலெல்லாம் தலையாய அறம் ஆகும். இல்வாழ்க்கை தான் என்றென்றும் நல்வாழ்க்கை. ஏனெனில் அங்கேதான் அன்பு தோன்றுகிறது. அன்பு இல்லையேல் அறம், பொருள் இல்லை. அறமும் பொருளும் இல்லையேல் இன்பம் இல்லை எனலாம்.

**திருமணம்**

திருமணம் புனிதமான ஒன்றாக தொன்மைக் காலம் தொட்டே கருதப்படுகிறது. இறைவனை நினைத்து பெரியோர்கள் ஆசீர்வாதத்தோடு இருவரும் அன்புடன் ஒருவருக்கொருவர் புரிந்துக் கொண்டு வாழ்க என்று வாழ்த்துகின்றனர். நம்முடைய திருமண வாழ்க்கை ஒருவரையொருவர் புரிந்துக் கொண்டு அன்பாகவும் ஒற்றுமையாகவும் உண்மையாகவும் அமைந்துவிட்டால் அதுவே சிறந்த பயனள்ள பண்புகளையுடைய வாழ்க்கையாக இருக்கும். இதை,

"அன்பும் அறனும் உடைத்தாயின் இல்வாழ்க்கை
பண்பும் பயனும் அது" (குறள்.45)

என்னும் குறள் மூலம் வள்ளுவர் குறிப்பிட்டுள்ளார்.

**தாய்மை**

எந்தவொரு தாயும் தான் பெற்ற பிள்ளையை மிகச் சிறந்த அறிஞன் என்று உலகம் பேசக் கேட்டால் அவனைப் பெற்றெடுக்கும் பொழுது பெற்ற மகிழ்ச்சியை விட அதிகமாக மகிழ்கிறாள். இதனை வள்ளுவர்,

"ஈன்ற பொழுதின் பெரிதுவக்கும் தன்மகனைச்
சான்றோன் எனக்கேட்ட தாய்" (குறள்.69)

எனக் குறிப்பிட்டுள்ளார்.

**மக்கட்பேறு**

எல்லா பேறுகளிலும் மிக உன்னதமான பெரும்பேறு மக்கட்பேறு தான். மக்கட்செல்வங்களைப் பெற்றெடுக்கும் தகுதிக்குரியவர்கள் பெண்களாவர். தம் பொருள், தம் மக்கள் என்று உரிமைக் கொள்ளக் கூடிய மக்கட்செல்வம் இல்லையென்றால் வாழ்வே பயனற்றது என்பதை,

"குழலினி தியாழினி தென்பர்தம் மக்கள்
மழலைச்சொல் கேளா தவர்" (குறள்.66)

வள்ளுவர் குறிப்பிட்டுள்ளார்.

**விருந்தினரை எதிர்பார்த்தல்**

தம் வீடு தேடி வருபவர்களை வரவேற்று உணவளித்து மேலும் மேலும் விருந்தினரை எதிர்ப்பார்த்து காத்திருக்கும் பண்பாடு உடையவர்களாக இருந்தனர் என்பதை,

"செல்விருந் தோம்பிச் வருவிருந்து பார்த்திருப்பான்
நல்விருந்து வானத் தவர்க்கு" (குறள்.86)

என்னும் குறள் மூலம் காணலாம்.

**விருந்தோம்பல்**

விருந்தோம்பல் என்பது தமிழர்களின் தலைச்சிறந்த பண்பாடு. பிறருக்கு வாரி வழங்குவதை இல்லற தர்மமாகவே அன்று பின்பற்றினர் என்பதை,

"மோப்பக் குழையும் அனிச்சம் முகம்திரிந்து
நோக்கக் குழையும் விருந்து" (குறள்.90)

E-ISSN: 2581-7140
Special Issue: Vol. 2, April-2019 Available at: www.ijtlls.com

அனிச்ச மலரை விட மென்மையான மனம் கொண்ட விருந்தினர்களை முகமலர்ச்சியின்றி வரவேற்றால் அவர்களின் முகம் வாடி விடும். எனவே விருந்தினர்களை முகமலச்சியோடு வரவேற்க வேண்டும் என்று வள்ளுவர் கூறுவதிலிருந்து அக்காலத்தில் விருந்தோம்பல் என்னும் வாழ்க்கைப் பண்பாடு முக்கியமான ஒன்றாக இருந்ததை அறிய முடிகிறது.

**சேவைச் செய்தல்**

குடும்பத் தலைவியானவள் தன்னுடைய தெய்வத்தை வணங்காது இருந்தாலும் தன்னுடைய கணவனைத் தெய்வமாகப் போற்றி வணங்குபவளாக இருந்தால் அவள் பெய் என்றால் மழை பெய்யும் அளவிற்கு சிறப்புப் பெறுவாள் என்பதை,

"தெய்வம் தொழாஅள் கொழுநற் றொழுதொழுவாள்
பெய்யெனப் பெய்யும் மழை" (குறள்.55)

என்னும் குறள் மூலம் காணலாம். மேலும், உலகில் தன்னையும் காத்துக் கொண்டு தான் கைப்பிடித்த கணவனின் சுகத்துக்கங்களையும் அவள் குழந்தைகளின் நலன்களில் பங்கேற்று அவள் சுற்றத்தாரையும் அரவணைத்து நல்ல சொற்களைப் பேசி எப்பொழுதும் சோர்வில்லாமல் மனதளவில் சுறுசுறுப்பாக இயங்குபவளே பெண். இதுவே பெண்ணின் சிறந்த இல்லறப் பண்பாடாகக் காணப்படுகிறது.

**முடிவுரை**

திருக்குறள் தனி மனிதனின் குறைகளையும் சமுதாயத்தின் குறைகளையும் போக்கி முழுமைத் தன்மை அடைய வழிவகுத்திருக்கிறது. தனிமனிதனை உருவாக்கினால் நல்ல சமுதாயம் உருவாகும் என்பது வள்ளுவர் கருத்து. ஒருவர் பண்பாட்டை அடைவதற்கு முதலாவது பண்பாட்டில் ஆழ்ந்தப்பற்றும் உறுதியான நம்பிக்கையும் கொள்ள வேண்டும். வாய்மை, அறமனப்பான்மை, கடவுள்பற்று, உறவுடன் உவந்து வாழும் உணர்ச்சி, நல்ல இலக்கியங்களை இடைவிடாது பயிலல் ஆகிய இவையும் பண்பாட்டிற்கு வேண்டியவையாகும்.

**துணை நூற்கள்**

1. புலவர் குழந்தை, திருக்குறள் புலவர் குழந்தை உரை வெளியீடு: சாரதா பதிப்பகம், ஜி 4, சாந்தி அடுக்ககம், 3 ஸ்ரீ கிருஷ்ணாபுரம் தெரு, ராயப்பேட்டை சென்னை 600014. ஏழாம் பதிப்பு 2014.
2. திரு சி.க.மணி கல்லக்குறிச்சி கோட்ட நடுகற்கள் வரலாறு சித்திரைச் செல்வி பதிப்பகம், தமிழகப் பழங்குடி மக்கள் ஆய்வு மையம்,40/1, ராசா நகர் வடக்கு, காந்தி சாலை, கல்லக்குறிச்சி கோட்டம் - 606202. முதற்பதிப்பு 2016.
3. விக்கிபீடியா

தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்
International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Special Issue: Vol. 2, April-2019
Available at: www.ijtlls.com


# சோழர் காலத் செப்புத் திருமேனிகள்
# Bronze Idols of the Chola Period

**முனைவர் ஜா.வளர்மதி,** உதவிப்பேராசிரியர்,தமிழ்துறை
அறிஞர் அண்ணா அரசு மகளிர் கலைக்கல்லுரி, வேலுர் மாவட்டம்.

## Abstract

*The paper scrutinizes the bronze idols belong to the Chola Pariod. The Cholas are very notable Tamil Kings who are very keen and magnanimous in building temples of immortal architecture and wroughting of unbelievable bronze idols. These idols are the evidences of their aesthetic sence. Today, many of the idols were smuggled for its valuable art and the quality of the metal. In such a sort of condition the tamil people have to know about these relics. Consequently, the study convey out the facts related to the study.*

**Keywords:** Bronze Idols, Chola Period

**முன்னுரை**

தமிழ்நாட்டில் செப்புத் திருமேனிகள் வடிக்கும் கலை சிறந்து விளங்கி இருந்தாலும், சோழர்களின் காலத்தில் வடிக்கும் கலை உன்னத நிலையை அடைந்தது எனலாம். செம்பில் சிறந்த உருவங்களைப் படைக்கும் கலை சங்க காலத்திலிருந்தே சிறந்து வந்திருக்கிறது என்பதற்கு சான்றுகள் உள்ளன. தமிழக கோயில்களில் வழிபாட்டுக்கு வைக்கப்பட்டுள்ள செப்புத் திருமேனிகள் உலக மக்களின் கவனத்தை கவர்ந்துள்ளன. இவை எழிலும், கற்பனை உருவமும் தன்னகத்தே நிறைந்து காணப்படுவதால் விலையில்லா செல்வங்களாக திகழ்கின்றன. அத்தகைய சிறப்பு மிக்க செப்பு திருமேனிகள் செய்த நிலைதனை ஆராய்வதே இவ்வாய்வு கட்டுரையின் நோக்கமாகும்.

**வரலாறு**

இந்தசெப்பு படிமம் வடிக்கப்பட்டுள்ள பாங்கு ஆடை, அணிகலன்கள் முடி அமைப்பு, உருவ அமைதி ஆகியவற்றைக் கொண்டு நோக்கும் பொழுது இது சோழர்களைப் படைப்பமைப்பிற்கு சிறந்ததாக கருதப்படுகிறது. இதன்காலம் கி.பி.11-ஆம் நூற்றாண்டின் முற்பகுதி எனலாம். இக்காலம் செப்புத் திருமேனிகளின் வாழ் காலமாகும். இக்காலத்தில் எடுக்கப்பெற்றுள்ள செப்பு திருமேனிகள் ஒவ்வொன்றும் தனித்தன்மை வாய்ந்தவை. “திருவெண்காடு ஏறூரும் பெருமான் செப்புத்திருமேனி முதலாம் இராசேந்திரன் கலைப் படைப்பிற்கு ஓர் சிறந்த எடுத்துக்காட்டு. இந்த அமைப்பில் வேறொரு திருமேனியை பார்க்க இயலாது. வேதாரண்யத்தில் (2) கிடைத்த காளை வாகன தேவர் திருவுருவம் சற்று மாறுபட்ட தலைக் கோலத்தைக் கொண்டுள்ளது. நாகை காயிதேமில்லத் மாவட்டம் நன்னிலம் வட்டம் “அம்பர் மாகாளம்” (3) திருமேனியை இப்படிமம் ஒத்துள்ளது. விழுப்புரம் மாவட்டத்தில் சோழர் கலைச் செப்புத் திருமேனிகள் மிகுதியாக கிடைக்காவிட்டாலும், கிடைத்துள்ள ஒரு சில செப்புத் திருமேனிகளில் அழகுமிக்கதாக திருமேனிகள் விளங்குகிறது. இம்மாவட்டத்தில்

E-ISSN: 2581-7140
Special Issue: Vol. 2, April-2019 Available at: www.ijtlls.com

கல்பட்டு என்ற ஊரிலிருந்து சேகரிக்கப்பட்ட இப்படிமம் தற்போது கடலூர் அரசு அருங்காட்சியகத்தில் காட்சிக்கு வைக்கப்பட்டுள்ளது.

ஆதிச்ச நல்லூர் என்ற இடத்தில் அகழாய்வில் செம்பாலான பல பொருள்கள் கிடைத்திருக்கின்றன. அவற்றில் 'அன்னை தெய்வம்' உருவம் கிடைத்துள்ளது. இவை கிறிஸ்துவிற்கு முன்னர் சுமார் 700 ஆண்டுகளுக்கு முற்பட்டவை. காவிரிப்பூம்பட்டிணத்தில் மேலையூர் என்ற பகுதியில் ஓர் மைத்ரேயர் உருவம் கண்டெடுக்கப்பட்டது. அது இப்பொழுது சென்னை அருங்காட்சியகத்தில் உள்ளது. கோயில்களில் செம்பாலான தெய்வ படிமங்களை அலங்கரித்து வீதியில் உலாவாக எடுத்துச் செல்வது தேவாரத் திருப்பதிகங்களில் குறிக்கப்பட்டுள்ளது. கி.பி.8ஆம் நூற்றாண்டைச் சார்ந்ததாகக் கருதப்படும் கோவை மாநகருக்கு அருகில் உள்ள சிங்கார நல்லூர் என்ற இடத்தில் ஓங்கி உலகளந்த உத்தமன் ஆகிய திரிவிக்கிரமனின் செப்புத்திருமேமனி ஒன்று வழிபாட்டில் உள்ளது.

**செப்புக் கலையின் பொற்காலம்**

சோழப் பெருமன்னர்கள் பெருங்கோயில்கள் பல எடுத்தனர். ஏராளாமான செப்புத் திருமேனிகள் ஆதித்த சோழன், பராந்தக சோழன் ஆகிய மன்னர்களின் காலத்தே செய்தளிக்கப்பட்ட செப்புத் திருமேமனிகள் அழகானவை. பராந்தக சோழனின் மகன் கண்டு ஆராதிக்க சோழன் சிறந்த சிவபக்தி நிறைந்தவன் ஆகவே அவனது தேவியார் செம்பியன் மாதேவியர் பல கோயில்களுக்கு வெள்ளி, செம்பு, செப்பு என்ற படிமங்களை படைத்தளித்து உள்ளனர். தமிழகத்தில் உள்ள செப்பு திருமேனிகள் மிகவும் எழில் வாய்ந்தவை. நன்னிலம் வட்டத்தில் கோனேரி ராஜபுரம் என்ற இடத்தில் இத்தேவி செய்து வைத்த ஒப்பற்ற செப்புத் திருமேனிகள் இன்றும் உள்ளன. தஞ்சை மாவட்டத்தில் பல கோயில்களில் இத்தேவியார் அளித்த செப்புத் திருமேனிகள் உள்ளன.

**ஆடவல்லான்**

தமிழகம் தோற்றுவித்த சிறந்த கலைப்படைப்புகளில் "ஆடவல்ல பெருமானாக நடராஜ மூர்த்தியாக உள்ள உருவே உலகோர் அனைவரின் கருத்து கவனத்தை கவர்ந்தது. நடராஜ உருவிலே வீசி எடுத்த பாதம் என்றும் "குறிஞ்சித திருவடி என்றும் சதுர நடம் என்றும் பல்வேறு தாண்டவங்கள் உண்டு. இவையாவற்றிலும் தில்லையில் ஆடுகின்ற ஆனந்த தாண்டவம் என்னும் ஆடவல்லான் என்ற படிம நிலையே அழகு நிறைந்தது. ஆனந்த தாண்டவம் புரியும் ஆடவல்ல பெருமானின் செப்புத் திருமேனி இல்லாத கோயில்கள் தென்னகத்தில் இல்லை. இவ்வுருவம் பராந்த சோழனுடைய காலத்திலிருந்து தான் காணப்படுகிறது என வரலாற்று ஆசிரியர்கள் கருதுகின்றனர்.

உத்தம சோழனும் அவரது தேவியாரும் பல செப்பு உருவங்களை செய்து கோயில்களுக்கு அளித்திருக்கின்றனர். தமிழகமே வியக்கும் வண்ணம் தஞ்சையில் பெருங்கோயிலைத் தோற்றுவித்த "இராஜராஜப்பெருந்தகை" பல சிறந்த தெய்வ உருவங்களை செம்பில் வடித்து அளித்திருக்கிறான். இவ்வாறு அளிக்கப்பட்ட பல செப்பு உருவங்களை தஞ்சை பெருங்கோயிற் கல்வெட்டுகள் பல குறிக்கின்றன. உருவங்களின் அமைதியை எவ்வளவு சிறப்பாக கல்வெட்டில் குறித்துள்ளனர் என்பதற்கு கல்வெட்டுகள் சான்று கூறும்.

**இருவகை**

செப்பு திருமேனிகள் இருவகைப்படும் முழுவதும் கனமாகச் செய்யப்பட்ட திருமேனிகள் என்றும் உள்ளே பொள்ளலாகச் செய்யப்பட்ட திருமேனிகள் என்றும் இருவகைப்படும். தமிழகத்தில் செய்யப்பட்டுள்ள திருமேனிகள் அனைத்தும் முழுவதும் கனமாகச் செய்யப்பட்ட செப்பு உருவங்கள் ஆகும். அவற்றில் பல வாகனங்கள் களப்பொள்ளாகச் செய்யப்பட்டவை.

E-ISSN: 2581-7140
Special Issue: Vol. 2, April-2019 Available at: www.ijtlls.com

**தேன்மெழுக்கு முறை படிமம்**

செப்பு படிமங்களைச் செய்யும் கலை இன்றும் தமிழகத்தில் நிலைத்துள்ளது. எந்த உருவ உருவை செய்ய வேண்டுமோ அவ்வுரு போல் முதலில் தேன் மெருகினால் செய்வர் மெழுகினால் ஆன உருவின் மேல் "புற்று" மண் பூசி நிழலிலே உலரவைப்பர். இதன் பின்புறத்தே தலையிலும் இடையிலும் அடியிலும் துளைகள் இருக்கும். இது நன்கு உலர்ந்த பின்னர் தீயிலே இடுவர். மண்ணில் உள்ள மெழுகிருந்த பகுதி அச்சாக நிற்கும். பெரும்பகுதி செம்பும், மிக சிறிய அளவில் பித்தளை, தங்கம், வெள்ளி, வெண்கலம் கலந்து உருக்கி அச்சின் பின் நடுவிலுள்ள துளையின் வழியாக ஊற்றுவர். தலையிலும், அடியிலும் உள்ள துளையின் வழியாக உலோக குழம்பு வெளிப்படும். அப்பொழுது அச்சு முழுவதும் உலோகம் பரவி இருக்கிறது என்று அறிவர். பின்புதான் அதனை குளிர வைப்பர். ஊற்றிய உலோகம் கெட்டியாகும். பின்னர் சிற்றுளி கொண்டு திறனுக்கு ஏற்ப செதுக்கி ஏழுலுற அமைப்பர். இம்முறையே மெழுக்கு முறை என்பர்.

தமிழகத்தில் செப்பு உருவங்கள் செய்யும் போது மண்ணாலான அச்சை உடைத்து விடுவதால் மற்றொரு உருவம் அதே அச்சிலிருந்து செய்ய முடியாது. மீண்டும் மெழுகினால் படிமங்கள் செய்ய வேண்டும்.

**படிமங்கள் உலா**

தமிழகத்து நூலகளில் சிறந்த குறிப்பு ஒன்று காணப்படுகிறது. ஓர் ஊரில் தெய்வ உருவை செம்பினால் செய்ய விழையும் போது மெழுகினால் செய்த உருவை அலங்கரித்து ஊர் முழுவதும் வலமாக எடுத்துச் செல்வர். பின்னரே மண்ணிட்டு அச்சு செய்வர். இவ்வாறு ஊர்வலமாக செல்வதால் ஊரார்களின் ஒப்புதலையும் அவர்கள் விரும்பினால் வேண்டிய மாற்றங்களை செய்ய வாய்ப்புண்டு.

உருவம் முழுவதும் வார்த்து செதுக்கியமைத்து அதன்பின்னர் அவற்றை உரிய பீடங்களிலே அமைக்கும் போது பல இரத்தினக் கற்களைப் பீடத்திலிட்டு பின்னர் தெய்வ உருவை அப்பீடத்தில் பொருத்துவர். பின்னர் இதற்கு இரத்தின நியாசம் செய்தல்" என்று பெயர். கருவறை தெய்வச் சிலைகளை பிரதிஷ்டை செய்கிறோமோ அதுபோலவே செப்பு திருமேனிகளுக்கு இச்செயல் அமையும் உருவை தெய்வமாக மாற்றும் கடைசிச் செயல் கண் திறப்பது ஆகும். கண் திறப்பது சிறந்த விழாவாக கொண்டாடப்படும்.

இதற்கு முன்னர் வைக்கப்பெற்றுள்ள விஜய ராகவப்பெருமாள் ஸ்ரீதேவி, பூதேவி, போறகத்திப்பெருமாள், ஆண்டாள் ஆகிய உற்சவ மூர்த்திகள் செப்புத் திருமேனிகளாக காட்சியளிக்கின்றனர். இத்திருமேனிகள் கி.பி.14-ஆம் நூற்றாண்டைச் சார்ந்தவையாகும்.

போறகத்திப் பொருமாள் செப்புத் திருமேனி மிகவும் அழகாக வடிக்கப் பெற்றுள்ளது. சதுரபீடத்தின் மீது உ ள்ள பத்ம பீடத்தில் நின்ற நிலையில் இடது முன் கையை கதையின் மீது ஊன்றியும், இடது பின்கையில் சங்கும், வலது முன்கை அபய முத்திரையும், வலது பின்கையில் சக்கரத்தையும் ஏந்திய நிலை. மார்பில் புரிநூல் மூன்று பிரிவாகப் பிரிந்து செல்கிறது. வலது பக்க மார்பில் 'திருமரு' கழுத்தில் அணி. காதுகளில் மகர குண்டலங்கள், கிரீட மகுடம், தலையின் பின்பக்கம் சிரச்சக்கரம் காட்டப் பெற்றுள்ளது. பாதங்களில் பாதச்சங்கிலி, கணுக்காலில் இருந்து இடுப்புவரை ஆடை. ஆடையின் மீது 'கீர்த்திமுகக் கச்சு' என்று இருந்ததையும் காண முடிகிறது.

தொண்டை மண்டலத்தில் மண்டலத்தில் சிற்பக்லையும் சிறந்து விளங்கியது. கூத்தாடுபவர்களின் சிற்பங்கள் காஞ்சி தான்தோன்றீசுவர் கோயிலில் காணக்கிடக்கிறது. (கி.பி. 5,6ஆம் நூற்றாண்டு). மாமல்லையில் பாறைச் சிற்பங்களும் குடவரைச் சிற்பங்களும்

E-ISSN: 2581-7140

Special Issue: Vol. 2, April-2019 Available at: www.ijtlls.com

காணப்படுகின்றன. பல்லவர் சிற்பங்கள் முப்புரி நூல், பரந்த மார்பு ஆகியவற்றுடன் எளிமையாக விளங்குகின்றன. சோழர் காலச் சிற்பங்களும் செப்புத் திருமேனிகளும் இப்பகுதியில் காணப்படுகின்றன. மைலாப்பூர் கோலவிழியம்மன் கோயிலின் காளியம்மன் செப்புத் திருமேனியும் திருவொற்றியூர் தட்சிணாமூர்த்தி செப்புத் திருமேனியும் சிறந்த எடுத்துக்காட்டுகளாகும்.

**தொகுப்புரை**

சோழர் காலத் செப்புத் திருமேனிகள் பற்றிய ஆய்வில் தமிழரின் தொல் கலைகள் சிறந்து விளங்கியுள்ளன. அவற்றுள் செப்புக் கலையின் பொற்காலம், ஆடவல்லான், தேன்மெழுக்கு முறை படிமம், படிமங்கள் உலா, சிற்பங்கள், கோயில்கள் முதலியன இவ்வாய்வில் முக்கியத்துவம் பெறுகின்றன.

**பார்வை நூல்கள்**

2. ந.ரத்தினக்குமார், பெ.க.பெரியசாமி ராஜா (தொப்பாசிரியர்கள்) தொல்லியல் தமிழர் வரலாற்றுத் தடங்கள் சிந்து சமவெளி முதல் கீழடிவரை (மதுரை : கருத்துப்பட்டறை, 2018), 13 – 14.
3. சம்பந்தமூர்த்தி, வைகைக்கரையிலே (மதுரை : வேலவன் அச்சகம், 1978) 9.

E-ISSN: 2581-7140
Special Issue: Vol. 2, April-2019 Available at: www.ijtlls.com

# சோழகேரளன் கல்வெட்டுகள் உரைக்கும் தமிழர் பண்பாட்டுச் செய்திகள்
# Tamil Cultural Facts as Revealed in the Culverts of Cholakeralan

**முனைவர்.ச.வனிதா,** உதவிப் பேராசிரியர்,
தமிழியல்துறை, தருமபுரம் ஞானாம்பிகை அரசு மகளிர் கல்லூரி, மயிலாடுதுறை.

## Abstract

*The study of the paper extends the facts related to the culvert edicts of Cholakeralan and his donations to charity and other sorts of philanthrophical aids done to his people. The culverts are the sole proofs of the kings ruled the Tamil country's Chola's reign and reigndom. The assessment tells of the edicts in the culverts that tell the title names of the king Rajendra Chola and his creation of cities on the time of his reign. The culverts taken as sources help us to know the culture of the Tamil people through the culverts edicted by the great Chola kings.Hence, the study helps to know the cultural ethics and informations of Tamil Culture.*

**Keywords:** Cholakeralan, Culverts, Tamils, Tamil Culture.

முதலாம் இராசேந்திரசோழனின் நிர்வாகத் திறமையால் அமைந்த பெயரே சோழகேரளன் என்பதாகும். இராசேந்திரசோழன் தான் வென்ற நாடுகளுக்குத் தனது மைந்தர்களையே ஆளுநராக நியமித்தார். எந்த நாட்டுக்கு அவர்கள் அனுப்பப்பட்டாலும் அவர்களுக்கு முன் 'சோழ' என்ற அடைமொழியை இணைத்துக் கொண்டனர். சோழகங்கன், சோழலங்கேசுவரன் போன்றவை எண்ணத்தக்கன. அந்தவரிசையில் சோழகேரளன் என்ற பெயரும் எண்ணத்தக்கது. எனவே, இவன் இராசேந்திரனின் மகனாக இருக்கலாம் என்று கல்வெட்டு அறிஞர் இல.தியாகராசன் தெரிவித்துள்ளார். (இல.தியாகராசன், சோழகேரளன், ப.1) இச்செய்திகளை அறிந்து கொள்ள திட்டக்குடிவட்டத்தில் வெள்ளாற்றங்கரையில் அமைந்துள்ள வசிட்டபுரம் கோயில் கல்வெட்டு பெரிதும் உதவுகிறது. இக்கோயிலில் நாற்பதுக்கும் மேற்பட்ட துண்டுத்துண்டான கல்வெட்டுகள் உள்ளனஎன்றும் இவை இன்னும் மைய அரசால் படியெடுக்கவில்லை என்றும் இல.தியாகராசன் குறிப்பிட்டுள்ளார்.

கல்வெட்டு முதலாம் இராசேந்திரசோழனின் இருபத்து மூன்றாவது ஆட்சிஆண்டில் எழுதப்பட்டது. இதனால் அறியலாகும் பண்பாட்டுச் செய்தி வடகரைராசேந்திர சிங்கள வளநாட்டுப் பிரம்மதேயம் தனியூர் ஸ்ரீமுடிகொண்டசோழச் சதுர்வேதிமங்கலத்தில் செயமல்லீசுவரம் என்ற புதிய சிவன்கோயில் திருமண்டபம் கற்றளியாக எடுக்கப்பட்டது. இக்கோயிலின் வழிபாட்டிற்கு நெருப்பறைபட்டு என்ற ஊரிலிருந்து ஐம்பத்துஇரண்டு வேலி நிலம் காணிக் கடனாக வருகின்ற 1703 கலம் நெல் நிவந்தமாகவும் விடப்பட்டது என்று கூறுகிறது. வழிபாடு நிகழ்த்துவதற்கு நிலங்கள் அளிக்கப்பட்ட பண்பாடு இதனால் புலப்படுகிறது.

**உணவுச்சாலை**

சோழகேரளன் பெயரில் உணவு உண்பவர்களுக்கு உணவுச் சாலை ஏற்படுத்தினர். இச்சாலைகளில் உணவு படைப்பதற்காக ஏற்படும் நெல் போன்ற செலவுகளுக்கு

E-ISSN: 2581-7140
Special Issue: Vol. 2, April-2019 Available at: www.ijtlls.com

முடிகொண்டசோழச் சதுர்வேதிமங்கலத்தைச் சேர்ந்த தேனூர் வாட்கை, மாம்பூண்டி, வடகிள்ளிநல்லூர் ஊர்களை இணைத்து சோழகேரளநல்லூர் என பெயரிட்டுள்ளனர். ஊர்களுக்கு சோழமன்னர்களின் பெயர்களை இடும் மரபு இதனால் புலப்படுகிறது. ஈண்டு இராசேந்திரன் கங்கையை வெற்றி கொண்டு வந்ததன் அடையாளமாக கங்கைக்கொண்டசோழபுரம் என்ற நகரை உருவாக்கியுள்ளமை ஒப்பிடத்தக்கச் செய்தியாகும். இவ்வூரை வரியில்லா ஊராக அறிவித்துள்ளார். அப்பகுதிக்கு இறையிலைநிலம் என்று அழைக்கப்பட்டது. உணவுச் சாலையை நிர்வகிக்க சைவேந்திரதேவன் என்பவரை நியமித்துள்ளனர். இந்த ஆணையை புரவுவரிதிணைக்களநாயகம் தலைமையில் பல அதிகாரிகளைக் கொண்டு செயல்படுத்தியுள்ளனர்.

முதலாம் இராசேந்திரசோழனின் 23வது ஆட்சி ஆண்டில் அதாவது கி.பி.1035 இல் எழுதப்பட்ட கல்வெட்டுச் செய்தியாக்கத்தில் வடகரைராஜேந்திர சிங்கவளநாட்டுப் பிரம்மதேயம் தனியூர் ஸ்ரீமுடிகொண்டசோழச் சதுர்வேதிமங்கலத்தில் ஐயமல்லீசுவரம் என்ற புதிய சிவன் கோயில் திருமண்டபம், அஷ்டபரிவாரங்களுடன் கற்றளியாகஎடுக்கப்பட்ட நிகழ்வுகள் இடம் பெற்றுள்ளன. இச்செய்திகளால் கோயில் அமைக்கும் பண்பாடு தமிழ் மன்னர்களிடம் இருந்ததை வெளிப்படுத்தியுள்ளனர். நெல் நிவந்தம் விடப்பட்ட நிகழ்வும் பண்பாட்டு வரலாற்றை அறிய உதவுகிறது.

ஐயமல்லீசுவரர் கோயிலுக்கு நந்தாவிளக்கு எரிக்ககங்கைகொண்டசோழமிலாடுடையார் என்ற மலையமாநாட்டு மன்னரும் அவருடைய மனைவியரும் பசுக்களைத் தானமாக வழங்கிய செய்திஅறியக்கிடைக்கிறது. பண்டைக்காலம் முதலேயே பசுக்களைத் தானமாகக் கொடுத்துள்ள நிகழ்வு எண்ணத்தக்கப் பண்பாட்டு நிகழ்வாகும். சோழ மன்னர்களும் தங்கள் பெயருக்கு முன்பு அடை சேர்த்து சொல்லும் மரபு இருந்துள்ளமையை அறிய முடிகிறது. முடிகொண்ட சோழச்சதுர்வேதிமங்கலம் என்பதால் முடிகொண்ட அடைப்பெயர் இடம் பெற்றுள்ளமையைக் காணலாம். இதுவும் ஒருபண்பாட்டு மரபு ஆகும். ஐயமல்லீசுவரம் கோயில் கல்வெட்டுச் செய்திகளில் ஒன்று 'ஸ்ரீமதாஹத்துக்கு' என்ற தொடர் இடம் பெற்றுள்ளது. இத்தொடர் மொழியும் பொருள் இறந்தவர்களின் ஆன்ம சாந்தி பெறவும் மற்றும் தண்ணீர் தாகத்தை தணிப்பதற்கும் செய்யக் கூடிய வழிபாட்டுச் சடங்குகளைக் குறிப்பதாகும். இச்சடங்கு முறையான பண்பாடு இன்றும் தமிழ் மக்களிடையே உள்ளமையைப் பார்க்கவியலும். இறந்தவர் படுக்கவைக்கப்பட்ட இடத்தில் பதினாறு நாட்கள் செம்பு நிறைய தண்ணீரும் விளக்கும் ஏற்றுவர். இதனை மோட்சதீப வழிபாடு என்றும் அழைப்பர்.

இதனை மெய்ப்பிக்கும் செப்பேட்டுச் செய்தி ஒன்றும் காணத்தக்கது. சுந்தரசோழனின் திருச்செங்கோட்டுச் செப்பேட்டில் கொல்லிமழவர் பற்றிய செய்தி இடம் பெறுகிறது. கொல்லிமழவனின் மகன் பிரதிகண்டன் இறந்த தன் தந்தையின் ஆன்மாவைத் தணிப்பதற்குத் தூசியூர் என்ற இடத்தில் அமைந்திருக்கும் திருக்கற்றளிபரமேசுவரர்க்கு நிலக்கொடை அளித்தார். இதனை "ஸ்வஸ்திஸ்ரீ கொல்லிமழவன் பிரதிகண்டன் சுந்தரசோழனேன் எங்களாச்சநீடித்துப் படஅவர் ஸ்ரீமதாஹத்துக்குச் சிறுபாடு கல்லோடு குழிக்குத் தென்மேற்கு தூசியூரில் திருக்கற்றளிபரமேசுவரர்க்கு செய்துகுடுத்தேன் பிரதிகண்டன் சுந்தரசோழனேன்"என்று இடம் பெற்றுள்ள வாசகத்தால் அறியலாம்.

முதலாம் பராந்தகன் ஒன்பதாம் நூற்றாண்டில் காளஹஸ்தியில் பள்ளிப்படைக் கோயில் ஒன்றை எழுப்பினான். இக்கோயிலில் அந்தணர்கள், மகாவிரதம் மேற்கொள்வோர், தபசிகள், பல சமயத்தையும் சேர்ந்த பக்தர்கள் உள்ளிட்ட ஆயிரம் பேர்களுக்கு உணவளிக்க நிலம் வழங்கிய பண்பாட்டு நிகழ்வு இடம் பெற்றுள்ளது. பசிப்பிணி போக்குவது மன்னராட்சிக்

E-ISSN: 2581-7140
Special Issue: Vol. 2, April-2019 Available at: www.ijtlls.com

காலத்தில் மிகப் பெரிய பண்பாடாக இருந்தது. அக இலக்கியங்களும் அற இலக்கியங்களும் பெரிதும் போற்றுவது விருந்தோம்பலைத்தான். அந்த அறவழிப் பண்பாடு கல்வெட்டுகளிலும் எதிரொலிக்கச் செய்துள்ளமை எண்ணத்தக்கதாகும்.

மேலும், சோழகேரளதேவர்க்கு ஸ்ரீமதாஹத்துக்கு இத்தேவர் கோயிலில் உண்பார்க்குச் சாலை வைக்கப்பட்டது. சோழகேரளன் சாலைக்குச் சாலைபோகமாக அமைந்திட சோழகேரளநல்லூர் என்ற ஊர் இறையிலியாக (வரி இல்லாத நிலமாக) விடப்பட்டது. அதிலிருந்து கிடைக்கும் நெல்லைக் கொண்டு இச்சாலையில் உணவு படைக்கப்பட்டது. இக் கல்வெட்டு முதலாம் இராசேந்திரனின் ஆணையாக 23வது ஆட்சி ஆண்டில் எழுதப்பட்டுள்ளது. இக்கோயிலுக்கும் சாலைக்கும் வழங்கப்பட்ட இறையிலி மன்னரின் 21வது ஆண்டு முதலே அதாவது (கி.பி.1033ஆம் ஆண்டு முதலே) நடைமுறைப் படுத்தப்பட்டது. இதிலிருந்து கி.பி.1033க்கு முன்பே சோழகேரளன் இறந்து விட்டார் எனத் தெரிகிறது. இச்சாலை புதிதாக கட்டப்பட்ட ஜயமல்லீசுவரத்துக் கோயிலில் அமைக்கப்பட்டது. எனவே, இக்கோயில் சோழகேரளன் நினைவாகக் கட்டப்பட்ட பள்ளிப்படை கோயில் எனலாம். ஜயமல்லன் என்பதும் சோழகேரளனின் சிறப்புப் பெயராக இருக்கலாம்.

இவ்வாறு சிறப்புப் பெயருடன் பள்ளிப்படை அமைக்கும் பண்பாட்டு மரபு இருந்துள்ளமைக்கு மேலும் பல சான்றுகள் உள்ளன. முதலாம் ஆதித்த சோழருக்கு வாகீசபண்டிதன், கோதண்டராமன் என்ற பெயர்கள் இருந்தன. இப்பெயரில் இவருக்குக் கட்டப்பட்ட பள்ளிப்படைக் கோயில் “பள்ளிப்படைவாகீஸ்வரபண்டிதபடாரர் ஸ்ரீகோதண்டராமீஸ்வரமாகிய ஆதித்யேஸ் வரகத்து ஆள்வார்” என அமைந்துள்ள தொடர் எண்ணத்தக்கது. இரண்டாம் இராசராச சோழனின் (கி.பி.1146-11-66) சிறப்புப் பெயர் இராசகம்பீரன் என்பதாகும். இப்பெயரில் தான் இவருக்கு பள்ளிப்படை இராசகம்பீரஈஸ்வரம் என்ற கோயில் எழுப்பப்பட்டுள்ளது என தாராசுரத்துக் கல்வெட்டு மொழிகிறது. இவ்வாறே சோழகேரளனுக்கு அவருடைய பெயரான ஜயமல்லன் என்ற பெயரில் கட்டப்பட்ட தேஜயமல்லீசுவரம் கோயில். இவ்வாறு மன்னன் யெரால் கோயில் கட்டும் பண்பாட்டு மரபு எண்ணத்தக்கது.

தண்ணீர்பந்தல் வைத்த நிகழ்வைப் பதியும் மற்றொரு கல்வெட்டுச் செய்தி எண்ணத்தக்கது. வடார்க்காடு மாவட்டம் வந்தவாசிக்கு அருகில் உள்ள பிரம்மதேசம் என்ற ஊரில் கி.பி.1044ல் முதலாம் இராசேந்திர சோழர் இறந்து விடுகிறார். அப்போது அவரின் மனைவியரில் ஒருவரான வீரமாதேவி என்பவரும் உடன் கட்டை ஏறி இறந்து விட்டார். வீரமாதேவியின் சகோதரர் இறந்துவிட்டதன் சகோதரியின் ஆன்மாதாக சாந்தி பெற்று அமைதியடைய வேண்டும் என்பதற்காக தண்ணீர்பந்தல் ஒன்றை இவ்வூரில் நிறுவினார். இதனை சிவன் கோயில் கல்வெட்டு செய்தியாக வெட்டிப் பரப்பியது. இக்கல்வெட்டு கி.பி.1044ஆம் ஆண்டைச் சார்ந்தது.

**கல்வெட்டுவாசகம்**

“உடையார் ஸ்ரீராஜேந்திரசோழதேவர் சிவலோகத்துக்கு எழுந்தருளின திருப்பள்ளிப் படையிலேயே உடலை பிரம்மன் பாதத்தேறவும் சிவலோகத்துக்கு எழுந்தருளின நம்பிராட்டியாவீரமஹாதேவியற்கு ஸ்ரீமதாஹத்துக்கு இவருடன் பிறந்த ஸேநாபதிகள் மதுராந்தகனானபரகேசரிவேளார் வைத்த தண்ணீர்பந்தல்” என்று மிக அழகாகக் கூறுகிறது. (இல.தியாகராசன்,சோழகேரளன், ப.9) கல்வெட்டுகளில் மன்னர்களின் பெயர்களுக்கு முன்பு அடைசேர்த்து அழைத்துக் கொள்ளும் மரபுப் பண்பு இடம் பெற்றுள்ளது.

**E-ISSN: 2581-7140**

**Special Issue: Vol. 2, April-2019** **Available at: www.ijtlls.com**

மன்னர்கள், புதிதாகக் கோயில்களைக் கட்டுதல், உணவுச் சாலைகள் அமைத்தல், இறந்தவர்களின் ஆன்மா சாந்தியடைய தண்ணீர் பந்தல் அமைத்து பண்பாட்டு மரபு காத்தனர். அவர்களின் இராசேந்திரனின் மகனானசோழகேரளனும் அவன் நினைவாகப் பின்வந்தோரும் இச்செயல்களைச் செய்தனர் என்பது இவ்வாய்வின் மூலம் புலனாகிறது.

**பயன்மை நூல்கள்**

1. ARE 234 of 1928-29.
2. இல.தியாகராசன்,சோழகேரளன்
3. S.R.பாலசுப்ரமணியன், Later Chola Temples.
4. S.I.Vol.III, No.142, No.589

தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்
International Journal of Tamil Language and Literary Studies 
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Special Issue: Vol. 2, April-2019 Available at: www.ijtlls.com

# கரந்தைச் செப்பேட்டுத் தொகுதியின் மாண்பு
# The Nobility of Karantai Copper Plates

**டாக்டர் வே. விக்னேசு,** தமிழ் உதவிப்பேராசிரியர்,
பூ.சா.கோ. கலை அறிவியல் கல்லூரி, கோயம்புத்தூர் - 14.

## Abstract

*The paper tries to sort out the Karanthaai Coperplates of tha Chola kings. These are the very antique ones and made systematically. In the Indian copper plates history, these are the ones which are multitude in numbers. The inscriptions tells of the merits of the Sangam. Hence, the study delineates the related facts from the explanations found on the plates.*

**Keywords:** Nobility, Karantai, Copper Plates, Chola Kings

### தோற்றுவாய்

செந்தமிழ் நாட்டின் வரலாற்றைக் கணித்தெழுதுதற்கு முதன்மைச் சான்றுகளாக விளங்குவன கல்வெட்டுகள், செப்பேடுகள், சுவடிகள், இலக்கணவிலக்கியங்கள் என்றின்னவாம். தமிழரின் அறிவுப் பதிவுகளின் நிலைகலன்களாகத் திகழும் இவற்றால் நந்தமிழகத்தை ஆட்சி செய்த மாட்சிமை தங்கிய மன்னர்கள்தம் வரலாறுகளும், அக்கால அரசியல், சமுதாயம், பொருளாதாரம், அறநிலைகள், சமயவளர்ச்சி, நிலப்பாகுபாடு என்றின்னோரன்னவும் தெள்ளதிற் புலனாகின்றனவாம். அவ்வகையில், இற்றைக்குக் கிடைத்திருக்கும் சோழர்காலச் செப்பேடுகளுள் குறிக்கத்தகுந்த கரந்தைத் தமிழ்ச்சங்கத்தின் முதலாம் இராசேந்திர சோழனின் செப்பேட்டுத்தொகுதியின் சிறப்புக்களைச் சாற்ற எழுந்ததே இக்கட்டுரையாம்.

### சோழர்களின் செப்பேடுகள்

கருங்கல்லிற் பொறிக்கப் பெற்றனவாய கல்வெட்டுகள் காலவெள்ளத்தாலும் பகையினாலும் அழிக்கப்பட்டு மறைந்து போகுஞ்சூழல் ஏற்படுமென்பதை நன்குணர்ந்த நம்முன்னோர்கள், அதன் நேர் பிரதியாக நின்று நிலவும் வகையில் செப்புத் தகடுகளிலும் சாசனச் செய்திகளைச் செதுக்கி வைத்தனர். இம்மரபுப்படி உருப்பெற்ற செப்பேடுகள் தனித்தும் பல ஏடுகளையுடைய தொகுதிகளாகவும் கிடைத்துள்ளன. அவற்றுள், கி.பி.957 முதல் 970 வரையில் சோழநாட்டை ஆட்சி செய்த சுந்தரசோழன் எனும் பெயர் கொண்ட இரண்டாம் பராந்தகனின் ‘அன்பில்’ செப்பேடுகளே சோழமன்னர்கள் வெளியிட்ட செப்பேடுகளிற் காலத்தாற் முற்பட்டதாகக் கிடைத்துள்ளன.

அன்றியும், முதலாம் இராசராசனின் ஆனைமங்கலச் செப்பேடுகள், முதலாம் இராசேந்திரனின் திருவாலங்காட்டுச் செப்பேடுகள், வீரராசேந்திரனின் சாராலச் செப்பேடுகள், முதலாம் குலோத்துங்கனின் ஆனைமங்கலச் செப்பேடுகள் என்றின்னவும் சோழப் பேரரசின் வரலாற்றைப் பறைசாற்றுவனவாய்த் திகழ்கின்றன.

### கரந்தைச் செப்பேடுகள்

சோழப் பேரரசின் தலைநகராய்த் திகழ்ந்த தஞ்சையம்பதியில் காவிரியின் கிளையாறாகிய வெண்ணாற்றிற்கும், வெண்ணாற்றின் கிளையாறாகிய வடவாற்றிற்கும் நடுநிற்கும் சமவெளிப்பகுதியாக அமைந்த பழைமையான ஊரே ‘கருந்திட்டைக்குடி’ ஆகும்.

E-ISSN: 2581-7140
Special Issue: Vol. 2, April-2019 Available at: www.ijtlls.com

இதன் மரூஉப் பெயரே 'கரந்தை' என்பதாம். முதற் பராந்தக சோழனால் வெட்டுவிக்கப்பட்ட வடவாற்றின் வடகரையில், சங்கம் நிறுவிய துங்கன் த.வே.இராகிருட்டினப் பிள்ளையவர்களால் 1911 ஆம் ஆண்டு தோற்றுவிக்கப்பட்டதும் செந்தமிழ்ப்புரவலர் தமிழவேள் த.வே. உமாமகேசுவரம் பிள்ளையவர்களால் தலைமையேற்கப் பெற்றதுமான, தண்ணார் தமிழ் வளர்க்கும் கரந்தைத் தமிழ்ச்சங்கம் என்னும் செழுங்கலை நியமம் எழில்மிகு பொலிவுடன் விளங்குகிறது.

கரந்தைத் தமிழ்ச் சங்கத்தின் பொருளாளரும் நாட்டுத் தொண்டரும் 'கரந்தைக்காந்தி' என்றழைக்கப்பட்டவருமான திருவாளர் ச.அ.சாம்பசிவம் பிள்ளை பி.ஏ. அவர்களால் 1949-ஆம் ஆண்டு கரந்தைச் செப்பேட்டுத் தொகுதி இச்சங்கத்திற்கு வழங்கப்பட்டது.

முதலாம் இராசேந்திர சோழனின் ஆட்சியாண்டு எட்டில் (கி.பி.1020) அவன் தன் தாயின் பெயரால் செய்த திரிபுவன மாதேவிச் சதுர்வேதிமங்கல அமைப்பின் அறவிளக்கமாக அமைந்ததே இச்செப்பேட்டுத் தொகுதியாம்.

**தனிச்சிறப்பு**

ஐம்பத்தேழு செப்பேடுகளால் கோர்க்கப்பட்ட இச்செப்பேட்டுத் தொகுதி சோழவரசின் முத்திரை முகப்புடன் வார்க்கப்பட்ட உலோக வளையத்துடன் அமைந்துள்ளதாம். பாரத நாட்டில் இதுகாறுங் கிடைத்துள்ள செப்பேட்டுத் தொகுதிகளுள் இத்தொகுதியொன்றே அளவிலும், எண்ணிக்கையிலும், எடையிலும் மிகப் பெரியதாக விளங்குவது குறிக்கத்தகுந்த சிறப்பினதாம்.

> "ஏழு ஏடுகளைக் கொண்ட அன்பிற் செப்பேடுகளையும் 21 ஏடுகளைக் கொண்ட ஆனைமங்கலச் செப்பேடுகளையும் 31 ஏடுகளைக் கொண்ட திருவாலங்காட்டுச் செப்பேடுகளையும், 7 ஏடுகளைக் கொண்ட சாராலச் செப்பேடுகளையும், 3 ஏடுகளைக் கொண்ட சிறிய லெய்டன் செப்பேடுகளையும் ஏடுகளின் எண்ணிக்கையாலும் நிறையாலும் அளவாலும் விஞ்சி மாபெருந்தொகுதியாக விளங்குவது இக்கரந்தைச் செப்பேடுகளேயாகும்." ('கரந்தைச் செப்பேட்டுத் தொகுதிகள்' – கோவிந்தராசனார், சி., தெய்வநாயகம், சி.கோ., மதுரை காமராசர் பல்கலைக்கழகம், ப.7) என்னும் பகுதி இச்செப்பேட்டுத் தொகுதியின் சிறப்பினை நன்கு தெளிவிக்கும்.

இத்தொகுதியைக் கண்ணுற்ற இந்திய அரசின் தொல்லெழுத்துப் படிவத்துறையினர் இதற்குக் 'கரந்தைச்செப்பேடுகள்' என்னும் பெயர் கொடுத்துத் தமிழக வரலாற்றில் இடம் பெறச் செய்தனர்.

அன்றியும், களிம்பும் மண் பற்றும் செறிந்திருந்த, ஏடுகளையும் முகப்புடனமைந்த வளையத்தையும் 1950 -இல் தூய்மை செய்து முறைப்படுத்தி மைப்படிவங்கள் எடுத்ததுடன் பார்வைப் படிவங்களாகவும் உரிய பழைய எழுத்துக்கள் உள்ள அளவில் பிரதி செய்தவர் கரந்தைத் தமிழ்ச்சங்கத்தின் மேனாள் தமிழ்ப்பேராசிரியர் பெரும்புலவர் சி.கோவிந்தராசனார் அவர்களாவார். இவ்வரிய பணியினைச் செய்த இப்பெருந்தகைக்கு நந்தமிழகம் என்றென்றும் நன்றிக்கடன்பட்டதாம்.

**நுதல்பொருள்**

ஐம்பத்தேழு ஏடுகளைக் கொண்ட கரந்தைச் செப்பேட்டுத்தொகுதியானது முப்பெரும் பிரிவாக அமைந்துள்ளது. முதற்பகுதி: மன்னர் மரபுப் புகழ்ச்சியுரை, இரண்டாம்பகுதி: அறவிளக்கம், மூன்றாம் பகுதி: தானம் பெற்ற அந்தணர்களைப் பற்றிய விளக்கம் என்றின்ன பகுதிகளைச் கொண்டதாம்.

தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்
International Journal of Tamil Language and Literary Studies 
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Special Issue: Vol. 2, April-2019 Available at: www.ijtlls.com

**காப்புச் செய்யுள்**

வடமொழியில் 'அனுஷ்டுப் சுலோகம்' என வழங்கப்பெறும் இக்காப்புச் செய்யுள் இச்செப்பேட்டுத் தொகுதியின் கோப்பு வளையத்தின் வட்டமான முகப்பில் உள்ளது. 32 கிரந்தவெழுத்துக்களானமைந்த வடமொழிச் சுலோகமாக இது முறைபெற வியற்றப்பட்டுள்ளது. இச்செய்யுளைக் காண்மின்:

"ராஜத் ராஜன்ய மகுடஸ்ரேணி ரத்நேஷு ஸாஸநம்
ஏதத் ராஜேந்ர சோளஸ்ய பரகேசரி வர்ம்மண" (மேற்படி-ப-20)

இச்செய்யுளின் பொருள் வருமாறு:

"பரகேசரிவர்மனான இராசேந்திர சோழனுடைய இந்த
சாசனம் அரசர்களின் முடிவரிசைகளிலுள்ள இரத்
தினங்களின் மீது செலுத்தப்பட்டது." (மேற்படி-ப-20)

**சாசன முதற்பகுதி**

இச்செப்பேட்டுத்தொகுதியின் முதற்பகுதியானது மன்னர்குலப் புகழ்பாடும் 'மன்னர் மரபுப் புகழ்ச்சியரை'யாகும். வடமொழியில் இது 'பிரசஸ்தி' என வழங்கப்படும்.

சோழர் குலத்தோற்றம் முதலாக, முதலாம் இராசேந்திர சோழனின் எட்டாவது ஆட்சியாண்டு வரையிலும் (கி.பி.1020) அவன் நிகழ்த்திய வெற்றிச் சிறப்புக்களையும், அறச் செய்திகளையும், சாசனத்தை எழுதியவர், சாசனத்தைச் செப்பேடுகளில் வெட்டிவர் ஆகியோரைப் பற்றியும் அறச்செயல் எக்காலத்தும் காப்பாற்றப்பட வேண்டுமென்ற நோக்குடன் மன்னன் கூறும் காப்புரை பற்றியும் நுவல்வது இப்பகுதியாம்.

முதல் மூன்று ஏடுகளில் ஆறு பக்கங்களில் எழுபத்தெட்டு வடமொழிச் செய்யுட்களான இச்செய்திகள் சாற்றப்படுகின்றன. எழுத்துக்களனைத்தும் வடமொழிச் சொல்லொலிகட்கேற்ப பழங்கிரந்த எழுத்துக்களாலானவையாம். (மேற்படி-பக்-20,21)

இவற்றுள் முதலிரண்டு செய்யுட்கள் அரச வாழ்த்தாகும். மூன்றாவது முதல் ஆறாவது செய்யுட்கள் வரை முறையே சூரியகுலத்தோன்றல்களான 'கதிரவன்', அவன் மகன் 'மனு', அவன் மகனான 'இட்சுவாகு', அவன் மகன் 'மாந்தர்', 'முகக்சுகுந்தன்', 'சிபி' என்றின்னோரைப் புகழ்ந்துரைக்கின்றனவாம்.

ஏழாவது செய்யுள் 'சோழன்' எனும் குடிப்பெயர் முதல்வனை நவில்கிறது. எட்டாவது முதல் பன்னிரண்டாவது செய்யுட்கள் வரை முறையே, இராசகேசரி, பரகேசரி, மிருத்யுஜித் எனும் சுரகுரு, உபாரிசரவசு என்போரைப் பற்றிப் புகலுகின்றன. பதின்மூன்று முதல் பதினைந்தாவது செய்யுட்கள் கரிகாலன், விசயாலயன், ஆதித்த சோழன் ஆகியோரைச் சிறப்பிக்கின்றன. பதினாறாவது செய்யுள் ஆதித்தனுக்கு மகனாகிய 'பராந்தக சோழனின்' பிறப்பினையும் பதினேழு முதல் இருபத்தியொன்று வரையிலான ஐந்து செய்யுட்களும் பராந்தகனின் பலதிறச் சிறப்புக்களைப் போற்றுகின்றன. இருபத்தியிரண்டாவது செய்யுள் அரிஞ்சயனையும் இருபத்தி மூன்றாவது செய்யுள் இரண்டாம் பராந்தகனையும் பற்றிப் பேசுகின்றன. பரந்தகனின் சேவூர்ப் போரினை நுவலுவன இருபத்திநான்கு மற்றும் இருபத்தி ஐந்தாம் செய்யுட்களாகும். இருபத்தி ஆறாவது செய்யுள் முதல் முப்பத்தியெட்டாவது செய்யுள் வரையிலான பன்னிரெண்டு செய்யுட்கள் முதலாம் இராசராசசோழனைப் பல்லாற்றானும் சிறப்பிக்கின்றன.

முப்பத்தியொன்பது முதல் எழுபத்திமூன்று வரையிலான செய்யுட்கள் இராசேந்திரசோழனின் பிறப்பு, இளமைக்காலம், இவனாட்சியில் சோணாடு பெற்ற நல்வாழ்வு, வென்றிகள், இவன் வழங்கிய பிரமதேயங்கள் என்றின்னவற்றை இனிதின் விளக்குகின்றன.

E-ISSN: 2581-7140
Special Issue: Vol. 2, April-2019 Available at: www.ijtlls.com

எழுபத்திநான்கு, எழுபத்திஐந்து ஆகிய செய்யுட்கள் திருபுவனமாதேவிச் சதுர்வேதி மங்கலமும் இராசேந்திரசோழனும் ஊழியளவும் வாழட்டும் என வாழ்த்தியமைகின்றன. எழுபத்தியாறு, எழுபத்தியேழு, எழுபத்தியெட்டு ஆகியன முறையே, இம்மன்னர் மரபுரையினை இயற்றிய வடமொழிக் கவிஞரான 'நாராயணன்', இச்சாசனத்தை ஏடுகளில் பொறித்தவர்களான திரிபுவனமாதேவிப் பேராசாரியன் ராஜேந்திர சோழப் பேராசாரியன் ஆகியோரையும் அறிமுகப்படுத்துகின்றன.

**சாசனத்தின் இடைப்பகுதி**

கரந்தைச் செப்பேடுகளில் நடுநின்ற பகுதியானது இச்செப்பேட்டுத் தொகுதியின் தோற்றத்திற்கான அறச்செயலினையும் ஆணையினையும் உள்ளடக்கியதாம். 22 ஏடுகளின் 44 பக்கங்களில் 1066 வரிகளில் பொறிக்கப்பட்டுள்ள இப்பகுதி முழுவண் நற்றமிழால் இயன்றதாம். இவ்விருபத்தியிரண்டு ஏடுகளும் இராசேந்திரன் வழங்கிய திரிபுவனமாதேவிச் சதுர்வேதி மங்கலத்தின் அமைப்பினைத் தெள்ளிதின் விளக்குகின்றன. இவ்வரசன் காலத்திய இடப்பெயர், நிலப்பகுப்பு, இயற்கையமைப்பு என்றின்னவற்றை அறிந்து கோடற்கு இப்பகுதி துணை செய்வதாம்.

**சாசன கடைப்பகுதி**

இராசேந்திரன் வழங்கிய திருபுவனமாதேவிச் சதுர்வேதி மங்கலத்தில் பங்கு பெற்ற; நிலக்கொடை பெற்ற அந்தணர்களின் மரபும் பெயரும் நுவலுவது இச்செப்பேட்டுத் தொகுதியின் இறுதிப் பகுதியாகும். இப்பகுதி 32 ஏடுகளில் 64 பக்கங்களில் 1455 வரிகளில் தமிழும் கிரந்தமும் இடைமிடைந்த நடையினதாய் இச்செப்பேட்டுத் தொகுதியின் மிகப்பெரும் பகுதியாகத் திகழ்கின்றதாம்.

இச்செப்பேட்டுத் தொகுதியின் செய்திகளனைத்தையும் செப்பேடுகளைப் பாராமலேயே ஒருவர் நன்கு அறிந்து கொள்ளுமாறு பெரும்பேராசிரியர் சி.கோவிந்தராசனாரவர்கள் தாம் அறிதில் முயன்று 'கரந்தைச் செப்பேட்டுத் தொகுதி' என்னும் அரிய நூலாக்கித் தந்துள்ளரென்பது ஈண்டுச் சிறப்பாகக் குறிப்பிடற்பாலதாம். (கருத்துடையோர் காண்பராக)

**இறுவாய்**

இற்றைக்குக் கிடைத்திருக்கும் சோழமன்னர்களின் செப்பேடுகளில் அளவிலும் எண்ணிக்கையிலும் எடையிலும் மிகப்பெரிதாக விஞ்சி நின்று நிலவுவது கரந்தைத் தமிழ்ச்சங்கத்தின் முதலாம் இராசேந்திர சோழனின் செப்பேட்டுத் தொகுதியேயாம்.

இராசேந்திரன் தன் தாயின் பெயரால் செய்த திரிபுவன மாதேவிச் சதுர்வேதி மங்கல அமைப்பின் அறவிளக்கமாயமைந்த இச்செப்பேட்டுத் தொகுதியின் முதற்பகுதியான மன்னர் மரபுப் புகழ்ச்சியுரையான் சோழர் வரலாற்றினை ஓராற்றான் அறியவியலும். அன்றியும், இச்செப்பேட்டுத் தொகுதியின் இடைநின்ற பகுதியானும் கடைப்பகுதியானும் இராசேந்திரன் காலத்திய இடப்பெயர்கள், நிலவியற்பாகுபாடு, சோணாட்டின் அரசியற்பிரிவு, இயற்கையமைப்பு, அந்தணர் மரபும் அவர்தம் கோத்திரமரபும், தமிழ் எழுத்தின் வளர்ச்சிநிலை என்றின்னோரன்ன அரிய வரலாற்றுச் செய்திகள் பலவற்றை அறிந்து கோடற்கியலும். இவ்வகையில், கரந்தைத் தமிழ்ச்சங்கத்தின் முதலாம் இராசேந்திரசோழனின் செப்பேட்டுத் தொகுதியானது நந்தமிழர்க்குக் கிடைத்த பெறுதற்கரிய வரலாற்றுக் கருவூலமாய்த் திகழ்கின்றது என்பதில் எட்டுணையும் ஐயமின்று என்ற அளவில் இக்கட்டுரையினை நிறைவு செய்வாம்.

E-ISSN: 2581-7140
Special Issue: Vol. 2, April-2019
Available at: www.ijtlls.com

**முதன்மைச் சான்று மூலம்:**

1. கரந்தைச் செப்பேட்டுத் தொகுதி – கோவிந்தராசன், சி., தெய்வநாயகம், சி.கோ, மதுரை காமராசர் பல்கலைக்கழகம், முதற்பதிப்பு – 1984.

**துணைச் சான்றாதாரங்கள்:**

1. 30 கல்வெட்டுகள் - வை. சுந்தரேச வாண்டையார், (அண்ணாமலைப் பல்கலைக்கழக மொழியியல் துறையின் முன்னாள் கல்வெட்டு ஆராய்ச்சியாளர்), 30 கல்வெட்டுகள், 25, பீட்டர்ஸ் சாலை, சென்னை - 600004. முதற்பதிப்பு - 1958.
2. கட்டுரைப் பொழில் - கரந்தைத் தமிழ்ச்சங்க மணிவிழா மலர், தஞ்சை.

E-ISSN: 2581-7140
Special Issue: Vol. 2, April-2019 Available at: www.ijtlls.com

# இலக்கியங்கள் காட்டும் நடுகல் செய்திகள்
## Stonehenge shown in Literatures

**சீ.விமல்,** உதவிப்பேராசிரியர், தமிழ்த்துறை,
மதுரைக்கல்லூரி, மதுரை

**Abstract**

*Tamil culture is an ancient culture very much devoted to valorable feats. The people are brave and sturdy. In the classic history of the Tamils there are many evidences that show they revere the warriors who died in chivalric, valorable acts and sacrificial customs. They erected stonehenges in memory of them. These are seen in many literary sources and in the culverts seen all over the Tamil region. Nallor, Virudhunagar, Villlupuram, cholavandha, Kangeyam and many othey parts had culverts in commemorating the adventurous deeds of the warriors. Hence, this paper tries to fetch out the details associated to the domain topic.*

**Keywords:** Stonehenge, Literatures, Culverts, Tamil Warriors, Commemoration

**தோற்றுவாய்**

சங்ககால மக்கள் வாழ்க்கையை உயர்நிலைக்கு இட்டுச்சென்றவர்கள் என்றால் அதுமிகையில்லை. அகத்தைப் போலவே, புறத்திற்கும் தங்கள் தனி இடம் வகுத்திருந்தனர். பண்டைத் தமிழரின் வாழ்வியல் பதிவுகளை இவ்வுலகிற்கு உணர்த்திடும் சான்றுகளுள் நடுகற்களின் பங்கு குறிப்பிடத்தக்கது. தமிழகம் மட்டுமின்றி இந்தியா முழுவதும் நடுகற்கள் ஆங்காங்கே கண்டறியப்பட்டு விரிவான ஆய்வுகள் மேற்கொள்ளப்பட்டு வருகின்றன. இருப்பினும் இலக்கியங்களில் காட்டப்பெற்றுள்ள நடுகல் செய்தியினை பண்டைமக்கள் நம்பிக்கையினையும் இணைத்துக் காட்டுவதே இக்கட்டுரையின் நோக்கமாகும்.

**நடுகற்கள் நடப்படுவதற்கான காரணம்**

'வீரன்கல், வீரக்கல்' எனவும் 'நினைவுத்தூண்' என்றும் அழைக்கப்படுகின்றன. வீரயுகக்காலம் என்று அழைக்கப்படுகின்ற காலங்களில் ஏற்பட்ட போர்களில் விழுப்புண் பட்டுமடியும் வீரனுக்காக, அவனது வீரத்தைப் போற்றுகின்ற வகையிலும், அவனது தியாகத்தினை மதிக்கின்ற வகையிலும் கல் ஒன்றினை நட்டு, அதனை வழிபடுவது தமிழரின் மரபாக இருந்துள்ளதனை இலக்கியங்கள் வழி அறியமுடிகிறது.

**நடுகற்களின் அமைப்பு**

நடுகற்களின் வீரனின் உருவம், பெயர் செயல் போன்ற குறிப்புகள் பெரும்பாலும் இருப்பதைக் காணமுடிகிறது. இலக்கியத் தரவுகளையும், நடுகற்களில் காணப்படும் உருவங்களையும் எழுத்துக்களையும் ஆராய்கின்றபோது ஆகோள் புரிந்தோ, மீட்டோ, கொடிய விலங்குகளுடன் போரிட்டோ, பலியாகவோ தான் சார்ந்திருக்கும் சமூகத்திற்காக இறக்கும் வீரனுக்கே நடுகல் எழுப்பப்பட்டுள்ளது.

ஆரம்பகாலத்தில் எழுப்பப்பட்ட அனைத்துக் கற்களுமே ஒற்றைக் கல்லாக அமைந்துள்ளன. கல்வீடு அமைப்பிலான நடுகற்கள் சற்றுப் பிற்பட்ட காலத்தில் எழுப்பப்பட்டன. மூன்று

E-ISSN: 2581-7140
Special Issue: Vol. 2, April-2019 Available at: www.ijtlls.com

பக்கங்களிலும் செங்குத்தான பலகைக் கற்களால் அடைக்கப்பட்டு மேற்பகுதியில் நீளமான பலகைக் கல்லால் குறியிடப்பட்ட சிறுஅறை அமைப்பில் இக்கற்கள் அமைந்துள்ளன.

**வழிபடுவோர் நம்பிக்கைகள்**

நடுகற்களை மக்கள் வழிபடும் முறையிலிருந்து அவர்களது நம்பிக்கைகள் புலனாகின்றன. நடுகற்களைச் சுற்றி வேல்களையும் சார்த்தி வைக்கும் வழக்கமும் இருந்துள்ளது. வேல்களை நட்டு வைத்தமைக்கு வேறு சில காரணங்களும் இருக்கக்கூடும். அக்கற்களை வழிபடுவோர், அவற்றில் உறையும் தெய்வம் தமக்கு துன்பம் தரும் எதிரிகளை அழிப்பதற்காக நட்டு வைத்தனவாக இருக்க வேண்டும். அக்கற்களின் முன்பாகக் குதிரை உருவங்களைச் செய்து வைப்பதற்கும் இது போன்ற ஒரு நம்பிக்கையே காரணமாக இருக்க வேண்டும். அதாவது கல்லில் உறையும் தெய்வம் குதிரையின் மீது அமர்ந்து இரவு நேரத்தில் உலாவந்து ஊரிலுள்ள எல்லா மக்களின் நம்பிக்கையாக இருந்தது. அவ்வாறு வழிபாட்டு முறையில் வந்த தெய்வங்களே அண்ணன்மார் மதுரை வீரன் காத்தவராயன், நாட்டராயன், கருப்பணசாமி, கற்குவேல் அய்யனார் ஆகியவை வீரவகை வணக்கத்தின் மறு உருவங்களாகும்.

**விலங்குகளுக்கான நடுகல்**

மக்கள் மனிதர் தம் சிறப்பு வினைக் கருதி அவர்தம் நினைவில் நடுகல் நிறுத்தியதுபோல வேதாம் செல்லமாக வளர்த்த கிளி, கோழி, எருது, குதிரை ஆகிய பறவைகள் விலங்குகள் முதலியவற்றுக்கும் நடுகல் எழுப்பி உள்ளனர். அவ்வாறே ஒரு நாய்களின் நினைவாக நினைவுக்கல் நிறுவி உள்ளான். மன்னன் பெயரும் ஆட்சி ஆண்டும் சிதைந்து உள்ளன. அம்மலூர் என்று வழங்கப்பட்ட இன்றைய அம்பலூரில் கோவன் என்பவன் இரு நாய்களை வளர்த்திருந்தான். அவ்வூருள் புகுந்த காட்டுப்பன்றி ஒன்றுடன் அவனுடைய நாய்களான முழகனும், வந்திக்காகத்தியும் பிணைந்து சண்டையிட்டுப் போராடிப் பன்றியைக் கொன்றனதாமும் செத்தன எனக் கல்வெட்டு பொறித்தகோவன் புறித்து உள்ளான். செல்ல விலங்குகளுக்கு நடுகல் எடுக்கப்பட்ட செய்தி மிகஅரிதாகவே தமிழகத்தில் பதிவாகி உள்ளது. தொல்காப்பியத்தில் கூறப்பட்டுள்ளதுபோல செல்லவிலங்குகளுக்கு மனிதரைப் போல் பெயரிடும் வழக்கமும் இருந்துள்ளதை அறியமுடிகிறது.

வேலூர் மாவட்டம், வாணியம்பாடிவட்டத்தில் உள்ள அம்பலூரில் உள்ள நடுகல் நாய்களுக்காக நடத்தப்பட்டுள்ளது. இதன் காலம் கி.பி 9 ஆம் நூற்றாண்டு.

**இலக்கியத்தில் நடுகல் செய்திகள்**

தொல்காப்பியர் நடுகல் எடுப்பதற்கான ஆறுநிலைகள் பற்றிக் குறிப்பிடுகிறார். அவைகாட்சி, கால்கோள், நீர்ப்படைநடுகல், பெரும்படை வாழ்த்தல் என்பதாகும். இதனடிப்படையில் நோக்குகையில் இவ்வழக்கம் தொல்காப்பியர் காலந்தொட்டே இருந்துள்ளதை அறியமுடிகிறது.

"என்னைமுன் நில்லன்மின் தெவ்விர் பலரென்ன
முன்நின்றுகல்நின் றவர்" (குறள் - 771)

என்று போரில் இறந்த பகைவர் கல்லாகி நின்றதாக திருவள்ளுவரும் பதிவு செய்கிறார்.

"விடுவாய்ச் செங்கனைக்
கொடுவில் ஆடவர்
நல்நிலைபொறித்தகல்" (அகம் - 179)

E-ISSN: 2581-7140
Special Issue: Vol. 2, April-2019 Available at: www.ijtlls.com

சங்ககாலச் சிற்றூர் மக்கள் நடுகல்லினைப் போற்றி வணங்கியதைப் புறப்பாடல்கள் வழி அறியலாம். தம் இனத்திற்காக உயிர்துறந்த வீரனுக்குச் செய்யும் மரியாதையாகவும், செய்நன்றி மறவாப் பண்பினையும் இச்செயல் காட்டுகின்றது. புறநானூற்றில்,

“பரலுடையமருங்கிற் பதுக்கைசேர்த்தி
மரல்வகுந்துதொடுத்தசெம்மழங் கண்ணியோடு,
அணிமயிற் பீலிசூட்டிப்,பெயர் பொறித்து
இனிநட்டனரே! கல்லும்,கன்றொடு
கறவைதந்துபகைவர் ஒட்டிய…….” (புறம் - 264)

கன்றுடனே கறவையும் மீட்டுத் தந்தவன்: பகை மறவரை ஓடஓட வெருட்டிய நெடுந்தகை, அவனும் போரிலே பட்டான். ஆதனை அறிந்தும், சுற்றம் சேர்ந்து பீலியும் கண்ணியும் சூட்டிப்பெயரும் பொறித்து, அவனுக்குக் கல்லையும் இப்போது நட்டுவிட்டனரே! என்று வருந்திக் கூறியது.

“நடுகல் பீலிசூட்டி,நார் அரி
சிறுகலத்துஉகுப்பவும் கொள்வன் கொல்லோ–
கோடுஉயர்பிறங்குமலைகெழீஇய
நாடுஉடன் கொடுப்பவும் கொள்ளாதோனே?” புறம் -232

கோடுகள் உயர்ந்த மலைகள் செறிந்தநாடு முழுவதையும் கொடுப்பினும் நடுகல்லை நாட்டி, அதற்குப் பீலியுஞ் சூட்டி, நாராலரிக்கப்பட்ட மதுவையும் சிறிய கலத்திலே படைக்கின்றீர்களே? அதனை அவன் ஏற்றுக்கொள்வானோ என்கிறது புறப்பாடல். இப்பாடலில் வீரமறவனின் யாரிடமும் இரந்து நிற்காத அவனுடைய தன்மைப் புலப்படுகிறது. அதுபோல, பேரெயின் முறுவலார், நம்பிநெடுஞ்செழியன் இறந்தபின் கையற்று பாடுகிறார். குளிர்ச்சிதரும் சாந்தைப் பூசினான் பகைத்தோரைக் கிளையொடும் அழித்தான். வலியவரென்று அவரைப் போற்றியும், மெலியவரென்று அவரை இகழ்ந்தும் அறியான் அரசர்கள் கூடிய அவையத்திலேதன் ஓங்கிய புகழை எல்லையும் புகாமல் தடுத்து, புறமிட்டு ஓடுபவரை புறக்கொடை கொள்வதன்றி வெருட்டி அழித்தலைச் செய்யான். அப்படி ஒருபண்புமிக்க நெடுஞ்செழியன் மடிந்து விட்டான். இனிஅவன் தலையைப் புதைப்பதோ, சுடுவதோ எதுவும் செய்வீராக'' அவன் புகழ் என்றும் எதனாலும் அழியாது இவ்வுலகிலேயே நிலைத்து நிற்கும் என்பது மட்டும் உறுதியாகும்.

**நடுகற்கள் உள்ள இடங்கள்**

இந்தியாவை பொருத்த வரையில் வடக்கே இமாசலப்பிரதேசம், குஜராத், மகாராட்டிரம் ஆகிய மாநிலங்கள் உட்பட்ட பல இடங்களில் இவை உள்ளன. தென்னிந்தியாவில் ஆந்திரா, கருநாடகம், தமிழ்நாடு, கேரளா ஆகிய நான்கு மாநிலங்களில் பழங்கால நடுகற்கள் கண்டுபிடிக்கப்பட்டுள்ளன.

1. நெல்லூர் மாவட்டம் கூடூர் வட்டம் மல்லாம் எனும் சிற்றூரில் உள்ள சுப்ரமணியர் திருக்கோயிலின் செவ்வகக் கல்லில் நவக்கண்டம் கொடுக்கப்பட்ட செய்தி கல்வெட்டாகப் பதிவாகி உள்ளது. அதன் காலம் 9ஆம் நூற்றாண்டு. (நவகண்டம் - பிறர் நலன் கருதி ஆடவர் தம் இன்னுயிரைத் தாமே தற்கொலையாக தெய்வத் திருவுருமுன் தம்மை கூர்மையான வாளால் ஒன்பது பாகமாகப் பலியிட்டு கொள்வது நவக்கண்டம் ஆகும்.
2. விருதுநகர் மாவட்டம் துலுக்கர்பட்டி அருகில் உள்ள மன்னார் கோட்டை சிவன் கோவிலில் உள்ள 10ஆம் நூற்றாண்டு நடுகல் கல்வெட்டு.

E-ISSN: 2581-7140
Special Issue: Vol. 2, April-2019 Available at: www.ijtlls.com

3. விழுப்புரம் மாவட்டம் சங்கராபுரம் வட்டம் மேல் சிறுவர் என்னும் ஊரில் வட்டெழுத்து பொறிப்பு உள்ள 6ஆம் நூற்றாண்டு எழுத்தமைதிகொண்ட நடுகல் உள்ளது.
4. கி.பி.3-4 ஆம் நூற்றாண்டுகளில் எழுப்பப்பட்டதாகக் கருதத்தக்க நடுகற்கள் எவையும் கிடைக்கப் பெறவில்லை. தருமபுரி மாவட்டம் இருளாப்பட்டி என்னும் இடத்திலிருந்து கிடைத்த நடுகற்கள் இப்பகுதியில் காணப்படும் மிகப்பழமையான நடுகற்களாகும்.
5. தமிழகப் பகுதியில் கிடைத்துள்ள நடுகற்களில் காலப்பழமை வாய்ந்த நடுகற்கள் பல்லவர் காலத்தைச் சார்ந்தவையாகத் தெரிகின்றன. பல்லவ மன்னன் சிம்மவர்மன் காலத்திலிருந்தே நடுகற்கள் கிடைக்கத் தொடங்கி விட்டன. சோழர் காலத்தில் வீரக்கல் எழுப்பும் மரபு தொடர்ந்ததென்றாலும் போற்றிப் பேணப்பட்டதாகத் தெரியவில்லை.
6. பாண்டியர் காலத்து நடுகற்கள் சில தமிழகத்தின் தென்மாவட்டங்களில் காணப்படுகின்றன. கன்னியாகுமரி மாவட்டத்திலுள்ள ஆரல்வாய்மொழி என்னும் இடத்தில் இருந்து கிடைத்த நடுகல் பாண்டியருக்கும் சேரருக்கும் இடையிலான போரில் இறந்த பாண்டிய வீரனான இரணகீர்த்தி என்பவனின் நினைவாக எழுப்பப்பட்டதாகும். திருநெல்வேலி மாவட்டத்திலுள்ள ஏரல் என்ற ஊரிலிருந்து கிடைத்துள்ள வீரக்கல் பாண்டியர் காலத்தில் நிகழ்ந்த படையெடுப்பினைக் காட்டுகிறது. இம்மாவட்டத்திலுள்ள கழுகுமலை என்னுமிடத்தில் காணப்படும் நடுகல் ஆரல்வாய்மொழியிலிருந்து கிடைத்த நடுக்கல்லோடு தொடர்புடையதாகத் தெரிகிறது. இருபதாம் நூற்றாண்டிலும் வீரக்கற்கள் எழுப்பப்பட்டமைக்கான சான்றுகள் கொங்குநாட்டுப் பகுதியில் இருக்கின்றன. பல்லடம் வட்டம் நீலம்பூர், கோபிவட்டம் பெருந்தலையூர், காங்கேயம் வட்டம் வெள்ளக்கோவில் ஆகிய ஊர்களில் உள்ள நடுகற்கள் மூலம் அறியமுடிகிறது.

**நிறைவுரை**

இன்றைய இராணுவத்தில் பணியாற்றும் வீரன் தீவிரவாதிகளுடனோ, அண்டைநாடுகளுடனோ ஏற்படும் சண்டைகளில் போராடி இறக்க நேரிட்டால் அரசால் வழங்கப்படும் விருதுகள் போல அன்றையகால கட்டத்தில் மக்கள் நடுகற்களைநட்டு கௌரவித்தனர். இந்தநடுகற்கள் யாவும் நம் பண்பாட்டிற்கும், வீரத்திற்கும் சான்றுகளென்றால் அதுமிகையில்லை.

**பார்வை நூல்கள்**

1. தருமபுரி கல்வெட்டுகள் தொகுதி 1, தமிழ்நாடு அரசு தொல்லியல் துறை, 1972.
2. நடுகற்கள், கிருஷ்ணமூர்த்தி, மணிவாசகம் பதிப்பகம்.
3. கல்லெழுத்தில் காலச்சுவடுகள், முனைவர். சு.சுவாமிநாதன்.
4. தென்னிந்திய வீரக்கற்கள், கேசவராஜ் வெ, 2008, காவ்யாவெளியீடு.

E-ISSN: 2581-7140
Special Issue: Vol. 2, April-2019 Available at: www.ijtlls.com

# மருத நிலத்தின் வாழ்வும் வீழ்வும்
# The Life and Fall of the Marutham Land

**டாக்டர்.சு.விவேகலதா,** உதவிப்பேராசிரியர், தமிழ்த்துறை,
மனோன்மணியம் சுந்தரனார் உறுப்புக் கல்லூரி, நாகலாபுரம். தூத்துக்குடி.

## Abstract

*The paper elicits a study on the life and fall of the Marutham Land of Tamil culture and antiquity. It becomes very important to know about the culture and the civilization existed lang back through the evidences. Hence, the study paves way to understand the region to understand the cultural origins of the ancient Tamil people.*

**Keywords:** Life and Fall, Marutham Land, Tamil Culture

மருதநிலத்தில் மனிதன் வாழத் தலைப்பட்ட பின்பு, தானும் பண்பட்டு, நிலத்ததையும் நீரையும் பண்படுத்திப் பயன்படுத்திய வாழ்வியல்தான் பேரரசுகளின் தோற்றத்திற்கும் போருக்கும் அவனை நகர்த்தின. அதன் விளைவான ஆதிக்கப்போட்டி, அடிமைத்தனம் போன்ற சரிவுகளையும் சந்திக்க நேரிட்டன. பல அரிய நிகழ்வுகளை ஆவணப்படுத்தியுள்ள கல்வெட்டுகளும், செப்பேடுகளும், சுவடிகளும் அவ்வக்கால மனிதர்களின் மேன்மைகளையும் அவலங்களையும் பதிவு செய்திருக்கின்றன. தமது வாழ்வியல் சூழலைப் பல தொழில் நுட்பங்களால் பண்படுத்தி சிறப்புறப் பயன்தரு வாழ்க்கை வாழ்ந்தவர்கள் படிப்படியாகக் கையறுநிலைக்குத் தள்ளப்பட்டமையை விளக்குவதாக இக்கட்டுரை அமைகின்றது.

### ஊர்களின் அமைப்பு

இயற்கைச் சீற்றங்களுக்கு ஈடுகொடுக்கும் விதமாக தாம் வாழும் ஊரை அமைத்தவன் பழந்தமிழன். ஒரு ஊர் எனில் அங்கு நீர் நிலன், புன்செய், குளம், கோயில், பறைசேரி, கம்மணாஞ்சேரி, சுடுகாடு, மனை, படைப்பை, கடை, மன்று, கன்று மேய் பாழ், குளம், கொட்டகாரம், கிடங்கு, கேணி, புற்று, தெற்றி, காடு, பிடிலிகை, களர், உவர், ஆறு, ஆறிடு படுகை, ஓடை, உடைப்பு, மீன்பயில் பள்ளம், தேன்பயில் பொதும்பு, மரங்கள், கிணறுகள், நீர்பூசி நெடும்பரம் பெற்று, உடும்பும் ஆமையும் தவழும் நிலம் போன்ற சூழலியலுடன் மனிதனும் வாழ்ந்தான். “நகரப் பொதும் புஞ்சை” என்ற சொல் அவனது பொதுநல நோக்கைக் காட்டுகிறது. இவையெல்லாம் தற்போது மறைந்தது எப்படி?

ஊரின் எல்லைகளாகவோ, விவசாய நிலங்களின் எல்லைகளாகவோ அரசங்கன்று, புளியங்கன்று, நாவற்கட்டை, புளியங்கட்டை போன்றவற்றை நட்டியுள்ளனர். தமிழன் பொதுநல நோக்கும், இயற்கை ஆர்வமும் கொண்டவன் என்பது தெளிவாகின்றது. எந்த எல்லைகளையாவது நாம் மதிக்கிறோமா?

### நீர்நிலைகள்

குளம், கரை, சுந்தரசோழன் வாய்க்கால், சிங்களாந்தகன் வாய்க்கால், கருவாய்க்கால், மும்முடிச் சோழப் பேராறு, காம பதாகை வாய்க்கால், நீர் ஓடுகால், ஓடைகள் எனப் பல்வேறு பெயர்களில் அமைந்த, அவர்கள் தலைமையில் வெட்டப்பட்ட, வாய்க்கால்களும், ஓடைகளும் நீரை முறைப்படுத்திப் பயன்படுத்தியமை தெரிகிறது. வாய்க்கால் செல்லும் பாதைகளும்

E-ISSN: 2581-7140
Special Issue: Vol. 2, April-2019 Available at: www.ijtlls.com

'ஊர்நிலத்தை ஊடறுத்துப் புற ஊர்களுக்குப் பாயும்' காம பதாகை வாய்க்கால், சோற்றுத்துறை வாய்க்கால் என்று இவை போன்று பாதைகளும் வரையறை செய்து வாழ்ந்தமை தெரிகின்றது.

கி.பி. 800 இலேயே வெட்டப்பட்ட கிணறுகள் பற்றிய செய்திகள் பல்லவர்காலச் செப்பேடுகள் மூலம் தெரிய வருகின்றது.( மாற்பிடுகு பெருங்கிணறு- லால்குடி- திருவெள்ளறை) 'வயிரமேகத் தடாகம்- குளத்தின் வண்டலை வருடந்தோறும் அப்புறப்படுத்தவும், கரையை பலப்படுத்தவும் அபராஜிதன் என்பவன் 1000 கழஞ்சுப் பொன்னை உத்திரமேரூர் சபையாரிடம் 884 இல் கொடுத்துள்ளான் (வைகுண்டப்பெருமாள் கோவில் கல்வெட்டு). ஆனால் இன்று நீர்நிலைகளின் கதி? தூர் வாரப் பெறப்படும் கையூட்டுகள்?

**பழக்கவழக்கங்கள்**

பேரூர்களிலும் சிற்றூர்களிலும் உள்ளவர்கள் தேவபூசை நடக்க 1பூட்டு நூல், உணவு, ஏர்க்குக் கால், தராசுக்குக் கால், பால், தயிர், புல், விறகு, காய்கறி, கீரை, மலர்கள் போன்றவற்றை மன்னனுக்குக் கொடுப்பதும் வழக்கமாக இருந்துள்ளது. பாதி கூலிக்கு வேலைபார்க்கும் கொத்தடிமைகள் இருந்துள்ளனர்.

தனி நபர்களுக்கான நிலங்களும், பல்வேறு தொழிலாளர்களுக்கான விளைநிலங்களும் மனைகளும் தனித்தனியே இருந்துள்ளன.

1.வெள்ளாளன் உறாப்பழிப் பாக்கரன் - 1மா

2.வெண்ணி வ்யாபாரி துறையன் அறிஞ்சி மனைப் பேரான நிலம் - இவை போன்ற தனிநபர் நிலங்களும்,

கோவூர் குசவன் நிலன், வண்ணாரப் பேரான நிலம், கொல்லன் குழி, மயிறிடு குழி – போன்ற தொழில் நிலங்களும் இருந்தமை சோழர் செப்பேடுகள் வழி தெரிகின்றது. பிரிவுகளும் வேற்றுமைகளும் பிற்காலத்தே தோன்றியன.

**சுமத்தப்பட்ட வரிகள்**

நிலங்கள் பல்வேறு வேறுபட்ட அளவைகள் மூலம் அளக்கப்பட்டுத் தானியங்களும் காசும் வரியாக வசூலிக்கப்பட்டது.

'அரையே மூன்று முக்காணிக் கீழ் முக்காலே நான்கு மாவரைக்காணி முந்திரிகைக் கீழ் நான்கு மா நீக்கி நிலன் 124 ஒ 2 மாவின் கீழ் முக்காலே. ஒ 2 மாவிநால் ஸ்ரீ 3800 கலம்' நெல் வரியாகக் கொடுக்கப்பட்டது. சிலவிடங்களில் 1500 கலம் நெல்லும மீன் பாட்டங் காசும் கொடுக்கப்பட்டுள்ளது.

- வட்டி நாழி, பிதா நாழி, திருமண வரி, வண்ணார் வரி, குயவர் வரி, நீர்க்கூலி, தறிக்கூலி.
- தென்னை, பனை, பாக்கு, கல்லால மரம், சித்திர மூலம் என்ற செங்கொடி, கரிசலாங்கண்ணி, மரிக்கொழுந்து, நீலோற்பவம், குவளை – பயிரிட வரி.
- கள் இறக்க, கரும்புச் சாறு இறக்க, பனம் பாகு காய்ச்ச, பாக்கு விற்க – வரி.
- ஆடு, மாடு வைத்திருந்தால் வரி, குற்றம் நிரூபிக்கப்பட்டால் - மன்றுபாடு வரி.
- புரோகிதர், பலவகைக் கொல்லர், வலைஞர், தோல் வேலை செய்வோர், பட்டுத்துணி விற்போர், பெரிய சட்டைகள் உடுத்திச் சுற்றுவோர், நடனமாடுபவர், கழைக்கூத்தாடி, கடைக்காரர், ஜைனத் துறவிகள், ஊரிலிருந்து தள்ளி வைக்கப்பட்டோர், நாடக நடிகர், தண்ணீர் கண்டுபிடிப்போர், சூதாடிகள், ஐமுக்காளம் மற்றும் பாய் விற்போர், முடிவெட்டுவோர், குடியானவர்கள், கைவினைஞர்கள், ஒற்றர்கள், நிலம் அளப்போர்

E-ISSN: 2581-7140
Special Issue: Vol. 2, April-2019 Available at: www.ijtlls.com

போன்றோர் வரி கட்டினர். (சிம்மவர்மனின் பீகிரச் செப்பேடு, விழாவெட்டிச் செப்பேடு, யுவமகாராஜன் சிவ ஸ்கந்தவர்மனுடைய மயிதவோலுச் செப்பேடு) ஜைனத் துறவிகளுக்கு வரி ஏன்?சட்டை போடுபவர்கள் ஊதாரிகளா? புரோகிதர்களுக்கு வரியா,? பிராமணர்களுக்கு வரிவிலக்கா,? அந்தப் புரோகிதர் யார்?

**மறுசீரமைப்பும் ஊர்ப்பெயர் மாற்றமும்**

சில ஊர்களின் பெயர்கள் மாற்றப்பட்டுத் தானமாக்கப்படுகின்றது. 2 அல்லது 3 ஊர்கள் ஒரே ஊராக்கப்பட்டுத் தானமாக்கப்படுகின்றது. இதன் பின்னணி ஆராயப்பட வேண்டும். ஆவணங்கள் என்பது பெருமையைப் பறைசாற்றுவதற்கு மட்டுமல்லாமல் நம்மை மீட்டெடுக்கவும் பயன்படுத்தப்பட வேண்டும்.

- திருவள்ளுவப்பாடி நாட்டு வெண்மணிப்பாடிச் சிற்றூரைத் ‘தாயினும் நல்லபுரம்’ என்ற வணிக நகராக வணிகர்களே கூடி மாற்றியுள்ளனர் ( ARE – 456 – 1913)
- காஞ்சிவாயில் என்ற இகன்மறை மங்கலம் + உதய சந்ர மங்கலம் ஸ்ரீ ஒரே ஊர் ( உதயேந்ரம் செப்பேடு – 495)
- செய்யாற்றங்கரை – குமாரமங்கல வெள்ளாட்டூர் + கொற்றக் கிராமம் ஸ்ரீ உதயசந்ர மங்கலம் என்று படைத்தலைவன் பெயரில் அமைக்கப்பட்டது. ( 2ஆம் நந்திவர்மன் - உதயேந்ர செப்பேடு -752 )
- கீழ் வேணாட்டு நெல்லி + புல்லூர் + குடியூர் + தக்காறு ஸ்ரீ நயதீர மங்கலம் ( 2ஆம் நந்தி. புல்லூர் செப்பேடு – 764).

**தானங்கள்**

அரசு அலுவலர்களுக்கு நில ஜீவிதம் ( வாழ்நாள் அனுபவம்) வழங்கப்பட்டுள்ளது. கோயில் வழிபாட்டுக்கு, நிவந்தங்கட்கு, உணவுக்காக, விளக்கு எரிக்க நிலம் தானமாகத் தனி நபர்களாலும் ( திருச்சி – கரூர். அம்மன் கோவிலுக்கு அருகிலுள்ள கல்வெட்டு) அரசனாலும் வழங்கப்பட்டுள்ளது (S.I.I.vol-III).

சேவூரான செம்பியன் கிழானடி நல்லூர், நெடுங்கராய, உதய சந்ர மங்கலம், நயதீர மங்கலம் போன்ற ஊர்கள் தானமாக வழங்கப்பட்டன. சரணடைந்த அரசர்களுக்கும், அடைக்கலம் தேடிவந்தவர்க்கும், பிராமணர்களுக்கும், பள்ளிப்படை அமைக்கவும் விவசாயிகளுக்கும் நிலங்கள் தானமாக வழங்கப்பட்டன.

**தானம் பெற்ற ஊர்களின் - மக்களின் நிலை**

தானமாகக் கொடுத்த ஊர்களில் உப்புக்குழி தோன்டக் கூடாது. எதிரிகளிடமிருந்து பாதுகாக்கப்பட வேண்டும். கள் இறக்கக் கூடாது. பொதிக்காளைகளைக் கைப்பற்றக் கூடாது. அவர்கள் எந்த வரியும் கொடுக்க வேண்டாம். மன்னனுக்கோ மக்களுக்கோ எந்தப் பொருளும் கொடுக்க வேண்டாம். படைவீரர்கள் நுழையக் கூடாது. அவர்களை யாரும் தவறாகப் பேசக் கூடாது போன்ற கட்டளைகள் பிறப்பிக்கப்பட்டன.

பிராமணர்கள் சொத்து கொடிய விஷம். அவர்களுடைய சொத்துக்களை அபகரிப்போரும் அவரது குலமும் பாதிக்கப்படும் ( சிவன் சொத்து குல நாசம்). அவற்றை அபகரிப்போர் 100000 பசுக்களைக் கொன்ற பாவத்தைப் பெற்று நரகத்தில் உழல்வர் - இவை போன்ற அச்ச உணர்வை ஏற்படுத்தி அவர்களது சொத்துக்கள் பாதுகாககப்பட்டன. (சிம்மவர்மன் விழவெட்டிச் செப்பேடு - 446). கூடுதல் சலுகைகளாகப் பாதிவிலையில் கொத்தடிமைகளும், தறிநெய்வோரும் வழங்கப்பட்டனர்.

E-ISSN: 2581-7140
Special Issue: Vol. 2, April-2019 Available at: www.ijtlls.com

அகத்தியர் துவாரகையிலிருந்து 18 வேளிர் இனத்தவரைத் தமிழகத்திற்கு கொண்டு வந்து காத்தார்.( கந்த சிஷ்யவர்மனுடைய ராயக்கோட்டைச் செப்பேடு – கி.பி. 8ம் நூற்).

மேற்கண்ட தானங்களும் 18 வித வரிச் சலுகைகளும், இன்ன பிற வசதிகளும் கிடைத்தால் வந்தாரை வாழவைக்கும் தமிழகத்திற்கு ஏன் குடிபெயர மாட்டார்கள்? இன்றுவரை இந்நிலை தொடர்வதைக் காணலாம்.

**குடிநீக்கலும் அப்புறப்படுத்தலும்**

நாகரிகத்தின் உச்சத்தில் வாழ்ந்தவர்களின் வாழிடங்களையும், விவசாய நிலங்களையும் வலுக்கட்டாயமாகப் பறித்து, அவர்களுடைய வாழ்வை முடிவுக்குக் கொண்டுவருவருதான் முடியாட்சியா?

- சாருதேவி என்ற அரசியார் அதுலன் என்பவனுடைய நிலத்தை அவனை அப்புறப்படுத்திவிட்டு தாமலூர் பகவான் நாராயணனுக்குத் தானமாக்கினார் (சாருதேவியின் குணமதேயச் செப்பேடு – 350 ).
- ருத்திரசர்மன் - சஷ்டி குமாரன் போன்ற 8 பேருக்கு வழங்கப்பட்ட நிலம், மற்ற யாருக்காவது உரிமையிருந்தால் அது ரத்தாகிறது' என ஆணை பிறப்பிக்கப்பட்டுள்ளது.
- அரசன் சிம்ம விஷ்ணு நிலவுடைமையாளரிடம் விலைக்கு வாங்கி, குடிநீக்கித் தனதாக்கி, சமண முனிவர்களுக்குத் தானமளித்துள்ளான்.
- பல்லவ அரசகுமாரர்களின் விண்ணப்பத்திற்குச் செவிசாய்த்து கொங்கணி மகாராசன் 4 கிராமங்களை ஒன்றாக்கி, அதை 66 பங்காக்கித் தானமாக்கியுள்ளான் ( சிவமாறன் - லல்லகேரேச் செப்பேடு).
- அரசனுக்கும், தளபதிகளுக்கும் வேண்டாதவர்களைக் குடிநீக்கிவிட்டுத் தானம் வழங்கப்பட்டுள்ளது.
- ஆறு, ஓடை.......போன்றவற்றை அநுபவித்து வரும் குடியை நீக்கி கருணாகர மங்கலம்' என்ற பெயரிடப்பட்டு, நீர்ப்பயன்பாட்டின் முன்னடையும், பழம்பியரும், பழவிறையும் தவிர்க்கப்படுகிறது.
- வீரநாராயண மங்கலம்.............( வெண்ணிக் கூற்றம் தவிர்த்த) ஊர்கள் காணியுடையாரை மாற்றி குடிநீக்கி – வெண்ணிக் கூற்றத்து நாட்டார்க்கும், ப்ரமதேயக்கிழவர்க்கும், தேவதானப் பள்ளிச் சந்தக் - கணிமுற்றூட்டு – வெட்டப் பேற்றுப் பழவறச் சாலாபோகம் உள்ளிட்ட ஊரிலார்க்கும் நகரங்களிலார்க்கும் அளிக்கப்பட்டது (சோழர் செப்பேடுகள்).

ஊர் உள்ளவர்களை ஊரிலிகளாக மாற்றிவிட்டு யார்யாருக்கெல்லாமோ தானம் வழங்கப்பட்டுள்ளது: இதன் பின்னணி ஆராயப்படவேண்டும்.

**தானம் பெற்ற நிலத்தில் என்ன செய்யலாம்?**

தான நிலங்களில் அந்நியர்கள் குறுங்குத்துக்குத்தக் கூடாது. விலங்கு அடைக்கக் கூடாது. நீர் இறைக்கக் கூடாது.

சுட்டோட்டால் மாடமாளிகை கட்டலாம். துரவு, கிணறு உண்டாக்கலாம். தென்னை, தமந(க)மும், மருவும், செண்பகமும், செங்கழுநீர், மா,பலா, கமுகு, பனை, கொடியுள்ள பயன் மரங்கள் இடலாம்: நடலாம்: செக்கிடலாம்: தன் குடிக்கேற்ற வண்ணம் முரைசும் முப்படித் தோரணமும் நாட்டலாம்.

**தண்டனைகள்**

1. சாதிக்கலவரங்களுக்கு – 12 பணம் அபராதம்.

E-ISSN: 2581-7140
Special Issue: Vol. 2, April-2019 Available at: www.ijtlls.com

2. வரிக்கொடாதவருடைய வீட்டில் நுழைந்து வெண்கலப் பாத்திரங்களை எடுக்கலாம்: மண் பாத்திரங்களை உடைக்கலாம் (குடுமியான் மலைக் கோயில் கும்பாபிசேகத் தலைவரி தராதவர்கள் - 1229 – கல்வெட்டுகள்).
3. பொதுமரங்களை வெட்டினால் தண்டனை.

**தொகுப்புரை**

கரடு முரடான நிலங்களையெல்லாம் பொன்விளையும் பூமியாகத் தமது உடலுழைப்பினால் உருவாக்கியவர்களிடம் இருந்து அதிகமான வரிகளைப் பெற்று மன்னர்கள் ஆட்சி நடத்தியுள்ளனர். சிலரது தூண்டுதலினாலும், தன்னலத்திற்காகவும், இவ்விளைநிலங்களை இலவசமாகப் பெறும்பொருட்டு ஆணைகளைப் பிறப்பித்துள்ளனர். நில உரிமையாளர்களை வலுக்கட்டாயமாக வெளியேற்றியிருக்கின்றனர். அப்படி வெளியேற்றப்பட்டோர் மீண்டும் கரடு முரடான நிலங்களைப் பண்படுத்தும் உடலுழைப்பிற்குத் திரும்பித் துன்ப வாழ்க்கையை ஆரம்பித்துள்ளனர்.

இலவசமாக விளைநிலங்களும், அதில் உழைக்கப் பாதிக் கூலியில் ஆட்களும் கிடைக்க, பால்,தயிர், அரிசி போன்ற உணவுப் பொருட்களுக்கும் உழைக்க வேண்டிய அவசியமில்லாமல் இலவசமாகவே கிடைத்துள்ளது. வரிவிலக்குகள், செலவின்மை, மனிதனிடமிருந்தும், விலங்குகளிடமிருந்தும் பாதுகாக்க ஆட்கள், சுத்தமும் சுகாதாரமும் அமைதியும் தவழும் ஊர்களில் அமைந்த மாடமாளிகைகள், பயன்தரு மரங்களுடனும் தோரணங்களுடனும் வாழ்பவர்கள் வாழ்க்கையின் அடுத்த கட்டத்தை நோக்கி நகர வாய்ப்புள்ளது.

64 விதமான கலைகளை மட்டுமல்ல 64 கோடிக் கலைகளையும் அவர்களால் படைக்கவும் முடியும்: படிக்கவும் முடியும். அந்த ஆட்சியில் கலைகள் சிறந்து விளங்கித்தான் இருக்கும். குடிமக்களின் நிலை?

ஒப்பந்தங்கள் சில குறிப்பிட்ட ஆண்டுகள் வரை போடுவது வழக்கம். 99 ஆண்டுகளுக்குக் கூட போடப்பட்ட சில ஒப்பந்தங்கள் நம்மால் மறக்கப்பட்டு (மறக்கடிக்கப்பட்டு) விட்டன. அரசர்கள் ஒப்பந்தங்களை 100000 ஆண்டுகள் தங்கள் ஆணைகள் நடப்பில் இருக்க வேண்டும் எனக் கட்டளையிட்டுள்ளனர். அந்த 100000 ஆண்டுகள் எப்போது முடிவுக்கு வரும்? நம்முடைய நிலங்கள் நமக்குச் சொந்தமாவது எப்போது? அதுவரை இத்தகவல்கள் அடங்கிய கல்வெட்டுகளையும், செப்பேடுகளையும், சுவடிகளையும் எப்படிப் பாதுகாக்கப் போகின்றோம்?

இத்தகைய ஆவணங்கள் தரும் செய்திகளைக் கீழடி போலக் கருதி மேலும் ஆய்வு செய்ய வேண்டும். கல்வெட்டுகளும், செப்பேடுகளும், சுவடிகளும் மிகத் துரிதமாகப் படிக்கப்பட்டுச் செய்திகள் வெளிக்கொணர வேண்டியது இக்காலகட்டத்தின் மிக அவசரத் தேவை என்பதை நாம் உணர வேண்டும்.

**பயன்பட்ட நூல்கள்**

1. கல்வெட்டியல், ராஜன்.கா, மனோ பதிப்பகம், தஞ்சை-5, 2006.
2. கல்வெட்டுகளும் சுவடிகளும், பேரா.முனை.நாச்சிமுத்து.கி., சேகர் பதிப்பகம், சென்னை-78, 2007.
3. கல்வெட்டுத் தேன்துளிகள், வித். மகாதேவன்.வே.,சேகர் பதிப்பகம், சென்னை-78,2009.
4. சோழர் செப்பேடுகள், நடன. குாசிநாதன், சேகர் பதிப்பகம், சென்னை- 78, 2011
5. பல்லவர் காலச் செப்பேடுகள், இராஜேநதிரன்.மு., இ.ஆ.ப., அகநி வெளியீடு, வந்தவாசி-8, 2015.

E-ISSN: 2581-7140
Special Issue: Vol. 2, April-2019 Available at: www.ijtlls.com

# தொல்லியல் சான்றுகளும் தமிழர் பண்பாடும்
# Archaeological Evidences and Tamilar Culture

**து. விஜயகலா,**
வெங்கடேஸ்வரா கல்வியியல் கல்லூரி, புதுக்கோட்டை - 622001

## Abstract

*The paper elicits a study on the Archaeological Evidences and Tamilar culture. It becomes very important to know about the culture and the civilization that existed lang back through the evidences. Hence, the study paves way to understand the the cultural origins of the ancient Tamil people.*

**Keywords:** Archaeological Evidence, Tamilar Culture

**முன்னுரை**

பண்டைய நாற்களில், பொதுவாக இந்தியாவிலும், சிறப்பாகத் தமிழகத்திலும் வரலாற்று நிகழ்ச்சிகளை ஏடுகளில் எழுதி வைக்கும் வழக்கத்தை மக்கள் மேற்கொண்டிலர். மிகச் சிறந்த இலக்கியங்களையும், உரைகளையும் படைத்துக் கொடுத்த பழந்தமிழர்கள் வரலாற்று நிகழ்வுகளைக் குறித்து வைக்காமற்போனது வியப்பினும் வியப்பாக உள்ளது. ஆழ்ந்த ஆராய்ச்சியின் பயனாய் தமிழகத்தின் வரலாறுகள் உருவாக்கப்பட்டு வந்துள்ளன. எவ்வாறு அவை ஆழ்ந்த ஆராய்ச்சி மூலம் உருவாக்கப்பட்டது என்பது இக்கட்டுரை ஆராய்கிறது.

**சிந்து சமவெளி அகழ்வாராய்ச்சி**

சிந்துசமவெளி அகழ்வாராய்ச்சிகளுக்குப் பிறகு தமிழரின் வரலாறும் நாகரிகமும் புதிய கோணத்திலிருந்து நோக்கப்பட்டு வருகின்றன. சிந்துவெளி நாகரிகம் பண்டைய தமிழரால் வளர்க்கப்பட்டது என்று அண்மையில் சில ஆய்வாளர்கள் தம் கருத்துக்களை வெளியிட்டு வருகின்றனர். ஹீராஸ் பாதிரியார் ஹரப்பா எழுத்துகளுக்கும் தமிழ் எழுத்துக்களுக்கும் தொடர்பு உண்டென்று கூறுகிறார். ரோமாபுரி நாணயங்கள் தமிழகத்தில் சில இடங்களில் கிடைத்துள்ளன. அரிக்கமேட்டு அகழ்வாராய்ச்சியில் கி.பி. இரண்டாம் நூற்றாண்டு ரோமாபுரி நாணயங்கள் இரு நாடுகளுக்கும் இடையேயான செழிப்பான வாணிகத்துக்கு சான்று பகர்கின்றன.

**சங்க காலம்**

இக்காலத்து மக்களின் வாழ்க்கை முறைகளையும், பண்பாடுகளையும் அறிந்து கொள்வதற்குச் சங்க இலக்கியங்கள் பெரிதும் உதவுகின்றன. பழம் பாண்டிய மன்னரின் நாணயங்கள் சில சதுரவடிவிலும், சதுரவடிவிலும் கிடைத்துள்ளன. இவற்றில் ஒரு புறம் மீன் சின்னமும், பின்புறம் யானை அல்லது காளை சின்னமும் பொறிக்கப்பட்டுள்ளன. இவை கி.மு.2 ஆம் நூற்றாண்டு முதல் கி.பி.2 ஆம் நூற்றாண்டு வரையிலான கால அளவில் வெளியிடப்பட்டிருக்க வேண்டும். இதன் மூலம் தமிழர் பண்பாட்டின் பழமை தன்மையை அறியலாம்.

E-ISSN: 2581-7140
Special Issue: Vol. 2, April-2019 Available at: www.ijtlls.com

**தமிழ்ச் சமுதாயமும் பண்பாடும்**

தமிழர் சமுதாயம் மிகவும் பழமையான ஒன்றாகும். பண்டைய எகிப்து பாபிலோனியா கிரிசு, ரோம் ஆகிய நாடுகள் நாகரிகத்தில் மிகவும் சிறந்து விளங்கிய பண்டைக் காலத்திலேயே தமக்கென ஒரு நாகரிகத்தையும் சிறந்த பண்பாட்டையும் வளர்த்து வந்தவர்கள் தமிழர்கள். ஒரு நாட்டின் வரலாற்றை எழுதுவதற்கு அந்நாட்டில் எழுந்துள்ள இலக்கியப் படைப்புகள் பழங்காலக் கட்டடச் சிதைவுகள், சிற்பச்சின்னங்கள், சமய குறிப்புகள், கண்டெடுக்கப்பட்ட கல்வெட்டுகள், புதைப்பொருட்கள் ஆகியவை சான்றுகளாக உதவி வந்துள்ளன. இச்சான்றுகள் அத்தனையும் தமிழகத்திலும் பெருமளவு கிடைத்துள்ளன. இவற்றைக்கொண்டே தமிழரின் பண்பாட்டின் தொன்மையை அறியலாம்.

**கீழடி அகழ்வாராய்ச்சி**

**அமைவிடம்**

மதுரையிலிருந்து இராமநாதபுரத்தின் அழகன்குளம் துறைமுகத்துக்குச் செல்லும் பண்டைய வணிகப்பாதையில் சிவகங்கை மாவட்டத்தில் உள்ள கீழடி என்ற ஊரின் கிழக்கே சுமார் 1 கி.மீ தொலைவில் மணலூர் கண்மாயின் மேற்கரையில் உள்ள பள்ளிச் சந்தைத்திடல் என்ற பெயரிலான மணல்மேட்டில் இவ்வகழாய்வு தொடக்கப்பட்டது.

**களத்தின் காலம்**

இந்தக் களம் கி.மு. 3 ஆம் நூற்றாண்டில் இருந்து கி.பி.10 ஆம் நூற்றாண்டு வரையான காலப்பகுதியைச் சேர்ந்த வசிப்பிடமாக கணிக்கப்பட்டது. உறுதிப்படுத்தல்களுக்காக இந்த அகழ்வாய்வில் இருந்து 2 மாதிரிகள் கரிமத் தேதியிடல் முறையில் பகுப்பாய்வு செய்ய அனுப்பப்பட்டது. ஜுலை 2017 இல் வெளிவந்த இதன் முடிவுகள் இந்த மையம் சுமார் 2,200 ஆண்டுகளுக்கு முன்னையது என்பதை உறுதி செய்துள்ளன.

**ஆய்வின் தற்போதைய நிலை**

தேனி மாவட்டம் தொடங்கி இராமநாதபுரம் மாவட்டம் வரை வைகை ஆற்றங்கரையின் அருகாமைப் பகுதிகளில் 2013-2014-யில் நடத்தப்பட்ட தொல்லியல் ஆய்வுகளின்போது தொல்லியல் எச்சங்கள் உள்ள 293 பகுதிகள் கண்டறியப்பட்டன. இவை களஞ்சியங்கள், வணிகத்தளங்கள், துறைமுகங்கள், வாழிடங்கள், கோயில்கள் என்ற வகையாகும். கீழடியில் அருங்காட்சியகம் அமைக்க தமிழ்நாடு அரசு ஆர்வம் காட்டவில்லை என இந்திய தொல்பொருள் ஆராய்ச்சித்துறை அறிவித்துள்ளது.

**கண்டுபிடிப்புகள்**

- கட்டிடங்கள்
- சுடுமண் குழாய், கழிவுநீர் தொகுதிகள்
- உறைகிணறுகள்
- செங்கற்சுவர்கள்
- மண்பாண்டங்கள்
- தமிழ்எழுத்துக்கள்
- அணிகலன்கள்
- அரிய தொல்பொருட்கள்

**கீழடி அகழாய்வின் காலவரிசை**

முதல் கட்டம் “ஜீன் 2015”,

இரண்டாம் கட்டம் “ஜனவரி 2016”,

E-ISSN: 2581-7140
Special Issue: Vol. 2, April-2019 Available at: www.ijtlls.com

மூன்றாம் கட்டம் "ஜனவரி 2017",
நான்காம் கட்டம் "பிப்ரவரி 2018",

**முடிவுரை**

ஆதிச்சநல்லூர் தொல்லியல் களத்துக்கு அடுத்து இந்திய தொல்லியல் ஆய்வு நிறுவனத்தால் தமிழ்நாட்டில் மேற்கொள்ளப்படும் பெரிய அளவிலான அகழாய்வு ஆகும். இது வைகை கரையில் உருவான தமிழர்கலாச்சாரத்தை வெளிக்கொணர்கிறது. சுமார் 3000 ஆண்டுகளுக்கு மேல் பழமையானது என அங்கு கண்டுபிடிக்கப்பட்ட ஆபரணங்கள் மூலம் காணலாம். அது பாண்டி சாம்ராஜியத்தின் எச்சங்கள் ஆகும். இந்த அகழாய்வு சிந்து வெளிநாகரிகத்திற்கும் முந்தையது ஆகும்.

கடற்கோளால் மூழ்கிப்போன குமரிக்கண்டத்தில்தான் முதல் மனித இனம் தோன்றியிருக்க வேண்டும். அம்மக்கள் பேசிய முதல் மொழியே "தமிழின் மூலமொழி" ஆகும்.

அம்மக்கள் பேசிய மொழியின் மூலமே "தொல்தமிழ்" அவர்தம் வழிவந்த உறவினர் வாழும் நிலமே "தமிழ்நாடு" என்று முடிவு செய்யலாம்.

ஆதிச்சநல்லூர் ஆய்வு நமக்கு கிடைத்த மிகப்பெரிய பொக்கிசமாகும். வருங்காலங்களில் இவ்வாய்வு மேன்மேலும் தொடர வேண்டும் என்று இவ்வாய்வு முன்னுரைக்கிறது.

**நூற்பட்டியல்**

1. டாக்டர் கே.கே.பிள்ளை –தமிழக வரலாறு மக்களும் பண்பாடும்.
2. முனைவர்.க.விஜயா- இந்திய வரலாறு.
3. பண்டைய தமிழகம் - சித்ரா மாதவன்.
4. சங்ககால ஆட்சிமுறையும் சமூக வாழ்வும் - பேராசிரியர் மு.நீலகண்ட சாஸ்திரி.
5. தொலைபேசி வழி தகவல் சேகரிப்பு Dr.ஜிந்தா M.A., Ph.D., திருநெல்வேலி.
6. இணையதள உதவியின் மூலம் பெற்ற குறிப்புகள்.

தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்
International Journal of Tamil Language and Literary Studies 
*A Bi-Yearly Peer-Reviewed International Journal*
E-ISSN: 2581-7140
Special Issue: Vol. 2, April-2019 Available at: www.ijtlls.com

# தமிழக தொல்லியலில் இராபர்ட் புரூஸ்பூட்டின் பங்கு
# The Contribution of Robert Bruce Foote in Tamil Archaeologial Study

**முனைவர் திருமதி மு. விஜயசாந்தி,** உதவிப்பேராசிரியர்,
வரலாற்றுத்துறை, பாத்திமா கல்லூரி, மதுரை-18,

## Abstract

*The article brings forth the essential contribution of the famous Robert Bruce Foote in archaeological field of the Tamil region. His contribution to the Tamil Archaeology is immense and indebted one. He is the first one to proclaim that the Tamils are a group of people who lived before million of years. He dedicated him in the land survey department of the British Government of India and did lots of surveys and dig sites all over india. Very important of his findings are the tools before to that of the Ice Age, Theri area of Thirunelveli Dist, Atthirapakkam and pallavaram. Hence, the study brings out the related facts from the corroboration.*

**Keywords:** Contribution, Robert Bruce Foote, Tamil Archaeologial Study

**முன்னுரை**

எழுத்து சான்றுகளே இல்லாத கற்கால மக்களின் வரலாற்றை கணித்து அவர்களது வாழ்விடங்களை ஆராய்ந்து அவர்கள் பயன்படுத்திய கருவிகள் மூலம் மனித இனத்தின் வளர்ச்சியை அறிவிக்கும் துறை தொல்லியல் துறை ஆகும். தொல்லியலும், வரலாறும் ஒன்றோடொன்று மிகநெருங்கிய தொடர்புடையனவாகத் திகழ்கின்றன. கடந்தகால மனிதர்களின் செயல்களையும், சாதனைகளையும் விளக்குவதே வரலாறு. வரலாறு பொதுவாக எழுதப்பட்ட ஆவணங்களையே சார்ந்து உள்ளது. ஆனால் தொல்லியல் என்பது எழுதப்பட்ட ஆவணங்களின் காலத்திற்கும் முற்பட்டது. தமிழகத்தில் பல தொன்மைமிக்க ஊர்களில் அகழ்வாய்வுகள் மேற்கொள்ளப்பட்டன. அவை பழங்கால மக்களின் பண்பாடு, பழக்க வழக்கங்கள் பற்றி விளக்குகின்றன. தமிழகத்தில் இதுவரை நடத்தப்பட்ட அகழ்வாய்வுகளை பழங்கற்காலம், இடைக்கற்காலம், புதிய கற்காலம், இரும்புக்காலம், வரலாற்றுத் தொடக்க காலம் எனப் பிரிக்கலாம். இவற்றில் பழங்கற்காலம் குறித்த ஆய்வுகளை முதன் முதலாக மேற்கொண்ட பெருமை தொல்லியல் ஆய்வாளர் இராபர்ட் புரூஸ்பூட் அவர்களையே சாரும்.

**இராபர்ட் புரூஸ்பூட்டின் பிறப்பும், பணியும்: (கி.பி. 1834-1912)**



**இராபர்ட் புரூஸ்பூட்**

E-ISSN: 2581-7140
Special Issue: Vol. 2, April-2019 Available at: www.ijtlls.com

இராபர்ட் புரூஸ்பூட் அவர்கள் செப்டம்பர் 22ம் நாள் 1834ல் இங்கிலாந்தில் உள்ள செல்ட்டன்ஹாம் என்ற பகுதியில் கோபியா வெல்ஸ்.்.புட் மறம் வில்லியம் ஹென்றி புட்டின் இளைய மகனாகப் பிறந்தார் தன்னுடைய கல்வியை முடித்த பின்பு 24வது வயதில் இந்தியாவிற்கு வந்து 1858, செப்டம்பர் மாதத்தில் மத்திய நிலவியல் ஆய்வுத்துறையில் (G.S.I) நில அளவையாளராக திருச்சியில் பணியில் (சர்வேயர்) சேர்ந்தார்.[1] பின்னர் சென்னைக்கு பணிமாற்றம் செய்யப்பட்டு 1862 ஜுலையில் பெட்ஸ்வின் மகள் எலிசபெத் அன்னேவை சென்னையில் பூட் திருமணம் செய்தார். ஏப்ரல் 1863ல் அவர்களுடைய முதல் குழந்தை ஹென்றி புரூஸ்பூட் பிறந்தார். அத்துறையில் 33 ஆண்டுகள் நிலவியல் ஆராய்ச்சிப் பணியை மேற்கொண்டு 1891ம் ஆண்டு முதுநிலைக் காப்பாளராக ஓய்வு பெற்றார். இவர் மண்ணியல் ஆய்வுத் துறையில் பல ஆராய்ச்சிகள் செய்து "தார்வார் பாறை அமைப்பு-தென்இந்தியாவின் தங்கத் தாதுத்துகள்களடங்கிய ஒரு முதன்மைப் பாறைத் தொடர்" (Dharwar system – The Chief Auriferous Rock Series of South India) என்ற ஆய்வுக் கட்டுரையை வெளியிட்டார். மேலும், ஆர்கேயன் பாறைகள் பற்றியும் ஆய்வு மேற்கொண்டு பல நிலவியல் தகவல்களையும் வெளிப்படுத்தியுள்ளார்.[2] இவரது ஆய்வுக் கட்டுரைகள் நிலவியல் ஆய்வில் முக்கியப் பங்கு வகிக்கின்றன. பொதுவாக இவரது ஆய்வுப் பணிகள் சென்னை மாகாணத்திலேயே அமைந்திருந்தன. இந்நிலையில் இவருக்கு தொல்லியல் துறையின் மீது மிகுந்த நாட்டம் ஏற்பட்டு தொல்லியல் ஆய்வில் தன்னை ஈடுபடுத்திக் கொண்டார்.

**தொல்லியல் பணியில் புரூஸ்பூட்**

இவருடைய காலகட்டத்தில் இங்கிலாந்தில் பிட்ரிவர்ஸ், சர் பிளிண்டர்ஸ் பெட்ரி போன்ற தொல்லியலாளர்கள் பழம் பொருட்களை சேகரித்ததோடு, தொல்பொருள்கள் சேகரிக்கும் வழியினையும் புத்தகமாக வெளியிட்டனர்.[3] இப்புத்தகங்களின் மீது ஆர்வம் கொண்டார். புரூஸ்பூட் இவருக்கு சார்லஸ் டார்வினின் மனிதப் பரிணாமக் கொள்கையில் அதிக ஆர்வமுண்டு. மேலும் 'இந்தியத் தொல்லியலின் தந்தை'[4] என்று அழைக்கப்பட்டும் அலெக்சாண்டர் கன்னிங்ஹாம், சர்வேயர் ஜெனரல் வட இந்தியாவில் அகழாய்வுப் பணிகளை மேற்கொண்டார். எனவே தென் இந்தியாவில் இத்தகைய அகழாய்வு முயற்சிகளை மேற்கொண்டார் புரூஸ்பூட். இவரது ஆய்வுப் பணிகளுக்கு வில்லியம் கிங் என்பவர் பெரும் உதவியாக இருந்தார்.[5] நிலவியல் வல்லுநராகத் திகழ்ந்த போதிலும், தொல்பழங்காலம் தொடர்பான ஆராய்ச்சிப்பணியை ஆர்வத்துடன் மேற்கொண்டு தென்னிந்தியாவின் பல இடங்களுக்கும் போக்குவரத்து வசதியில்லாத காலத்தில் குதிரையின் மீது பயணம் செய்து அரிய தொல்பழங்காலப் பகுதிகளைக் கண்டறிந்தது இவரது பெரும் சாதனையாகும்.

**இராபர்ட் புரூஸ்பூட்டின் கண்டுபிடிப்புக்கள்**

ஒருநாள் நிலவியல் ஆய்விற்காக குழிவெட்டிக் கொண்டிருந்தார். அன்று 1863ம் ஆண்டு மே 30ம் நாள் சென்னையை அடுத்த பல்லாவரம் பகுதியில் புரூஸ்பூட் முதன் முதலாகப் பழைய கற்காலக் கருவியினை கண்டெடுத்து[6] அதன் வாயிலாகப் பனியுகக் காலத்தில் இந்தியாவில் மக்கள் வாழ்ந்திருந்ததற்கான தடயம் கிடைக்கப் பெறுவதை உலகிற்கு வெளிப்படுத்தினார். இந்த பழங்காலக் கருவிகள் உலக தொல்லியலாளர்களை வியப்பிலாழ்த்தியது. ஏனெனில் இக்கண்டுபிடிப்புகள் ஐரோப்பாவில் மனிதன் தோன்றிய காலத்திற்கு சமமானவை ஆகும்.[7] மேலும் இது இந்திய வரலாற்றை மிகவும் தொன்மைக்கு தள்ளியது.

E-ISSN: 2581-7140
Special Issue: Vol. 2, April-2019 Available at: www.ijtlls.com

பல்லாவரத்தில் கல் ஆயுதத்தைக் கண்டெடுத்த பிறகு திருவள்ளூர் மாவட்ட மற்றும் சென்னையைச் சுற்றியுள்ள பகுதிகளிலும் பூண்டி நீர்த்தேக்கத்திற்கு அருகே அத்திரம்பாக்கம் ஓடைப்பகுதி மற்றும் அதன் சுற்றுப்பகுதிகளில் கள ஆய்வு மேற்கொண்டு பழைய கற்காலக் கல் ஆயுதங்கள் பலவற்றைச் சேகரித்துள்ளார். இங்கு கிடைக்கப்பெற்ற பழைய கற்காலக் கருவிகள் சென்னை கைகோடாரி மரபு வகையைச் சார்ந்தவை என அழைக்கப்படுகின்றன.[8] இது சென்னைத்தொழில் நுட்பம் எனவும் அழைக்கப்பட்டது.




**புரூஸ்பூட் கண்டுபிடித்த கற்கருவிகள்**

செங்கல்பட்டு, தஞ்சாவூர், வடஆற்காடு ஆகிய மாவட்டங்களில் கைக்கோடாரிகள், வெட்டு கற்கருவிகள், செதுக்கு கருவிகள், இருபக்க முனைக்கருவிகள் அகியவை இவரால் கண்டுபிடிக்கப்பட்டன. இதனால் பழங்கால தமிழனை ‘படிகக்கல் மனிதன்’ என அழைத்தனர்.[9] இந்தக் கருவிகள் மிகச் சிறிய அளவு தொழில் நுட்பத்தைக் கொண்டிருந்ததால் ‘அச்சூலியனம் வகைத் தொழில் நுட்பம்’ எனவும் அழைக்கப்படுகிறது. இவர் “பழங்கற்காலத் தமிழர்கள் படிகக் கற்களால் ஆன ஆயுதங்களைப் பயன்படுத்தி வேட்டையாடி உணவுப் பொருட்களை சேகரித்தனர். இயற்கையாகவே காணப்பட்ட குகைகளில் தங்கினர். பொதுவாக ஆற்றுப்படுக்கைகளிலேயே வாழ்ந்தனர். இவர்கள் மண்பாண்டங்கள் செய்யும் முறையை அறிந்திருக்கவில்லை,” என கண்டுபிடித்தார்.

இராபர்ட் புரூஸ்பூட் தென்னிந்தியத் தீபகற்ப பகுதியில் கண்டுபிடித்த 459 வரலாற்றுக்கு முற்பட்டகாலப் பகுதிகள் 42 பகுதிகள் பழைய கற்காலத்தையும் 252 பகுதிகள் புதிய கற்காலத்தையும் சார்ந்தவையாகும்.[10] மேலும் திருநெல்வேலி மாவட்டத்தில் தேரிப்பகுதியில் நுண்கற்காலக் கருவிகளைக் கண்டெடுத்து அப்பகுதியில் நுண்கற்காலத் தொழிற்சாலை இருந்தமையை உறுதிப்படுத்தினார். பழைய கற்கால, புதிய கற்காலக்கல் ஆயுதங்களை அதன் உருவமைப்பு மற்றும் தொழில்நுட்ப முறையைக் கொண்டு வகைப்படுத்தும் பணியையும் மேற்கொண்டார். தென்னிந்தியாவில் பழைய கற்காலத்திற்கும், புதிய கற்காலத்திற்குமிடையேயுள்ள நீண்ட இடைவெளியைக் கண்டறிந்து, அதற்கான காரணத்தை அறியும் பொருட்டு மேற்கொண்ட அவரது ஆய்வு சிறப்பு வாய்ந்ததாகும்.

**அத்திரப் பாக்கம் ஆய்வில் புரூஸ்பூட்**



**அத்திரப் பாக்கம் ஆய்வுக்களம்**

E-ISSN: 2581-7140
Special Issue: Vol. 2, April-2019 Available at: www.ijtlls.com

அத்திரப்பாக்கம் பழங்கற்கால மக்கள் வாழ்ந்த செங்கற்பட்டு மாவட்டத்தில் உள்ள ஒரு சிற்றூராகும். கோத்தலையாறும் அத்திரம்பாக்கம் ஓடையும் சேருகின்ற இடத்தில் இது அமைந்துள்ளது. இந்த கோத்தலையாறு மூன்று ஆற்றடுக்கு அல்லது மேடுகளுடன் பல மைல்களுக்கு பரவலாக விரிந்து காணப்படுகிறது. இந்த மேடுகளில் தான் கற்கருவிகள் புதைந்துகிடந்தன. இந்த ஆற்றடுக்குகளில் ராபர்ட்ட் புரூஸ்பூட் அகழாய்வு செய்து பல பழங்கற்காலக் கருவிகளைக் கண்டுபிடித்தார். இவற்றுடன் மனிதனின் கால் எழும்பின் புதை படிவத்தையும் கண்டெடுத்தார்.[11] அத்திரம்பாக்கம் பழங்கற்காலக் கருவிகள் செய்யப்பட்ட தொழிற்கூடமாக விளங்கியதை தெளிவுறுத்தினார். எத்திரப்பாக்கத்தில் கண்டெடுக்கப்பட்ட கருவிகளில் பெரும்பாலானவை கைக்கோடாரிகளாகும். இவை உலகப்புகழ்பெற்றவை. சில கோடாரிகளின் 'பாட்டிநேசன்' எனப்படும் சிவப்பு பூச்சு காணப்படுகிறது.[12] இவை தவிர சிறிய செதுக்குக் கருவிகள், இருகுக் கருவிகள், அம்புமுனை, கற்கருவிகள் போன்றவற்றையும் கண்டுபிடித்தார்.

இந்தியாவில் பழங்கற்காலக் கருவிகள் அதிக அளவில் கண்டெடுக்கப்பட்டுள்ள இரண்டு இடங்களில் ஒன்று அதிரம்பாக்கம். இந்த ஊரில் ஏறத்தாழ இரண்டு லட்சம் ஆண்டுகளுக்கு முற்பட்ட காலத்தில் பழங்கால மனிதன் வாழ்ந்துள்ளான் என்பதை இக்கற்கருவிகள் பறைசாற்றுகின்றன. இராபர்ட் புரூஸ்பூட்டை தொடர்ந்து V.D. கிருஷ்ணசாமி, பேட்டர்சன், H.D. சங்காலியா, K.D. பானர்ஜி பல ஆய்வுகளை இங்கு மேற்கொண்டனர்.

**தொல்பழங்காலத்தின் தந்தை புரூஸ்பூட்**

அரிய கண்டுபிடிப்புக்களை வெளிக்கொணர்ந்து, பல தொல்லியல் சிக்கல்களுக்குத் தீர்வு கண்டுள்ள இராபர்ட் புரூஸ்பூட் "இந்தியத் தொல்பழங்காலத்தின் தந்தை"[13] என தொல்லியல் வல்லுநர்களால் அழைக்கப்படுகிறார். 1873ல் குவார்ட்சைட் கைக்கோடாரியை நர்மதை ஆற்றுப்பள்ளத்தாக்கில் கண்டெடுத்து இப்பெருமையை தக்கவைத்தார்.

**புரூஸ்பூட்டின் தொல்லியல் பங்களிப்புகள்**



**குடியம் குகை**

இராபர்ட் புரூஸ்பூட் பழங்கற்காலமம், புதிய கற்காலம் மற்றும் உலோக காலம் பற்றிய ஆய்வுகளைத் தொடர்ந்து நடத்தினார். பிற்காலத்தில் எழுந்த பானை ஓடுகள் பற்றிய தனது கருத்துக்களைத் தெரிவித்தார். நர்மதை ஆற்றுப் பள்ளத்தாக்கில் இவர் கண்டுபிடித்த புராதனச் சின்னங்கள் இவருக்கு மேலும் புகழைத் தேடித்தந்தன. மேற்கிந்தியாவில் பெலும்குகை மற்றும் குடியம் குகை ஆகியவற்றைக் கண்டுபிடித்தார். இவர் தான் கண்டுபிடித்த பொருட்கள் பற்றிய எல்லாச் செய்திகளையும் "The Foote Collection of Indian Pre-Historic and Proto Historic Antiquities" என்ற நூலில் விளக்கிக் கூறியுள்ளார்.[14] மேலும் தனது இந்தியப் பங்களிப்பு நினைவுகளை 12 பாகங்களாக வெளியிட்டார். இதனை இந்திய நிலவியல் ஆய்வுக் கழகம் "Geological Features of the South Maharatta Country and

E-ISSN: 2581-7140
Special Issue: Vol. 2, April-2019 Available at: www.ijtlls.com

Adjacent District" என்ற தலைப்பில் 1876ம் ஆண்டில் வெளியிட்டது.[15] அவரால் சென்னை, மைசூர், ஹைதராபாத் மற்றும் பரோடா பகுதிகளில் சேகரிக்கப்பட்ட வரலாற்றுக்கு முற்பட்ட காலத் தொல்பொருட்கள் 1904ம் ஆண்டு அருங்காட்சியகத் துறையால் வாங்கப்பெற்று அதற்கெனத் தனிக் காட்சி அறையும் தொல்லியல் பிரிவில் நிறுவப்பட்டது. மேலும் அவரது மரணத்திற்குப் பிறகு 1914ம் ஆண்டு சென்னை அருங்காட்சியகத் துறையினரால் இரண்டு பகுதிகளாக வெளியிடப்பட்டது. சில தொல்பொருட்கள் கல்கத்தா அருங்காட்சியகத்தில் பார்வையாளர்களுக்காகக் காட்சிப் பெட்டியில் வைக்கப்பட்டன.

**முடிவுரை**

இந்திய தொல்பழங்கால ஆராய்ச்சி வளர்ச்சிக்கு அடித்தளமிட்ட இராபர்ட் புரூஸ்பூட் 1912ம் ஆண்டு டிசம்பர் 29ம் நாளில் இயற்கை எய்தினார். அவரது அடிப்படைக் கள ஆய்வுக் குறிப்புகள் இன்றளவும் இந்தியத் தொல்பழங்காலத்தைப் பற்றி அறிந்து கொள்ள பெரிதும் பயன்படுகிறது. கன்னிங்காம் தென்னிந்தியாவில் மேற்கொள்ளாமல் விட்ட பணிகளை புரூஸ்பூட் செய்து முடித்தார். இந்திய நாகரீக வரலாற்றை இலட்சம் ஆண்டுகளுக்கு முற்பட்டதென முதன் முதலில் உலகுக்குக் காட்டிய பெருமை இவரையே சாரும்.

**அடிக்குறிப்புகள்**

1. **கல்வெட்டு, காலாண்டிதழ்-53,** தமிழ்நாடு அரசு தொல்லியல்துறை, சென்னை, சனவரி, 2000, ப. 13.
2. மேலது, ப. 14.
3. Kushwaha.H.C., **History of Indian Archaeology,** Kunal Books, New Delhi, 2013, P. 88.
4. தர்மராஜ். ஜே., எபிஜேம்ஸ். த., **தொல்லியல்,** டென்சி பதிப்பகம், சிவகாசி, 2010, ப. 55.
5. மேலது, ப. 57.
6. Venkatraman. R., **Indian Archaeology A (Survey),** Ennes Publications, Udumalpet, 1985, P. 21.
7. Stuart Pig got, **Prehistoric (to 1000 B.C.)** Cassell & Company Ltd., London, 1962, P. 17.
8. அன்தோன்வா. அ.கொ., போன்காரத் - லேவின், கத்தோவ்ஸ்கி .கி.கி., **இந்தியாவின் வரலாறு,** முன்னேற்றப் பதிப்பகம், மாஸ்கோ, 1979, ப. 12.
9. தர்மராஜ்.ஜே., **தமிழக வரலாறு,** டென்சி பதிப்பகம், சிவகாசி, 2012, ப. 8.
10. **கல்வெட்டு**, ப. 14.
11. Burton Stein (ed.), **Essays on South India,** Vikas Publishing House Pvt. Ltd., Delhi, 1975, P. 3.
12. தர்மராஜ் .ஜே., எபிஜெம்ஸ் .த., **தொல்லியல்,** ப. 244.
13. Venkatraman .R., **Indian Archaeology**, P. 22.
14. **Idem.**
15. www.frontlineonnet.com

தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்
International Journal of Tamil Language and Literary Studies 
*A Bi-Yearly Peer-Reviewed International Journal*
E-ISSN: 2581-7140
Special Issue: Vol. 2, April-2019 Available at: www.ijtlls.com

# கல்வெட்டுகளில் பெண்கள்
# Women in Culverts

**முனைவர் ஏ. வீரப்பன்,** உதவிப்பேராசிரியர்,
தமிழியல் துறை, அண்ணாமலைப் பல்கலைக்கழகம், சிதம்பரம்.

## Abstract

*The article focuses on the state of women in the culverts of Tamil Nadu. It studies with the title evidences and bring down the conclusion that in Tamil society women enjoyed administrative rights and other autonomous previleges. Though women related inscriptions are very rare, they have dedicated and donated to temples, charity, Queen's philanthrophy, dowry and other evidences are seen in the culverts. The culvert edicts are suitable proofs to give a redeemed scenario among the present generation and to cultivate such qualities among the the female genaration*.

**Keywords:** Women, Culverts, Tamil Culture

**முன்னுரை**

சமூகம், அறிவியல், கலை இலக்கிய வரலாற்றில் பெண்களைப் பற்றிய பதிவுகள் மிகக் குறைவே எனலாம். அவற்றிலும், கல்வெட்டுகளில் அரசர்களின் கொடை, வீரர்களின் பராக்கிரமங்கள் ஆகியவை பற்றியவை தான் அதிகம் காண முடிகின்றது. ஆனால், பெண்களைப் பற்றிய குறிப்புகள் பல்வேறு கல்வெட்டுகளில் காணப்படவில்லை. எனினும், கல்வியறிவும், உலகியல் அறிவுமுடைய பெண்கள் குடும்பப் பொறுப்பேற்று, இல்லறத்தினை நல்லறமாக்கினர். இதற்கு சான்றாக கல்வெட்டுகள் சில கிடைத்துள்ளன. எனவே, அக்கல்வெட்டுகளில் காணப்படும் பெண்கள் பற்றிய செய்திகளை இக்கட்டுரை எடுத்தியம்புகின்றது

**கல்வெட்டுகளில் பெண்களின் திருப்பணி**

சங்க காலத்தில் தமிழ்ச் சமூகத்தில் பெண்களின் நிலையை, சங்கப் பாடல்கள் மூலம் அறிகிறோம். இடைக்காலத்தில், அதாவது கி.பி.8-ம் நூற்றாண்டு முதல் கி.பி.13-ம் நூற்றாண்டு வரை தமிழ்ச் சமூகத்தில் பெண்களின் நிலையைக் கல்வெட்டுக்கள் வாயிலாக அறியமுடிகின்றது.

அன்றைக்கு, அரசி மட்டும் அல்லாமல், வணிகர், விவசாயி, காவலர் ஆகியோரது மனைவிகளும், கோயில்களில் திருப்பணி செய்த தேவரடியார்கள், பணிப்பெண் ஆகியோரும் கொடுத்த கொடைகளை சிலக் கல்வெட்டுகளில் பதிவு செய்திருப்பதன் மூலமாக அக்கால பெண்களின் வேறுபட்ட கோணம் நமக்குப் புலப்படுகிறது.

**பெண்களின் கொடை**

அவிநாசி வட்டம் ஆலத்தூர் சமணர் கோயில் வாசல் கல்லில் உள்ள கி.பி. 10-ம் நூற்றாண்டு வட்டெழுத்துக் கல்வெட்டு மூலம், சித்தரையர் மகளும், கொங்குச் சோழன் மனைவியுமான வானவன் மாதவி சிற்றாச்சர் ஆலத்தூரில் வீர சங்காதப் பெரும்பள்ளியைத் திருப்பணி செய்து புதுப்பித்துள்ளார் என்ற செய்தியும், அன்னூர் மன்னீசர் கோயில் கருவறைத்

E-ISSN: 2581-7140
Special Issue: Vol. 2, April-2019 Available at: www.ijtlls.com

தென்சுவர்க் கல்வெட்டு மூலம், கி.பி.1265-ல் கொங்குச் சோழர் இரண்டாம் விக்கிரம சோழன் காலத்தில் சாத்து வாணிகன் மாலன் மனைவி கவுரி, சந்தி விளக்கெரிக்க 29 பணம் கொடையாகக் கொடுத்துள்ளார் என்ற செய்தியும் இக்கல்வெட்டுகள் மூலம் அறியமுடிகின்றது.

**அரசிகளின் கொடை**

அக்காலப் பெண்களுக்கு சொத்துரிமை ஓரளவு இருந்துள்ளது. குந்தவையார், செம்பியன்மாதேவி போன்ற அரச குடும்பத்துப் பெண்கள் மட்டுமல்ல சில வணிகர், வேட்டுவர், வேளாளர் குலப் பெண்களும் கோயிலுக்குக் கொடுத்த கொடை பற்றி சில கல்வெட்டுகள் கூறுகின்றன. காவலன் குறும்பிள்ளரில் சொக்கன் மனைக்கிழத்தி, வேளாளரில் கண்ணன் மூவேந்தவேளான் மணவாட்டி பெருந்தேவி ஆகியோர் கோயிலுக்குக் கொடை கொடுத்தமை பற்றிய செய்திகள் கல்வெட்டுகளில் காணப்படுகின்றன. இராசராசன் கூட "நம் அக்கன் குடுத்தனவும் நம் பெண்டுகள் குடுத்தனவும்" ஆகிய பெண்கள் கொடைகளைத் தன் கல்வெட்டில் குறிக்கப்பட்டுள்ளான்.

தாராபுரம் வட்டம் பிரம்மியம் அம்மன் கோயிலுக்கு வடக்கில் உள்ள வட்டெழுத்துத் தனிக்கல் மூலம் கி.பி.10-ம் நூற்றாண்டில், பாண்டிய மன்னன் வரகுண பராந்தகன் காலத்தில் அண்டநாட்டுப் புத்தூர் கிழான் உள்ளங்கணப்பன் மனைவியும் கூடல் கிழான் மகளுமான வடுகங்கோதை, செப்புத் திருமேனி செய்து வைத்தது பற்றியும் அதற்கு பூஜை செய்ய நிலம் தந்ததும் இதில் அறிய முடிகிறது.

காங்கேயம் வட்டம் பட்டாலி பால்வண்ண ஈஸ்வரர் மண்டபம் கிழக்கு சுவரில் உள்ள 3-ம் விக்கிரம சோழன் கால கல்வெட்டு மூலம், கி.பி.1292-ல் காவலன் அகளங்காழ்வான் மனைவி அவிநாசியாண்டி என்பவர் சந்தி விளக்கு எரிக்க ஒரு கழஞ்சுப் பொன் (4.4கிராம்) அளித்துள்ளார். இதுபோன்று இன்னும் பல அரசிகளின் கொடைச் சிறப்பு பல கல்வெட்டுகள் மூலம் அறியப்படுகிறது.

**தேவரடியாரின் கொடையும், உரிமையும்**

உடுமலை வட்டம் கடத்தூரில் உள்ள மருதீசர் கோயில் அர்த்த மண்டபம், கி.பி.1278-ம் ஆண்டு மூன்றாம் விக்கிரம சோழன் காலத்துக் கல்வெட்டு மூலம் கொழுமத்தைச் சேர்ந்த நாட்டிய மகள் சொக்கி என்பவர் நிலக்கொடை அளித்துள்ளார்.

திருப்பூர் திருமுருகன்பூண்டி திருமுருகநாதர் கோயில் கருவறைக் கல்வெட்டு மூலம், வீரபாண்டியன் கி.பி.13-ம் நூற்றாண்டில் இக்கோயில் தேவரடியாரில் ஆடக்கொண்ட நாச்சியின் மகளாகிய சவுண்டய நங்கைக்கும் அவர்களைச் சார்ந்தோருக்கும், திருவிழாக்களில் முன் அரங்கு ஏறும் உரிமை, தேரில் அமரும் உரிமை, கருவறை வரை செல்லும் உரிமையும் பெற்றிருந்தனர் என்பதை அறிய முடிகிறது.

**பணிப்பெண்ணின் கொடை**

அவிநாசி அருகே சேவூர் கபாலீசர் கோயிலில் உள்ள கி.பி.1227-ம் ஆண்டு கல்வெட்டு மூலம், அரசி முக்கோ கிழானடிகளின் பணிப்பெண் அறையன்வல்லி என்பவர், சந்தி விளக்கு எரிக்க ஒரு கழஞ்சுப் பொன்னைக் கொடையாகக் கொடுத்துள்ளார்.

**கணவன் கொடை**

அவிநாசி ஆலத்தூர் சமணர் கோயில் கி.பி.10-ம் நூற்றாண்டைச் சேர்ந்த வட்டெழுத்துக் கருவறை வாசல்கல் கல்வெட்டு, கணவன் தன் மனைவி மீது கொண்டிருந்த ஆழமான அன்பைத் தெரிவிக்கிறது. பொங்கலூர் வண்ணான் நீலன் செல்லன் என்பவர், தன் மனைவி காவஞ்சாத்தி மற்றும் தன் மகன் செல்லங்கணத்தி ஆகியோர் நல்வாழ்வுக்காக ஆலத்தூர் சமணர் கோயில் கருவறை வாசல்காலைக் கொடுத்துள்ளார்.

E-ISSN: 2581-7140
Special Issue: Vol. 2, April-2019 Available at: www.ijtlls.com

இந்தக் கல்வெட்டுகளை வைத்துக்கொண்டு முழுமுற்றாக அந்தக் காலத்தில் பெண்கள் சுதந்திரம் பெற்றிருந்தார்கள் என்றெல்லாம் முடிவுக்கு வந்துவிட முடியாது. ஆனாலும், வரலாற்றில் பெண்களின் பங்களிப்புகளைக் குறித்துக் குறைந்தபட்சப் பதிவுகளாவது இருந்திருக்கின்றன என்பதை சிலக் கல்வெட்டு மூலம் அறியமுடிகின்றது.

**பெண்களின் சீதனமும் சொத்துரிமையும்**

பெண்கள் "சீதனம்" பெற்றுள்ளனர். இது திருமணத்தின்போது பெற்றோர் மணமகளுக்குக் கொடுப்பது சீதனம் எனப்படும். ஒரு கல்வெட்டில் "என் தமக்கைக்குச் சீதனம் வாத்த நிலம்" என்ற குறிப்புக் காணப்படுகிறது. அது கணவன் உரிமையாகிறது. ஆனால் கணவன் இறந்தபின் அவன் சொத்துக்கள் மனைவியை சேர்கிறது என்ற குறிப்புக்கள் வாயிலாக அறியமுடிகின்றது.

**பெண்களின் பாதுகாவலர்கள்**

சில இடங்களில் பெண்கள் கொடை கொடுக்கும்போது அப்பெண்ணின் தந்தை அல்லது கணவன் அல்லது சகோதரன் ஆகியோர் அப்பெண்ணிற்காகக் கொடை கொடுத்ததாகக் கூறிக் கொள்கின்றனர். "திருச்சிற்றம்பல தேவனை முதுகண்ணாக உடைய இவன் பிராமணி சாத்தி" என்பது ஒரு கல்வெட்டுத் தொடராகும். முதுகண் என்பது பாதுகாவலரைக் குறிக்கும் கல்வெட்டுச் சொல்லாகும். மனைவிக்குக் கணவரும், மக்களுக்குப் பெற்றோரும் பாதுகாவலராகக் (முதுகண்ணாகக்) குறிக்கப் பெற்றுள்ளனர்.

**தேவரடியார் நிலை**

தேவரடியார் என்று பெயர் பெற்ற திருக்கோயில் பணிப்பெண்கள் கொடை கொடுக்கும் அளவிற்குச் சிறப்புடன் திகழ்ந்துள்ளனர். சில தேவரடியார்கள் திருமணமும் செய்துகொண்டு கணவனோடு வாழ்ந்துள்ளனர். அவர்கள் மக்கட் செல்வங்களான ஆண்களும், பெண்களும் கொடையளித்துள்ளனர். தேவரடியாருக்குக் கோயிலில் பொட்டுக்கட்டுதல் என்னும் சடங்கு செய்து, சந்தனம் தெளித்து, புத்தாடை, அணிகலன்கள் கொடுத்து நகர்வலம் செய்வித்துச் சிறப்புச் செய்துள்ளனர். அவர்கள் குடும்பத்தார்க்குக் கொடை கொடுத்தனர்.

**பெண்களின் ஆளுமை**

அரசனோடு அத்தாணி மண்டபத்தில் வீற்றிருந்து அரசியர் அதிகாரமும் செய்துள்ளனர். இதனை,

"செம்பொன் வீரசிம்மாசனத்து
உலகமுழுதுடையாளொடும்
வீற்றிருந்தருளிய கோப்பரகேசரி
மின்மரான ஸ்ரீ ராஜராஜன்"

என்றும்,

"உலகுடைய முக்கோக் கிழானடிகளொடும்
செம்பொன் வீரசிம்மாசனத்து
வீற்றிருந்தருளிய சக்கரவர்த்தி
ஸ்ரீ ராஜாதிராஜன்"

என்னும் கல்வெட்டு மெய்க்கீர்த்தித் தொடர்களால் அறிய முடிகின்றது.

**பெண் அதிகாரிகள்**

சில பெண்கள் அரசு அதிகாரிகளாகப் பெண்கள் பணிப்புரிந்துள்ளனர் என்பதனை "அதிகாரிச்சி எருதன் குஞ்சரமல்லி" போன்றோர் பெயர்களைக் கல்வெட்டில் காணுகிறோம். இவர்கள் சிலர் அதிகாரிகளின் மனைவியராகவும் இருந்துள்ளனர். சில இடங்களில்

E-ISSN: 2581-7140
Special Issue: Vol. 2, April-2019 Available at: www.ijtlls.com

அரசமாதேவியின் பணிப்பெண்களாக இருந்தனர். இவ்வாறு சில பெண்கள் அரசு அதிகாரிகளாக இருந்துள்ளதை கல்வெட்டுகளால் அறியமுடிகின்றது.

**தீப்பாய்தலும் நோன்பும்**

கணவன் இறந்தவுடன் அவனோடு உடன்கட்டையேறி வீரமரணம் அடைந்த பெண்கள் பற்றியும் சில குறிப்புகள் கிடைத்துள்ளன. சங்க காலத்திலேயே இவ்வழக்கம் உண்டு என்பதைப் புறநானூற்றில் பூதப்பாண்டியன் தேவியின் வரலாற்றால் அறிகின்றோம். மணிமேகலையில் சாதுவன் மனைவி ஆதிரை தீப்பாய முற்பட்டதையும், முதல் பராந்தகன் காலத்தில் இருங்கோவேள் மரபில் வீரசோழ இளங்கோவேள் மனைவி கங்கமாதேவி தீப்பாய்ந்து இறந்ததையும், கங்கைகொண்ட சோழன் முதல் இராசேந்திரன் மனைவி வீரமாதேவியார் தீப்பாய்ந்ததையும், மூன்றாம் குலோத்துங்க சோழன் மனைவி தீப்பாய்ந்ததையும், இரண்டாம் பராந்தகனாகிய சுந்தரசோழன் மனைவியும் முதலாம் இராசராசன் தாயுமாகிய வானவன்மாதேவி இராசராசன் குழந்தையாக இருக்கும்போதே தீப்பாய்ந்து இறந்ததையும் கல்வெட்டுச் சான்றுகள் எடுத்துக் கூறுகின்றன. இதனை,

> "முழங்கு எரி நடுவணும்
> தலைமகன் பிரியாத் தையல்"

என இராசராசன் மனைவி வானவன்மாதேவி கல்வெட்டில் குறிக்கப்பட்டுள்ளதாய் அறியமுடிகிறது.

**கைம்மை நோன்பு**

தீப்பாய்ந்து இறந்த பெண்களை வீரமாசத்தி என்பர். பின்னர் இவர்கள் "வீரமாசத்தி" என்று வழிபடப்பட்டனர். சமுதாயத்தில் எல்லாப் பெண்களும் கணவன் இறந்த பின்னர் தீப்பாய்ந்தனர் என்று கொள்ள முடியாது. இவ்வழக்கம் மிக அருகியே காணப்பட்டது. பலர் கைம்மை நோன்பு நோற்றும் வாழ்ந்திருக்கக் கூடும். கண்டராதித்தன் திருத்தேவியரரான செம்பியன் மாதேவி தன் கணவன் இறந்தபின், பல ஆண்டுகள் மூன்று அரசர் ஆட்சிக்காலத்தில் வாழ்ந்து, பல இறைப்பணிகள் செய்துள்ளார். இவர்கள் கைம்மை நோன்பு நோற்றவர்கள் ஆவர். அரசனும் அரசியும் இறந்த பின்னர் அவர்கட்குப் பள்ளிப்படை என்னும் சமாதிக் கோயில்கள் எடுக்கப்பட்டன. பஞ்சமாதேவி பள்ளிப்படை என்ற பெயரைக் கல்வெட்டில் காணமுடிகின்றது.

**சங்ககாலத்தில், பெண்பாற்புலவர்கள்**

சங்ககாலத்தில், பெண்பாற் புலவர்கள் முக்கிய பங்குவகித்தனர். அவ்வைக்கு அதியமான் மன்னன் மதிப்பு, மரியாதை அளித்தார். சங்ககாலம் முதல் பக்தி, அரசியல், பொருளாதார, சமூக வளர்ச்சிக்கு பெண்கள் பெரும்பணி ஆற்றினர். இதை இலக்கியம், கல்வெட்டுகளில் காணமுடிகிறது. பல்லவ குல அரசியர், பெயரில் பல கிராமம் உருவாயின. தற்போதைய, விழுப்புரத்தில் உள்ள அக்கால நிம்மாடி கிராமம் அவ்வாறு உருவானது. இதை பல்லவ மன்னர் தந்திவர்மன், தன் மனைவி அக்கல நிம்மாடி பெயரில் ஏற்படுத்தி, பெண்களுக்கு முக்கியத்துவம் அளித்தார் என்பது தெளிவாக அறியப்படுகிறது.

சிதம்பரம் கல்வெட்டில், "பெர்ஷிய நாட்டை சேர்ந்த, இரு பெண்கள், தில்லை கோவில் வளாகத்தில் சன்னிதி அமைக்க கொடை வழங்கினர்" என அறியமுடிகின்றது. சோழமன்னன் கண்டராதித்தன் மனைவி செம்பியன்மாதேவி, சோழ அரசியரில் குறிப்பிடக்கத்தக்கவர். இவர் பல செங்கற்கோவிலை கற்கோவிலாக (கற்றளி) மாற்றினார். இவர்கள் சில புதிய கோவில்களை நிர்மாணித்தார் என்ற குறிப்பும் கல்வெட்டில் காணமுடிகின்றது.

**E-ISSN: 2581-7140**

**Special Issue: Vol. 2, April-2019** **Available at: www.ijtlls.com**

கோவில் கட்டடக்கலையில் பரிணாம வளர்ச்சியும் மிகச்சிறந்த சோழ செப்பு திருமேனி மாதிரியும் உருவாகக் காரணமானவர். பெரியகோவில் கல்வெட்டு, முதலாம் ராஜராஜனின் அரசியர், சகோதரி குந்தவை கோவிலுக்கு அளித்த கொடையை விளக்கும். கோனேரி ராஜபுரம் உமாமகேஸ்வரர் கோவில், ஆடுதுறை திருகுரங்காடுதுறை கோவில், திருக்கோடி காவல் திருக்கோட்டீஸ்வரம் கோவில், குத்தாலம் சோழீஸ்வரர் கோவில், செம்பியன்மாதேவி கைலாயநாதர் கோவில் அமைய குந்தவையே காரணம் என கல்வெட்டில் மூலம் அறிய முடிகின்றது.

**முடிவுரை**

அரசி மட்டும் அல்லாமல் வணிகர், விவசாயி, காவலர் ஆகியோரது மனைவிகளும், கோயில்களில் திருப்பணி செய்த தேவரடியார்கள், பணிப்பெண் ஆகியோரும் கொடுத்த கொடைகளைக் கல்வெட்டுகளின் பதிவு மூலமாக வரலாற்றைப் பற்றிய வேறுபட்ட கோணம் நமக்குப் புலப்படுகிறது. கணவன் இறந்தவுடன் அவனோடு உடன்கட்டையேறி வீரமரணம் அடைந்த பெண்கள் பற்றியும் சில குறிப்புகள் கல்வெட்டுகள் மூலம் கிடைத்துள்ளன. சில பெண்கள் அரசு அதிகாரிகளாக இருந்துள்ளனர். மேலும், மணமகளுக்கு சீதனம் கொடுப்பது பற்றிய குறிப்பும் கல்வெட்டில் காணப்படுகின்றது.

**துணைநூற்பட்டியல்**

1. T.A Gopinatharao Hindu I conogtaphy voll II Pat, P – 321
2. S II VaX1X, 219 , 426,441
3. ARE – 63o to 906.

E-ISSN: 2581-7140
Special Issue: Vol. 2, April-2019 Available at: www.ijtlls.com

# தொல்லியல் பதிவுகளில் கல்வெட்டு வரலாறு
# Culvert Cronology in Archaeological Registration

**முனைவர் ஆ.வேணீஸ்ரீ,** உதவிப்பேராசிரியர், தமிழ்த்துறை,
அறிஞர் அண்ணா அரசு மகளிர் கலைக்கல்லூரி, வாலாஜாபேட்டை.

## Abstract

*The paper scrutinizes the* culvert cronology in archaeological registration. *In Tamil culture and traditional culvert marking is an essential part. The department of archaeology has recorded many culvert evidences to preserve cuture. Accordingly, the study put into words the culvert facts associated to the study.*

**Keywords:** Culvert, Cronology, Archaeological Registration, Tamil Culture and Life

**முன்னுரை**

ஒரு நாட்டின் வரலாற்றிற்கு இன்றியமையாத சான்றுகளைத் தருவது இலக்கியங்களும் கல்வெட்டுகளும் ஆகும். கல்வெட்டுகள் தமிழரின் பண்பாடு, கொடை, வீரம், அரசாட்சி, நீதி போன்றவற்றைத் தெளிவாக எடுத்துக்காட்டுகின்றன. பெரும்பாலும் கல்வெட்டுகள் நிகழ்ச்சிகளின் கையேடுகள் என்றும், சமுதாய பண்பாட்டின் விளக்கங்கள் மற்றும் மக்கள் தம் பழக்க வழக்கங்களின் பிரதிபலிப்புகள் எனக் குறிப்பிடலாம். மேலும் தொல்பழங்காலத்தைப் பற்றி ஆய்வு செய்வதை தொல்லியல் எனலாம். தொன்மையான காலத்தில் வாழ்ந்த மக்களின் வாழ்க்கைமுறையில் அவர்கள் விட்டுச் சென்ற எச்சங்களான கல்வெட்டுகள், கட்டடங்கள், காசுகள், செப்பேடுகள் முதலியவற்றின் அடிப்படையில் ஆய்ந்தரிதலே தொல்லியலின் முதன்மை நோக்கங்கள் எனலாம். தொல்லியல் ஆய்வுகள் இல்லையெனில் மனிதனின் கடந்துவந்த பாதையும் அவர்களின் வரலாற்றையும் அறிந்துக் கொள்வது கடினமாகும். எனவே கல்வெட்டு வரலாற்றின் மூலம் தொல்லியல் பதிவுகளை இக்கட்டுரை விளக்கும் எனலாம்.

**கல்வெட்டின் சிறப்புகள்**

கல்வெட்டுகளில் காணப்படும் செய்திகளைப் பெரும்பாலும் ஐந்து பகுதிகளாகப் பிரிக்கலாம். அவை,

1. கல்வெட்டின் தொடக்கம் அதாவது மங்கலவாசகம்.
2. கல்வெட்டு எழுதப்பட்ட காலம்
3. கல்வெட்டுச் செய்தி
4. கையெழுத்துகள்
5. முடிவு அதாவது ஓம்படைக் கிளவி[1]

எனலாம். மேலும் கல்வெட்டின் தொடக்கத்தில் ஷஸ்வஸ்தி ஸ்ரீ’ (மங்கலம் உண்டாகட்டும்) என்னும் சொல்தான் பெரும்பாலும் காணப்படுகின்றது. 16 ஆம் நூற்றாண்டிலிருந்து,

1. அருளிச் செயல்
2. ஹரி நன்றாக குருவே துணை

E-ISSN: 2581-7140
Special Issue: Vol. 2, April-2019 Available at: www.ijtlls.com

3. ஹரி சுபமஸ்து
4. ஹரி ஸ்ரீ கணபதயே நம
5. சிவமயம் - போன்ற சொற்களும் கல்வெட்டின் தொடக்கமாக அமைந்தது குறிப்பிடத்தக்கது.

"நல்லார் ஒருவர்க்குச் செய்த உபகாரம்
கல்மேல் எழுத்துப் போல் காணுமே"

எனும் ஔவையார் பாடலில் குறிப்பிடும் கல்மேல் எழுத்துப் போல்' என்ற சொல் மூலம் பழங்காலத்தில் கல்மேல் எழுதும் வழக்கம் இருந்ததை அறியலாம். அக்கால மக்கள் சில செய்திகள் அழியாமல் இருக்க பல பொருள்கள் மீது அவற்றை நிலையாக எழுதும் வழக்கத்தை உடையவர்களாக இருந்தனர் அவற்றில் கல்லும், உலோகமும் குறிப்பிடத்தக்கது.

முதலில் கல்லின் மீது எழுத வேண்டிய செய்தியை ஓவியம் போல் வரைவார்கள். பின்பு அதன் மீது கூர்மையான உளி போன்ற கருவியால் வெட்டுவார்கள். வெட்டிய எழுத்துகள் கல்லில் சிறிது பள்ளமாகத் தோன்றும் கல்லில் வெட்டப்பட்டிருப்பதால் அவை ஷகல்வெட்டுகள்' எனப்படும். கல்லைக் குறிக்கச் சிலை என்ற ஒரு சொல்லும் உண்டு. மேலும் சாசனம் எனும் சொல் அறிவிக்கும் செய்தி அல்லது உத்தரவு எனப் பொருளைக் குறிப்பிடும். அதனால் கல்வெட்டைச் ஷசிலாசாசனம்' எனவும் வழங்கினர். கல்வெட்டின் மூலம் கல்வெட்டுச் செய்திகள் ஓலையில் எழுதி பிறகு கல்வெட்டில் பொறித்தனர். சிலவற்றை செப்பேடாகவும் எழுதப்பட்டன. பல கல்வெட்டுகளில் இந்த ஓலையை ஆதாரமாகக் கொண்டு கல்லிலும் செம்பிலும் எழுதிக் கொள்ளலாம் என்ற குறிப்புகளையும் காணலாம்.

**கல்வெட்டின் சிறப்பம்சங்கள்**

கல்வெட்டுகளில் எழுதியவர் பெயர் அல்லது செப்பேட்டை எழுதியவர் பெயர்கள் இறுதிப் பகுதியில் குறிப்பர். உதாரமாக,

1. இச்சாசனம் கல்லில் வெட்டினேன். இவ்வூர் அழகிய தச்சன் - என்றும்
2. இவ்வெழுத்து வெட்டினேன் காலிங்கராய ஆசாரியன் எழுத்து - என்றும் வெட்டியவர் பெயர்களைக் குறிப்பது கல்வெட்டின் சிறப்பம்சமாகும்.[2]
3. சிவன் கோயில் கல்வெட்டுகளில் ஷபன்மாகேசுவரர் இரட்சை' என்றும் திருமால் கோயில் கல்வெட்டுகளில் ஷவை'ணவர் இரட்சை' என்றும் எழுதப் பெற்றிருக்கம்.
4. கல்வெட்டுகளில் நாடும் அதன் பிரிவுகளும் மிகத் தெளிவாகக் குறிக்கப் பெற்றிருக்கம்.
5. இலக்கண நூல்களில் குறிப்பிடும் பல்வேறு வகையான அளவைகளை பழங்கால கல்வெட்டில் காணலாம்.

- நில அளவைகள் : வேலி, மா, குழி, குறுக்கம், செய்
- நிறுவை அளவைகள் : பலம், க.்.சு, வராகனெடை, கழஞ்சு
- முகத்தல் அளவைகள் : பொதி, கலம், மரக்கால்
- நீட்டல் அளவைகள் : பாகம், முழம், சாண், விரல்

6. கோயில்களில் பணியாற்றுகின்ற பல்வேறு துறைச் சார்ந்தவர்களின் ஊதிய விவரம், மக்கள் செலுத்தும் வரி முதலிய குறிப்புகள் காணப்படுகின்றன.[3]

E-ISSN: 2581-7140
Special Issue: Vol. 2, April-2019 Available at: www.ijtlls.com

**கல்வெட்டு வரலாறும் தொல்லியலும்**

"தொன்மை வரலாற்றைப் பற்றி அறிந்து கொள்ள உதவும் தொல்லியல் சான்றுகளில் ஒன்று கல்வெட்டு எனலாம். கீழ்வரும் செய்திகள் கல்வெட்டுப் பற்றி வெளியான குறிப்புகளிலிருந்து எடுக்கப்பட்டது."[4] அவை,

1. வரலாற்றைப் பற்றிக் குறிப்பிடும் கல்வெட்டுகளில் வாயிலூர்க் கல்வெட்டு முதன்மை பெறுகின்றது. காரணம் பல்லவமன்னர்களின் வழிமரபு அதில் தெளிவாகக் குறிக்கப் பெற்றுள்ளது.
2. சோழமன்னர்களின் வழிமரபைக் கன்னியாக்குமரியில் கிடைத்த வீரராசேந்திரனின் கல்வெட்டு மூலம் அறியப்படுகின்றது.
3. கல்விச் சாலையை மருத்துவச் சாலைப் பற்றி எண்ணாயிரம் என்ற ஊரில் காணப் பெறும் முதலாம் இராசேந்திரனுடைய கல்வெட்டு தெரிவிக்கின்றது.
4. கல்வெட்டில் பலவகையான மொழிகள் எழுதப்பட்டன. குறிப்பாக பாரசீகம், அரபுமொழிக் கல்வெட்டுகளும், கிழக்கிந்தியக் கம்பெனி வருகைக்குப்பின் சில ஆங்கிலக் கல்வெட்டுகளும் பொறிக்கப்பட்டன.
5. வட்டெழுத்து முதன்முதலில் கல்வெட்டில் எழுதும் எழுத்து முறையாக இருந்தது. பின்னர் காலப்போக்கில் தமிழ் எழுத்துக்கள் வட்டெழுத்தாகவும் இன்றைய தமிழ் எழுத்துக்களின் முன்னோடி எழுத்தாகவும் வரிவடிவ வளர்ச்சி அடைந்தது குறிக்கத்தக்கது.
6. கிரந்தம் வடமொழி நாகரி வரிவடிவத்தில் எழுதப்பட்டது. பல்லவர்கள் காலம் முதல் வடமொழியை எழுத கிரந்தம் என்ற எழுத்துவகை உருவாக்கப்பட்டது. உதாரணமாக, ஸ, ', ஜ, ஹ, ஸ்ரீ ஆகியவை ஆகும்.
7. அதியமான், நெடுஞ்செழியன், மாக்கோதை, குட்டுவன் கோதை, பெருவழுதி, கொல்லிரும்பொறை, கொல்லிப்பொறை, பெருங்கடுங்கோ, இளங்கடுங்கோ போன்ற சங்ககால அரசர் பெயர்கள் தமிழ் எழுத்துகளில் பொறிக்கப்பட்டுக் கிடைத்துள்ளது.
8. பானை ஓடுகளில் தமிழ் எழுத்துப் பொறிப்புகள் பல சொற்களாகக் கிடைக்கப் பெற்றன. அவற்றில் பண்ணன், கண்ணன், அந்தை, ஆதன், பிட்டன், கொற்றன், நள்ளி, சாத்தன் என்பன சங்க இலக்கியத்தோடு தொடர்புடைய சொற்களாக உள்ளன.
9. நீதிமுறையைப் பற்றி திருப்பாதிரிப் புலியூரில் கண்டுபிடிக்கப்பட்ட பெருமாள் பராக்கிரம பாண்டியனுடைய கல்வெட்டு குறிப்பிடுகின்றது.

**பண்டையக் குறியீடுகளும் எழுத்துகளும்**

இந்தியாவில் மிகப்பழம்பெரு எழுத்துக்கள் சுமார் கி.மு.2500ஐச் சேர்ந்த சிந்துசமவெளிப் பண்பாட்டின் வாழ்விடங்களில் கிடைத்த ஒருவகை சித்திரை எழுத்துக்கள் எனும் இவை பெரும்பான்மை முத்திரைகளில் பொறிக்கப்பட்டவை ஆகும். "பழைய எழுத்துக்கள் இயற்கையான கற்குகைகளிலும் காசுகளிலும் அகழ்வாய்வில் கண்டெடுக்கப்பட்ட பானை ஓடுகளிலும், பொறிக்கப்பட்டுள்ளன. இக்கல்வெட்டுகள் காசுப் பொறிப்புகள் பானைப் பொறிப்புகள் முதலியவற்றிலுள்ள எழுத்துக்கள் நன்கு வளர்ச்சி அடைந்தது"[5] அதற்குக் காரணம் குறியீடுகள் என ஆய்வாளர்கள் கருதுகின்றனர். குறியீடுகள் பெரும்பாலும் பானையின் வெளிப்புறத்திலோ அல்லது உட்புறத்திலோ பானை சுட்டபின் கீறப்பட்டவையாகும்.

E-ISSN: 2581-7140
Special Issue: Vol. 2, April-2019 Available at: www.ijtlls.com

**மெய்க்கீர்த்திகளின் வரலாற்றுப் பதிவுகள்**

கல்வெட்டு ஆய்வில் மிக முக்கியப் பங்கினை வகிப்பது மெய்க்கீர்த்திகளாகும். பாட்டியல் நூல்கள் சிறு பிரபந்த வகைகளில் மெய்க்கீர்த்தி, மெய்க்கீர்த்தி மாலை ஆகியவற்றைக் குறிக்கின்றது. இவற்றில் காணப்படும் இலக்கண அமைதிகள் பெரும்பாலும் மெய்கீர்த்திகளில் பொருந்தி வரும். உதாரணமாக,

“சீர் நான்கு ஆகி இரண்டு அடி தொடையாய்
வேந்தன் மெய்ப்புகழ் எல்லாம் சொல்லியும்
அந்தத்து அவன் வரலாறு சொல்லியும்”[6]

என்ற பாடலிலும்

“சிறந்த மெய்க் கீர்த்தி அரசன் செயற் சொற்
அவையாச் செய்யுள்
அறைந்ததோர் சொற்சீர் அடியாம்”

என்பன பாட்டியல் நூல்களிலும் கூறும் இலக்கணங்களாகும்.

**ஓலையும் கல்வெட்டும்**

கல்வெட்டுகளுக்கும் செப்பேடுகளுக்கும் மூலங்களாக இருப்பவை பனை ஓலையில் எழுதப்பெற்ற செய்திகளாகும். பொதுவாக அரசனால் இடப்பெறும் ஆணைக்கு ‘ஓலை’ என்றே பெயர் வழங்கிற்று. ஓலை எழுதுகின்ற அரசு அலுவலரின் பெயரும் ‘ஓலை’ அல்லது ஷதிருமந்திர ஓலை’ எனப்பட்டது. அரசனிடமிருந்து வந்த ஆவணம் ஓலையாகவே இருந்தாலும் அதனைப் பெரும்பாலும் திருமுகம், ஸ்ரீமுகம் என்றே அழைப்பர்.

‘கோனேரின்மை கொண்டான் ஓலை’ இவை பாண்டியர் சோழ கல்வெட்டுகளில் சிலவற்றில் கொடை கொடுத்த அரசர் இயற்பெயர் குறிக்கப் பெறாமல் கோனேரின்மை கொண்டான் ஓலை எனச் சிறப்புப் பெயர் குறிக்கப் பெற்றிருக்கும். இதன் பொருள் ஷதனக்கு யாரும் ஒப்பில்லாத தன்மையுடையவன்’ என்பதே இதற்கு பொருள். மேலும்,

1. விற்பனைத் தொடர்பான ஓலைகள்
2. அறையோலை
3. படியோலை
4. பட்டோலை
5. அடையோலை
6. முறியோலை
7. பொன்னோலை

என இன்னும் பிற வகையான ஓலைகள் கிடைக்கப்பெற்று வரலாற்றுப் பதிவுகள் மிகத் தெளிவாய் அறியப்படுகின்றது.

**கல்வெட்டுச் சாசனம்**

கல்வெட்டிற்குச் சாசனத்தில் வழங்கும் பெயர் ஷசிலாலேகை’ என்பதாகும். இதற்கான ஆதாரம் ஊர் மஞ்சிக்கமான பூமிநோக்கி கல்நட்டு சிலாலேகை செய்து கொள்க என்று ஸபை திருமுகம் அருளிச் செய்த திருமுகத்தின்படி, “சந்திராதித்த காலமும் இறையிலி அர்ச்சனாபோகமாக வைச்சு சிலாலேகை செய்து கல்நட்டு குடுத்தோம்” என்றப் பதிவுகளைக் காணலாம்.

**முடிவுரை**

கல்வெட்டுகள் பண்டையக் கால வரலாற்றை அறிய உதவும் மிகப்பெரிய

E-ISSN: 2581-7140

Special Issue: Vol. 2, April-2019 Available at: www.ijtlls.com

சான்றுகளாகம். நீண்டகாலம் அழியாதிருக்க வேண்டும் எனக் கருதப்பட்ட செய்திகள் கற்களில் வெட்டப்பட்டன. இவ்வாறு கல்வெட்டில் மன்னர்களின் ஆணைகள், செய்த பணிகள், அவர்தம் கொடை, வீரம், புகழ், செதுக்கியவன் பெயர், கோயிலின் வரலாறு என பல்வேறு வகையான குறிப்புகளை கண்டறியலாம். தொன்மைக் கால படைப்புகளை தொல்லியல் ஆய்வு மூலம் அறியலாம். கல்வெட்டுகளில் அமைப்பு, கல்வெட்டுகள் உணர்த்தும் பண்பாட்டுச் செய்திகளை அறிந்து கொள்ளமுடிகின்றது.

**அடிக்குறிப்புகள்**

1. கல்வெடடுவழிப் பண்பாட்டியல்., பெ. அர்த்தநாரீசுவரன். ப.3.,
2. தற்காலத் தொல்லியல் ஆய்வுகள்., பத்தாம் வகுப்பு பாடநூல்.,
3. கல்வெட்டு வழிப் பண்பாட்டியல்., பெ. அர்த்தநாரீசுவரன். ப.5.,
4. கல்வெட்டு - தொகுப்பு கட்டுரைகள்.,
5. பண்டைக் குறியீடுகளும் எழுத்துக்களும்., கா. ராஜன்., ப.2.,
6. மெய்க்கீர்த்தி., செ. இராசு., ப.76.,
7. முப்பது கல்வெட்டுகள்., வித்துவான் வை. சுந்தரேச வாண்டையார்., ப. 216.,

E-ISSN: 2581-7140
Special Issue: Vol. 2, April-2019 Available at: www.ijtlls.com

# கைக் கூலி சீதன ஒப்பந்தக் கல்வெட்டு - ஓர் ஆய்வு
# A Study on Dowry and Wages Agreement Culverts

**செல்வி ஜெ ஜுலியட் மேரி, முனைவர் பொ பரமேஸ்வரி**
உதவி பேராசிரியர், தமிழ்த்துறை, பாத்திமா கல்லூரி, மதுரை - 18.

## Abstract

*The paper scrutinizes the culvert evidences of Dowry and Wages and the agreements dealt with it. In Tamil culture and tradition culvert marking is an integral part. Cutting culverts in regard to Dowry and wages settlement were also done on those days. Even muslims followed the carving of culverts to settle wages. Accordingly, the study put into words the culvert facts related to the study.*

**Keywords:** Study, Dowry, Wages, Agreement, Culverts

### முன்னுரை

"மனைத்தக்க மாண்புடைய ளாகித்தற் கொண்டான்
வளத்தக்காள் வாழ்க்கைத் துணை."

என்பது வள்ளுவர் வாக்கு. இல்லற மாண்புடைய நற்குணமுடையவள்தான் கணவனுக்கு ஏற்புடையவள். பெண் பார்த்தல் மற்றும் மாப்பிள்ளை பார்த்தல் நிகழ்ச்சி நடைபெற்ற பின்பு நிச்சயதார்த்தம் நடைபெறும். நிச்சயதார்த்தின்போது பல்வேறு சடங்குகள் அரங்கேறும். அதன் பின்னர் திருமணம் நடைபெறும். திருமணத்தின்போது பெண்ணையும் கொடுத்து பொண்ணையும் பொருளையும் கொடுக்கும் வழக்கம் பரவலாக அனைத்து சமயங்களிலும் உள்ளது.[1] ஆனால் சீதனம் பெறுவதே மிக முக்கியமாக அமையும் போது மார்க்க உணர்வுள்ள பெண்ணை தேடல் இரண்டாந்தர அம்சமாக அமைந்து விடுகிறது. இக்கட்டுரை திருச்செந்தூர் வட்டம் தூத்துக்குடி மாவட்டம் காயல் பட்டினம் கொடிமறப்பள்ளியில் நடப்பட்டுள்ள பலகை கல்வெட்டில் குறிப்பிடப்பட்டுள்ள செய்தியை பற்றி விவரிக்கின்றது.

### கல்வெட்டுகள்

பண்டைக் காலத்தில் நீண்ட காலம் அழியாதிருக்க வேண்டும் எனக் கருதப்பட்ட செய்திகள் கற்களில் வெட்டப்பட்டன. இவ்வாறு கல்லில் பொறிக்கப்பட்ட செய்தியே கல்வெட்டு எனப்படுகின்றது.[2] பெரும்பாலும் மன்னர்களின் ஆணைகள் அவர்கள் செய்த பணிகள் போன்றவை கல்வெட்டுக்களாகப் பொறிக்கப்பட்டன. இவை தவிர வீரர்கள் பிரபுக்கள் அதிகாரிகள் போன்றோர் தொடர்பிலும் முக்கிய நிகழ்வுகள் தொடர்பிலும் கல்வெட்டுக்கள் உள்ளன.

கல்வெட்டுக்கள் பல ஆயிரம் ஆண்டுகள் நிலைத்திருக்கக் கூடியவை ஆதலால் மிகப் பழங்கால வரலாற்றுச் செய்திகள் நிகழ்வுகளுக்கான நம்பகமான சான்றுகளாக இவை திகழ்கின்றன. பல கல்வெட்டுக்கள் ஒரு மொழியில் மட்டுமன்றி ஒன்றுக்கும் மேற்பட்ட மொழிகளிலும் ஒரே செய்தியைக் குறிக்கும்படி அமைந்துள்ளன. இத்தகைய கல்வெட்டுக்கள் வழக்கொழிந்து மறக்கப்பட்டுவிட்ட மொழிகள் பலவற்றை வாசித்து அறியவும் அவற்றை மீட்டுருவாக்கம் செய்யவும் உதவுகின்றன.[3]

E-ISSN: 2581-7140
Special Issue: Vol. 2, April-2019 Available at: www.ijtlls.com

கல்வெட்டுக்கள் பெரும்பாலும் பொதுமக்கள் பார்ப்பதற்காக வெட்டப்படுவதால் இவை பொது இடங்களிலேயே அதிகம் காணப்படுகின்றன. பெரும்பாலான தமிழ் நாட்டுக் கல்வெட்டுக்கள் தமிழிலேயே வெட்டப்பட்டுள்ளன. ஆனால் 6 ஆம் நூற்றாண்டு தொடக்கத்தில் கல்லில் வெட்டப்பட்ட கல்வெட்டுக்கள் சமஸ்கிருத மொழியிலும் உள்ளன. கல்வெட்டுகள் கற்களில் உளி கொண்டு செதுக்கி எழுதப்பட்டு உள்ளன. எனவே காலம் பல ஆனாலும் இன்று வரை அழியாது நின்று வரலாற்றின் எஞ்சிய தகவல்களை இன்றளவும் வழங்கி கொண்டு இருக்கின்றன. இந்தியாவில் பெரும்பாலும் தமிழ் மொழியில் வட்டெழுத்துக்களைப் பயன் படுத்தி எழுத பட்டுள்ள கல்வெட்டுகள் காண கிடைக்கின்றன. மேலும் சம்ஸ்கிருத மொழியில் கிரந்தம் மற்றும் பிராமி எழுத்து வடிவத்தையும் பின்பற்றி கல்வெட்டுகளில் எழுதும் நடைமுறை உள்ளது என்பதை அறியலாம்.

வரதட்சிணை என்ற சமஸ்கிருத சொல்லுக்கு தமிழில் சரியான வார்த்தை கைக்கூலி என்பதுதான்.[4] இக்கட்டுரை திருச்செந்தூர் வட்டம் காயல் பட்டினம் கொடிமறப்பள்லியில் நடப்ட்டுள்ள பலகை கல்வெட்டில் குறிப்பிடப்பட்டுள்ள செய்தியை பற்றி விவரிக்கின்றது. இக்கல்வெட்டை அறிந்து கொள்வதன் மூலம் பண்டைய இஸ்லாமியரின் சமூக பொருளாதார நிலை மற்றும் அவர்களுக்கு வழங்கப்பட்ட சலுகைகள் மற்றும் அவர்களின் வாழ்க்கை திறன் பற்றி அறிந்து கொள்ள முடிகிறது.

**கைக்கூலி சீதனம் குறித்து ஒப்பந்தம் செய்யப்பட்ட இஸ்லாமிய கல்வெட்டு**

இந்தியாவில் கண்டெடுக்கப்பட்ட பல்வேறு கல்வெட்டுகளில் ஒன்றான கைக்கூலி சீதனம் குறித்து ஒப்பந்தம் தொடர்பான கல்வெட்டு திருச்செந்தூர் வட்டம் கயல்பட்டினம் எனும் ஊரில் கொடிமறப்பள்ளி என்ற பகுதியில் நடப்பட்டுள்ள பலகைக்கல் இஸ்லாமிய மதம் இந்தியாவில் குறிப்பாக தமிழ்நாட்டில் காணப்பட்டத்தையும் இஸ்லாமியார்களும் இந்துகளை போன்று திருமண சடங்கின் போது சீதனம் கொடுத்து தங்கள் பெண்களை திருமணம் செய்து கொடுத்துள்ளனர் என்பது பற்றி செய்தியையும் அளிக்கிறது. இக்கல்வெட்டு ஹிஜ்ரி 1271 வருடத்தை சார்ந்ததாக இருக்கலாம் என்று தொல்லியல் துறை கணிக்கிறது.

**பலகைக்கல் கல்வெட்டு கூறும் செய்திகள்**

கல்வெட்டின் தொடக்கம் கல்வெட்டு எழுதப்பட்ட காலத்தோடு தொடங்குகிறது. கீரேது 1271 வருடம் கார்த்திகை மாதம் 5ம் தேதி என்று குறிக்க படுகிறது. பலகைககல் எழுதப்பட்ட இடமும் அதில் குறிக்கப்படுகிறது. இக்கல்வெட்டில் சமஸ்கிருத மொழியின் தாக்கம் அதிகம் இருப்பதை அறிய முடிகிறது. இஸ்லாமிய மக்களின் பேச்சு நடை மொழியும் இதில் பயன்படுத்த பட்டுள்ளது. மேலும் அவர்கள் 150, 200, 250 மற்றும் 300 விராகன் என மாப்பிள்ளைமார்களுக்கு சீதனம் இதற்கு முன் கொடுத்ததாகவும் பொருளாதார சூழ்நிலையால் சீதனம் கொடுக்க முடியாமல் பலர் திருமணம் முடியாமல்இருந்ததாகவும், கைக்கூலி உயர்ந்தததன் நிமித்தம் அனைவரும் ஒரு சேர ஒப்பந்தம் எழுதி கொண்டதாக குறிக்கப்படுகின்றது. மேலும் அப்பலகைக் கல்லில் கைக்கூலி பணம் விராகன் 71 பெண்ணுக்கு சீதன உடைமை 30 விராகன் எனவும் தீர்மானித்து, அதன்படி அனைவரும் சரி கூடி குடுத்து திருமணம் நடத்தவும் என்றும் குறிக்கப் படுகிறது. அக்கல்வெட்டில் இரண்டாம் தாரம் பற்றி குறிப்பு இருப்பதன் மூலம் இஸ்லாமியார்களின் திருமண முறை பற்றி அறிந்து கொள்ள முடிகிறது.[5]

ஹிஜ்ரி 1271 என்று அரபி மொழியில் ஆண்டை குறிப்பிடப்பட்டுள்ளது. பெண் வீட்டார் மாப்பிள்ளை வீட்டாருக்கு கொடுக்கும் கைக்கூலி சீதனம் அதிகமாக உயர்ந்ததால் பலர் கைக்கூலி சீதனம் கொடுக்கமுடியவில்லை. அதனால் பல பெண்கள் திருமணம் ஆகாமலேயே

E-ISSN: 2581-7140
Special Issue: Vol. 2, April-2019 Available at: www.ijtlls.com

இருந்துள்ளனர். அதனால் காயல்பட்டின இஸ்லாமியர் அனைவரும் கூடி கைக்கூலி சீதனம் பெண்ணுக்கு சீதன உடைமை இவ்வளவு தான் கொடுக்கவேண்டும் என்று முடிவெடுத்து எழுதிய ஒப்பந்தம். இதை மீறியவர்கள் வீட்டில் நடைபெறும் நன்மை தீமைக்கு யாரும் போகக்கூடாது என்றும் தீர்மானித்துள்ளனர்.[6]

**கல்வெட்டு உள்ளடக்கம்**

1. சிகரத்து 1271 வருஷம் (935)
2. கார்த்திகை மாதம் 5 தேதி காயற்பட்டணத்திலருக்கும முஷ்
3. லிமாகிய நம்மவர் சகலத்தினரும் எழுதிக் கொடு
4. ண்ட சம்மத பத்திரக் கறார் நாமா. என்னவென்றால்
5. நம்முள் இதுமுன் மாப்பிள்ளைமார்களுக்கு கை
6. க்கூலி சீதனம் 150-200-250-300
7. 350-400 எல்லை மட்டில் வாங்கிக் கலியாணம்
8. முடிக்கிறபடியினாலே யிந்தப்படி பேசிக் குடுத்த எனத்துவங்கி 47 வர் வரியில்

47. இந்தப்படிக்கு நடக்காத ...................சூலு
48. க்கு மாறுபட்டு நவியு.........பெறாமல் போவாராகவும்
49. ஆமின்........அப்படிச் சறுக்குப் போனவன் வீட்டு
50. நன்மை தின்மைக்குப் போகாமலிப்போமாகவும்
51. யெங்கள் மனராசியில் முகாவக்காறரைக் கொண்டே யெ
52. முதிக் கொள்கிறது[7]

என முடிவடைகிறது.

**முடிவுரை**

சீதனம் என்னும் சமூகக் கொடுமை ஏற்படுத்தியுள்ள அவலங்கள் எண்ணிலடங்கா. இது பல்வேறு சமூகத் தீமைகளுக்கு வழி வகுக்கின்றது. தமிழக முகமதியர்கள் மதத்திலும் கொள்கையிலும் முகமதியர்களாக இருந்தாலும் வேளைகளில் இந்துக்களின் பழக்க வளக்கங்காலையும் நம்பிக்கையையும் பின்பற்றுகிறார்கள் மிக முக்கியமாக தமிழ் இந்துக்களின் பேச்சு வழக்கையும் திருமண சம்பிரதாயங்களையும் அவர்கள் பின்பற்றியதாக வரலாற்று சான்றுகள்மூலம் அறிய முடிகிறது.

கொடிமறப்பள்ளி என்ற பகுதியில் நடப்பட்டுள்ள பலகைக்கல் கல்வெட்டு இந்து இஸ்லாம் மக்கக்களுக்கியிடையே இருந்த கலாச்சார பகிர்வை எடுத்துரைக்கிறது மற்றும் கைக்கூலி சீதன முறை இந்துக்களிடம் இருந்து பின்பற்றப்பட்ட ஒரு வழக்கமாக இருந்தாலும் முகமதியர்கள் அவர்களின் நலன்களை கருத்தில் கொண்டும் அதிகப்படியான இழப்புகளை தடுப்பதற்காகவும் இந்த ஒப்பொந்ததை பாலைக்கல்லில் எழுதி கொண்டுள்ளனர் என்பதை இக்கல்வெட்டின் மூலம் புலப்படுகிறது. ஆகவே கல்வெட்டுகளின் வாயிலாக இரு மத மக்களிடையே நிலவிய கலாச்சார பரிமாற்றம் சமுதாய மற்றும் பொருளாதார நிலையை நம்மால் அறிய முடிகிறது.

**அடிக்குறிப்பு**

1. கணியன்பாலன், பழந்தமிழ்ச் சமுதாயமும் வரலாறும், எதிர் வெளியீடு 2016, ப. 49.
2. மா. இராசமாணிக்கனார், கல்வெட்டுக்களும் தமிழ்ச் சமூக வரலாறும், நியூ செஞ்சரி புக்
3. ஹவுஸ், 2008,ப. 51.



International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Special Issue: Vol. 2, April-2019
Available at: www.ijtlls.com



4. மேலது., ப. 52.
5. முத்து எத்திராசன், கல்வெட்டுகள் சொல்லும் வரலாறு, வனிதா பதிப்பகம், 2000, ப. 31.
6. வைகை அனிஷ், கட்டிலேறுவதற்கு வரி-கல்வெட்டுக்கள் கூறும் சாட்சியம், இணைய வாரப்பத்திரிகை, ஏப்ரல், 2019, ப. 2.
7. Iravatham Mahadevan, Early Tamil Epigraphy : From the Earliest Times to the Sixth Century C.E., Cre-A, 2003, P. 67.
8. முத்து எத்திராசன், மேலது., ப. 54.

**துணைநூல்பட்டியல்**


1. மா. இராசமாணிக்கனார், ல்வெட்டுக்களும் தமிழ்ச் சமூக வரலாறும், நியூ செஞ்சுரி புக் ஹவுஸ், 2008.
2. முத்து எத்திராசன், கல்வெட்டுகள் சொல்லும் வரலாறு, வனிதா பதிப்பகம், 2000.
3. வைகை அனிஷ், கட்டிலேறுவதற்கு வரி-கல்வெட்டுக்கள் கூறும் சாட்சியம், இணைய வாரப்பத்திரிகை, ஏப்ரல், 2019.
4. S. Sakunthala, Islam – Religion, History and Civilization, C R Publications, New Delhi, 2013.
5. Iravatham Mahadevan, Early Tamil Epigraphy: From the Earliest Times to the Sixth Century, C.E., Cre-A, New Delhi, 2003.
6. (Ed.,) Kenneth R. Hall, Structure and Society in Early South India, Essays in Honour of Noburu Karashima, Oxford University press, New Delhi, 2001.
7. P. Subramanyam, Social History of Tamils (1707 - 1947), D.K. Print world pvt. ltd., New Delhi, 1999.

E-ISSN: 2581-7140
Special Issue: Vol. 2, April-2019 Available at: www.ijtlls.com

# மாயன் பண்பாடு
# Mayan Culture

**முனைவர் இரா. ஜீவாராணி,** உதவிப்பேராசிரியர், தமிழ்த்துறை,
அய்ய நாடார் ஜானகி அம்மாள் கல்லூரி, சிவகாசி.

## Abstract

*The paper studies the lifestyle of the Mayan people and the connections of Tamil people. Their lives are sophisticated, fulfilled with development and valuable tradition and cultural norms. Those people lives are highly affirmed to the life style of the Tamils. The name Mayan is also used by the Tamil people. Hence, the study helps to know the Mayan people's culture and informations regarding to Tamil Culture through evident sources.*

**Keywords:** Lifestyle, Tamil People, Sangam Literature

தொல்பொருள் பண்பாட்டினை மொகஞ்சதாரோ பண்பாடு, ஹரப்பா பண்பாடு, மெஹெர்கர் பண்பாடு, சுமேரியப் பண்பாடு, மாயன் பண்பாடு சிந்து வெளி நாகரிகம் என்று பாகுபடுத்தலாம். இதில் மாயன் பண்பாடு தோற்றம் பற்றியும் அவர்கள் வாழ்ந்த வாழ்க்கை முறை பற்றியும் இக்கட்டுரையில் காண்போம்.

**மாயன் - யார்?**

மாயன் என்பது மக்களின் நாகரிகத்தைக் குறிக்கிறது. அதாவது வட அமெரிக்கா, தென் அமெரிக்கா ஆகிய கண்டங்களில் வாழ்ந்த மக்களுடைய நாகரிகங்களே மாயன். இந்த மாயன் நாகரிகத்தைப் பின்பற்றியவர்களை வெள்ளையர்கள் செவ்விந்தியர்கள் என்று அழைத்தனர்.

**செவ்விந்தியர்கள் என்று அழைகக் காரணம்**

மாயன் நாகரிகத்தைப் பின்பற்றியவர்களை வெள்ளையர்கள், செவ்விந்தியர்கள் என்று அழைப்பதற்குப் பல்வேறு காரணங்கள் உண்டு.

- ஐரோப்பியர்கள் கி.பி.14,15 ஆம் நூற்றாண்டுகளில் இந்தியாவிற்குள் வருவதற்காகக் கடல்வழியினைத் தேடிக்கொண்டிருந்தனர். முன்பு அட்லாண்டிக் பெருங்கடலைக் குறுக்காகக் கடந்தால் இந்தியாவிற்குள் நுழைந்து விடலாம் என்று கொலம்பண் நம்பினார்.
- ஆனால் கொலம்பஸ் இந்தியாவிற்குள் நுழையாமல் அமெரிக்கா கண்டத்தைச் சென்றடைந்தார். அது மட்டுமின்றி அது தான் இந்தியா என்று தவறாகவே கருதினார்.
- அமெரிக்கா கண்டத்தில் உள்ள மக்கள் இனக்குழு வழக்கப்படித் தங்கள் உடம்பில் சிவப்பு நிறம் பூசிக் கொண்டிருந்தனர். இதனைக் கண்ட ஐரோப்பியர்கள் இவர்கள் செவ்விந்தியர்கள் என்றும் அழைக்க ஆரம்பித்தனர்.
- இந்த செவ்விந்தியர்கள் அமெரிக்கக் கண்டங்களான கிரீன்லாந்து, ஐசுலாந்து, கனடா ஆகிய இடங்களுக்குச் சென்று குடியேறினார்கள். இவர்கள் ஏறக்குறைய மூவாயிரம் ஆண்டுகளாக அமெரிக்கக் கண்டங்களிலேயே வாழ்ந்தனர்.

E-ISSN: 2581-7140
Special Issue: Vol. 2, April-2019 Available at: www.ijtlls.com

**மாயன் நாகரிகத்தின் தொடக்க காலம்**

- மாயன் நாகரிகத்தின் தொடக்க காலத்தினை திட்டவட்டமாகக் கூற இயலவில்லை.
- மாயன் நாகரிகக் காலகட்டத்தில் உருவாக்கப்பட்ட நினைவுச் சின்னங்களை வைத்து, இவர்களின் காலம் கி.மு.2600 ஆம் ஆண்டாக இருக்கலாம் என்று கருதுகின்றனர்.
- மீகோ அமெரிக்கன் என்னும் நீண்ட எண்ணிக்கை கொண்ட மாயா நாட்காட்டி கிமு.3114 ஆகஸ்டு 11 ஆம் நாளிலிருந்து தொடங்குகிறது.
- இவர்கள் பசிபிக் கடற்கரையில் உள்ள சொகொநுஸ்கோ என்னும் கடற்கரைப் பகுதியில் சுமார் 1800 ஆம் ஆண்டில் குடியேறினர்.
- கி.பி.250 முதல் 900 ஆண்டு வரை மாயன இனத்தைச் சார்ந்த மக்கள் மில்லியன் கணக்கில் பெருகினர். அதன் பின், அரண்மனைகள், நினைவுச் சின்னங்கள், கோயில்கள் என்று பல கட்டுமானங்களும் உருவாகி நகரமயமாக்கலாக மாற ஆரம்பித்தது.

**எண் கணிதம்**

மாயன் இனத்தவர் 20 அடிமான எண் முறையைப் பயன்படுத்தினர். இதில் பூஜ்ஜியம் பயன்படுத்தியது மிகவும் குறிப்பிடத்தக்க ஒன்றாகும். வளர்ச்சி அடைந்த கிரேக்கர்கள் கூட பூஜ்ஜியத்தை அரேபியர்களிடமிருந்தே அறிந்து கொண்டனர். மேலும், மிகப்பெரிய எண்களைக் கூட எழுதவல்ல ஒரு குறியீட்டு முறையைக் கையாண்டனர். இக்குறியீட்டு முறையை ஒரு "_" இந்த மாதிரியான கோடு ஒரு புள்ளி, ஒரு நீள்வட்டக்குறி ஆகியவற்றை மட்டுமே உள்ளடக்கியதாகும்.

**கட்டிடக்கலை**

கட்டிடக்கலையில் தலைசிறந்த அமெரிக்கப் பூர்வகுடி இனத்தவர்களில் மாயன் இனத்தவர்களே சிறந்து விளங்கினர். மேலும் இவர்கள் இரும்பு போன்ற உலோகங்கள் மற்றும் சக்கரங்களைப் பயன்படுத்தாமலேயே மிகப்பெரிய மதச் சடங்குகளுக்கான இடங்களையும், இருப்பிடங்களையும், பிரமிடுகளையும் கட்டியுள்ளனர். இத்தகைய கட்டிடங்களில் மிக நுணுக்கமான வேலைப்பாடுகள் நிறைந்த சிற்பங்களையும் அவர்களின் கலாச்சார சின்னங்களையும் காணமுடிகிறது.

**வானியல்**

மாயன் இனத்தவர்கள் வானியல் அறிவிலும் சிறந்து விளங்கினர் என்பது குறிப்பிடத்தக்கது. சூரியன், சந்திரன், புதன், சுக்கிரன ஆகியவற்றின் சுழற்சி முறைகளை நன்கு அறிந்திருந்தனர். சந்திர கிரகணங்களையும் சூரிய கிரகணங்களையும் முன்கூட்டியே அறிந்து வைத்திருந்தனர். மாயன் இனத்தாரின் பஞ்சாங்கம் ட்ரெடெக்ஸ் என்பதாகும். இப்பங்சாங்க குறிப்பேட்டின் வாயிலாக, மாயன் இனத்தவர்கள் வானியல் நிகழ்ச்சிகளை அடியொட்டியே சடங்குகளை நடத்தினர்.

**எழுத்து முறைகள்**

ஹைரோ கிளிப்ஸ் என்று ஆங்கிலத்தில் அழைக்கப்படும் பட எழுத்து முறையைப் பின்பற்றினர். இத்தகைய எழுத்து முறைகளைக் கல்வெட்டுக்கள், சிற்பங்கள் ஆகியவற்றில் காணமுடிகிறது.

**மாயன் இனத்தவர்கள் தமிழர்களே**

மாயன் இனத்தவர்கள் தமிழர்களே என்று பல அறிஞர்கள் கருதுகின்றனர். அதற்கான சான்றுகள் பின்வருமாறு, மாயன் இனத்தவர்கள் தமிழர்களே என்பதற்கான சான்று சிலப்பதிகாரத்திலும் உள்ளது.

E-ISSN: 2581-7140
Special Issue: Vol. 2, April-2019 Available at: www.ijtlls.com

"நுண்வினைக் கம்மியர் காணா மரபின
துயர் நீங்கு சிறப்பின் அவர் தொல்லோர் உதவிக்கு
மயன் விதித்துக் கொடுத்த மரபின
மயன் விதித்தன்ன மணிக்கால் அமளி"

என்ற சிலப்பதிகாரப் பாடல் அடிகளின் வாயிலாக மாயன் இனத்தவர்கள் தமிழர்களே என்பதனை அறிந்து கொள்ள முடிகிறது.

மாயன் இனத்தவர்களின் பிரமிடுகள் தமிழர்களின் கட்டிடக்கலை போன்றே உள்ளது. குறிப்பாகத் தஞ்சை கோயிலின் வடிவமும், மாயன் இனத்தரின் பிரமிடுகளும் ஒத்த வடிவம் கொண்டு திகழ்கின்றது. மாயன் இனத்தாரின் நாட்காட்டிக் கணித முறையும், தமிழர்களின் கணித பஞ்சாங்கமும் ஒன்று போலவே உள்ளது. தமிழர்களின் ஆதி தெய்வம் கதிரவன் என்பது போன்று மாயன் இனத்தாரின் ஆதி தெய்வமும் கதிரவனே ஆகும். இராமாயணத்திலும் மாயன் இனத்தவர்கள் புலம்பெயர்ந்த தமிழர்கள், தென் இந்தியர்கள் அல்லது ஈழ நாட்டைச் சார்ந்தவர்கள். இவர்கள் கட்டிய நகரமே பொன் இலங்கையாகும் என்ற குறிப்பும் காணப்படுகிறது. மாயன் இனத்தவர்கள் கடல் வழியாகப் பயணம் செய்த போது அவர்கள் சென்றடைந்த இடமே மெக்சிகோ நகரமாகும். இன்றும் கூட இலங்கையில் உள்ள பெயர்கள் மெக்சிகோவிலும் இருக்கிறது.

மதுரை நாயக்கர்கள் கட்டிய மீனாட்சி அம்மன் கோவிலில் உள்ள ஆயிரங்கால் மண்டபம் போன்று மெக்சிகோவில் உள்ள யோகஸ்தான் தீபகற்பத்தில் கி'ன் இட்சா என்னும் இடத்திலும் ஆயிரங்கால் மண்டபம் காணப்படுகிறது. இந்தியர்கள் விளையாடும் ஆடு புலி ஆட்டம் விளையாட்டினை மாயன் இன மக்கள் இன்றும் விளையாடுகின்றனர். மாயன் இனத்தவர்கள் தன் பிள்ளைகளுக்குப் பூ, பழம், பாம்பு, கருடன் போன்ற பெயர்களைச் சூட்டுகின்றனர். அது போன்று தமிழர்களாகிய நாமும் தாமரை, மல்லிகை, நாகராணி என்று பெயர் சூட்டுகின்றோம். தமிழர்கள் நிலவில் முயல் இருப்பதாகக் கருதுகின்றதைப் போன்று மாயன் இனத்தவர்களும் கருதுகின்றனர். மேற்கண்டவற்றின் வாயிலாக, மாயன் இனத்தவர்கள் தமிழர்களே என்பதனை அறிய முடிகிறது.

**மாயன் இனத்தவர்களின் வீழ்ச்சி**

மாயன் இனத்தவர்கள் பல்வேறு நாடுகளுடன் போர் செய்த காரணத்தினால் சிறிது சிறிதாக வீழ்ச்சி அடைய ஆரம்பித்தனர். போரின் காரணமாக விவசாய நிலங்களும் அழிய ஆரம்பித்தது. ஸ்பானிய குடியேற்றங்கள் வந்த பின்பு அம்மை, காலரா போன்ற நோய்களின் தாக்கத்திற்கு மக்கள் உள்ளாகினர். இது போன்ற பல்வேறு காரணங்களினால் மாயன் இனத்தவர்கள் அழிய ஆரம்பித்தனர். தற்போது மெக்ஸிகோ, குவதிமாலா போன்ற நாடுகளில் சுமார் ஆறு இலட்சம் மாயன் இனத்தவர்கள் வாழ்ந்து கொண்டு இருக்கின்றனர்.

**தொகுப்புரை**

வட அமெரிக்கா, தென் அமெரிக்கா ஆகிய கண்டங்களில் வாழ்ந்த மக்களுடைய நாகரிகங்களே மாயன். இந்த மாயன் நாகரிகத்தைப் பின்பற்றியவர்களை வெள்ளையர்கள் செவ்விந்தியர்கள் என்று அழைத்தனர். மாயன் இனத்தவர் 20 அடிமான எண் முறையைப் பயன்படுத்தினர். இதில் பூஜ்ஜியம் பயன்படுத்தியது மிகவும் குறிப்பிடத்தக்க ஒன்றாகும். மாயன் இனத்தவர்கள் வானியல் அறிவிலும் சிறந்து விளங்கினர். கட்டிடக்கலையில் தலைசிறந்த அமெரிக்கப் பூர்வகுடி இனத்தவர்களில் மாயன் இனத்தவர்களே சிறந்து விளங்கினர். ஹைரோ கிளிப்ஸ் என்று ஆங்கிலத்தில் அழைக்கப்படும் பட எழுத்து முறையைப் பின்பற்றினர். மாயன்

**E-ISSN: 2581-7140**

**Special Issue: Vol. 2, April-2019** **Available at: www.ijtlls.com**

இனத்தவர்கள் தமிழர்களேயாவர். தற்போது மெக்ஸிகோ, குவதிமாலா போன்ற நாடுகளில் சுமார் ஆறு இலட்சம் மாயன் இனத்தவர்கள் வாழ்ந்து கொண்டு இருக்கின்றனர்.

**நூல்கள்**

1. தமிழர் பண்பாடும், நாகரிகமும், (பெரியார் பல்கலைக் கழகம் பாடநூல்)
2. பண்பாட்டு அசைவுகள் - தொ.பரமசிவன்.

E-ISSN: 2581-7140
Special Issue: Vol. 2, April-2019 Available at: www.ijtlls.com

# தொல் பழங்கால சமயமும் பண்பாட்டு நிலைக்களனும்
# Primordial Religion and Cultural State

**ஜெ. ஜெயமதி,** கௌரவ விரிவுரையாளர், தமிழ்த்துறை,
எம்.ஜி. ஆர் அரசு கலை மற்றும் அறிவியல் கல்லூரி, காட்டுமன்னார்கோவில்.

## Abstract

*The paper finds out the changing stages of culture with the advent of religion and politics. The scrutiny puts its base as the Saiva, Vainava, Country Deities as institutions or cultural origins and the Kamatchi lamp gradual change and the land based cultural discussions; especially the Tamil division of land segregation are the aims of the article. Accordingly, the study put into words the facts related to the study.*

**Keywords:** Primordial Religion, Cultural State, Tamil Culture

### முன்னுரை

தொன்மைகால பண்பாட்டிற்கு சமயங்களே அடிப்படை நிலைக்களனாக அமைந்தது. பண்பாடு எனும் சொல் மாற்றங்களுக்கு உட்பட்டது. மார்க்சின் கோட்பாட்டின்படி காலத்திற்கேற்ப சமூகத்திலும் மாற்றங்கள் நிகழ்ந்து கொண்டேதான் உள்ளது. இத்தகைய மாற்றங்களுக்குப் பின்புலமாக சில காரணிகள் அமைவதுண்டு. இக்காரணிகள் இடம், காலம், சூழல் ஆகியவற்றிற்கேற்ப அமையும். அதாவது தமிழர்களின் சமய ஆளுமையை பின்புலமாகக் கொண்டு பண்பாட்டு மாற்றங்களையும் அதற்கான காரணிகளையும் ஆய்வு செய்யலாம்.

### சமயவாழ்வும் பண்பாடும்

சமூக வாழ்வின் அச்சாணியாக விளங்கும் பண்பாடு இனம், நாடு, மொழிக்கேற்ப மாறுபடும் தன்மை உடையன. சான்றாக இந்து மதத்தை எடுத்துக்கொண்டால் இந்தியா முழுமைக்குமோ, உலகம் மமுமைக்குமோ ஒரே மாதிரியான செயல்பாடுகளைக் கொண்டிருப்பதில்லை. ஆகவே பண்பாட்டு நோக்கிலான சமய ஆய்வு அவசியமாகின்றது. குறிப்பிட்ட ஓர் இனத்தின் பண்பாட்டை ஆராய முற்பட்டால் அதற்கான காலச்சூழலையும் அறிவது அவசியமாகின்றது ஏனெனில் பண்பாடு என்பது தொண்மை காலந்தொட்டு காலத்திற்கேற்ப பல்வேறு மாற்றங்களை அடைந்த வண்ணம் வளர்ந்து வருகின்றது. இதற்கு அடிப்படைக் காரணம் பிற பண்பாடுகளின் கலப்பும், பிற சமயங்களின் தாக்கங்களுமே ஆகும்.

தமிழர்களின் பண்பாடு குறித்த ஆய்வில் தமிழரின் சமய வாழ்க்கையின் முன்னை வரலாற்றை அறிவது அவசியமாகும். தமிழர்களிடம் தனித்துவமான சமயம் ஏதும் இல்லை என்று வரலாற்றியலார், அகழ்வாய்வியலார் கருத்து தெரிவிக்கின்றனர். சிந்துசமவெளி நாகரீகத்தை ஆதாரமாகக் கொண்டு முன்வைக்கப்பட்ட முடிவுகளில் இதுவும் ஒன்றாகும். [1]

### சைவ மார்க்கம்

தொடக்க காலத்தில் இந்தியா முழுவதும் ஒரே மார்க்கம் இருந்தாகவும் அதுவே சைவ மார்க்கம் என்றும் அதே அகழ்வாய்வியலார் கூறுகின்றனர். எனினும் இச்சைவ மார்க்கம் நிறுவனமயமாக்கப்படவில்லை. ஆன்மீக மார்க்கமாகவே திகழ்ந்தது எனலாம். இறைநிலையை

E-ISSN: 2581-7140
Special Issue: Vol. 2, April-2019 Available at: www.ijtlls.com

மட்டுமே உணர்வதற்காக பல நாடுகளில் பல்வேறு மார்க்கங்கள் உருவாக்கம் பெற்றன. அவையாவன மிஸ்டிக்குகள் (MYSTICS), தாவோக்கள் (TAOS), சூபிகள் (SUJIS) சைவமும் அவ்வாறே இறைநிலைக்கே முக்கியத்துவம் கொடுத்தது. யோக நெறியின் மூலம் முக்தி அடைவதையே நோக்கமாகக் கொண்டு தொடக்ககாலச் சைவ மதங்கள் செயல்பட்டு வந்தன. ஆரியர்களின் வருகைக்குப் பின் தான் வேதங்களின் ஆதிக்கம் காரணமாக சைவ மார்க்கம் சைவ சமயமாக மாறியது. திராவிடர்களின் மார்க்கமாக இருந்த சைவம் இந்துமயமாக்கப்பட்டுவிட்டது. இதனால் தமிழரின் சமயநெறி நிறுவனமயமாக்கப்பட்ட நிலையில் இன்றுவரை வழங்கி வருகின்றது எனலாம்.

**வைணவ மார்க்கம்**

கி.பி.7ம் நூற்றாண்டில் பக்தி இயக்கம் தீவரமாக உருவாக்கம் பெற்றது கி.பி.5ம் நூற்றாண்டிலேயே இது பற்றிய கருத்தாடல்கள் மக்களிடையே உருவாக்கம் பெற்றன. அரசியல் நெருக்கடி மற்றும் கலாச்சார நெருக்கடி காரணமாக தமிழ்ச்சமூகத்தில் குடும்ப அமைப்புகளும் சிதைவுக்குள்ளாகின. ஓவியம் சிற்பம், இயல், இசை போன்றவையும் தேய்ந்து கொண்டிருந்தன. தமிழ்நாடு பல்லவர், பாண்டியர் என்கிற இரு பெரும் ஆட்சிகளின் கீழ் இயங்கிய பொழுது அம்மன்னர்கள் சமணநெறிகளைத் தழுவி செயல்பட்டுவந்தனர். இச்சூழலில் பக்தி இயக்க முன்னோடிகள் பண்பாட்டுத் தளத்திலிருந்து தங்கள் பணியைத் தொடங்கினர். பக்தி இயக்க முன்னோடிகளாக,

- திருஞானசம்பந்தர்
- திருநாவுக்கரசர்
- பெரியாழ்வார்
- தொண்டரடிப் பொடியாழ்வார்

திருமங்கையாழ்வார் ஆகியோரைக் குறிப்பிடலாம். இவர்கள் தங்களின் இசையாலும் பாடலாலும் இறைவனைப் பாடிப் பரவினர். இவை மேல்தட்டு மக்களைக் கவர்ந்தாலும் கீழ்தட்டு மக்களிடையே ஒருவகை இறுக்கநிலையே காணப்பட்டது. கீழ்தட்டு மக்களையும் ஈர்ப்பதற்காகத் தங்கள் வரையறைகளைத் தளர்த்தினர். இதற்குச் சான்றாகத் திருப்பாணாழ்வார், நந்தனார் ஆகியோர் திருமாலடியார், சிவனடியார் என்ற அமைப்புக்குள் உட்படுத்தப்பட்டனர். அக்காலத்தில் பெண்களுக்கு மரியாதை மறுக்கப்பட்டிருந்தது. அத்தகைய சூழ்நிலையிலும். ஆண்டாள், மங்கையர்க்கரசியார், காரைக்கால் அம்மையார் போன்றோர் ஆன்மிகத்தால் ஓரளவு விடுதலை பெற்றுத் திகழ்ந்து வந்தனர்.

காலப்போக்கில் வெகுசனப் பண்பாடாக மட்டுமே திகழ்ந்து வந்த வைணவம் அடித்தட்டு மக்களையும் தன்பால் ஈர்க்கும் பொருட்டு தன் சட்டதிட்டங்களைத் தளர்த்திக்கொண்டதோடு அடித்தள மக்களுடைய பண்பாட்டுக் கூறுகள் சிலவற்றைத் தன்னோடு இணைத்துக் கொண்டது. இதற்குச்சான்றாக தொண்டரடிப் பொடியாழ்வாரின்.

"குளித்து மூன்று அனலை ஓம்பும் குறிக்கொள்
அத்தன்மை தன்னை ஒழித்திட்டேன் என் கண் இல்லை" [2]

இவ்வடிகளைக் கூறலாம் மேலும் இதற்கு அணி சேர்க்கும் விதமாய்க் கிருஷ்ணாவதாரக் கதைகளும் அமைந்திருந்தன. எப்படியெனில் எளிய குலத்தில் பிறந்து, கால்நடைகள் வளர்க்கும் தொழிலைச் செய்து வளர்ந்து வந்தான் என்கிற கதைப்போக்கு அமைதலே காரணமாகும். ஆடு மாடுகளை மேய்க்கும் தொழிலைச் செய்வதால் புறத்தூய்மை இங்கு பேணப்படவில்லை. ஆகவே உயர் விழுமியங்கள் என்று தரும சாஸ்திரங்கள் கூறிவந்த பண்பாடு இங்கு பேணப்படவில்லை எனலாம்.

E-ISSN: 2581-7140
Special Issue: Vol. 2, April-2019 Available at: www.ijtlls.com

வைணவ மதம் வெகுசன பண்பாட்டு கட்டமைப்புகளைத் தளர்த்திக் கொண்டமைக்குச் சில சான்றுகளை முன்வைக்கக் காணலாம்.

- அழகர் கோவில் சித்திரைத் திருவிழாவில் மதுரைக்கு வரும் இறைவன் கோயிலைச் சுற்றியுள்ள கள்ளர் சாதியின் ஆண்மகனைப் போலவே வேடமணிந்து வருதல் மற்றும் ஆழ்வார்கள் அழகர் என்ற பெயரில் இப்போது கள்ளர் சாதியின் தொடர்பால் 'கள்ளழகர்' என்றே வழங்கப்படுகின்றார்.
- தென்னாற்காடு மாவட்டம் ஸ்ரீமுஷ்ணப் பூவராகப் பெருமாள் கோயிலில் இன்றளவும் இஸ்லாமியார் அர்ச்சனை செய்து வழிபட அனுமதிக்கப்படுகின்றனர். [3]
- திருவரங்கப்பெருமாள் மீது டெல்லி சுல்தானின் மகள் ஒருத்தி மோகங் கொண்டு உயிர் நீத்தாள் கோயிலின் வடக்குத் திருமாளிகையில் சாந்து நாச்சியார் என்னும் துலுக்க நாச்சியாரின் சந்நிதி இன்றும் திருவரங்கக் கோயிலுள் அமைந்துள்ளது. இச்சன்னிதியில் சப்பாத்தி படைக்கப்பட்டு வழிபடப்படுகின்றது. [4]

**தமிழகத்தின் பண்பாட்டு நிலைக்களங்கள்**

வரலாற்று அடிப்படையில் தமிழகத்தின் அரசியல் சார்ந்த நிலவியல் எல்லைகள் நிரந்தரமானதாக இருந்ததில்லை பேரரசர்கள், சிற்றரசர்கள் மற்றும் குறுநில மன்னர்கள் போன்றோரின் படையெடுப்புகளும் ஆங்கிரமிப்புகளும் அவர்களது எல்லைகளை மாற்றிக்கொண்டே இருந்தன. ஆங்கிலேயர் ஆட்சியில் மொழி அடிப்படையில் பல்வேறு மாகாணங்களாகப் பிரிக்கப்பட்டாலும் சில சிக்கல்கள் தோன்றின. குமரி மாவட்டத்தில் தமிழ், மலையாளம் இரண்டும் மொழிகளும் பேசப்பட்டன. ஆனால் 1956ல் இது கேரளத்தோடு இணைக்கப்பட்டது. பின் தமிழர்களின் போரட்டத்திற்குப் பின்பே குமரி மாவட்டம் தமிழகத்தோடு இணைக்கப்பட்டது.

மக்கள் அனைவரும் நிரந்தரமாக ஒரே நிலவியல் எல்லைக்குள் முடங்கிக் கிடப்பதில்லை. பல்வேறு வாழ்வியல் போராட்டங்கள் காரணமாகத் தொடர்ந்து குடிபெயர்ந்து கொண்டே இருப்பர். அவ்வாறு அவர்கள் குடிபெயர்வதற்கேற்ப அதிகாரம் சார்ந்த நிலவியல் எல்லைகள் விரிவடைவது இல்லை. பெரும்பான்மை மக்களின் மரபுகளைக் கொண்டே பண்பாட்டு நிலைக்களன்களைத் தெளிவாக்க இயலும்.

தமிழகத்தின் பண்பாட்டு நிலைக்களன்களை ஞா.ஸ்டீபன் அவர்கள் ஐந்து வகையாய் பகுத்துணர்த்துகின்றார். [5]

| | | |
|---|---|---|
| 1. | தென்தமிழகம் | கன்னியாகுமரி, திருநெல்வேலி, தூத்துக்குடி இராமநாதபுரம், விருதுநகர், தேனி, சிவகங்கை மதுரை. |
| 2. | நடுவண் தமிழகம் | திண்டுக்கல், புதுக்கோட்டை, தஞ்சாவூர், திருச்சி, சேலம், கோவை, கரூர், நாகபட்டினம், ஈரோடு, நாமக்கல், நீலகிரி, திருவாரூர், காரைக்கால் பெரம்பலூர் மாவட்டங்கள் |
| 3. | வடதமிழகம் | தருமபுரி, விழுப்புரம், காஞ்சிபுரம், திருவள்ளுர், செங்கல்பட்டு, சென்னை, வேலூர், திருவண்ணாமலை, கடலூர் பாண்டிச்சேரி மாவட்டங்கள் |
| 4. | மலைத்தமிழகம் | மேற்குத் தொடச்சி மலைப்பகுதிகள் |
| 5. | கடல் தமிழகம் | தமிழக எல்லைக்குட்பட்ட மேற்கு கிழக்கு கடற்கறையோரப் பகுதிகள் |

E-ISSN: 2581-7140
Special Issue: Vol. 2, April-2019 Available at: www.ijtlls.com

**மாரியம்மன் வழிபாடு**

மாரியம்மன் பரவலாகத் தமிழகம் முழுவதிலும் காணப்படும் தெயவமாகும். எனினும் இத்தெய்வத்திற்கு வட்டாரத்தன்மையுண்டு.

இருக்கன்குடி மாரியம்மன், பெரியபாளையம் மாரியம்மன், சமயபுரம் மாரியம்மன் மூன்றும் ஒன்றல்ல. இவற்றிற்கு உருவம், வழிபடும் முறை மற்றும் கதைகள் வெவ்வேறாக அமைந்துள்ளன.

தென் தமிழகத்திலுள்ள மாரியம்மன் சிலைக்கும், வட தமிழகத்திலுள்ள மாரியம்மன் சிலைக்கும் அதிக வேறுபாடு உண்டு வட தமிழகத்திலுள்ள மாரியம்மனுக்கு தலை மட்டுமே அமைக்கபட்டிருக்கும். ஏனெனில் அங்கு மாரியம்மன் ரேணுகா பரமேசுவரியோடு (ஜமதக்னி முனிகதை) இணைக்கப்படுகிறாள். தென்தமிழகத்தில் உள்ள மாரியம்மனுக்கு முழு உருவச்சிலை அமைக்கப்பட்டிருக்கும். இங்கு மாரியம்மன் காளியம்மனோடு இணைக்கப்படுகிறாள். தோற்றத்தில் ஒன்றுபோல் தோன்றினாலும் சில நுணுக்கமான வேறுபாடுகள் இருப்பதைக் கண்டறிய முடிகின்றது.

**சமயம்சார் புலங்குபொருள் பண்பாடு**

புலங்கு பொருட்களிலும் பல்வேறு தொன்மைசார் மரபுகள் மறக்கப்பட்டிருப்பினும் அத்தொன்மைக்கால பொருட்களைக் காணும் போது தொல்பழங்கால தமிழர்களின் தமிழ்ப்பண்பாட்டைப் பறைசாற்றும் எச்சங்களாய் எஞ்சியுள்ளன.

சான்றாக அன்றைய கால அகல்விளக்கான காமாட்சி விளக்கினைக் கூறலாம். இதில் எண்ணெய் ஊற்றும் பகுதி உயரம் குறைவாகவும் அதேசமயத்தில் சற்று அகலமாகவும் காணப்படும் பக்கவாட்டில் தற்காலம் போன்றே வறும்புகள் காணப்பட்டாலும் அம்மன் சிலையோ யானையோ இன்றைய கால காமாட்சி விளக்கில் அமைந்திருப்பது போல் தெளிவாக அமைந்திருப்பதில்லை. இவை தற்காலத்தில் இருப்பினும் புலங்கு பொருளாக அன்றாடம் பயன்படுத்தப்பட்டு வரவில்லை என்றே கூறலாம்.





**முடிவுரை**

தொல் பழங்காலந்தொட்டு சமயம் பல்வேறு மாற்றங்களுக்கு உட்படுத்தப்பட்டு வரினும் இன்றுவரைத் தனக்கான நிலைத்தத் தன்மையைக் கொண்டு பண்பாட்டின் நிலைக்களனாகத் திகழ்ந்து வருகின்றது. தொல்பழங்காலப் பொருட்கள் தற்காலத்தில் பலரது வீடுகளில் இருப்பினும் அது புலங்கு பொருளாக அன்றாடம் பயன்படுத்தாத நிலையே நிலவி வருகின்றது எனலாம்.

E-ISSN: 2581-7140
Special Issue: Vol. 2, April-2019 Available at: www.ijtlls.com

**அடிக்குறிப்பு**

1. ஞா.ஸ்டீபன் (தொ.ஆ), பண்பாட்டு வேர்களைத் தேடி, நாட்டார் வழக்காற்றியல் ஆய்வு மையம், பாளையங்கோட்டை-627002 பக்க எண்.140, பதிப்பு – 1999,
2. ஸ்ரீ.கிருஷ்ணஸ்வாமி அய்யங்கார்(ப.ஆ), நாலாயிர திவ்ய பிரபந்தம் - தொண்டரடிப் பொடியாழ்வார் பாசுரம், 3-டீ, புத்தூர் அஹ்ரஹாரம், திருச்சி – 17. புதிப்பு – 1988.
3. கள ஆய்வு
4. கள ஆய்வு
5. ஞா. ஸ்டீபன் - தமிழகப் பண்பாட்டு நிலைக்களங்கள் பக்க எண்.7. நாட்டார் வழக்காற்றியல் ஆய்வு மையம், பாளையங்கோட்டை-627002. பதிப்பு – 1999,

தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்

International Journal of Tamil Language and Literary Studies

*A Bi-Yearly Peer-Reviewed International Journal*

E-ISSN: 2581-7140

Special Issue: Vol. 2, April-2019 Available at: www.ijtlls.com

# கீழடி அகழாய்வு
# Keeladi Archaeological Excavation

**முனைவர். பெ.ஜெயமாரி,** உதவிப்பேராசிரியர்,

தமிழ்த்துறை, நோபிள் மகளிர் கலை மற்றும் அறிவியல் கல்லூரி, விருதுநகர்.

## Abstract

*The paper detracts the Keeladi Excavations, near Madurai by the Archaeology Department of the Indian Government. The paper tells about the four stages of archaeological survey. The classic antiquity of Tamil culture and civilization on the banks of the famous Vigai River has been in the verge to identify itself as a great relic of India. Even there are some complications from the government, the voice and action from the Tamil people and politicians has made a remarkable point in safeguarding the evacuations. The products got from these areas dates back to 2200 years and all sorts of sophisticated equipment and possessions were with the people and inscriptions of Brahmi Tamil were also found. Hence, the paper brings forth the evidences of the Keeladi evacuations to the limelight.*

**Keywords:** Keeladi, Archaeology, Excavation, Tamil Civilization

**முன்னுரை**

இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்பே நகர நாகரிகம் தமிழகத்தில் செழித்து விளங்கியது என்பதற்கு எடுத்துக்காட்டாக அமைந்தது கீழடி அகழாய்வு. இந்த ஆய்வானது தமிழர்களின் ஒட்டுமொத்த வரலாற்றையே புரட்டிப்போட்டது. தமிழர்களின் தொன்மையான வரலாற்றை அம்பலப்படுத்தி தமிழ்த் தேசிய தொன்மை நிறைந்த வரலாற்றை நிலை நிறுத்தியது. கடந்த 2015 ஆம் ஆண்டு சிவகங்கை மாவட்டம் மணலூருக்கு அருகே மத்திய தொல்லியல் துறையால் தொடங்கப்பட்ட கீழடி அகழாய்வு 2016 மற்றும் 2017 ஆம் ஆண்டுகளில் தொடர்ந்து நடைபெற்று வருகிறது. இந்தியா மட்டுமன்றி உலகமே கீழடி அகழ்வாய்வின் முடிவுகள் குறித்து அறிந்துகொள்ள ஆர்வம் காட்டுகிறது. இரண்டாம் கட்ட அகழாய்வில் நூற்றுக்கும் மேற்ப்பட்ட தமிழ்இ பிராமி எழுத்துப் பொறிக்கப்பட்ட பானையோடுகளும்இ 6 ஆயிரத்திற்கும் அதிகமான பழம் பொருட்கள் என தோண்டத் தோண்டத் தமிழர்களின் பழங்கால நாகரிகம் வெளிப்படத் தொடங்கியது.

**அகழாய்வு பற்றிய வரலாறு**

அகழாய்வு என்பது தொல்லியல் எச்சங்களை வெளிக்கொணர்தல்இ செயல்படுதல்இ பதிவுசெய்தல் என்பவற்றை ஒருங்கே குறிக்கிறது. இச்செயல் இன்னொரு பொருளிலும் பயன்படுத்தப்படுவது உண்டு. இது ஒரு களத்தை ஆய்வு செய்வதற்கான வழிமுறையைப் பயன்படுத்துவதைக் குறிக்கும். இப்படியான அகழாய்வு ஒரு குறிப்பிட்ட தொல்லியல் களம் அல்லது தொடர்புள்ள பல களங்களோடு சம்பந்தப்படுவதுடன் இது பல ஆண்டுகள் நடத்தப்படவும் கூடும் ஓரிடத்தில் தொல்லியல் எச்சங்கள் இருப்பதை நிலம் ஊடுருவும்

E-ISSN: 2581-7140
Special Issue: Vol. 2, April-2019 Available at: www.ijtlls.com

ராடார்கள் போன்ற தொலையுணர்தல் முறைகள் மூலம் ஓரளவு துல்லியமாகவே அறிந்து கொள்ள முடியும். இம்முறை மூலம் களமொன்றின் வளர்ச்சி குறித்த மேலோட்டமான நுணுக்கமான அம்சங்கள் பற்றி அறிந்து கொள்வதற்கு அகழாய்வு இன்றியமையாதது.

அகழாய்வு நுட்பம் முதலில் புதையல் தேடும் முயற்சிகளில் இருந்து தொடங்கியது. காலாப்போக்கில் இத்துறையானது ஒரு குறிப்பிட்ட இடத்தில் இடம் பெற்றிருக்கக்கூடிய மனித நடவடிக்கைகளையும், அவ்விடம் பிற இடங்களோடும் அவ்விடம் அமைந்துள்ள நிலத்தோற்றத்தோடும் கொண்டுள்ள தொடர்புகளையும் முழுமையாகப் புரிந்து கொள்ள முயலும் ஒரு துறையாக வளர்ச்சி பெற்றுள்ளது. இதன் வரலாறு தொடக்கத்தில் அரும்பொருள் சேகரிப்பவர்களின் தேவைக்காக அருங்கலைப் பொருட்களைத் தேடியெடுப்பதற்கான ஒரு திருத்தமற்ற முறையாகவே இருந்தது. இத்தகைய தோண்டுதல் நடவடிக்கைகள் பழங்கால மக்கள் தொடர்பான சான்றுகளை அழித்து விடுகின்றன என்பது உணரப்பட்டது. இத்தகைய அரும்பொருட்கள் அவற்றின் சூழலில் இருந்து அகற்றப்பட்டதும்இ அவற்றில் பொதிந்துள்ள பெரும்பாலான தகவல்கள் இல்லாது போய்விடுகின்றன. இப்புரிதலின் அடிப்படையிலேயே அரும்பொருள் சேகரிப்பு என்பது தொல்லியல் அல்லது தொல்பொருளியல் என்னும் துறையாக வளர்ந்தது.

**அகழாய்வின் வகைகள்**

தற்காலத் தொல்லியலில் இரண்டு வகையான அகழாய்வுகள் இருக்கின்றன.

**ஆய்வுக்குரிய அகழாய்வு**

ஒரு இடத்தில் முழு அளவிலான அகழாய்வைச் செய்வதற்கான நேரமும் இடமும் இருக்கும்போது இவ்வகை அகழாய்வு நடத்தப்படுகிறது. இது தற்போது போதிய நிதியையும் தன்னார்வ உழைப்பையும் பெற்றுக் கொள்ளக்கூடிய கல்வியாளர்கள் மற்றும் தனிப்பட்ட அமைப்புக்களினால் கைக்கொள்ளப்படுகின்றது. அகழாய்வின் அளவு வேலைகள் நடைபெறும் காலத்தில் வேலைகளை இயக்குபவரால் தீர்தானிக்கப்படுகின்றது.

**வளர்ச்சி சார்ந்த அகழாய்வு**

இது தொழில் முறைத் தொல்லியலாளர்களால் செய்யப்படுகிறது. தொல்லியல் களம், கட்டிடச் செயற்பாடு போன்ற வளர்ச்சித் திட்டங்களினால் பாதிக்கப்படும் நிலை வரும்போது இவ்வகை அகழாய்வுகள் நடத்தப்படுகின்றன. பொதுவாக வளர்ச்சித்திட்டங்களை நடைமுறைப்படுத்துபவர்களே இவ்வாய்வுக்கான நிதியையும் வழங்குவர். இத்தகைய சூழ்நிலைகளில் நேரம் மட்டுப்பட்டதாக இருப்பதுடன் ஆய்வுகளும் வளர்ச்சித் திட்டத்தினால் பாதிப்புறும் இடங்களை மட்டுமே கவனத்தில் கொள்கின்றன. வேலையாட்களும் பொதுவாக அகழாய்வு செய்வதில் தேர்ச்சி பெற்றவர்களாக இருப்பர்.

**தகவல் களம்**

தொல்லியல் பொருட்கள் பெரும்பாலும் ஒரு காலத்தில் அவ்விடங்களிலே குப்பைகளாக விடப்பட்டவையாக இருக்கின்றன. இவை அங்கு அடுத்தடுத்து இடம்பெறும் நிகழ்வுகளினால் அவ்விடத்தில் குவிகின்றன. ஒரு தோட்டக்காரன் பெருக்கிக்குவிக்கும் மண்குவியல்இ அவன் கற்களைக் கொண்டு அமைக்கும் ஒரு நடைபாதை, பின்னர் அவ்விடத்தில் கட்டப்படும் சுவர், இன்னொரு காலத்தில் அங்கு அமையும் ஒரு மாட்டுத்தொழுவம்இ முன்னர் அமைத்த சுவர் இடிதல் போன்ற ஒவ்வொரு நிகழ்வும் அவ்விடத்திலே ஒரு சூழ்நிலையை விட்டுச் செல்கின்றன. இவ்வாறான நிகழ்வுகளின் அடுக்குகள் பொதுவாகத் தொல்லியல் தொடரியம் அல்லது தொல்லியல் பதிவுகள்

E-ISSN: 2581-7140
Special Issue: Vol. 2, April-2019 Available at: www.ijtlls.com

எனப்படுகின்றன. இத்தொடரியத்தை அல்லது பதிவுகளைப் பகுப்பாய்வு செய்வதின் மூலமே அகழாய்வு கடந்த காலத்தைப் புரிந்து கொள்ள முயல்கிறது.

**பழைய கற்கால கண்டுபிடிப்பு**

பழைய கற்காலம் மிகத் தொன்மையானதாகும் "இக்கால மக்கள் தமிழகத்தின் வடபகுதியில் அதிகமான அளவில் வாழ்ந்ததற்கான சான்றுகள் உள்ளன. செங்கற்பட்டு, தென்னாற்காடு, வடஆற்காடு ஆகிய மாவட்டங்களில் கற்கருவிகள் மிகுதியாகக் கிடைத்துள்ளன. தென்னிந்தியாவில் இக்கால மனிதர் பயன்படுத்திய கற்கருவிகள், முதன் முதலில் சென்னைக்கருகே பல்லாவரம் என்ற இடத்தில ஆங்கில நிலநூல் வல்லுநர் ராபர்ட் புருஸ் பூட் என்பவரால் கி.பி. 1863 ல் அகழாய்வு மூலம் கண்டெடுக்கப்பட்டன. செங்கற்பட்டுக்கருகே திருவள்ளுரிலும் இவர் இக்காலத்தைத் தடயங்களைக் கண்டறிந்துள்ளார். இங்குள்ள கொல்லையாற்றுப் படுகைத் தளங்கள் தொன்மையானவை எனவும், இவற்றில் பழைய கற்கால மக்கள் பயன்படுத்திய கல்லாலான ஆயுதங்கள் பொதிந்துள்ளன என்பதும் அண்மையில் கண்டுபிடிக்கப்பட்டுள்ளன."[1]

**கீழடி கிராமம்**

தமிழ்நாட்டில் சிவகங்கை மாவட்டத்தில் திருப்புவனம் வட்டத்தில் உள்ள திருப்புவனம் ஊராட்சி ஒன்றியத்தின், கீழடி ஊராட்சியில் உள்ளது கீழடி கிராமம். மதுரை நகரிலிருந்து 11 கிலோமீட்டர் தொலைவில் வைகை ஆற்றின் தென்கரையில் அமைந்துள்ளது. "இந்தியத் தொல்லியல் ஆய்வகம் சார்பில் இந்த ஊரில் நடத்தப்பட்ட அகழ்வாராய்ச்சியில் சங்ககாலப் பாடல்களில் (சிலப்பதிகாரம், பரிபாடல், மதுரைக்காஞ்சி) போன்றவற்றில் குறிப்பிடப்பட்டிருந்த பல பொருட்கள் கண்டெடுக்கப்பட்டுள்ளன. இதற்காக இங்கு 40 க்கும் மேற்ப்பட்ட குழிகள் தோண்டப்பட்டன. இதுவே தமிழ்நாட்டில் நடத்தப்பட்ட பெரிய அகழ்வாராய்ச்சி ஆகும்."[2] இந்தியாவில் பழங்கால நாகரிகம் முன்னூழி காலத்தில் அல்லது பனியூழி காலத்தில் தோன்றி வளர்ந்தது. "ஆப்பிரிக்காவில் கண்டு பிடிக்கப்பட்டிருக்கும் கற்கருவிகளுடன் கூடிய மனித எச்சங்கள் 26 லட்சம் ஆண்டுகளுக்கு முற்பட்டவை"[3] என்ற போதிலும் இந்தியாவில் மனிதன் மேற்கொண்ட முதல் தொழில்கள் மத்திய பனியூழி காலத்துக்கு முந்தியவை அல்ல என்பது இங்கு கண்டு பிடிக்கப்பட்டிருக்கும் கற்கருவிகளிலிருந்து தெளிவாகத் தெரிகிறது.

**கீழடி நாகரிகம்**

"1974 – ஆம் ஆண்டு உழவிற்காகத் தோண்டப்பட்ட கிணற்றிலிருந்து கிடைத்த செங்கற்களை மாணவன் ஒருவன் கீழடி பள்ளியின் ஆசிரியரான திரு. பாலசுப்பிரமணி அவர்களிடம் காண்பித்தான். அந்த செங்கல்லைப் பார்த்த ஆசிரியர் அவை சங்ககாலத்தைச் சேர்ந்தது என அறிந்தார். இது தான் கீழடி வரலாற்றின் முதற்பொறி"[4] என்றே கூறலாம். அந்த ஆசிரியர் சில மாணவர்களை அழைத்துக்கொண்டு செங்கல் கிடைத்த கிணற்றைப் பார்வையிட்டார். கழுத்துக்கு மேலே தலை மட்டுமே உள்ள மண்பொம்மை, கருப்பு சிவப்பு வண்ணம் கொண்ட மண்குவளை, மண்டைஓடுகள், எலும்புகள், நாணயங்கள், தாழிகள் எனக் கிடைத்தன. அவற்றையெல்லாம் பாதுகாக்க பள்ளியில் இடமில்லாத காரணத்தால் அவருடைய வீட்டிலேயே வைத்துவிட்டு அப்போது ஒருங்கினைந்த இராமநாதபுர மாவட்ட ஆட்சியருக்கு கீழடியில் கிடைத்த பொருட்களைப்பற்றிக் கடிதம் ஒன்றை அனுப்பினார். கீழடியில் கிடைத்தப் பொருட்களைப் பள்ளியிலேயே ஹிஸ்டரி கார்னர் என்ற பகுதியை ஏற்படுத்தி பாதுகாத்து வைத்தனர். பின்னர் சென்னை அருங்காட்சியகத்துக்கு அனுப்பி வைக்கப்பட்டது. சரியாக 37 ஆண்டுகள் கடந்து 2013 இல் தொல்லியல் ஆய்வாளர்கள் திரு. வேதாசலம், திரு.

E-ISSN: 2581-7140
Special Issue: Vol. 2, April-2019
Available at: www.ijtlls.com

ராஜேந்திரன் ஆகியோர் பண்டைய பொருட்கள் கிடைத்த கிணற்றை நிலத்தின் உரிமையாளர் திரு. திலீப்கான் துணையோடு ஆய்வு செய்தனர்.

**வரலாற்று ஆய்வு**

"வைகை நதி படுகையில் நடைபெற்ற களஆயிவில் சுமார் 293 பல்வகைத் தொல்லியல் எச்சங்கள் கொண்ட ஊர்கள் அடையாளம் காணப்பட்டன. அவற்றில் கீழடியைத் தேர்வு செய்து 2015 மற்றும் 2016ஆம் ஆண்டுகளில் தொல்லியல் ஆய்வு செய்ய மத்திய அரசிடம் அனுமதி பெற்று ஆய்வு மேற்கொள்ளப்பட்டது."[5] 2015 ஆம் ஆண்டு 43 குழிகளும்இ 2016 ஆம் ஆண்டு 59 குழிகளும் அமைத்து ஆய்வை மேற்கொண்டனர்.

**இரண்டாம் கட்ட அகழாய்வு**

இரண்டாம் கட்ட அகழாய்வின்போது கண்டறியப்பட்ட சாயத்தொட்டி, கழிவுநீர் வெளியேறும் வாய்க்கால்கள், உறைக்கிணறுகள் என மிகச்செழுமை மிக்க தமிழர் நாகரிக வாழ்வியல்முறை கண்டறியப்பட்டது. இதன் மூலம் தமிழர் தனித்தன்மை கொண்ட ஆட்சிமுறை போன்றவை ஆதாரங்களுடன் உலகிற்கு தெரியத்துவங்கின. கீழடியில் கண்டறியப்பட்ட தொல்லியல் சின்னங்களுள் சில கிறிஸ்துக்கு முற்பட்ட பழமையைக் கொண்டதாக அரசின் மூலமாகவே அறிவிப்பு வெளிவந்தது. இதன் தொடர்ச்சியாக தமிழகத்தில் தொல்லியல் முக்கியத்துவம் வாய்ந்த இடங்களுள் ஒன்றாக கீழடி மாறியுள்ளதை உணர்ந்து அனைத்து தரப்பினரும், தொல்லியல் ஆர்வலர்களும் கீழடி அகழாய்வில் முக்கிய கவனம் செலுத்தத் தொடங்கிவிட்டனர்.

**மூன்றாம் கட்ட அகழாய்வு**

தமிழர்களின் தொன்மையான நாகரிகத்தை விளக்கும் கீழடியில் மூன்றாம் கட்ட அகழாய்வு பணிகளுக்காக தோண்டப்பட்ட குழிகள் மூடப்பட்டன. சிவகங்கை மாவட்டம் கீழடியில் மத்திய தொல்லியல்துறை சார்பில் அப்போதைய கண்காணிப்பாளர் அமர்நாத் ராமகிருஷ்ணன் தலைமையில் இரண்டு ஆண்டுகள் அகழாய்வுப் பணிகள் நடைபெற்றன. இதில் சுமார், 2200 ஆண்டுகளுக்கும் அதிகமான தொன்மையான தமிழர் நாகரீகத்தை வெளிக்கொனரும் அரிய பொருட்கள் கண்டுபிடிக்கப்பட்டது. இந்நிலையில் கீழடியில் கண்டெடுக்கப்பட்ட பொருட்களை பெங்களூரு கொண்டு செல்ல மத்திய அரசு முயன்றது. அரசியல் தலைவர்களிடையேயும், சமூக ஆர்வலர்களிடையேயும் இதற்கு எதிர்ப்பு கிளம்பியது. அதன்பிறகு கீழடி அகழாய்வுப் பணிகளுக்கு ஸ்ரீராம் என்பவரை கண்காணிப்பாளராக நியமித்து அகழாய்வுப் பணிகள் தொடரப்பட்டன. தெற்கு புறத்தில் கட்டடங்களின் மீதம் இருக்கலாம் என அமர்நாத் தலைமையிலான குழுவினர் வடக்கு புறத்தில் அகழாய்வு மேற்கொண்டது. மேலும், முந்தைய இரு ஆண்டுகளுடன் ஒப்பிடுகையில் மிகமிக குறைவான குழிகளைத் தோண்டி ஆய்வினை மேற்கொண்டனர். 3ம் கட்ட அகழாய்வு அறிக்கையை அளித்த ஸ்ரீராம் கீழடியில் கட்டடங்களின் தொடர்ச்சி ஏதுமில்லை என தெரிவித்ததை அடுத்து அகழாய்வுக்காக தோண்டப்பட்ட குழிகள் மூடப்பட்டன.

**நான்காம் கட்ட அகழாய்வு**

கீழடியில் அகழாய்வுப் பணியில் தங்க ஆபரணம் உட்பட 7000க்கும் அதிகமான பொருட்கள் கிடைத்துள்ளதாக தொல்லியல் துறை சார்பில் அறிக்கை தாக்கல் செய்யப்பட்டிருக்கிறது. கீழடியில் அகழாய்வுப் பணிகளை தொடர வேண்டும் என்றும் அங்கிருந்து கிடைத்த பொருட்களைக் கொண்டு அங்கேயே அருங்காட்சியகம் அமைக்க வேண்டும் என்றும் உத்தரவிட வலியுறுத்தி சென்னை உயர்நீதிமன்ற கிளையில் வழக்கு தொடரப்பட்டது. அப்போது தமிழக அரசின் தொல்லியல் துறை சார்பில் தாக்கல் செய்யப்பட்ட

E-ISSN: 2581-7140

Special Issue: Vol. 2, April-2019 Available at: www.ijtlls.com

அறிக்கையில் நான்காம் கட்ட அகழாய்வுப் பணிகள் முடிவடைந்துள்ளன. 7000 க்கும் அதிகமான பழமையான பொருட்கள் கிடைத்துள்ளன. முதல் முதலாக தங்க ஆபரணம் ஒன்றும் கீழடியில் கிடைத்துள்ளது எனக் கூறப்பட்டிருக்கிறது. காலத்தை கண்டறியும் சோதனைக்காக இந்த பொருட்களை அமெரிக்காவின் கலிபோர்னியாவில் உள்ள ஆய்வு மையத்துக்கு அனுப்பி வைக்க நடவடிக்கை எடுக்கப்பட்டுள்ளது எனவும் தெரிவிக்கப்பட்டிருந்தது.

**அகழாய்வில் கிடைத்த பொருட்கள்**

தொல்லியல் துறை நடத்திய ஆராய்ச்சியில் பல பொருட்கள் கண்டெடுக்கப்பட்டுள்ளன. அவை அனைத்தும் நம் முன்னோர்கள் பயன்படுத்திய பொருட்கள் என்று ஆராய்வில் கூறப்பட்டுள்ளது. முத்துமணிகள், பெண்களின் கொண்டை ஊசிகள், தாயக்கட்டைகள், சதுரங்கக் காய்கள், சுடுமண் பொம்மைகள், சில்லுகள், நூல் நூற்கும் தக்ளி போன்றவை இங்கு கிடைத்துள்ளன. வீடுகள் சுட்ட செங்கற்களால் கட்டப்பட்டு மேற்கூரைகள் ஓடுகள் வேயப்பட்டிருக்கலாம் என்பதையும் வீடுகளின் அருகே பட்டினப்பாலையில் குறிப்பிடப்படும் சுடுமண் உறைகேணிகளும் இருந்திருக்கலாம் என்பதனையும் இங்கு கிடைத்துள்ள சான்றுகள் எடுத்துக்காட்டுகின்றன. வீடுகளில் குளியலறைகள் இருந்ததற்கான சான்றும் கிடைத்துள்ளது. தமிழ்ப்பிராமி எழுத்துக்கள் பொறிக்கப்பட்ட கருப்பு, சிவப்பு நிறங்களிலான ஏறத்தாழ 1000 கிலோ கிராம் திணிவுடைய மண் ஓடுகள் அகழ்வாராய்ச்சியின் பொழுது கிடைத்திருக்கின்றன.

இரும்பாலான அம்புமுனைகள்இ எழுத்தாணி, சுடுமண் முத்திரை கட்டைகள் தந்தத்தால் ஆன தாயக்கட்டைகள், சுடுமண் பொம்மைகள் உட்பட பல்வேறு அரிய தொல்பொருட்கள் கிடைத்துள்ளன. அணிகலன்கள் சூது பவளம், பளிங்கு, அகேட்மணிகள், பச்சை, மஞ்சள், நீல நிறக் கண்ணாடி மணிகள் ஆகியவையும் கிடைத்துள்ளன. தாமிரத்திலான கண்மை தீட்டும் கம்பி ஆகியவையும் கிடைத்துள்ளன. வரலாற்றின் தொடக்க காலத்திய செங்கல் கட்டிடச் சான்றுகள் கிடைப்பது மிகவும் அரிதாகக் கருதப்படும் நிலையில் இங்கு பெருமளவில் செங்கல் கட்டிடங்கள் உள்ளது ஆய்வாளர்களின் ஆர்வத்தைத் தூண்டியுள்ளது.

**சுடுமண் குழாய்கள்**

“நீர் வழங்கலும், கழிவுநீர் அகற்றலும் நாகரிக வளர்ச்சியின் முக்கிய மைல்க்கல்களாகக் கருதப்படுவன. கீழடியில் சுடுமண் குழாய் மூலம் உருவாக்கப்பட்ட கழிவுநீர் கால்வாய் வசதியுடன் கட்டிடங்கள் இருந்தது கண்டறியப்பட்டுள்ளன.”[6]

**உறை கிணறுகள்**

கீழடியில் பழங்கால சுடுமண் உறை கிணறுகள் கண்டறியப்படடுள்ளன. இவை பட்டினப்பாலை கூறும் உறை கிணற்றுப் புறச்சேரி என்ற தொடருக்குச் சான்று பகர்வனவாகவும், ஆற்றங்கரைகளிலும், பெரிய குளக்கரைகளிலும் இவ்வாறு உறைகிணறுகள் அமைத்து நீரெடுக்கும் தமிழரின் பண்டைய வழக்கத்தை எடுத்துக்காட்டுவனவாகவும் உள்ளதாகத் தொல்லியல் அறிஞர் வெ. வேதாச்சலம் குறிப்பிடுகிறார். இதேபோன்று “அத்திரம்பாக்கம், சூடியம், வடமதுரை, எருமைவெட்டிப் பாளையம், மஞ்சனகரனை போன்ற ஊர்களில் உலகப் புகழ்வாய்ந்த கற்கருவிகள் கிடைத்துள்ளன.”[7] “அத்திரம்பாக்கம் கற்கால மக்களின் கருவி உற்பத்திக் கூடமாக விளங்கியிருக்க வேண்டும்”[8] ஏனெனில், அங்குமட்டும் ஆயிரத்திற்கும் மேற்பட்ட கற்கருவிகள் கிடைத்துள்ளன.

E-ISSN: 2581-7140
Special Issue: Vol. 2, April-2019 Available at: www.ijtlls.com

**மண்பாண்டங்கள்**

"ரோமப் பேரரசுடன் கொண்டிருந்த வணிகத்தெடர்பை மெய்ப்பிக்கும்படியான வணிகர்களால் கொண்டுவரப்பட்ட ரௌலட், (rouletted) அரிட்டைன் (arretine) வகை மண்பாண்டங்கள் கிடைத்துள்ளன. மேலும் வரலாற்றின் தொடக்ககாலத்தைச் சேர்ந்தவையான கருப்பு, சிவப்பு மண்பாண்டத் துண்டுகள், செம்பழுப்புநிற கலவை பூசப்பட்ட மண்பாண்டத் துண்டுகள் ஆகியவையும் கிடைத்துள்ளன."[9] தமிழகத்தில் செம்பழுப்புநிற ரசட் (russet) கலவை பூசப்பட்ட பாண்டங்கள் இதுவரை கொங்குப்பகுதிலேயே கிடைத்திருப்பதைக் கொண்டு இப்பகுதி கொங்குப்பகுதியுடனும் வாணிபத் தொடர்பிலிருந்ததாகக் கருதப்படுகிறது. மேலும் கொங்கு நாட்டில் "ரோம் நாணயங்கள் அதிக அளவில் கிடைப்பது போன்று இங்குக் கற்கருவிகள் நிலப்பரப்பின் மேல் சிதறிக்கிடப்பது கண்ணுக்கினிய காட்சியாகும்."[10]

**தமிழி எழுத்துக்கள்**

"ஆதன், உதிரன், திசன் போன்ற தனிநபர்களின் பெயர்களைக் குறிப்பிடும் தமிழ் எழுத்துக்கள் பொறிக்கப்பட்ட மண்பாண்ட ஓடுகள் கீழடியில் கிடைத்துள்ளன."[11]

**களத்தின் காலம்**

முதற்கட்டமாக இந்தக்காலம் கி.மு.மூன்றாம் நூற்றாண்டில் இருந்து கி.பி.பத்தாம் நூற்றாண்டு வரையான காலப்பகுதியைச் சேர்ந்த வசிப்பிடமாக கணிக்கப்பட்டது. ஆய்வை உறுதப்படுத்துவதற்காக "இந்த அகழாய்வில் இருந்து இரண்டு மாதரிகள் (samples) கரிமத் தேதியிடல் முறையில் பகுப்பாய்வு செய்ய அனுப்பட்டது. ஜீலை 2017இல் வெளிவந்த இதன்முடிவுகள் இந்த மையம் சுமார் 2200 ஆண்டுகளுக்கு முந்தையது என்பதை உறுதிசெய்துள்ளது."[12]

**அருங்காட்சியகம் அமைக்க கோரிக்கை**

கீழடி அகழாய்வு மாதிரிகள் 2200 ஆண்டுகள் பழமையானவை. கீழடியில் அருங்காட்சியகம் அமைக்க மதுரை உயர் நீதிமன்றம் உத்தரவும் பிறப்பித்துள்ளது. இது தவிர உறைகிணறு ஒன்றின் கட்டுமானம் ஒன்றும் கிடைத்துள்ளது. இந்த உறைகிணறு 93 சென்டிமீட்டர் சுற்றளவு கொண்ட ஆறு உறைகளைக் கொண்டிருக்கிறது. இதற்கு முன்பாக கீழடியில் மத்தியத் தொல்லியல் துறை நடத்திய ஆய்விலும் இதேபோல இரண்டு உறைகிணறுகள் கிடைத்தன. தற்போது கிடைத்துள்ள பொருட்களை ஆவணப்படுத்தும் முயற்சிகளும் கார்பன் டேட்டிங் ஆய்வுக்கு அனுப்பும் முயற்சிகளும் நடந்து வருகின்றன. இதற்கு முந்தைய காலங்களில் முடிந்த பிறகு ஆய்வுக்கென தனியாக அரசிடம் நிதி கோரி அதற்குப் பிறகுதான் கார்பன் டேட்டிங் ஆய்வுக்கு பொருட்களை அனுப்புவது வழக்கமாக இருந்தது. ஆனால் இப்போது துவக்கத்தில் ஒதுக்கப்படும் நிதியிலிருந்தே ஆய்வுகளுக்கென நிதி தனியாக எடுத்து வைக்கப்பட்டு விடுகிறது. இதனால் கார்பன் டேட்டிங் போன்ற ஆய்வுகளை உடனடியாகச் செய்ய முடியும் என்கிறார் ஜெகநாதன் என்பவர்.

**முடிவுரை**

சிந்து என்ற நதிக்கரையில்தான் மனிதகுலத்தின் முதல் நாகரீகம் தொடங்கியது என்று வரலாறு கூறுகிறது. அதனால் தான் ஆரியர்கள் மூத்த குடிமக்கள் என்று இந்திய வரலாற்றில் கூறப்பட்டுள்ளது. 2017 ஆம் ஆண்டு நடத்தப்பட்ட அகழ்வாராய்ச்சியில் கிடைத்த பொருட்கள் 2200 ஆண்டுகள் பழமையானது. மேலும், இது சிந்துசமவெளி நாகரிகத்தைவிட மிகப்பழமையானது என்று கூறப்படுகிறது. இந்நிலையில் இங்கே கிடைத்துள்ள தமிழ் எழுத்துக்களில் பழமையான தமிழ் எழுத்துமுறை பயன்படுத்தப்பட்டிருக்கிறது.

E-ISSN: 2581-7140
Special Issue: Vol. 2, April-2019 Available at: www.ijtlls.com

**அடிக்குறிப்புகள்**

1. முனைவர். கு.சேதுராமன், தமிழகச் சமுதாயப் பண்பாட்டுக் கலை வரலாறு, ப.எண் - 13.
2. http://tnmaps.tn.nic.com
3. முனைவர். கு.சேதுராமன், தமிழகச் சமுதாயப் பண்பாட்டுக் கலை வரலாறு, ப.எண் -13.
4. https://tamil.oneindia.com
5. மேலது.
6. tamil.the hindu.com (March 29,2019 )
7. Ringwells in ANCIENT INDIA
8. முனைவர். கு.சேதுராமன், தமிழகச் சமுதாயப் பண்பாட்டுக் கலை வரலாறு
9. சங்க காலத்திலேயே வெளிநாடுகளோடு வர்த்தகம் வணிகப் பெருவழிப் பாதையில் அமைந்த நகரம். தி.இந்து (தமிழ்).
10. ஆர்.எஸ். சர்மா, பண்டையக்கால இந்தியா. ப. எண் 54.
11. உயிருட்டம் கொண்ட சிற்றூரின் கீழே புதையுண்ட நகரம், தி. இந்து.
12. கீழடி அகழாய்வு மாதிரிகள்.

**துணைநூற்பட்டியல்**

1. தமிழகச் சமுதாயப் பண்பாட்டுக் கலை வரலாறு, ஆசிரியர் முனைவர். கு. சேதுராமன், நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்., 41-பி, சிட்கோ இண்டஸ்டிரியல் எஸ்டேட், அம்பத்தூர், சென்னை – 600 098. முதல் பதிப்பு : ஜீலை 2017.
2. பண்டைக்கால இந்தியா, ஆசிரியர். ஆர்.எஸ். ராம் சரண் சர்மா, நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்., 41-பி, சிட்கோ இண்டஸ்டிரியல் எஸ்டேட், அம்பத்தூர், சென்னை – 600 098.
3. எஸ். அண்ணாமலை (ஜீன் 18, 2015) அகழ்தெடுக்கப்பட்டது பாண்டிய – ரோம வணிகத்தொடர்பு தி. இந்து (ஆங்கிலம்)
4. ப.சூரியராஜ் (ஜீன் 16. 2015) 2200 ஆண்டுகளுக்கு முந்தைய பழங்கால நகரம் மதுரை அருகே கண்டுபிடிப்பு விகடன். காம்.
5. கீழடியில் அருங்காட்சியகம் அமைக்க அரசு ஆர்வம் காட்டவில்லை. Dinamalar. Com (19march 2016)
6. https://tamil. Samaayam.com

தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்
International Journal of Tamil Language and Literary Studies

*A Bi-Yearly Peer-Reviewed International Journal*
E-ISSN: 2581-7140
Special Issue: Vol. 2, April-2019
Available at: www.ijtlls.com

# தொல்லியல் சான்றும் தமிழர் வாழ்வும் கொடுமணல் அகழாய்வு
# Tamil Life in Kodumanal and Archaeological Substantiation

**எம்.ஜெயலெட்சுமி,** முனைவர் பட்ட ஆய்வாளர்,
மதுரை காமராசர் பல்கலைக்கழகம், மதுரை-21.

## Abstract

*The paper detracts the Tamil Life in Kodumanal and Archaeological Substantiation by the Archaeology Department of the Indian Government. The paper tells about the stages of archaeological survey. The classic antiquity of Tamil culture and civilization on has been revealed now. Hence, the paper brings forth the evidences of the Kodumanal evacuations to the limelight.*

**Keywords:** Tamil Life, Kodumanal, Archaeological Substantiation

தமிழகத்தில் ஈரோடு மாவட்டத்தில் பெருந்துறை வட்டத்தில் நொய்யல் ஆற்றின் வலது கரையில் சென்னிமலைக்கு மேற்கில் 15 கி.மீ தொலைவில் அமைந்துள்ள சிற்றூர் கொடுமணல். (நேரில் கண்டவை) இவ்வூர் சங்ககாலத்தில் மிகவும் புகழ்பெற்ற வணிகம் மற்றும் தொழில் நகரமாகத் திகழ்ந்தது. பதிற்றுப்பத்து என்றும் சங்க இலக்கியப் பாடல் தொகுதி இவ்வூரை சேர நாட்டுக்குள் இருந்தது என்றும் மதிப்பு மிக்க ஆபரணக் கற்கள் குறிப்பாக பளிங்குக் கற்கள் நிறைந்த ஊர் என்றும் குறிப்பிடுகின்றது. பிற்காலத்தில் குடியிருப்பு பகுதியில் நடத்தப்பட்ட கல்வெட்டு இவ்வூர் உம்மத்துர் தலைவன் வீ.நஞ்சராஜ உடையார் என்பவரால் (கி. பி.1489 - 1500) ஆளப்பட்டது என்று குறிப்பிடுகிறது.

கொடுமணலின் தொல்லியல் மேடு முதன் முதலில் 1961ல் மத்திய தொல்லியல் துறை அலுவலர் வி.என் சீனிவாசதேசிகன் அவர்களால் கண்டறியப்பட்டது. அதன் பின்னர் தமிழ்ப்பல்கலைக்கழகக் கல்வெட்டுத்துறை பேராசிரியர் புலவர் செ.இராசு அவர்கள் அடிக்கடி ஆய்வு செய்யப்பட்டு, இவ்வூரின் தொல்லியல் முக்கியத்துவத்தை 1981ல் மதுரையில் நடைபெற்ற ஐந்தாம் உலகத்தமிழ் மாநாட்டில் வெளியிட்டு கட்டுரை ஒன்றின் மூலம் உலகிற்கு அளித்தார்.

கொடுமணல் தொல்லியல் மேடு கிழக்கில் சேரர் தலைநகரமான கருரை (வஞ்சி)யும் மேற்கில் துறைமுகமான முசிறியும் இணைக்கும் ஒரு தொன்மையான பெருவழியில் அமைந்துள்ளது. இடைக்கால கல்வெட்டுகளில் கரூருக்கும் கோயம்பத்தூருக்குமிடையே இருந்த கொங்கப் பெருவழியையும் கோயம்புத்தூரையும், முசிறி (பட்டிணம்) துறைமுகத்தையும் இணைக்கும் இராஜகேசரிப் பெருவழி இருந்ததையும் காட்டுகின்றன. கொடுமணலுக்குஅருகில் உள்ள கத்தங்கண்ணி, சூலூர், வெள்ளலூர், வேலந்தாவளம், எய்யல் போன்ற ஊர்களில் புதையல் குவியல்களாகவும் தனித்தனியாகவும் ரோமானிய நாணயங்களும் கிடைத்துள்ளன.

சுமார் 15 ஹெக்டேர் பரப்பளவுள்ள குடியிருப்புப் பகுதியும், 40 ஹெக்டேர் பரப்பளவுள்ள இடுகாட்டுப்பகுதியும் தொல்லியல் ஆய்வாளர்களால் பரிசோதனைக்குட்படுத்தப்பட்டுள்ளன. கடந்த ஆறு ஆண்டுகளாக நடந்த அகழாய்வில் 69 அகழ்வுக்குழிகள் தோண்டப்பட்டது. 16 கல்லறைகளும் அகழ்வாய்வுக்கு உட்படுத்தப்பட்டன.

தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்
International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Special Issue: Vol. 2, April-2019 Available at: www.ijtlls.com


ஏழாவது ஆண்டில் மட்டும் 9 குழிகளும் 1 கல்லறையும் அகழப்பட்டு இப்பகுதியின் பண்பாட்டுச் சிறப்பு ஆராயப்பட்டது.

**2013 – ம் ஆண்டின் அகழாய்வு**

2013 – ம் ஆண்டில் மேற்கொண்ணப்பட்ட 9 குழிகளிலும், ஒரு கல்லறையிலும் பல செய்திகள் அறியப்பட்டன. குடியிருப்புப் பகுதியில் அகழப்பட்ட 9 குழிகளின் மூலம் கொடுமணலில் செப்பு உருக்கு ஆலையும் சங்கு வளையல் செய்யும் தொழில் கூடமும் ஆபரணக்கற்களின் தொழிற்கூடமும் கண்டறியப்பட்டன. முந்தைய அகழாய்வுகளில் இவ்வூரில் இருந்த இரும்பு உருக்கு உற்பத்திக் கூடமும் துணி நெய்யும் தொழிற்கூடமும் கண்டறியப்பட்டன.

**ஆபரணக்கற்களின் தொழிற்கூடம்**

இவ்வாண்டின் அகழாய்வின் முக்கியமான வெளிப்பாடு முற்றிலும் ஆபரணக்கற்களின் தொழிற்கூடத்தைக் கண்டறிந்ததாகும். குடியிருப்பு பகுதியின் மையப்பகுதியில் அகழப்பட்ட நான்கு அகழ்வுக்குழிகளில் இத்தொழிற்கூடத்தில் பல்வேறு காலகட்டங்களில் தயாரிக்கப்பட்ட கற்கள் கண்டறியப்பட்டன. ஒரு பெரிய படிகக்கற்துண்டு, குடுவை (Barrel shape) வடிவ பளிங்குத் துண்டுகள், பல்வித வடிவங்களிலான பளிங்கு வட்டங்கள் (discs) போன்றவை இத்தொழிற் கூடத்தின் பகுதிகள் வெவ்வேறு காலகட்டத்தை வெளிப்படுத்துவனவாக அமைந்துள்ளன. பல்வேறு நிலைகளில் தயாரிக்கப்பட்ட மணிகள், முழுமையாக செய்யப்பட்ட, அரைகுறையாக பாதியளவு செய்யப்பட்ட, துளையிடப்பட்ட, துளையிடாத, மெருகேற்றப்பட்ட, மெருகேற்றப்படாத ஆகியவற்றுடன் மூலக்கற்களும் கண்டறியப்பட்டன. வேண்டாமென ஒதுக்கப்பட்ட துகள்கள், மற்றும் விரல் தடம் பெற்ற கற்கள் போன்றவை இதே இடத்தில் இத்தொழில் மேற்கொள்ளப்பட்டது என்பதை உறுதிப்படுத்துக்கின்றன. பலவித வண்ணங்களில் குறிப்பாக நீலமணி, இளம்பச்சைக்கல், மணி, சூதுபவளம், நீலக்கல், பளுப்பு, செந்நிறக்கல், படிகக்கல் போன்றவை குடியிருப்பு பகுதிகளிலிருந்து அகழ்ந்து எடுக்கப்பட்டுள்ளன. புதைகுழிகளிலிருந்து பெரும் எண்ணிக்கையிலான சூது பவள மணிகள் குறிப்பாக நகக்குறிகளுடன் வெளிக்கொணரப்பட்டுள்ளன.

**செம்பு உருக்கும் ஊதுலை**

குடியிருப்புப் பகுதியின் தெற்கில் தோண்டப்பட்ட அகழ்வுக் குழிகளில் செம்பு உருக்கும் ஊதுலைகள் வெளிப்பட்டன. இந்த ஊதுலைகள் உலோகங்களை புடம்போடும் கலங்களோடு (Crucibles) கிடைத்தன. இக்கலங்களில் படிந்திருந்த உலோகப்படிவுகள் உலோகவார்ப்பு முறைகளைக் குறிப்பாக உணர்த்தின. இத்தோடு படிந்திருந்த படிகத்துகள்கள் உலோகங்களை இளகவைக்கும் காரணிகளாகச் செயல்பட்டதைக் காட்டுகின்றன. பெருமளவிலான படிகப் படிமங்களும் துகள்களும் ஊதுலைகளைச் சுற்றிலும் நிறைந்து கிடந்தன.

**சங்கு வளையல் தொழில் கூடம்**

பெருமளவில் இங்கு கிடைத்த முற்றாகச் செய்து முடிக்கப்பட்ட வளையல்கள், அரைகுறையாகச் செய்யப்பட்டவை, செய்து முடிக்கப்படாத வளையல்கள் போன்றவை இவ்விடத்தில் சங்கு அறுக்கும் தொழில் சிறப்படைந்திருந்ததைக் காட்டுவதாக உள்ளன.

மணிக்கற்களின் தொழிற்கூடம் இருப்பதும், இரும்பு மற்றும் எ∴குத் தொழிற்கூடம், செம்பு உருக்காலை, சங்கு அறுக்கும் தொழில், துணை ஆலை போன்றவற்றின் மூலம் கொடுமணலில் கி. மு. 5ம் நூாற்றாண்டு முதல் கி. மு. முதல் நுற்றாண்டு வரை முக்கியத்துவம் வாய்ந்த வணிக மற்றும் தொழில் நகரமாக இருந்தது என்பதைக்

E-ISSN: 2581-7140
Special Issue: Vol. 2, April-2019 Available at: www.ijtlls.com

காட்டுகின்றன. இவ்வாறான தொழில் நடவடிக்கைகளின் பெருக்கம் இந்தியாவின் பல பகுதிகளிலிருந்து வணிகர்களையும், கைவினைஞர்களையும், தொழில் நுட்பவியலாளர்களையும் கொண்டு வந்து சேர்த்தன. பெரும் எண்ணிக்கையிலான பானை ஓட்டுப் பொறிப்புகளில் பதிவு செய்யப்பட்டுள்ள வடநாட்டுப் பெயர்களும், அவற்றில் உள்ள பிராகிருத மொழித் தாக்கமும் இவ்வுண்மையை உறுதிப்படுத்துகின்றன. இதுவரை மேற்கொள்ளப்பட்ட அகழ்வாய்வுகளில் 500க்கும் மேற்ப்பட்ட எழுத்துப் பொறித்த பானை ஓடுகளும் குறிப்பாக 2013ல் மட்டும் நூறு ஓடுகளில் எழுத்துக்கள் கிடைத்துள்ளன. மற்றொரு முக்கியமான கண்டுபிடிப்பு என்பது மத்திய கங்கைப் (உ.பி) பகுதிக்கே உரிய வடஇந்திய மெருகூட்டப்பட்ட கருப்பு பானை ஓடுகள் கிடைத்ததாகும். இவ்வகைப் பானை ஓடுகள் தமிழ்நாட்டில் பாண்டியர் துறைமுகங்களான கொற்கை, அழகன்குளம் பகுதி அகழாய்வுகளிலும் கிடைத்துள்ளன. மத்திய கங்கைச் சமவெளியில் ஏற்பட்ட இரண்டாவது நகரமாயமாதலின் தொடக்கத்தில் கிடைத்தமையால் (NBPW) வடஇந்திய கருப்பு மெருகூட்டப்பட்ட பானை ஓடுகள் மிகுந்த முக்கியத்துவம் பெருகின்றன. முதற்கட்ட அகழாய்வில் கொடுமணலில் வெள்ளியாலான முத்திரை குத்தப்பட்ட நாணயங்களும் கிடைத்ததாகத் தெரிவிக்கப்பட்டுள்ளது.

**கீறல் குறிகள் (Graffiti)**

குடியிருப்புப் பகுதிகளின் அகழாய்வில் பெருமளவிலான கீறல்குறிகளுடன் கூடிய பானை ஓடுகள் கிடைத்துள்ளன. ஐம்பது வகையான குறியீடுகள் கலங்களை சுட்டபின் கீறப்பட்டவையாக கலங்களின் தோள் பகுதிகளில் குறிப்பாக உணவு மேசைகளில் பயன்படுத்தும் கலங்களில் கீறப்பட்டவையாக கிடைத்துள்ளன. சில குறியீடுகள் கூட்டுக் குறியீடுகளாக அதாவது ஒன்றுக்கு மேற்ப்பட்ட குறிகளுடன் இணைந்து கீறப்பட்டுள்ளன. ஒரு சில குறியிடுகள் வெவ்வேறு இடங்களில் வெவ்வேறு ஆழத்தில் மறுபடியும் மறுபடியுடம் கிடைக்கின்றன. சூரியன், சுவஸ்திகம், நட்சத்திரம், ஏணி, நந்திபாதம், மீன், வில், அம்பு, சக்கரம், வண்டி போன்ற குறியீடுகளே பொதுவாகக் கிடைத்துள்ளன. ஒரு சில ஓடுகளில் பிராமி எழுத்துக்களின் முடிவுப் பகுதியில் சேர்ந்து சில னகுறியிடுகள் கீறப்பட்டுள்ளன. இக்குறியீடுகளின் சரியான நோக்கத்தை நாம் திடமாக அறிய முடியாவிட்டாலும் இவற்றை நுணுகி ஆராய்ந்தால் அவை கிடைக்கின்ற இடம், எண்ணிக்கை போன்றவை இவை ஏதோ ஒரு செய்தியை படவெழுத்தாகவோ, சுருக்கெழுத்தாகவோ வெளிப்படுத்துவனவாகக் கொள்ளலாம்.

கல்லறையைப் பொருத்தவரை ஒவ்வொரு குழியும் ஒரு விதமான கீறல்குறியீட்டைக் கொண்டுள்ளது. தோண்டப்பட்ட 17 கல்லறைகளிலும் வெவ்வேறு விதமான சிறப்பான குறியீடு எல்லா பானைகளிலும் கீறப்பட்டுள்ளன. இவை கல்லறையில் இடப்பட்ட மனிதரோடு ஏதோ ஒரு வகையில் தொடர்புடையதாக இருக்க வேண்டும். ஒரு குறிப்பிட்ட குறியீடு ஒன்றுக்கும் மேற்பட்ட கல்லைறைகளில் கிடைப்பதால் இதை ஒரு வகையான குலக்குறியீடாகக் கொள்ளவும் வாய்ப்புள்ளது. இம்முடிவு கல்லறைகளில் காணப்படும் குறியீடுகளுக்கு மட்டும் பொருந்தும். இவை தவிர குடியிருப்புப் பகுதியில் கிடைக்கும் பல குறியீடுகளின் முக்கியத்துவம் இன்னும் திருப்திகரமாக விளக்கப்படவேண்டும்.

**தமிழ் -பிராமி எழுத்துப் பொறிப்புகள்**

கொடுமணலில் மட்டும் 500க்கும் மேற்பட்ட எழுத்துப் பொறித்த பானை ஓடுகள் கண்டறியப்பட்டுள்ளன. இவை யாவும் கலங்களின் தோள் பகுதியில் சுட்டபின் கீறப்பட்டவையாகும். பல எழுத்துக்கள், அதிந்தை, மகிந்தை, குவிரன், சுமணன், சம்பன், சந்தைவெளி, பண்ணன், பாகன், ஆதன் போன்ற ஆட்பெயர்களைக் குறிப்பனவாக உள்ளன. மிகுதியாகக் கிடைக்கும் எழுத்துப் பொறிப்புக்களைக் கொண்டு இம்மக்கள் எழுத்தறிவு

E-ISSN: 2581-7140
Special Issue: Vol. 2, April-2019 Available at: www.ijtlls.com

பெற்றவர்களாக இருந்தனர் எனலாம். இப்பெயர்களை எழுதுவதில் இவர்கள் எவ்வித பிழைகளையும் செய்யவில்லை. இதன்மூலம் அவர்களது கல்வியின் தரம் வெளிப்படுகிறது.

இடுகாட்டில் ஒரு கல்லறை (Meg.17) என்பது அகழாய்வுக்காகத் திறக்கப்பட்டது. இது ஒரு கல் வட்டமாக இரண்டாகப் பிரிக்கப்பட்ட கல்லறையுடன் மூடுகல் ஒன்றையும் கொண்டதாக அமைக்கப்பட்டிருந்தது. கிழக்குப் பகுதியில் வாசலும் இருந்தது. உள்வட்டம் கல்சுவர் போல 3 அல்லது 4 வரிசைக் கற்களை வைத்துக் கட்டபட்டதாக இருந்தது. வெளிவட்டம் குறிப்பிட்ட இடைவெளியில் கற்பலகைகள் நடபட்டதாக இருந்தது. கல்வட்டத்தின் வடமேற்கு மூலையில் ஓர் உடைந்த செப்புக்கிண்ணம் துளையிட்ட அடிப்பாகத்துடன் கிடைத்தது. இது ஒரு சல்லடை போலப் பயன்பட்டிருக்கலாம். இதற்கு முந்தய அகழ்வுகளில் இது போன்று கிடைத்துள்ளது. இக்கிண்ணத்தின் அமைவிடத்திற்கு ஏதேனும் முக்கியச் சடங்குச் சிறப்பு இருக்க வேண்டும். இத்துடன் 218 சூது பவள மணிகள் கீறலுடனும் கீறல் இல்லாமலும் கல்வட்டத்தின் வடக்கு மற்றும் தெற்கு அறைகளிலும் நடைபாதையிலும் கிடைத்துள்ளன. வடக்கு மற்றும் தெற்கு அறைகள் ஒரு வட்டமான இடுதுளையால் இணைக்கப்பட்டுள்ளது நடைபாதையும் வடக்கு அறையும் ஒரு நாற்கர வடிவ இடுதுளையால் இணைக்கப்பட்டுள்ளது.

**காலவரையறை**

இக்குழிகளிலிருந்து 60செ.மீ., 80செ.மீ., 1.20செ.மீ ஆழங்களில் சேகரிக்கப்பட்ட கரிம மாதிரிகள் ஏ.எம்.எஸ் (Accelerator Mass Sepctometry) எனும் வேதியல் பகுப்பாய்வுக்காக அமெரிக்காவிற்கு அனுப்பப்பட்டு பகுப்பாய்வு செய்யப்பட்டது. இதன் மூலம் முறையே கி.மு 275, 330: கி.மு408 என்ற கால கணிப்புகள் பெறப்பட்டன. இவற்றிற்குக் கீழாக 60செ.மீ பண்பாட்டு மண் அடுக்கு உள்ளது. இதிலிருந்தும் மாதிரிகள் எடுக்க முயற்சிக்கப்படுகிறது. மேற்கண்ட காலகணிப்பின் மூலமாகக் கொடுமணல் அகழாய்வு மேட்டின் கால எல்லையை கி.மு 6 - 5 ம் நூற்றாண்டிலிருந்து கி.மு 22 - 1ம் நூற்றாண்டு வரை எனக் கணக்கிடலாம் .

இவ்வாறாக மணிக்கற் தொழிற்கூடம், இரும்பு, எ∴கு உருக்காலை, செம்பு உருக்காலை, சங்கு அறுக்கும் தொழிற்கூடம், துணி நெசவு, பெருமளவிலான எழுத்துப்பொறித்தப் பானை ஓடுகள், நீலம், பச்சை, சிவப்பு, செவ்வந்தி, பழுப்பு, சூதுபவளம் போன்ற மதிப்புமிக்க மணிகளின் குவிப்பு ஆகியவை கொண்டு இவ்விடம் கி.மு 5 ம் நூற்றாண்டிலிருந்து கி.மு முதல் நூற்றாண்டு வரை பெரும் வணிக முக்கியத்துவம் வாய்ந்த தொழில் மையமாக இருந்திருக்க வாய்ப்புள்ளது.

**ஆய்வுக்குழு**

இவ்வகழ்வாய்வை முதலில் தமிழ்ப்பல்கலைக்கழக கல்வெட்டியல் துறை பேராசிரியர் முனைவர்.எ.சுப்புராயலு தலைமையில் பேராசிரியர் புலவர் சே.இராசு, முனைவர் க.ராசன் ஆகியோர் மேற்கொண்டனர். பின்னர் 2013-ல் பேராசிரியர் சா.இராஜன் தலைமையில் ஆய்வு மாணவர்கள் என்.பி.யதீஸ்குமார், எஸ்.செல்வக்குமார், ஆர்.இரமேஸ், பி. பாலமுருகன், பால்துரை மற்றும் தமிழ்நாடு அரசு தொல்லியல் துறையில் ஓய்வுப்பெற்ற உதவி இயக்குநர் தி.சுப்பிரமணியம் ஆகியோர் கொண்ட குழுவினர் ஈடுபட்டனர்.

**பார்வை நூல்கள்**

1. பேராசிரியர் சி.க.சிற்றம்பலம் எம்.ஏ., பி.எச்.டி, பேராசிரியர் வரலாற்றுத்துறை, பண்டைய தமிழகம், யாழ்ப்பாணப் பல்கலைக்கழகம், திருநெல்வேலி, இலங்கை.
2. கா.இராசன், சங்க கால தொல்லியல் ஆய்வு, உலகத்தமிழ் ஆராய்ச்சி நிறுவனம், சென்னை.

தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்
International Journal of Tamil Language and Literary Studies

*A Bi-Yearly Peer-Reviewed International Journal*
E-ISSN: 2581-7140
Special Issue: Vol. 2, April-2019 Available at: www.ijtlls.com

# கொடுமணல் அகழாய்வு
# Kodumanal Archaeological Excavation

**ப.ஜெயலெட்சுமி,** முனைவர் பட்ட ஆய்வாளர் (தமிழ்த்துறை)
ஹோலி கிராஸ் ஹோம் சயின்ஸ் கல்லூரி, தூத்துக்குடி.

## Abstract

*The paper discusses on the archaeological substantiation and the lifestyle of the Tamil people. The study tries to absorb the details of the people from the ancient literary sources, once they were found in the paimarya leaflets, culverts and the tltles carved by the kings. The fact is that the cultural vestige and traditional loftiness of the culture seems highly ethical and enriched with systematic principles of life. They enjoyed every thing with reason and logic. Hence, the paper discusses these details in a research point of view.*

**Keywords:** Tamilar, Lifestyle, Archaeological Substantiation

பண்பாடு என்பது வாழ்க்கை முறை. ஒவ்வொரு மனித சமூகத்திற்கும் ஒரு பண்பாடு உண்டு. மனிதனின் எண்ணங்களையும், கருத்துக்களையும், பண்பாடே வெளிப்படுத்துகிறது. பண்பாடு என்பது 'பண்பட்டு ஒழுகுதல்' எனப்படும். தொல் பொருள் பண்பாடு: "பயனும் பண்பும் பாடறிந் தொழுகலும்" - நற்.160

ஒரு சமூகத்தில் உள்ள கலை, நம்பிக்கை, பழக்க வழக்கங்கள், விழுமியங்கள் ஆகியவை பண்பாட்டுக் கூறுகளாகும். நாம் உண்ணும் உணவு, அணியும் ஆடை, உறைவிடம் முதலியவை பண்பாட்டு வாயில்கள். மனிதனால் உருவாக்கப்படும் கட்டடங்கள், ஓவியங்கள், சிற்பங்கள் முதலியவை புறத்தோற்றத்தால் வெளிப்படும் பண்பாடு. அதைப்போல் மக்களின் சிந்தனை, எண்ணம், விழுமியம் ஆகியவை அகத்தில் வெளிப்படும் பண்பாடுகள் இதைப்பற்றிய செய்திகளை தொல்லியல் ஆதாரத்துடன் ஆய்வதே இக்கட்டுரையின் நோக்கம்.

**உணவு**

மனிதனின் அடிப்படைத் தேவை உணவு. ஆனால் அவன் எதை உண்ண வேண்டும், எப்பொழுது உண்ண வேண்டும், எப்படி உண்ண வேண்டும் என்பதை அவனது பண்பாடு கற்றுக் கொடுக்கிறது.

**இட்லி**

தென்னிந்திய உணவு என்றதும் நம் நினைவுக்கு வருவது இட்லி. இட்லி என்றால் இட்டு+ஆவி என்று பொருள். இந்தோனேஷியாவை ஆண்ட இந்து சமய அரசர்களின் நூல்களில் இட்லி பற்றிய செய்முறை குறிப்புகள் இருக்கிறது. இட்லி பற்றிய முதல் பண்டைய குறிப்பு கன்னட மொழியிலும், வடமொழியிலும் இருக்கிறது. இராஜேந்திர சோழனால் பனிரெண்டாம் நூற்றாண்டில் தமிழகத்தில் இட்லி அறிமுகப்படுத்தப்பட்டது.

**உப்பு**

மனித நாகரீக வளர்ச்சியில் முக்கிய பங்காற்றுவது உப்பு. சங்க காலத்தில்உப்பு மதிப்புமிக்கதாக இருந்ததை

E-ISSN: 2581-7140
Special Issue: Vol. 2, April-2019 Available at: www.ijtlls.com

"நெல்லின் நேரே வெண்கல் உப்பு விற்றதை"[1] (அகநானூறு)

என்ற பாடல் வரி எடுத்துக்கூறுகிறது. சோழர்காலத்தில் உப்பின் மதிப்பும், நெல்லின் மதிப்பும் சமமாகவே இருந்திருக்கிறது. உப்பு என்பது தொடர்பு அல்லது உறவை ஏற்படுத்தும் என்பது தமிழரின் நம்பிக்கையாக உள்ளது. அதனால் தான் திருமணமான மணமகள் தன் கணவன் வீட்டிற்கு ஓலைப்பெட்டியில் உப்பு எடுத்து செல்கின்றாள். திருமண வீட்டில் மணமகனின் அக்காள் உப்பு கூடை எடுப்பதும் வழக்கமாக இருக்கின்றது.

புதுமனை புகுவிழாவில் உறவினர்கள் உப்பை பரிசளிப்பதன் மூலம் உப்பு உறவின் தொடர்ச்சியை வலுப்படுத்தும் ஒரு குறியீடாக அமைகின்றது. இறந்தவர்களுக்கு படைக்கும் உணவில் 'உப்பு' சேர்க்காமல் சமைப்பது இறந்தவர்களுக்கு உள்ள உறவை அறுப்பதற்காகவே. எனவே தான் உப்பை உறவு மற்றும் செழிப்பின் அடையாளமாகவே தமிழக மக்கள் கருதுகின்றனர்.

**எண்ணெய்**

பழங்காலத்தில் எள், ஆமணக்கு, வேம்பு, புன்னை, இலும்பை போன்ற எண்ணெய் மட்டுமே பயன்படுத்தியுள்ளனர். தமிழர்களிடம் தலைக்கு எண்ணெய் தேய்க்கும் பழக்கம் இருந்ததை

'பாறு மயிர்க்குடுமி எண்ணெய் நீவி" (புறம்)

என்ற புறநானூற்றுப்பாடல் வரியால் அறியலாம்.

பக்தி இயக்க காலம் வரை தேங்காய் எண்ணெய் பயன்படுத்தும் வழக்கம் இல்லை. தேங்காய் எண்ணெய்யை அமங்கலப் பொருளாக கருதினர். அதனால் தான் இறந்தவர் வீட்டில் 'எண்ணெய் தேய்ப்பு' அல்லது மூன்றாம் நாள் விசேஷம் என்று நடத்தப்படுகிறது. இது இறந்தவரின் நினைவை அனுப்புவதற்காக நடத்தப்படுகிறது. இப்பழக்கம் விஜயநகர பேரரசு காலத்தில் தோன்றியுள்ளது. இதைப் பற்றிய குறிப்பு பழைய சங்க கால நூலில் இடம் பெறவில்லை. எனவே பதினைந்தாம் நூற்றாண்டான விஜயநகர பேரரசு காலத்தில் தான் சமையலில் கடலை எண்ணெய் பயன்படுத்தும் பழக்கம் ஏற்பட்டுள்ளது.

**கரும்பு**

கரும்பு யூகினியா நாட்டில் கி.மு. ஆறாம் நூற்றாண்டிற்கு முந்தைய பயிராகும். ஈழத்தின் வழியாக 'அதியமான் நெடுமான் அஞ்சி' மரபினர் கரும்பை தமிழ்நாட்டிற்கு கொண்டு வந்துள்ள செய்தியை,

"அரும்பெறல் மரபின் கரும்பு இவண் தந்தும்
நீரக இருக்கை ஆழி சூட்டிய
தொன் நிலை மரபின் நின் முன்னோர்" (புறநானூறு)

என்ற பாடல் வரியிலிருந்து அறிய முடிகிறது. குறுந்தொகை, ஐங்குறுநூறு, பட்டினப்பாலை போன்ற நூல்களிலிருந்து 'கரும்பு' ஈழத்து உணவு ஆகும். இச்சான்றுகள் வாயிலாக சங்க காலத்திலேயே தமிழர்கள் கரும்பை பயன்படுத்தியிருப்பதை அறிய முடிகிறது.

**தென்னை**

தென்னை வங்கக்கடல் தீவிலிருந்து கடல் வழியே தமிழகத்திற்கு வந்துள்ளது. தென்னையைப் பற்றிய செய்திகள் தொல்காப்பியத்தில் இடம் பெறவில்லை. பக்தி இயக்க காலத்திலும் கோவிலில் தேங்காய் உடைக்கும் பழக்கம் இல்லை. ஆண்டாள் பாசுரத்திலும் தென்னை பற்றிய பாடல் இடம் பெறவில்லை. பத்தாம் நூற்றாண்டு வரை வாழை இலையில் படையல் பொருளாய் தேங்காய் இருந்திருக்கிறது என்பதை கி.பி.ஏழாம் நூற்றாண்டில் முதலாம் நந்திவர்மன் செப்பேட்டின் மூலம் அறியலாம்.

E-ISSN: 2581-7140
Special Issue: Vol. 2, April-2019 Available at: www.ijtlls.com

"தெங்கு நின்ற நந்த வனம்" - முதலாம் நந்திவர்மன் செப்பேடு

'நட்டவாரம்' என்னும் நிக்கோபர் தீவை இராஜேந்திர சோழன் வென்று, நட்டவாரி என்ற நாட்டுத் தென்னையை நிக்கோபர் தீவிலிருந்து தமிழகத்திற்குள் வந்ததை

"தேனமர் பொழில் சூழ் மாநக்கவாரம்" - இராஜேந்திர சோழன், மெய்கீர்த்தி

என்ற பாடல் வரி எடுத்துக் கூறுகிறது.

**மஞ்சள்**

தமிழர் மங்கலகரமான பொருள் என குறிப்பிடுவது மஞ்சள் மற்றும் குங்குமம். மஞ்சள் பற்றிய குறிப்பு சங்ககால நூல்களில் இடம்பெறவில்லை. தமிழர்களிடம் மஞ்சள் ஆரோக்கிய பொருளாகவும் இருக்கிறது. நோய் எதிர்ப்பு சக்தி கொண்டது என கருதுகின்றனர். மஞ்சளில் புகழ் பெற்றது விரலி மஞ்சள். புதுமனை புகுவிழாவில் முதன்முதலில் வீட்டிற்குள் விரலி மஞ்சள் மற்றும் உப்பை கொண்டு வரும் பழக்கம் உள்ளது.

பெண்கள் முகத்திற்கு மஞ்சள் பூசும் பழக்கம் சங்க காலத்தில் இல்லை. 'விறலி' என்றால் முகத்தில் பாவனையை மாற்றியமைக்கும் பெண்களைக் குறிக்கும். அன்று கூத்தாடிய பெண்கள் விளக்கொளியில் தங்கள் முகம் பளிச்சென தெரியவேண்டும் என்பதற்காக மஞ்சள் பூசிக் கொண்டனர். விறலியர் நடனத்திற்காக மஞ்சள் பூசும் பழக்கம் காலப்போக்கில் குடும்ப பெண்களும் மஞ்சள் பூசிக் கொண்டனர். விறலியரை மதிக்காத தமிழ் மக்கள் விரலி மஞ்சளை மட்டும் உயர்வாக எண்ணுகின்றனர்.

**தமிழர்களும், ஆடையும்**

ஒருவன் அணிந்திருக்கும் ஆடையை அடிப்படையாகக் கொண்டு, அவன் எந்த நாட்டைச் சார்ந்தவன், எந்த சமயத்தைச் சார்ந்தவன், அவன் வாழும் நிலத்தின் வெப்ப சூழலையும் அறிய முடிகின்றது.

"ஆள்பாதி ஆடை பாதி" - பழமொழி

ஒருவன் அணியும் ஆடையிலிருந்து அவனின் தரம் மற்றும் இயல்பை அறிய முடிகிறது.

"உண்பது நாழி, உடுப்பது இரண்டே" - புறநானூறு

சங்க காலத்தில் ஆண், பெண் இருவரும் மேலாடை ஒன்றும் இடுப்பில் சுற்றும் ஆடை ஒன்றும் அணிந்துள்ளனர். சிலப்பதிகாரத்திற்கு முந்தைய தமிழ் இலக்கியங்களில் பெண்கள் மார்பு கச்சை அணிந்ததற்கான சான்றுகள் எவையும் இல்லை. நவாப்பின் வருகைக்குப் பின் தைத்த சட்டை அணியும் வழக்கம் ஏற்பட்டிருக்கிறது.

தற்போது பெண்கள் அணியும் சேலை விஜயநகர பேரரசு காலத்தாலும், உறவாலும் இவ்வழக்கம் ஏற்பட்டது. அச்சம், மடம், நாணம், பயிர்ப்பு ஆகிய நான்கு பண்புநலனும் தமிழ்ப் பெண்ணிடம் எதிர்பார்க்கப்படுகிறது. அச்சமும், நாணமும் கொண்ட பெண் தான் அணியும் ஆடையின் வாயிலாக வெளிப்படுத்துகிறாள். இது தமிழர் பண்பாட்டின் ஒரு கூறாகவே திகழ்கிறது.

**தாலி**

இன்று பெண்கள் அணியும் தாலியை சிறுதாலி, பெருந்தாலி, மண்டை தாலி, நானல் தாலி, பொட்டுதாலி, பஞ்சார தாலி என பலவகைப்படுத்துகின்றனர். பத்தாம் நூற்றாண்டிற்கு முன் பெண்களிடம் தாலி அணியும் பழக்கம் இல்லை. சிலப்பதிகாரத்தில் கோவலன், கண்ணகி திருமண நிகழ்வில் தாலி பற்றிய செய்திகள் இடம் பெறவில்லை.

ஆதிச்சநல்லூர் உட்பட்ட அகழ்வாராய்ச்சியில் கிடைத்த புதைப் பொருட்களிலும் பெண்கள் அணியும் தாலி பற்றிய செய்திகள் எதுவும் கிடைக்கவில்லை. திருமணப் பாடலான

E-ISSN: 2581-7140
Special Issue: Vol. 2, April-2019 Available at: www.ijtlls.com

ஆண்டாளின் 'நாச்சியார் திருமொழியிலும் தாலி பற்றிய செய்திகள் இல்லை. ஆனால் வீரத்தின் அடையாளமாக ஆண்கள் புலிப்பல்லை தாலியாக அணிந்துள்ள செய்தியை

'புலிப்பல் கோத்த புலம்பு மணித்தாலி'[2] - அகநானூறு

'புலிப்பல் தாலிப் புன்தலைச் சிறார்'[3] - புறநானூறு

'இரும்புலி எயிற்றுத்தாலி இடையிடை மனவு கோத்து'[4] - பெரியபுராணம்

போன்ற சங்க இலக்கியங்கள் வாயிலாக அறிய முடிகிறது.

தமிழ்நாடடில் திருமணமான பெண்கள் கழுத்தில் தாலியும், காலில் மெட்டியும், நெற்றியில் திலகமும், திருநீறும், பெண்கள் தலையில் சூடும் மலரும், கைகளில் அணியும் வளையலும் பண்பாட்டுக் குறியீடுகளாகும்.

**பூவால் புலப்படும் பண்பாடு**

சேரர், சோழர், பாண்டியர் ஆகிய மூவரும் தம் நாட்டிற்கு முறையே வேப்பம் பூ, பனம் பூ, ஆத்திப்பூ ஆகியவற்றை தனது இலச்சனையாக கொண்டிருந்தனர். தமிழரின் இல்வாழ்க்கையிலும் பூ சிறப்பிடம் பெறுகிறது. கன்னியரும், மணமான பெண்களும் தலையில் பூச்சூடும் பழக்கம் காலம் காலமாக இருந்து வருகிறது. கைம்பெண் தலையில் பூச்சூடிக் கொள்வதில்லை. நெற்றியிலும் குங்குமம் இட்டுக் கொள்வதில்லை. இவையாவும் புறத்தோற்றத்தில் வெளிப்படும் பண்பாட்டுக் கூறுகள் ஆகும்.

**உறைவிடம்**

தமிழர்களின் வீட்டு அமைப்பில் உள் முற்றம், வெளி முற்றம், முன்பக்க திண்ணை போன்றவை அமைந்திருக்கிறது. இந்த அமைப்பு முறையும் தமிழர் பண்பாட்டை வெளிப்படுத்துகிறது. பழங்காலத்தில் பெரும்பாலும் ஆடவரைப் போல் பெண்கள் வெளி உலகத்தோடு தொடர்பு கொள்ளவில்லை. அவர்களின் அன்றாட செயல்களான அடுக்களையில் சமையல் செய்வது, ஓய்வு நேரத்தில் உள்முற்றத்திலேயே பொழுதை போக்குவது, பெண்களுக்குள் உரையாடல், அம்மானை ஆடல், கழல் விளையாடல் உணவுப் பொருட்களை உலர வைத்தல் போன்றவை பெரும்பாலும் உள் முற்றத்திலேயே நிகழ்கின்றது. உள்முற்றம் நாலாப்பக்கமும் திறந்த வெளியாகவும், 'ஞாயிற்றின் ஒளி' உள்முற்றத்தில் படுமாறும் அமைக்கப் பட்டிருக்கிறது.

பழங்காலத்தில் வீட்டிற்கு முன்னால் வெளிமுற்றம் அமைந்திருந்தது. பெண்கள் நாள்தோறும் காலையில் எழுந்தவுடன் முற்றத்தைச் சுத்தம் செய்து, மஞ்சள் கலந்த தண்ணீரை தெளித்தும், சாணத்தால் மெழுகியும் கலையுணர்வோடு அழகிய கோலங்களை இட்டனர். ஒவ்வொரு விழாவிற்கும் ஏற்ற வகையில் அழகான கோலங்களை இட்டனர். தமிழில் 'கோலம்' என்றால் அழகு என்று பொருள். இதுவும் தமிழர்களின் பண்பாட்டுக்கூறின் கலைத்தன்மையை வெளிப்படுத்துகின்றது.

**விருந்தோம்பல்**

விருந்து என்ற சொல்லுக்குப் 'புதுமை' என்று பொருள். நண்பர்கள், உறவினாகள் அல்லாது புதிய நபர்களை 'விருந்து' என்கின்றனர்.

"செல்விருந்து ஓம்பி வருவிருந்து பார்த்திருப்பான்
நல்விருந்து வானத் தவர்க்கு -குறள்:186
"விருந்து புறத்தாத் தானுண்டல் சாவா
மருந்தெனினும் வேண்டற் பாற்றன்று"

E-ISSN: 2581-7140
Special Issue: Vol. 2, April-2019 Available at: www.ijtlls.com

என்ற பாடல் வரியிலிருந்து விருந்தோம்பல் சங்க கால மக்களின் பண்பாக அமைகின்றது. இவை மட்டுமின்றி ஈகை, கொடை, கற்புடைமை உலக ஒருமைப்பாடு ஆகியவற்றையும தமிழரின் பண்பாடு எனலாம்.

இதுபோன்ற பல பண்பாடுகள் காலமாற்றத்தால் தமிழரிடம் கலந்தது போல், பல நாடுகளிலும் தமிழரின் கலாச்சாரமும், மொழியும் கலந்திருக்கிறது. பலவற்றைக் கொடுப்பதும் சிலவற்றை எடுப்பதும் ஒரு கலாச்சாரத்தை நீண்ட நிலைத்திருக்கச் செய்யும்.

**அடிக்குறிப்புகள்**

1. முனைவர் இரா.செயபால்.
   முனைவர் அ.மா.பரிமணம், அகநானூறு, பக்.425.
   முனைவர் கு.வெ.பாலசுப்பிரமணியன்.
2. முனைவர் இரா.செயபால், அகநானூறு, ப.எண் 20.
3. அ.ப.பாலையன், புறநானூறு மூலமும் உரையும், ப.எண் 359.
4. அ.மாணிக்கம், பெரியபுராணம், ப.எண் 354.

**மேற்கோள் நூல்கள்**

1. M.நாராயண வேலுபிள்ளை, நற்றிணை மூலமும் உரையும்.
2. டாக்டர் மு.வரதராசனார், திருக்குறள் தெளிவுரை.

E-ISSN: 2581-7140
Special Issue: Vol. 2, April-2019 Available at: www.ijtlls.com

# தொல்பழங்கால பானை ஓடுகளும் பண்பாடும் ஓர் பார்வை
# A Glance on Ancient Pots and Culture

**முனைவர் பா.ஜெயா,** உதவி பேராசிரியர், இந்தியப் பண்பாட்டுத்துறை,
அருள்மிகு பழனியாண்டவர் கலை மற்றும் பண்பாட்டுக் கல்லூரி, பழனி- 624601.

## Abstract

*The study gives a close glance on Ancient Pots and Culture of the Tamil People in a scientific perspective related to the finds of the archaeology department. It scrutinizes the ware culture of the ancient people of the various world civilizations and the Tamil civilizations inside India. Then, it moves to tell about the various types of pots especially the black pots, red pots the polishing methods of the discovered relics. Hence, the paper is a better review on the ware culture.*

**Keywords:** Glance, Ancient Pots, Culture, Tamils

தொல்பழங்காலத்தில் வாழ்ந்த நம்முன்னோர்களின் வாழ்க்கை முறையை ஊகிக்க உதவுபவை அவர்கள் பயன்படுத்தி விட்டுச் சென்றப் பழம்பொருட்கள் ஆகும். இப்பொருட்களை தொல் பொருட்கள் என்று கூறுகிறோம். இப்பொருட்கள் தான் அவர்கள் வாழ்க்கை முறைகள் குறித்து நாம் அறிந்துக் கொள்ள உதவும் அடிப்படைச் சான்றுகள் ஆகும். அக்காலத்து மக்களின் வாழ்க்கை முறை அவர்கள் பயன்படுத்திய மண்பாண்டங்கள் குறித்த பண்பாடு, கருப்பு சிவப்புப் பானை ஓடுகள், எழுத்து பொறிக்கப்பட்ட மட்பாண்டங்கள், குறியீட்டுகள் பொறிக்கப்பட்ட மட்பாண்டங்கள், அயல்நாட்டு மட்கலங்கள் ஆகியவைக் குறித்து ஆராய்வது இக்கட்டுரையின் நோக்கம் ஆகும்.

### பண்டைய மனிதனின் மட்காலப் பண்பாடு (Ware Culture)

பண்டைய மனிதன் விட்டுச் சென்ற பலவிதமான பொருட்கள், கருவிகள் ஆகியவற்றைக் கொண்டு பழங்காலத்தைக் கணிப்பதே தொல்லியல் எனப்படும். பண்டையக்காலச் சமுதாயத்தினர் விட்டுச் சென்ற எச்சங்களிலிருந்து கடந்த காலத்தை உருவாக்கும் முறையே தொல்லியல் என்று கூறுவர், தொல்லியல் என்னும் தொடர்கதை இப்பூவுலகில் முதல்முதலில் மனிதன் தோன்றிய காலம் முதல் முடிவுபெறும் காலம்வரை என்று கூறுவர். அக்கால மனிதகுலமும் இக்கால மனித குலம் பயன்படுத்தும் ஒரே பொருள் பண்பாண்டங்கள் ஆகும்.

தொல்லியல் ஆய்வாளர்கள் எப்பகுதியில் ஆய்வு செய்தாலும் அங்கு கிடைக்கும் முக்கிய பொருள் மண்பாண்ட துண்டுகள் ஆகும். மட்பாண்டங்கள் பண்பாட்டினைப் படம் பிடித்துக் காட்டும் காலக்கண்ணாடிகள் என்று தொல்லியல் ஆய்வாளர்கள் கூறுவர். மட்பாண்டங்கள் பலக்காலத்தில் பலவகையாகக் காணப்படுகின்றன. குறியீடு பொறிக்கப்பட்ட மண்பாண்டங்கள், பல நிறங்கள் கொண்டவை உரோமானிய மட்பாண்டங்கள், சீன நாட்டு மட்பாண்டங்கள் போன்ற பலவகையான மண்பாண்டங்கள் கிடைத்துள்ளன. இவற்றைக் கொண்டு பல ஆய்வுகள் நடத்தப்பட்டுள்ளன.

E-ISSN: 2581-7140
Special Issue: Vol. 2, April-2019 Available at: www.ijtlls.com

**முழுக்கருப்பு நிற மட்பாண்டங்கள்**

இக்கலன்கள் உட்புறம் மட்டுமின்றி வெளிப்புறமும் கருமையாக இருப்பதால் முழுக்கருப்பு மட்கலன்கள் என அழைக்கப்படுகின்றன. கருப்பு சிவப்பு நிற மட்கலன்கள் கிடைக்கும் மண் அடுக்குகளிலேயே காணப்படுவதால் இவை இரண்டும் உடன் காலத்தவை என்பது புலனாகும். இப்பாண்டங்களில் முழுக்கருப்பு நிறக் கலவை பூசப்படுவதாலும் சூளையில் நன்கு சுடப்படுவதாலும் முழுக்கருப்பு நிறம் பெற்று பளபளப்பாக உள்ளன. கொற்கை, காஞ்சிபுரம் அகழாய்வுகளில் கிடைத்துள்ள கருப்பு நிற மட்பாண்டத் துண்டுகள் சிலவற்றில் மட்டும் வெண்மை நிறம் தீட்டப்பட்டிருப்பமை புதுமையாகும். மக்கள் வாழ்ந்த பகுதிகளில் மட்டுமின்றி, சவக்குழிகளிலும் இவ்வகை மட்கலன்கள் பெருமளவில் கிடைத்துள்ளன.

**சிவப்பு நிற மட்கலன்கள் (Red Ware)**

தமிழகத்தில் இவ்வகை மட்கலன்கள், பல வடிவங்களில் அதிக அளவில் கிடைத்துள்ளன. இவற்றுள் நேர்த்தியான வகைகளும் உண்டு, நேர்த்தியற்ற வகைகளும் உண்டு. புதிய கற்காலத்தில் உருவாக்கப்பட்ட இக்கலன்கள் கையினால் வனையப்பட்டு, முழுமையாக சுடப்படாமல் அரைவேக்காட்டுடன் திகழ்ந்தன. உலோகக் காலத்திற்குப் பின்னர் இவை குயவரது சக்கரத்தின் உதவியால் உருவாக்கப்பட்டன. இவற்றின் வடிவமைப்பு காலத்திற்கேற்ப பண்பாட்டிற்கேற்ப, தேவைக்கேற்ப பல வடிவங்களில் வனையப்பட்டன. அவற்றுள் நேர்த்தியற்ற மட்பாண்டங்கள், சிவப்பு நிற சாயம் பூசப்பட்ட மட்கலன்கள் ஆகியவை குறிப்பிடத்தக்கவை. துளையிடப்பட்ட சிவப்பு நிற மட்பாண்டங்கள் சிலவற்றில் ஒப்பனை மிகுந்துள்ளன. எடுத்துக்காட்டாக கோடுகளாலான ஒப்பனை, நகம் பதிக்கப்பட்டது போன்ற கீறல்கள் பொண்ட ஒப்பனை, பூ வேலைப்பாடு ஆகியவற்றைக் குறிப்பிடலாம். சிவப்பு நிற மட்பாண்டங்கள் சமையலுக்கும் மற்றும் பலவிதமான அன்றாட உபயோகத்திற்கும் பயன்படுத்தப்படுவதால் இவற்றில் சாயங்கள் பூசப்படுவதில்லை, இருப்பினும் வண்ணம் பூசப்பட்ட பானை வகைகள் சில பையம்பள்ளி, தக்களக்கோட்டை, சங்கனகல்லு அகழாய்வுகளில் கிடைத்துள்ளன.

**காவிக்கலவை பூசப்பட்ட மட்பாண்டங்கள் (Russet coated Pottery)**

காவிக்கலவை பூசப்பட்ட மட்பாண்டங்களை முதலில் திரு ஜெ.பாபிங்க்டன் என்பவர் 1819-ல் கண்டுபிடித்தார். இவ்வகை மட்பாண்டத்தில் காவிகலவை வெளிபுறத்திலேயே பூசப்பட்டிருக்கும் சிலவற்றில் காவிக்கலவையின் மீது வெள்ளை அல்லது மஞ்சள் நிற வண்ணங்களும் பூசப்பட்டுள்ளன. இவ்வண்ணங்களில் பல கொடுகள், வளைவுகள், புள்ளிகள், வட்டங்கள் ஆகியன போடப்பட்டுள்ளன. கருப்பு சிவப்பு மட்பாண்டங்ளும் காவிக்கலவை பூசப்பட்டிருக்கலாம் என்பது ஆய்வாளர்களின் கருத்து.

**கருப்பு சிகப்புக் பாணை ஓடு (Black and Red Ware)**

களிமண்ணால் செய்யப்பட்ட இம்மட்பாணடங்களைச் சூளையில் கவிழ்ந்து வைத்துச் சுடுவர். அப்போது காற்று புகாத உட்பகுதியும், வாய்ப்பகுதியும் கருப்பு நிறமாகவும், அனலும் காற்றும் படும் வெளிப்பகுதி முழுவதும் சிவப்பு நிநமாகவும் மாறிவிடுகின்றன. இது ஒரு ரசாயன மாற்றம். இதன் வெளிப்புறத்தில் உப்பு கலந்த நீரைக் கொண்டு மெருகிடும் முறையால் இதில் மினுமினுப்பு (பளபளப்பு) ஏற்படுகிறது. தென்னிந்தியாவிலும் தக்காணத்திலும் கி.மு.300 - கி.மு.100 வரை கணிக்கத்தக்க படிவுகளில் இப்பானையோடுகள் கிடைத்துள்ளன. ஆனால் வட இந்தியப் பகுதிகளின் சில இடங்களில் இவை கி.மு.1500-க்கு முன்பு கணிக்கக்கூடிய செப்புப் பண்பாடுக் காலத்தில் கிடைத்துள்ளன. இரும்புக் காலத்திற்கு

E-ISSN: 2581-7140
Special Issue: Vol. 2, April-2019 Available at: www.ijtlls.com

முன்பே இவை வடஇந்தியாவில் கிடைத்திருப்பது குறிப்பிடத்தக்கது. குறிப்பாக சோன்பூர், லோத்தல் அகழாய்வுகளிலும் இவை காணப்பட்டன. சிந்து சமவெளியில், தொடக்கக்காலத்தில், இவை இரும்புக்கால மக்களின் வாழ்விடங்களிலும், சவக்குழிகளிலும் காணப்பட்டதால், இவை பொருங்கல்கால மட்பாண்டங்கள் எனதும் அழைக்கப்பட்டன. காஞ்சி, உறையூர், திருக்காம்புலியூர் அகழாய்வுகளில் கிடைத்த சில கருப்பு - சிவப்பு நிற பானையோடுகள் கிடைத்துள்ளன.

**எழுத்துகள் மற்றும் குறியீடுகள் பொறிக்கப்பட்ட மட்பாண்டங்கள்**

காஞ்சி, உறையூர் ஆகிய இடங்களில் கிடைத்த பானை ஓடுகளில் தமிழில் பிராமி எழுத்துக்கள் மற்றும் கீறல் குறியீடுகளும் பொறிக்கப்பட்டுள்ளன. பாண்டிச்சேரியிலுள்ள அரிக்கமேடு, ஆந்திரப்பிரதேசத்திலுள்ள சாலிகுண்டம் அகழாய்வுகளிலும் எழுத்து பொறிக்கப்பட்ட மண்பாண்ட ஓடுகள் கிடைத்துள்ளன. சிந்து சமவெளி ஆய்வில் மண்பாண்டங்களில் எழுத்துக்கள், கீரல்கள், குறியீடுகள் காணப்பட்டன. ஈரோடு மாவட்டம் கொடுமணலில் கிடைத்த மட்கலத்துண்டில் எழுத்துகள் பொறிக்கப்பட்டு இருந்தன.

**குறியீடுகள் பொறிறக்கப்பட்ட மட்பாண்டங்கள்**

தமிழகத்தில் அகழ்ந்தெடுக்கப்பட்ட மட்பாண்டங்களில் பலவிதமான குறியீடுகளும், கோடுகளும், ஒழுங்கற்ற மற்றும் நேர்கோடுகள், வட்டங்கள் போன்றவை காணப்படுகின்றன. குறியீடுகள் விண்மீன், அம்பு, மீன், படகு, ஸ்வஸ்திகம், செடி, மரம், முக்கோணம் போன்ற குறியீடுகளைக் காணலாம். கிலிகுல் முகமது, முண்டிகக் அகழாய்வுகளில் இவை ஆரம்ப கால மண்ணடுக்குகளில் எடுக்கப்பட்டுள்ளன. இவை வண்ணங்கள் பல தீட்டப்பட்டு, பல வேலைப்பாடுகளுடன் அழகுடன் மிளிர்ந்தன. கிழக்கிந்தியாவில் காணப்படுபவை கையினால் செய்யப்பட்டவை, மிருதுவற்றவை, காஷ்மீரப் பகுதியில் காணப்படும் மட்கலன்கள் பழுப்பு நிறமானவை, தென்னிந்தியாவில் காணப்படுபவை.

**அயல்நாட்டு மட்கலன்கள்**

உரோம் நாட்டு மட்கலன்கள் தென்னிந்தியாவிற்கும், உரோம் நாட்டிற்கும் இடையில் கிறிஸ்து சகாப்தத்திற்கு முன்னரும், பின்னரும் வணிக உறவுகள் இருந்தன. இதனை அண்மைக்காலத்தில் அகழ்ந்தெடுக்கப்பட்டுள்ள அரிட்டைன், ஆம்போரா, ரௌலட்டட் போன்ற உரோம் நாட்டு மட்கலன்களால் அறியலாம். அரிட்டைன் வகை மட்கலன்கள் இவை முதன்முதலாக அரிட்டியம் (இத்தாலி) என்னும் இடத்தில் தயாரிக்கப்பட்டதால் இது அரிட்டைன் வகை மட்கலன் எனப்பட்டது. மஞ்சள் கலந்த சிவப்பு நிற மட்கலங்களான இவை, தமிழக அகழாய்வுகளில் கிடைத்துள்ளன.

**ரௌலட்டட்ட மட்கலன்கள்**

தமிழ்நாட்டில் மட்டுமின்றி, தென்னிந்தியாவிலும் கிடைத்துள்ளன. இவற்றின் உட்புறம் புள்ளிகளாலான ஒப்பனைகள் முட்டை வடிவம் போன்றும், வட்ட வடிவு, அறுகொணம், முக்கோணம் முதலான வடிவங்களிலும் காணப்படுகின்றன. எனவே தான் இவை ரௌலட்டட் மட்பாண்டங்கள் என அழைக்கப்பட்டன. கரூர், உறையூர், அழகன் குளம், கொற்கை, பாண்டிச்சேரி, சந்திரவல்லி, பிரம்மகிரி, காலிக்குண்டம் ஆகிய இடங்களில் மேற்கொண்ட அகழாய்வுகளில் இவை கிடைத்துள்ளன.

**சீன வகை மட்கலன்கள்**

கரூர், உறையூர், காஞ்சீபுரம், கேரளத்தில் சேரமான்பரப்பு ஆகிய இடங்களில் செலடன் என்னும் சீன வகை மட்கலன்கள் அகழ்ந்தெடுக்கப்பட்டுள்ளன. இவை சீன நாட்டு பீங்கான் வகையைச் சார்ந்தவை. இவை பளபளப்பாகவும், நேர்த்தியாகவும் உள்ளன. இளம்பச்சை




E-ISSN: 2581-7140
Special Issue: Vol. 2, April-2019 Available at: www.ijtlls.com

நிறம் கொண்ட இவை ஏறத்தாழ கி.பி.10,11,12 ஆம் நூற்றாண்டுகளில் (பிற்கால சோழர் காலம்) தமிழ்நாட்டிற்கு இறக்குமதி செய்யப்பட்டதாகக் கூறப்படுகிறது.

**ஆம்போரா ஜாடிகள்**

மிருதுவான களிமண்ணால் செய்யப்பட்டு, பழுப்பு நிறம் கொண்ட இந்த ஜாடிகள் உரோமானிய வகையினவாகும். உருவமைப்பில் இது முள்ளங்கிக் கிழங்கைப் போன்று நுனிப்பகுதி அகலமாகவும், அடிப்பகுதி குறுகலாகவும் உள்ளன. கரூர், அரிக்கமேடு அகழாய்வுகளில் இவை கிடைத்துள்ளன. இவற்றை உரோமானியர்களே தமிழகத்திற்குக் கொண்டு வந்திருக்கலாம் என்று ஊகிக்கப்படுகிறது.

**முடிவுரை:**

தொல்லியல் ஆய்வுகள் தொன்று தொட்டு நடந்து வருகின்றது. கற்கால மனிதன் முதல் தற்கால மனிதன் வரை மனிதன் எவ்வாறு வாழ்ந்தான் என்பதைக் குறிப்பதில் பானை ஓடுகள் முக்கியப் பங்கு வகிக்கின்றன. சிந்துவெளி நாகரிகம், ஹரப்பா, மொகஞ்சதாரோ, அரிக்கமேடு, கொற்கை, பூம்புகார் ஆதிச்சநல்லூர் போன்ற இடங்களில் மேற்கொண்ட ஆய்வில் கிடைத்துள்ள பானை ஓடுகள் எக்காலத்தை சார்ந்தது என்றும் எந்த வகையை சார்ந்தது என்றும் பிரித்து ஆராயப்பட்டு அக்கால மக்கள் பயன்படுத்திய மண்பாண்டங்களை தற்கால மக்கள் பயன்படுத்தி நோய் இல்லாத வாழ்வை வாழ்வோமாக.

**பார்வை நூல்**

1. தொல்லியல் ஆய்வுகள். முதல் பதிப்பு: 2014.
2. தமிழ்நாடும் தொல்லியலும். முதல் பதிப்பு: 2008.

தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்

International Journal of Tamil Language and Literary Studies

*A Bi-Yearly Peer-Reviewed International Journal*

E-ISSN: 2581-7140

Special Issue: Vol. 2, April-2019 Available at: www.ijtlls.com

# கொங்கு மண்டலம் பெரியார் மாவட்டக் கல்வெட்டும், செப்பேடும் பதிவும்

## Culvert and Bronze Plate Inscriptions in Kongu Area of Periyar District

**சா. ஜெனிபர்,** ஆய்வியல் நிறைஞர்

தமிழாய்வுத்துறை, பிஷப் ஹீபர் கல்லூரி, திருச்சிராப்பள்ளி - 620017

**Abstract**

*The study is based on the culvert and Bronzelet evidences collected from the Kongu area of the Periyar District. Most of the evidences are very classical and tells about the contacts of the Tamil society with the Caesers of Rome in Business. It also tells about the cultural rituals and ethical principles of the Tamil society. The sites of Kodumanal are archaic evidences of the Tamil Brahmi script, society and their ancient past. Much more evidences are unmistakably lucid proofs of the lofty society. Hence, the paper delves through a keen survey with the aforesaid evidences.*

**Keywords**: Culvert, Bronze Plate, Inscriptions, Kongu Area, Periyar District

**முன்னுரை**

பண்டையத் தமிழக வரலாற்றில் சேரநாடு, சோழநாடு, பாண்டியநாடு என்ற மூன்று நாடுகளைப் போலவே, தொண்டைமண்டலம் மற்றும் கொங்கு மண்டலம் ஆகியவையும் சிறப்புற்றிருந்தன. தமிழக வரலாற்றில் கொங்கு மண்டலம் தனியொரு இடத்தைப் பெற்றுள்ளது. கொங்கு என்ற சொல்லுக்கு இனிமை, தேன் என்பன பொருளாகும்.(1) கொங்கு மண்டலமாகக் கருதப்படும் ஊர்கள் சேலம், ஈரோடு, தர்மபுரி, நாமக்கல், பழனி, கோவை ஆகியவை ஆகும். சங்ககால இலக்கியத்திலும் கல்வெட்டிலும் கொங்கு நாட்டின் கலை, பண்பாடு, நாகரீகம் மற்றும் பழக்கவழக்கம் ஆகியவற்றின் குறிப்புகள் இடம் பெறுகின்றன. திருமூலர் திருமந்திரத்தில்

> "தமிழ் மண்டலம் ஐந்து வரைகளும்
> ஈராறு கொண்டிட நிற்குங்
> குடிகளும் ஆறெண்மர் கண்டிட" - வரி. 623(2)

"தமிழ் மண்டலம் ஐந்து" என்று கூறுகின்றார். இந்த மண்டலங்களில் ஒன்று கொங்கு மண்டலம் இந்த பகுதியில் வாழும் மக்களைக் "கொங்கர்" என்று அழைக்கப்பட்டதாகச் சங்க இலக்கியத்தில்

> "கொங்குபுறம் பெற்ற கொற்ற வேந்தே!" - புற. 373 பாடல்(3)

என்று *புறநானூறு* கூறுகின்றன. கொங்கு நாடு தனிநாடு என்று "வராகமித்தரரின்" நூலில் குறிப்பு இருக்கின்றன. கொங்கு மண்டலத்தில் இருக்கும் ஈரோடு மாவட்டத்தைத் தொல்லியல் சான்றுகள் இக்கல்வெட்டில் ஆராயப்பெறுகின்றன.

**தொல்பொருள்கள்**

உலகை ஆண்ட "சக்தி காளி" பிரம்மாவின் தலையை உடைத்ததும் அவை நான்காகச் சிதறி விழுந்தன. ஈரஓடு என்பது ஈரோடு என்றும், வெள்ளை ஓடு என்பது

E-ISSN: 2581-7140
Special Issue: Vol. 2, April-2019 Available at: www.ijtlls.com

வெள்ளோடு என்று பெயராக்கம் பெற்றன. ஈரோடு மாவட்டத்தில் உள்ள "வெள்ளாயி" என்ற ஊர் சங்க இலக்கியத்தில் இடம் பெற்றுள்ளது. தற்போது வெள்ளோடு என்று மருவி அழைக்கப்படுகிறது. ஈரோடு மாவட்டத்தில் உள்ள பெருந்துறை வட்டம் "பாசூர்" என்ற இடத்தில் பழைய கற்கால கருவிகள் கிடைத்துள்ளன.

ஈரோடு மாவட்டம் குறிஞ்சி நிலத்தையும், முல்லை நிலத்தையும் கொண்ட பகுதியாக உள்ளது. மலைப்பகுதியில் சந்தனம், தேக்கு இருப்பதைப் போன்றுப் பெருங்கற்கால சின்னங்களான தாழிகள், கருப்பு சிவப்பு பானைகள் கிடைத்துள்ளன. சங்க இலக்கியமான பதிற்றுப்பத்தில் ஈரோடு மாவட்டத்தில் இருக்கும் பச்சை கற்கள், பளிங்கு கற்கள் பற்றிய குறிப்புகள் இருக்கின்றன.

"வான் பளிங்கு விரை இய செம்பரல் முரம்பின்" - பதிற்று. 66(4)

**பெருங்கற்காலம்**

பெருங்கற்காலத்தில் என்பது இறந்தவருடைய கல்லறைக்கு பயன்படுத்தப்பட்ட கற்கள் குத்துக்கல், கல்வட்டம், கல் அரண் மற்றும் தொப்பிக்கல் ஆகியவை கிடைத்துள்ளன. இதனைப் பெருங்கற்கால சின்னம் என அழைத்தனர். பெருங்கற்கால சின்னங்கள் காணப்படும் இடங்கள் அஞ்சூர், விருமாண்டம் பாளையம், ஏவலமலை, சிவகிரி, சோனம் பாளையம், பெரிய சேமூர், மாணிக்கம் பாளையம் மற்றும் பழமங்கலம் போன்ற ஊர்கள் ஈரோடு மாவட்டத்தில் அடங்கும்.

ஈரோடு மாவட்டத்தில் பெருங்கற்காலத்தில் மக்கள் வாழ்ந்து வந்தனர் என்பதற்கு பல கிராமங்களில் சின்னங்கள் கிடைத்துள்ளன. இந்த காலம் கி.மு.300 என்பர். இதுபோன்று ஈமச்சின்னங்களான கல்பதுக்கை, கல்லரன், முதுமக்கள் தாழிகள் போன்றவை கிடைத்துள்ளன. பெருங்கற்கால சின்னங்களை வைத்துப்பார்க்கும் போது "வேளீர் மரபினர்" கருப்பு சிவப்பு பானைஓடு பயன்படுத்தினர் என்பது தெரிகின்றது. இவர்களின் தொழில் மீன்பிடித்தல், விவசாயம் போன்றவை ஆகும்.

பெருங்கற்காலத்தில் ஆற்று ஓரத்தில் சுற்றித் திரிந்தவர்கள் அவர்களுக்கு என்று ஓர் இடத்தை அமைத்துத் தொழிலைச் செய்து வந்தனர். அந்த தொழில் அனைத்தும் வளர்ச்சி நிலையை அடைந்தன. வணிகம் செய்யத் தொடங்கின. மனித நாகரீக வளர்ச்சியின் காரணமாக ஈரோட்டில் கனிமவளம் கண்டறியப்பட்டது. கனிம வளங்களான கடல்நீர் பச்சைக்கல், பூனைக்கல், ஜேஸ்பர், சந்திரகாந்தக்கல் போன்றவைக் கிடைத்தன.

ஈரோடு மாவட்டத்தில் கொடுமணல் அகழாய்வில் கருப்பு சிவப்பு பானை ஓட்டில் ஏராளமான குறியீடுகள் கிடைத்துள்ளன. தமிழகத்தில் தமிழ் பிரமிய வரிவடிவம் வந்தவுடன் குறியீட்டின் பயன் குறைந்தன. குறியீடு இடமிருந்து வலமாக வரையப்படுகின்றன. பெருங்கற்காலத்தில் சின்னங்களில் இருந்த குறியீடுகள் அனைத்தும் ஒரு கருத்தைச் சொல்லுவதாக இருந்தன. இதுவே பானை ஓட்டின் குறியீடு ஆகும்.

**வரலாற்று ஆவணங்கள்**

ஈரோடு மாவட்ட மக்களின் வரலாற்றை அறிய பல ஆவணங்கள் கிடைத்துள்ளன. அவை ஓலைச் சுவடிகளிலும் செப்புப் பட்டயங்களிலும் எழுதப்பட்டுள்ளன. கி.பி. 3 - ஆம் நூற்றாண்டு முதல் கல்வெட்டுகள் கிடைத்துள்ளன. தமிழ் பிராமி எழுத்துகள் கொடுமணல் பானை ஓடுகளில் காணப்படுகின்றன. ஈரோடு மாவட்டத்தில் உள்ள கன்னிவாடி, பிரமியம், நீலாம்பூர் போன்ற ஊர்களில் வட்டெழுத்துக் கல்வெட்டுகளும், சிவன் கோயில், பெருமாள் கோயில், பாறைகள், நடுகல் இவற்றில் தமிழ் கல்வெட்டுகள் மிகுதியாக காணப்பட்டன. கொடுமுடி, பவானி, சிவன்மலை, சென்னிமலை போன்ற ஊர்களில் கிடைத்துள்ள

E-ISSN: 2581-7140
Special Issue: Vol. 2, April-2019 Available at: www.ijtlls.com

ஓலைச்சுவடிகளைக் கொண்டு ஈரோடு மாவட்டத்தின் தலபுராணங்கள் எழுதப்பட்டன. அளச்சலூர் என்ற ஊரில் குகைப்பாறையில் இசைக்கல்வெட்டு ஒன்று கண்டறியப்பட்டன. இக்கல்வெட்டில் இசைத்தாள வரிசைப் பதிவுகள் அனைத்தும் தமிழி எழுத்தான, *த தை தா தை த* என்று காணப்படுகின்றன. பவானி வட்டம் பருவாச்சியில் நன்மங்கலம் சிறக்க மங்கலத் தொடரான:

1. “ஸ்ரீ நன்மங்கலஞ் (சிறக்க)”
2. “வைஸ்தி வீர வ (ல்லான்)”
3. “தேவர் திருவரா (ச்சியம்)”

போன்றவைக் கல்வெட்டில் காணப்பட்டன.(5) இது மட்டுமின்றி ஈரோட்டில் பழங்கால நாணயங்களும் ஏராளமாக உள்ளன.

ஈரோடு மாவட்டத்தில் உள்ள கொடுமணல் அகழாய்வில் ஏராளமானப் பொருட்கள் கிடைத்துள்ளன. இரும்பு, செப்பு மற்றும் அரிய கற்கல் போன்றவற்றில் பொருட்கள் உள்ளன. இரும்பு பொருளான அம்பு நுணி, அரிவாள், கத்தி போன்றவையும் செப்பு பொருட்களான வளையல்கள், குவளைகள், ஊசிகள், ஆபகரணங்கள் போன்றவையும் வெள்ளியில் நாணயங்களும், தங்கத்தில் வளையலும் கிடைத்துள்ளது. இதனைப் போன்று பல குறியீடுகளும் கிடைத்துள்ளன. பானை சுட்டபின்னே பானையின் கீழ்ப்பகுதிகளிலும், கழுத்துப்பகுதியிலும் குறியீடு மற்றும் தமிழ் பிராமி எழுத்துகள் பொறிக்கப்பட்டுள்ளன. தமிழ் பிராமிய எழுத்துகள் அனைத்தும் மண்தட்டு, சிறு குவளை போன்றவற்றில் பொறிக்கப்பட்டுள்ளது.

**நடுகற்கள்**

தமிழர்களின் பண்டைய வழக்கத்தில் வீரமரணம் எய்தியவர்களுக்கு நடுகல் நடுவது வழக்கத்தில் இருந்தன. நடுகல்லைப் பற்றி தொல்காப்பியர்

“நாடவற்கு அருளிய பிள்ளையாட்டும்
காட்சி, கால்கோள், நீர்ப்படை, நடுகல்,
சீர்த்தகு சிறப்பின் பெரும்படை வாழ்த்தல் என்று
இருமூன்று வகையில் கல்லொடு புணரச்
சொல்லப்பட்ட எழுமூன்று துறைத்தே” (தொல்: 1006)(6)

தொல்காப்பியப் பொருளதிகாரத்தில் புறத்திணையில் கூறுகிறார். இந்த நடுகல்களில் வீரமரணம் அடைந்தவர்களின் பெயரும், பெருமையும், பொறிக்கப்பட்டுள்ளன. ஈரோடு மாவட்டத்தில் உள்ள அரச்சலூர், வெள்ளோடு, பழமங்கலம், பவானி போன்ற ஊர்களில் நடுகற்கள் உள்ளன. இந்த நடுகல்லைப் போன்று கணவன் இறந்த உடனே மனைவி உடன்கட்டை ஏறும் வழக்கம் இருந்தது. இதனைச் சதிக்கல் என்று அழைப்பர். பழமங்கலம் என்ற இடத்தில் நடுகற்கள் கிடைத்துள்ளன. இவை வெண்பா வடிவில் எழுதப்பட்ட கல்வெட்டாகும். ஈரோடு மாவட்டத்தில் உள்ள சிவகிரி என்ற கிராமத்தில் நடுகல் கிடைத்தது. அதன் தோற்றம் வீரன் கையில் ஈட்டி, கேடயம் கொண்டதாக இருந்தது. அது மட்டுமின்றி நிறைய நடுகற்களும் கிடைத்துள்ளன.

“விழுத் தொடை மறவர் வில்லிடத் தொலைந்தோர்
எழுத்துடை நடுகல்” - ஐங்குறு : 352(7)

என்று சங்க இலக்கியமான ஐங்குறுநூறு கல்லில் எழுதும் வழக்கம் இருப்பதைக் கூறுகின்றது.

E-ISSN: 2581-7140
Special Issue: Vol. 2, April-2019 Available at: www.ijtlls.com

**முடிவுரை**

பண்டையக் காலகட்டத்தில் கொங்கு மண்டலம் நான்காகப் பிரிக்கப்பட்டன. அதில் ஒரு பகுதி ஈரோடு மாவட்டம் ஆகும். இம்மாவட்டத்தில் ஏராளமான கல்வெட்டும், செப்பேடும் கிடைத்தன. இவை வரலாற்றுச் செயல்களை உறுதிப்படுத்துவதாகக் காணப்படுகின்றன.

**அடிக்குறிப்பு**

1. ஈரோடு மாவட்டத் தொல்லியல் கையேடு ப.1.
2. திருமூலர், திருமந்திரம், மூன்றாம் தந்திரம் பாயிரம் - வரி: 623.
3. புறநானூறு பாடல் வரி: 373 ப.360.
4. பதிற்றுப்பத்து, ஏழாம் பத்துப் பாடல்: 66
5. பவானி வட்டம்.
6. தொல்காப்பியம், பொருளதிகாரம், புறத்திணையியல் நூற்பா: 1006 ப.378.
7. ஐங்குறுநூறு: 352.

**பார்வை நூல்கள்**

1. கௌதம புத்திரன், பெ. : *ஈரோடு மாவட்ட தொல்லியல் கையேடு*, தமிழ்நாடு அரசு தொல்லியல் துறை, சென்னை - 600 008.
2. சுப்பிரதணியன், ச.வே. : *தொல்காப்பியம்* (தெளிவுரை), மணிவாசகர் பதிப்பகம், சென்னை - 600 018.
3. திருமூலர் : திருமந்திரம், சைவ சித்தாந்த கழகம், திருநெல்வேலி.
4. புலியூர்கேசிகன் : *புறநானூறு* (தெளிவுரை), கங்கை புத்தக நிலையம், சென்னை - 600 017.

E-ISSN: 2581-7140
Special Issue: Vol. 2, April-2019 Available at: www.ijtlls.com

# தமிழர்களின் பழக்கவழக்கங்களும் நம்பிக்கைகளும்
# Tamil People's Traditional Habits and Beliefs

**எ. ஷஹீலா,** முனைவர் பட்ட ஆய்வாளர்,
தெ.தி. இந்துக் கல்லூரி, நாகர்கோவில்

## Abstract

*Tamil nadu is a place of rich culture and it has been seen from the proto times to the present times. The traditional habits and their beliefs are really moral with a staunch morale. They have certain ethics based on the life to lead a gook life. They celebrated Birth and do Death rituals, Maturity of girls, Marriage, Good time fixing, Dreams, Mantras, sorcery and etc. Hence, this paper tries to bring out the informations related to the beliefs of the Tamil people.*

**Keywords:** Tamil People, Traditional Habits, Beliefs

**முன்னுரை**

தமிழர்களின் அன்றாட வாழ்க்கையில் ஏராளமான பழக்க வழக்கங்களையும் நம்பிக்கைகளையும் பின்பற்றி வந்துள்ளனர். அவர்கள் பின்பற்றிய பழக்க வழக்கங்களையும் நம்பிக்கைகளையும் பழங்கால இலக்கியங்கள் மற்றும் தொல்லியல் ஆராய்ச்சி மூலமாகவும் அறிந்துக் கொள்ளலாம். மனிதனின் பழக்க வழக்கங்கள் அவன் பிறந்த மண் சாதி, சமயம் ஆகியவற்றிற்கு ஏற்ப மாறுபடுகின்றன. இன்னும் தமிழ் மக்களால் பின்பற்றப்பட்டு வருகின்றன.

**பழக்க வழக்கங்கள்**

தமிழர்கள் எளிமையான வாழ்க்கையை வாழ்ந்து வந்தவர்கள். இன்றும் சூரியன் உதிக்கும் முன்பு எழுந்து நீராடுதல் பழக்கத்தைக் கொண்டிருந்தார்கள். பின்பு கோவில்களுக்குச் சென்று தெய்வங்களை வழிபட்டு தங்களுடைய வேலைகளை மேற்கொண்டனர். உச்சிப்பொழுதில் பாலுணவு உண்ணுதல் அவர்களின் வழக்கமாக இருந்தது. முற்காலத்தில் குடும்ப வாழ்வினில் பலவகையான பழக்கங்களைக் கொண்டிருந்தனர். பிற்காலத்தில் தமிழக மக்களிடையே தாயார், மனைவி வழி உறவினர்களிடம் அதிக பற்றும் நம்பிக்கையும் வைக்கும் பழக்கம் இருந்து வருகிறது. சமூக நிகழ்வுகளில் தாய் மாமனுக்கு முக்கியமான கடமைகளும் பொறுப்புகளும் கொடுக்கப்பட்டிருந்தது. குடும்ப நிகழ்ச்சிகளுக்கு ஏற்படும் பொறுப்புகளை அவர்களே ஏற்க வேண்டும்.

ஆடவர்கள் தங்கள் உடன்பிறந்த அக்காள் மகளை மணப்பது பழக்கமாகக் காணப்பட்டது. முறைப்பையனுக்கு திருமணம் செய்து வைக்காமல் இருந்தால் அவருக்கு நஷ்டஈடு தரும் பழக்கம் சில சாதிகளில் காணப்பட்டது. மக்களின் பழக்க முதிர்ச்சியால் கொண்டவையெல்லாம் வழக்கமாக மாறுகின்றன. சில சமயங்களில் இந்த வழக்கங்கள் சில உயர்ந்தோரால் ஒழுக்கமாகப் பேணப்பட்டு அறநூற்களில் எழுதப்பட்டு வருகின்றன. சமூதாய வழக்கங்களில் பிறை எழுதுதல், சிலம்பு அணிதல், வெள்ளணி அணிதல், செவ்வணி அணிதல் முதலியன தமிழரிடையே தொன்றுத்தொட்டு காணப்படும் வழக்கங்களாகும்.

E-ISSN: 2581-7140
Special Issue: Vol. 2, April-2019 Available at: www.ijtlls.com

**இயற்கை வழிபாட்டு முறை**

தமிழர்கள் தங்கள் வாழ்வில் இயற்கையை மிகவும் மதித்தனர். இயற்கை வழிபாடாகிய சூரியனை வழிபடுதல் மரங்கள், விலங்குகள் போன்றவற்றையும் தெய்வங்களாக வழிபட்டனர்.

**பிறப்புச் சடங்குகள்**

குழந்தைப் பிறப்பது குறிப்பாக முதல் குழந்தைப் பிறப்பது குடும்பத்தில் முக்கிய நிகழ்ச்சியாகக் கருதப்பட்டது. கருவுற்று ஐந்தாவது அல்லது ஏழாவது மாதத்தில் வளைகாப்பு என்னும் சடங்கு நடைபெறும். வளையல் போட்டுமு பெரியோரிடம் ஆசீர்வாதம் பெற்றுக் கொள்ளும் நிகழ்ச்சியே அது. ஒன்பதாம் மாதத்தில் சீமந்தம் என்ற சடங்கு நடைபெறும். ஆடி மாதத்தில் இளம் கணவன், மனைவியர் சேர்ந்து வாழ தடை விதித்து விடுவர். ஆவணி பிறந்தப் பிறது தான் மனைவி கணவன் வீட்டிற்குச் செல்லலாம். குழந்தைப் பிறந்ததும் செய்யப்படும் முக்கிய நிகழ்ச்சிகளில் ஒன்று காது குத்துவது. மற்றொன்று முடி இறக்குவது.

**பூப்புச்சடங்கு**

ஒரு பெண் பருவம் அடைவது சமூக வாழ்வில் பெரியதொரு நிகழ்ச்சியாக இன்றும் கொண்டாடப்படுகிறது. பெண்ணிற்கு கணவனைத் தேட ஒரு வாய்ப்பாக இந்த சடங்கு அமைந்திருக்கும். பூப்பெய்துவது திருமணம் ஆகிய சடங்கு நிகழ்ச்சிகளுக்கு இடையே பெண் சாந்துப் பொட்டு வைத்துக் கொள்வாள். கணவனுக்கு மைத்தீட்டிக் கொள்வாள்.

**இறப்புச் சடங்கு**

தமிழர் இறந்தப் பிறது நடத்தப்படும் இறுதிச்சடங்கு பல வழி முறைகளைக் கொண்டதாக உள்ளது. ஒருவர் இறந்து விட்டார் என்று கூறாமல் இறைவனடி சேர்ந்தார் என்றே குறிப்பிடுவார். சனிக்கிழமையில் ஒருவர் இறந்தால் அந்த வீட்டில் இன்னொரு சாவு நேரிடும் என்று அவர்கள் நம்பியதால் பிணத்தை வெளியே கொண்டு போக வீட்டில் புதிதாக இன்னொரு வாசலை ஏற்படுத்துவர். ஒப்பாரி வைத்து அழும் பழக்கம் இன்றும் உள்ளது. சாவு நிகழ்ந்த வீடு தீட்டுப்பட்டதாகக் கூறப்படுகிறது. இறந்த வீட்டில் அல்லும் பகலும் ஒரு விளக்கு எரியவிடுவது வழக்கம். துக்கநாட்களில் இறுதியில் இறந்துப்போன ஆன்மாவை திருப்தி செய்ய ஏழைகளுக்கு உணவுக் கொடுப்பது வழக்கம்.

**நம்பிக்கைகள்**

பழமையான எல்லா இன மக்களிடையே பல நம்பிக்கைகள் இருந்து வருகின்றன. இந்த நம்பிக்கைகள் ஒன்றன் மேல் உள்ள ஆர்த்தாலும் அச்சத்தாலும் ஏற்படுபவையாகும். நம்பிக்கைகள் மக்களால் உருவாக்கப்பட்டு அம்மக்கள் சமூதாயத்தால் உணர்வு மேல் நம்பிக்கையை வளர்த்து விடுகின்றனர். நம்பிக்கைகள் காலம் காலமாக ஒரு தலைமுறையினரிடமிருந்து மற்றொரு தலைமுறையினருக்குப் பரவி வருகின்றன. மனிதர்கள் பிறப்பு முதல் இறப்பு வரை பலவித நம்பிக்கைகளைக் கொண்டிருந்தனர்.

**நாள்கோள் பார்த்தல்**

தான் செய்யும் செயல் வெற்றியோடு முடிய வேண்டும். அதற்கு நல்லநாளை தேர்ந்தெடுத்து அதனை செய்வதும் தமிழர் நம்பிக்கையாக உள்ளது. நல்லநாள் பார்த்து அரசர் போர்த் தொடங்குவது வீரர்கள் போருக்குச் செல்லும் முன்பு சில பறவைகளைச் சகுனமாகக் கொண்டனர்.

“புள்ளும் பொழுதும் பழித்தல் அல்லதை” என்று புறநானூற்றுப் பாடல் குறிப்பிடுகிறது.

**கனவுப் பற்றிய நம்பிக்கை**

கனவுகள் மக்களுக்கு வாழ்வின் பின் நிகழப்போவதை முன்னர் உணர்த்துகின்றன என்று நம்புகின்றனர். எல்லா மக்களிடமும் கனவுப் பற்றிய நம்பிக்கை உண்டு. தமிழில்

E-ISSN: 2581-7140
Special Issue: Vol. 2, April-2019 Available at: www.ijtlls.com

'கனாநூல்' இருந்ததை தமிழ் மக்கள் எந்த அளவிற்கு கனவுப் பற்றி சிந்தித்துள்ளனர் என்பதற்குச் சான்றாகும்.

கண்ணகி தான் மதுரைக்குப் போகும் முன்பு கனவுக் காண்கிறாள். இளங்கோவடிகள் கண்ணகியின் கனவைக் குறிப்பிடவே கனாத்திறமுரைத்த காதையில் சிலம்பில் அமைந்துள்ளது. பாண்டிமாதேவி தான் கண்ட கனவை அரசனிடம் கூறுகிறாள். மதுரையும் அரசனும் அரசும் அழிவதை முன் கூட்டியே கோப்பெருந்தேவி கனவுக் காண்கிறாள். இதுவே கனவுப் பற்றிய நம்பிக்கைக்குச் சான்றாகிறது.

**விரிச்சிக் கேட்டல்**

ஒரு செயலை தொடங்கும் முன்பு பிறர் சொல்லும் சொல்லை சகுனமாகக் கொள்ளுதல் உண்டு. தொல்காப்பியர் இதனை 'பாக்கத்து விரிச்சி' என குறிப்பிடுகிறார். இதனை விரிச்சி நிற்றல், வாய்ப்புள், பறவாய்ப்புள், நற்சொல், வாய்ச்சொல் என்றும் வழங்குகின்றன. இதனை அசிரிரீ என்று கூறுவர்.

“எழுவணி சிறூர் இளன் மாலை முனிறிற்
குழுவினம் கைக்கூப்பி நிற்பத் - தொழுவிற்
குடக்கணி கொண்டு வா என்றாள் குனிவில்
தடக்கையாய் வென்றி தரும்”

கணையமரஞ் சூழ்ந்த நமது சிறிய ஊர்ப்புறத்தே இருண்ட மாலைப்பொழுதில் திருக்கோவில் முற்றத்திடத்தில் நாங்கள் கைக்கூப்பி நின்ற போது ஒரு வேட்டுவச்சி ஏணியின்கண் உள்ள மற்றொருத்திக்குக் கூறினாள். அதானல் நலம் மேற்கொண்டுள்ள செயல் நமக்கு வெற்றியைத் தரும்.

**பல்லிச் செல்லிற்கு பலன்**

'பல்லி சொல்லுதல் தமிழர்களது வாழ்வில் முக்கிய இடம் பெற்றுள்ளது. நமது சமுதாயத்தில் பல்லி சகுனம் முக்கியத்துவம் வாய்ந்ததால் 'கௌரி சாத்திரம்' என்ற நூலையே நம் முன்னோர்கள் இயற்றியுள்ளனர். பல்லி கத்தினால் தலையில மூன்று விரல் தட்டும் பழக்கம் இன்றும் சிலரிடம் இருப்பதைக் காணலாம். பல்லி சொல்லை நம்புவது தமிழரின் பழக்கமாக இருந்து வருகிறது.

காதல் மிகுதியால் பிரிவுத்துன்பத்தில் வாடியிருந்த தலைவி பிளந்த வாயையுடைய பல்லி சொல்லும் போதெல்லாம் வணங்கினாள் நல்லது சொல் என்று நடுங்கி வேண்டினாள்.

“பல்லியும் பாங்கு ஒத்து இசைத்தன் நல் எழில்
உண்கண்ணும் ஆகுமால் ஆகும்”

**மந்திரங்கள் பற்றிய நம்பிக்கை**

பண்டையத் தமிழர் மந்திரங்களில் நம்பிக்கை வைத்திருந்தனர். பெரியோர் சொல்லியப் பொருள் தெரியாத மொழிகளை அவர்கள் மந்திரம் என்று நம்பிக்கை வைத்தனர். மந்திரம் என்பது போலச் செய்தல் என்ற நம்பிக்கையை அடிப்படையாக கொண்டது. தம்மைப் போலவே இயற்கைக்கு ஆசைகளும் உணர்ச்சிகளும் இருக்கும் என்று நம்பினர். மாய மந்திரங்களினால் ஆவியைக் கட்டுப்படுத்தவும் திருப்திப்படுத்தவும் முனைந்தனர். குறிக்கேட்டல், நோய் நீங்க தெய்வங்களை வேண்டிக்கொள்ளுதல், பழை மரங்களில் தெய்வம் வசிப்பதாக நம்புதல் போன்ற நம்பிக்கைகள் தமிழ் மக்களிடம் இன்றும் இருந்து வருகிறது.

**நிமித்தங்கள் பார்த்தல் பற்றிய நம்பிக்கைகள்**

சகுனம் அல்லது நிமித்தம் பார்க்கும் நம்பிக்கை உலகெங்கிலும் காணப்படுகிறது. தமிழர்கள் இதனை புள், நிமித்தம் ஆகிய சொற்களால் குறிப்பிடுகின்றனர். கன்னிப்பெண்

E-ISSN: 2581-7140
Special Issue: Vol. 2, April-2019 Available at: www.ijtlls.com

தண்ணீர்க் குடத்துடன் வருதல், பிணம் எதிரே வருதல், சுமங்கலியைக் காணல் போன்றவற்றை நல்ல சகுனம் என்றும் விதவை எதிரே வரல், பூனைக் குறுக்கிடுதல், ஒற்றைப் பார்ப்பன் எதிரே வரல் போன்றவை கெட்ட நிமித்தம் ஆகும். சகுனத்தில் மக்களுக்கு நம்பிக்கை உண்டு என்பதை பழமொழிகள் எடுத்துக் காட்டுகின்றன.

**காகம் கரைதல்**

காகம் கத்தினால் விருந்தினர் வருவர் என்பது அக்காலம் இக்காலம் வரை தமிழரிடையே நிலவி வரும் நம்பிக்கை ஆகும்.

"மறுவில் தூவிச் சிறுகருங் காக்கை
அன்புடை மரபினின் கிளையோ டமர"

என்கிறது குறுந்தொகை. காக்கைக்கு உணவு இட்ட பிறது உணவருந்தும் பழக்கம் தமிழரிடையே காணப்படுகிறது. அது அவர்களின் முன்னோர்களை நினைத்து உணவு இடுகின்றனர்.

**முடிவுரை**

'தொட்டில் பழக்கம் சுடுகாடு மட்டும்' என்ற பழமொழிக்கு ஏற்ப கண்ணால் காணாமல் அறிவுக் கொண்டு ஆராயும் முன்னோர் வழங்கியதை அப்படியே ஏற்று நடக்கும் பழக்கவழக்கங்களும் நம்பிக்கைகளும் பல இன்றும் அழியாமல் தமிழரிடையே இருந்து வருகின்றன.

**துணைநின்ற நூற்கள்**

1. புறப்பொருள் வெண்பாமாலை – ஐயனாரிதனார்
2. நாட்டுப்புறவியல் ஆய்வு – சக்திவேல்
3. பண்பாட்டு மானிடவியல் - பக்தவச்சல பாரதி.

தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்



International Journal of Tamil Language and Literary Studies

*A Bi-Yearly Peer-Reviewed International Journal*

E-ISSN: 2581-7140

Special Issue: Vol. 2, April-2019 Available at: www.ijtlls.com

# The Origins of Tamil Civilization

**M.Arul Darwin,** A.P. of English **& Dr. S Suresh Pandi** A. P. of Economics,
Manonmaniam Sundaranar University Constituent College, Nagalapuram, Thoothukudi Dist.

**Abstract**

*The paper deals with the evidences based on the excavations in 1920 - 22 at Harappa & Mohenjodaro (now Pakistan) confirmed the existences of a hitherto unknown civilization in the Indus Valley are nearly proto Tamils. Contacts with dated phases of Mesopotamian civilizations showed that the great cities of Harappa and Mohenjodaro, built of brick, including well constructed houses, a regular city plan and an elaborate covered drainage system, were flourishing before and after 2350 BC. After this discovery the Indus Valley took its place with Mesopotamia and Egypt as the home of one of the oldest evolved civilizations of the world. It is evident from the excavated material that the civilization was essentially indigenous in character. Hence, the paper scrutinizes the facts as revealed from the research facts as enunciated by* Prof Ra. Mathivanan *and authentic evidences in regard to Tamil Civilization.*

**Keywords:** Tamils, Origin, Civilization, Harappa, Mohenjadaro, Prof Ra. Mathivanan.

The archeological research and the signs exist that Harappa and Mohenjodaro which were emphatically invigorated fortresses with rectangular watchtowers at standard interims were seats of brought together government taking after that of dictatorial organizations or minister lords who joined the mainstream and religious organization, like sanctuary leaders of Ur in Mesopotamia. Seventy-five littler destinations have been related to a separation between the two outrageous purposes of in excess of 1000 miles North to South, and 300 miles East to West. Its territory surpassed contemporary civic establishments in Mesopotamia, Egypt and Iran.

The Harappa site, shockingly, fell under the control of block diggers and this vandalism is one of the best misfortunes to paleohistory as generally more information about the Indus Valley culture would have been accessible. Unearthings have uncovered nine occupation levels, one over the other, showing significant lots of thriving and after that decrease. It was at last surrendered around 1700 BC. Notwithstanding staying houses, there were efficient laborers' quarters, workers' stages for beating grains, and storehouses. Tops of structures were level and were made of wood, reed and mud. Dividers were regularly 5 feet thick and the extent of the normal house was 35 ft by 35 ft with a few rooms put around a focal patio. A lion's share of the houses were two stories high and some were significantly

**E-ISSN: 2581-7140**

**Special Issue: Vol. 2, April-2019** **Available at: www.ijtlls.com**

higher. They seem very much planned and agreeable, with most having restrooms and a roundabout well.

The most striking structure at Harappa is the "Incomparable Granary" with measurements of 168 X 135 feet, potentially filling in as an open stockpiling, and at Mohenjodaro, the "Incomparable Bath", perhaps utilized for religious or stylized washing. The component of a huge royal residence was 242 X 112 feet and another was 177 X 116 feet.

Their arrangement of seepage is the most total old framework yet found and may nearly be named "present day". A block lined channel streamed down each road and into this fundamental channel ran little tributary channels from the houses on either side. The channels were secured over with block laid a couple of crawls underneath road level and which could be lifted if important, to investigate or clean. The lanes keep running in straight lines from East to West and are crossed by others at right points going north to South, making these urban areas to be viewed as the soonest models yet found where a plan of town arranging existed. Wherever the impression is of request and symmetry. A portion of the principle avenues of Mohenjodaro are of significant size. Sir John Marshall the master paleologist has wondered about the arranged city and waste framework and says that such brilliant structures were never found in some other antiquated progress. Some slight contrasts in the pottery found in Harappa and Mohenjodaro drove analysts to the end that Harappa was more seasoned than Mohenjodaro. Their boats cruised from the western port of Lottal uncovered in what is currently Gujarat.

The skeletal remains have a place with heterogeneous races. The two urban areas appear to have been cosmopolitan as they had a coasting populace attributable to their business character. The valley had flanks open to the interruption of different races and the inside was involved from times prehistoric by races of nearly lower phases of advancement. The fundamental supply of the general population had affinities with the Mediterranean individuals. Different sorts found were Austro-Asiatic and some Mongolian and Alpine individuals from the Central Asiatic good countries. The internments contained expansive accumulations of pots numbering 15 to 40. The dead wore trimmings - shell bangles, pieces of jewelry, anklets of glue dabs, a copper finger ring, and hoops of flimsy copper wire.

In their stoneware there is everything from gigantic capacity jolts down through a wide scope of family unit utensils to minor fragile residential holders. Stoneware is wheel-made and all around terminated and for the most part demonstrates a thick red texture, frequently treated with a brilliant red slip. There are putting forth stands, containers, glasses and saucers, flagons, dishes, bowls, spoons, radiators, cooking pots and water pitchers. Painted plans incorporate foliated and geometrical gadgets, for the most part between locking circles, vase, brush, and scale themes. Can articles included took care of copper reflects (the copper, when cleaned, needed to accomplish for the still unfamiliar glass), antimony poles, shell spoons and mother of pearl shells.

**E-ISSN: 2581-7140**
**Special Issue: Vol. 2, April-2019** **Available at: www.ijtlls.com**

Different things found are etches, tomahawks, saws, blades, lances and sharpened stones, even a copper razor; likewise fish snares, needles, searing skillet and even a supper dish with spread. There are bone and ivory objects, statuettes in stone and red sand stone with subtleties worked out with outrageous authenticity and aesthetic ability. Despite the fact that preceding the Greco-Roman statuary by around 2000 years, it can without much of a stretch stand correlation with it. There were likewise decorated work and high-class small scale statuary.

Of the extensive number of earthenware human puppets found at Harappa, the larger part are female, bare, aside from a limited support round the hips. Many wear a particular fan-like hood at the back of the head and are embellished with abundant adornments. Comparable highlights support the conviction that they were holy pictures speaking to the "Incomparable Mother Goddess" whose pictures are found in extensive numbers in Iran, Mesopotamia and Egypt. Male dolls were bare and for the most part whiskery and wore long hair at the back. The dolls were displayed by hand and painted red. There were similitudes with such items found in the Middle East around the second thousand years B.C. Creature and fledgling puppets were additionally found in vast numbers.

The figural workmanship is likewise delineated by steatite seals bearing life-like portrayals of such creatures as Brahamani bull, jokester, tiger, rhino, crocodile, unicorn, a human figure with horns and a tail, and a horned tiger. The seals additionally bear short engravings in pictographic content. The plastic craftsmanship was additionally very much created. Decorations are of numerous materials - earthenware, shell, copper, bronze, globules, valuable metals overlays with gold, ivory, carnelian and different stones. Accessories and pendants of dots of semi-valuable stones are generally normal. Square plate formed carved carnelian globules embellished with white plans like those of Mesopotamia and Iran have additionally been found, to show exchange with those neighbors toward the west. Gold neckbands, armlets, bangles, finger rings and filets for head wear were worn both by people while carnelian dots, hoops, nose studs, anklets and funnel shaped head adornments were worn only by ladies.

The most attributes of all articles found are the seals and sealings. Some Indus Valley seals found in Mesopotamian destinations have set up the nearby associations between the two societies and to fix a date for the Indus Valley human progress. The date of the Indus Valley has been fixed with some conviction as contemporaneous with the early dynastic time of Babylonia - around 2500 - 1800 B.C. It must be recalled that it relies upon Mesopotamian order, and any change of the last should involve a comparing re-dating of the Indus Valley finds. Copper and bronze were utilized for making household utensils, actualizes, statuettes and adornments. The absolute nonappearance of iron made executes demonstrates that they had a place with the Bronze Age.

Horticulture was the primary occupation. They developed wheat, grain and date palm and were meat eaters. The presence of block lined road depletes and downpour water pipes,

**E-ISSN: 2581-7140**
**Special Issue: Vol. 2, April-2019** **Available at: www.ijtlls.com**

the general utilization of block in development and the portrayal of the seals of creatures, for example, the tiger, rhino, elephant and wild oxen which support wet living space demonstrated that the Indus Valley delighted in substantial precipitation. They bargained crop surplus to import fundamental crude materials, for example, metals and different wares. The design was plain and utilitarian. The point appears to have been to make life agreeable as opposed to sumptuous. Their religion appears to have included "Mother Goddess", and trees and creature adore.

It is sure that they were of non-Aryan racial stock and exceptionally edified, having an elevated requirement of workmanship and craftsmanship and a well-created arrangement of pictographic composition that had existed for an extensive period before the entry of Indo-Aryans. It may be the case that they were intruders as their settlements have likewise been found in Baluchistan. They were most likely as of now profoundly enlightened before they entered the nation. Practically all specialists call the development "proto-Dravidian" and many are of the conclusion that they are the progenitors of Tamils.

Prof Ra. Mathivanan, an examination researcher, has verified that letters found in the Harappa engravings were antiquated Tamil. The pictographic composition found under an artistic creation on a stone development in the South Arcot locale of Tamil Nadu was equivalent to that found in the Indus Valley. A four foot long block discovered amid unearthings in the Karunool region of Andrapradesh has engravings in Indus Valley letters. A seal discovered amid unearthings in Anaicoddai in Eelam contained both Indus Valley letters and brahmic content. The sum total of what these have been converted into advanced Tamil.

More proof of who the Indus Valley individuals were is found in the interpretations of the Vedas ( which were composed by the Aryans who came to India somewhere in the range of 3500 years prior) by H.H. Wilson, Ralph Griffith, and A.A. McDonnell and A.B. Keith in English and by M.R. Sambunatha Iyer in Tamil. The Indus Valley individuals are portrayed as noseless, dark and pagan brutes. They are called Dravidians, Thasar, Thayook, Asurar, Arakkar, Rakshather and Sutra. They are likewise depicted as enemies of divine beings, chandalas, milechas, children of whores and in numerous other unfavorable terms. Be that as it may, their strength and battling capacities are applauded. There are a few reference to the town of Hariyupa (later moved toward becoming Harappa). A portion of the many significant lords of the Thasar (Tamils) alluded to in the Vedas are Samparan, Varacinan, Viruthiran and Susunan with whom the Aryans took on numerous conflicts. These evidences are widely seen and have authentic proofs of tamil civilization all over the world.

## References

1. Epigraphiga Indica, Vol. VII, 8/3, p.133.
2. T.V. Sadasiva Pandarathar, Pirkala Solar Varalaru (T), Annamalai University, Annamalainagar, 1979, p. 270.

E-ISSN: 2581-7140

Special Issue: Vol. 2, April-2019 Available at: www.ijtlls.com

3. V. Balambal, Studies in Chola History, Kalinga Pubulications, New Delhi, 2010, p. 35.
4. A.R.E., 257 of 1939-40.
5. K.A.Nilakanta Sastri, Studies in Chola History and Administration, University of Madras, Madras, 1932, p.210.
6. K.A. Nilakanta Sastri, Op.cit., p. 211.
7. K.K. Pillai, Tamilaga Varalarum Makkal Panpadum (T), Tamil Nadu Text Book Society, Madras, 1973, p. 23.

**E-ISSN: 2581-7140**
**Special Issue: Vol. 2, April-2019** **Available at: www.ijtlls.com**

# Archaeological Vestiges of Palur

**Mrs.R.Brinda Kumari,** Assistant Professor of History,
Meenakshi College for Women (Autonomous), Kodambakkam, Chennai -600 024

## Abstract

Palur (12 46'N latitude and 95 55'E longitude) is situated in Chingleput Taluk of Kanchipuram District, in Tamil Nadu, it is a small village about 12km away from chingleput town, on the highway leading from Chinglepet to Kanchipuram. There is a railway station known as palur railway station. There are frequent bus services from Chingleput as well as from Kanchipuram to reach Palur. On the eastern side Reddipalalyam, on western side Melacheri, on northwestern side Kongananjeri on southeastern side Villiyambakkam served as the boundary village to the Palur. This village covers an area of 2341.25 hectares and situated on nortern bank of river Palar. The paper studies the evidences related to it.

**Keywords:** Archaeological, Vestiges, Palur

## Excavations at Palur

The Department of Ancient History And Archaeology, University of Madras has undertaken field explorations at Palur in 2000. After this explorations the Department conducted excavations at Palur from 2001 to 2005, for about five seasons under the Directorship of Dr.P.Shanmuga and then under Dr. Ekarmbaranathan

Nearly 7 trenches were laid in these five seasons. They are as follows:

PLR - 1 in 2001,
PLR - 2, PLR -3, PLR -4 In 2002,
PLR - 5 in 2003
PLR - 6 in 2004 and
PLR - 7 in 2005.

From PLR - 1 to PLR - 7, all the trenches were laid at different parts on an archaeological mound called Nathamedu situated on the northeastern side of the Patangesvara temple. These trenches were laid to assess the general character of the habitation deposits at the place and to determine its cultural sequences. The Excavation unfolded the presence of two cultural periods, namely: Period - I and Period - II respectively. Period – I ($3^{rd}$ Century B.C to $3^{rd}$ Century A.D)

The earliest time limit of the period - 1 (3rd century B.C) is determined on the basis of the occurrence of black and red ware, all black ware and painted ware.

Habitation layers assignable to this period are as follows:

PLR-1: (4) and (5)

E-ISSN: 2581-7140
Special Issue: Vol. 2, April-2019 Available at: www.ijtlls.com

PLR-2: (5),(6),(7)
PLR-3: (3),(4),(5)
PLR-4: (4),(5),(6)
PLR-5: (5),(6)
PLR-6: (3),(4)
PLR-7: (5),(6),(7)

The second period (3rd Century A.D. to 9th Century A.D.) is characterized by the occurrence of red slipped ware and coarse red ware. In this level, survivals of the potteries found in Period I are available a few in number. This Period is represented in the following layers

PLR-1: (1),(2),(3)
PLR-2: (1),(2),(3),(4)
PLR-3: (1),(2)
PLR-4: (1),(2),(3)
PLR-5: (1),(2),(3),(4)
PLR-6: (1),(2),(3),(4)
PLR-7: (1),(2),(3),(4)

**Pottery**

Pottery is very much associated with mankind right from Neolothic age in South India and it becomes an inseparable unit of many cultural traits. This early historical site, which was excavated for the five seasons from 2001 to 2005 had yielded a variety of pot sherds. On the basis of ceramic types unearthed from the site, they can be broadly categorized as:

- Black ware
- Black and Red ware
- Rouletted ware
- Red slipped ware
- Russet coated and Painted ware
- Coarse Red Ware

**(a) Black Ware**

Black ware is a high quality ware among the South Indian potteries. Both interior and exterior of this ware are black in colour. It is found in association with the black and red ware. It was made out of well levigated clay and has a glossy appearance. It is wheel turned and fired to a medium or high temperature. Both interior and exterior of this ware are black in colour.

**(b) Black and Red Ware**

The black and red ware an unique pottery in the Iron age sites. This type of pottery that undergoes inverted firing (to turn upside down). Due to this firing technique it is always black in the interior. It was inside black colour and outside red colour. The common shapes are dish, bowl, conical vessels and fine shaped lid.

